அனைத்திந்திய நூல் வரிசை

# வங்கச் சிறுகதைகள்

தொகுப்பு
அருண்குமார் முகோபாத்தியாய்

வங்கத்திலிருந்து தமிழாக்கம்
சு. கிருஷ்ணமூர்த்தி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# பொருளடக்கம்

# முன்னுரை

நேஷனல் புக் டிரஸ்ட் நிறுவனத்தார் இந்திய வாசகர்களுக்காக, இந்திய அரசியல் சட்டத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட இந்திய மொழிகளில் சிறுகதைத் தொகுப்புகள் வெளியிடவும் மற்ற இந்திய மொழிகளில் அவற்றின் மொழி பெயர்ப்புகளைப் பிரசுரிக்கவும் "ஆதான்-பிரதான்" என்ற பெயரில் ஒரு திட்டம் வகுத்தனர். அந்தத் திட்டத்திற்கேற்பத் தயாரிக்கப்பட்டது இந்தச் சிறுகதைத் தொகுப்பு. நமக்கு அறிமுகமான காலத்தைச் சேர்ந்த மனிதர்கள், சமூகம் இவற்றின் சித்திரம் இந்தத் தொகுப்பில் கிடைக்கும்.

வங்கச் சிறுகதைத் துறையில் முதற்பெருங் கலைஞர் ரவீந்திரநாத் தாகூர். அவரது கையில்தான் சிறுகதை உயிர் பெற்றது, வியக்கத்தக்க வளர்ச்சி பெற்றது. சிறுகதையின் பல்வேறு அம்சங்களிலும் அவரது கலைத்திறன் ஒளிர்கிறது. காதல், இயற்கை, சமூகப் பிரச்சினைகள், தத்துவம், காவியத் தன்மை, புனைவியல், வரலாறு, கேலி போன்ற பல துறைகளிலும் அவர் அனாயசமாக நடமாடினார். 1890 ஆம் ஆண்டு முதல் 1940 ஆம் ஆண்டுவரை ஓர் அரை நூற்றாண்டுக் காலம் அவர் சிறுகதைகள் எழுதினார்.

ரவீந்திரரின் காலத்தில் த்ரிலோக்யநாத் முகோபாத்தியாய், பிரபாத் குமார் முகோபாத்தியாய், சரத் சந்திர சட்டோபாத்தியாய், பிரமத சௌதுரி முதலியோர் வங்கச் சிறுகதைக்கு வளம் சேர்த்தனர்.

இந்தத் தொகுப்பில் நமக்குப் பரிச்சயமான காலத்தைச் சேர்ந்த சிறுகதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தொகுக்கப்பட்டுள்ளன. ரவீந்திரரும் சரத் சந்திரரும் நமக்கு அறிமுகமான காலத்தைச் சேர்ந்தவர்களல்லர். இவர்களுக்குப் பிற்பட்ட காலத்தில், கடந்த நாற்பதாண்டுகளில் சிறுகதைகளில் வங்காளி மனப்போக்கின் பல்வேறு படிமங்கள் இடம் பெற்றுள்ளன. ஆகவேதான் இந்தத் தொகுப்பில் சரத் சந்திரருக்குப் பிற்பட்ட காலம் முதல் தற்காலம் வரையில் வெளிவந்துள்ள பல்வகைப் பட்ட சிறுகதைக் கருவூலத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

வங்க இலக்கியத்தில் ரவீந்திரர்–சரத்சந்திரருக்கு அடுத்த

காலம் 'கல்லோல் யுகம்'. இந்தக் காலத்தின் அளவு 1923 முதல் 1939 வரை. இந்தக் காலத்தில் உலகளாவிய பொருளாதார மந்தமும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய எதிர்ப்புக் கிளர்ச்சியும் இருந்த போதிலும் 'கல்லோல்', 'காலிகலம்' பத்திரிகைகளில் சிறுகதைகள் எழுதிய எழுத்தாளர்கள் மொத்தத்தில் அமைதியான சூழ்நிலையில் இலக்கியம் படைத்தனர். இந்தப் பருவத்தில் தோன்றியவர்கள் தாரா சங்கர் பந்த்யோபாத்தியாய், அசிந்த்ய குமார் சென் குப்தா, பிரேமேந்திர மித்ரா, புத்ததேவ போஸ், மணீஷ் கட்டக்(ஜுவனாஸ்வ), பிரபோத் குமார் சன்யால், பவானி முகோபாத்தியாய் ஆகியோர். விபூதி பூஷண் முகோபாத்தியாய், மாணிக் பந்தயோபாத்தியாய், அன்னதா சங்கர்ராய், பனஃபூல், விபூதி பூஷண் பந்த்யோ பாத்தியாய், சரதிந்து பந்த்யோபாத்தியாய், ரவீந்திர நாத் மித்ரா, பரிமல் கோஸ்வாமி, சஜனிகாந்த தாஸ், பிரேமாங்குர் ஆதர்த்தி, சரோஜ் குமார் ராய் சௌதுரி, பிரமதநாத் பிஷி, கஜேந்திர குமார் மித்ரா, ஆஷாபூர்ணாதேவி, மனோஜ் போஸ், பிமல் மித்ரா முதலியோர் 'பிசித்ரா', 'சனிபாரேர் சிட்டி' பத்திரிகைகளில் எழுதினார்கள். இந்தக் காலத்தில்தான் ராஜசேகர் போசும் 'பரசுராம்' என்ற புனைபெயரில் கேலியும் ஹாஸ்யமும் ததும்பும் சிறந்த சிறுகதைகள் எழுதினார்.

இரண்டாவது உலகப்போரின் தொடக்கத்திலிருந்து இந்தியா விடுதலை பெற்ற காலம் வரை-அதாவது 1939 முதல் 1947 வரை உள்ள காலத்தைக் 'கல்லோலுக்குப் பிற்பட்ட யுகம்' என்று கூறலாம். இந்தக் காலம் வங்காள நாட்டிலும் சமூகத்திலும் பெரும் மாற்றங்கள் நிகழ்ந்த காலம். பஞ்சம், விமானத் தாக்குதல், விலைக் கட்டுப்பாடுகள், உணவுப் பங்கீடு, ராணுவத்துக்காகக் கொள்முதல், கறுப்புச் சந்தை, சமூக வாழ்வில் சீரழிவு, பொருளாதாரச் சீர்குலைவு, ஒழுக்கம் பற்றிய மதிப்பீடுகளின் அழிவு, வகுப்புக் கலகங்கள், நாட்டு விடுதலை, நாட்டுப் பிரிவினை, அகதிகளின் வெள்ளம் இவை போன்ற பெரும் மாற்றங்களும் விபரீதங்களும் இந்தக்காலக்கட்டத்தில்தான் நிகழ்ந்தன.

இந்தக் காலத்தில் எழுதத் தொடங்கியவர்கள் தங்களுக்கு இலக்கிய உணர்வு பிறந்தது முதலே மேலே குறிப்பிடப்பட்ட மாற்றங்கள் பற்றிய நேரடி அனுபவம் பெற்றிருந்தார்கள். இந்தக் காலத்தின் சமூகச் சூழ்நிலை அமைதியற்றதாகவும் குழப்பம் மிகுந்ததாகவும் இருந்தது. இந்தச் சூழ்நிலை அவர்களது பார்வையைக் கூர்மையாக்கியதோடு குழப்பவும் செய்தது. கல்லோல் காலத்து ரொமான்ட்டிக் சூழ்நிலை, நாடோடி

மனப்பாங்கு, தறிகெட்ட காதல் வேகம் இவையெல்லாம் இந்தக் காலத்துச் சிறுகதைகளில் இல்லை. இந்தக் காலகட்டத்தில் நமது சமூகத்திலும் எண்ணற்ற மாறுதல்கள் விரைவாக நிகழ்ந்தன. சமூகத்திலும் தனி மனித வாழ்விலும் எண்ணற்ற சிதைவுகள், ஆக்கங்கள், பிரச்சினைகள், அசாதாரண விதிவிலக்குகள், இவையெல்லாம் இணைந்த புரட்சியின் தீவிர வேகம்— சிறுகதை எழுத்தாளனின் அறிவுப் பசியையும் உணர்வுத் திறனையும் கூர்மையாக்கின. நிலை பெற்றிருந்த சட்டங்களும் விதிகளும் தளர்ந்து போயின; தறிகெட்ட உணர்வுகளும் இயற்கைக்கு மாறான போக்குகளும் தோன்றின; பல நுண்மையான அதிருப்திகள் மனிதனைப் பீடித்தன; ரசனை சீர்கெட்டதால் பல்வேறு புதிய அனுபவங்களை ருசிப்பதில் ஆர்வம் பிறந்தது; புதிய உறுதிகள், புதிய நம்பிக்கைகள் வாழ்க்கைப் போராட்டத்துக்கு ஓர் அலாதியான உருவம் கொடுத்தன; இவையெல்லாம் இரண்டாம் உலகப் போருக்கு முன் நினைக்கக் கூட முடியாதவையாகும். போர் ஒரு பயங்கர பூகம்பம் போல் நேர்ந்தது. அதன் விளைவாகக் கண்ணியத்தின் போர்வை, நீதி நியாயம் என்ற கவசம், குடும்ப கௌரவம், அன்பு-பரிவு, கீழ்ப்படிந்து நடக்கும் தன்மை, மத நம்பிக்கைகள், சடங்குகள் இவையெல்லாமே மண்ணோடு மண்ணாகிவிட்டன. இதற்கு நடுவில் ஒரு புதிய சமூகத்தைப் படைக்கும் கனவு பிறந்தது. கனவை நனவாக்குவதாக உறுதிமொழி ஒலித்தது.

சுபோத் கோஷ், சதிநாத் பாதுரி, சந்தோஷ் குமார் கோஷ், நாராயண் கங்கோபாத்தியாய், நரேந்திர நாத் மித்ரா, நபேந்து கோஷ், நனி பௌமிக், சுசீல் ஜானா, ஜோதிரிந்திர நந்தி ஆகியோரின் சிறுகதைகளில் இந்த மாறுதல்கள் பிரதிபலித்தன. ஜகதீஷ் குப்தா, மாணிக் பந்த்யோபாத்தியாய், அசிந்த்ய குமார் சென் குப்தா, பிரபோத் குமார் சன்யால், முதலிய கல்லோல் யுக எழுத்தாளர்களும், விபூதி பூஷண் பந்த்யோபாத்தியாய், தாராசங்கர் பந்த்யோபாத்தியாய், மனோஜ் போஸ், சரோஜ்குமார் ராய்சௌதிரி, ஆஷா பூர்ணா தேவி, பிரமதநாத் பிஷி, பரிமல் கோஸ்வாமி, பனஃபூல், சுசீல் கோஷ், வாணிராய், சாருசந்திர சக்ரவர்த்தி முதலிய ‘பிசித்ரா’ ‘சனிபாரேர் சிட்டி’ எழுத்தாளர்களும் மேலே கூறப்பட்ட பட்டியலில் சேர்க்கப்பட வேண்டியவர்கள்.

இந்தக் கால கட்டத்தைத் தொடர்ந்து வந்தது துண்டுபட்ட சுதந்திரம்; கூடவே வந்தது அகதிகளின் வெள்ளம். இன்னும் பெரிய அளவில் சமூகத்தின் சமநிலைக்குக் கேடு. சுதந்திரத்தின் தோரண வாயிலில் ஒலித்த நம்பிக்கையையும் மகிழ்ச்சியையும்

எல்லாமிழந்த அகதிகளின் அழுகையொலி அமுக்கிவிட்டது. அப்போது இந்தக் குழப்பம் நிறைந்த, இரத்தத்தில் தோய்ந்த நாட்டில் சிறுகதை எழுத்தாளர்களின் இன்னொரு குழு தோன்றியது-சமரேஷ் பாசு, பிமல்கர், ரமாபத சௌதிரி, சையது முஸ்தபா அலி, ஹரிநாராயண் சட்டோபாத்தியாய், பிரபாத் தேவ் சர்க்கார், சாந்தி ரஞ்சன் பந்த்யோபாத்தியாய், ஸ்வராஜ் பந்த்யோபாத்தியாய், பிராணதோஷ் கட்டக், சுதீர் ரஞ்சன் முகோபாத்தியாய், சுசீல் ராய், ரஞ்சன், சசீந்திர நாத் பந்த்யோபாத்தியாய், சுலேகா சன்யால், கௌர் கிஷோர் கோஷ், ஆசுதோஷ் முகோபாத்தியாய், சத்தியப்பிரிய கோஷ், ஆசீஷ் பர்மன், அமியபூஷண் மஜும்தார், கமல்குமார் மஜும்தார், கௌரிசங்கர் பட்டாச்சார்யா, தீபக் சௌதுரி, மகாசுவேதாதேவி இன்னும் பலர்.

இந்தக் காலத்துக் கதாசிரியர்கள் இதற்கு முந்தைய காலத்து எழுத்தாளர்கள் போலவே செயல்பட்டனர். உண்மையில் இந்த இரு காலத்து எழுத்தாளர் குழுக்களை வெவ்வேறாகப் பிரித்துவிட இயலாது. நரேந்திரநாத் மித்வாடி, நாராயண் கங்கோபாத்தியாய், சந்தோஷ்குமார் கோஷ், நனி பௌமிக், சுசீல் ஜானா, சாந்திரஞ்சன் பந்த்யோபாத்யாய், ஸ்வராஜ் பந்தியோபாத்தியாய், பிராணதோஷ் கட்டக், ஆசுதோஷ் முகோபாத்தியாய் இவர்கள் எல்லாருமே 1916 ஆம் ஆண்டிலிருந்து 1922ஆம் ஆண்டுக்குள் பிறந்தவர்கள். இரண்டாம் உலகப்போர் தொடங்கிய சமயத்தில்-கல்கத்தாவும் வங்காளம் முழுதுமே ஒரேயடியாக மாறிக் கொண்டிருந்த குழப்பமான நேரத்தில்-இவர்கள் தங்கள் இளமைப் பருவத்தில் காலெடுத்து வைத்தனர். அன்று முதல் இன்று வரை இவர்கள் உறுதியோடு எழுதிக்கொண்டு வருகின்றனர். 1940க்கும் 70க்கும் இடைப்பட்ட முப்பதாண்டுக் காலத்தில் சமூக வாழ்க்கையிலும் தனிப்பட்ட மனித வாழ்விலும் நிகழ்ந்த பல்திறப்பட்ட மாற்றங்கள் இவர்களுடைய சிறுகதைகளில் பிரதிபலிப்பதைக் காணலாம்.

இந்த நூற்றாண்டின் பின்பாதியில் வங்கச் சிறுகதையின் இன்னொரு பருவம் தோன்றியுள்ளது. இந்தப் பருவத்தைச் சேர்ந்த இளம் கதாசிரியர்கள் 1930 முதல் 1940க்குள் பிறந்தவர்கள். இவர்கள் புதிய தலைமுறை எழுத்தாளர்கள்-சையது முஸ்தபா சிராஜ், மதி நந்தி, சுநீல் கங்கோபாத்தியாய், சியாமல் கங்கோபாத்தியாய், பரேன் கங்கோபாத்தியாய், சீர்ஷேந்து முகோபாத்தியாய், பிரபுல்ல ராய், திப்யேந்து பாலித், அதீன் பந்த்யோபாத்தியாய், தீபேந்திர நாத் பந்த்யோபாத்தியாய், தேபேஷ் ராய், சந்தீபன் சட்டோபாத்தியாய், கவிதா சின்ஹா, லோக்நாத் பட்டாச்சார்யா, சங்கர் ஆகியோர் இந்தப் பருவத்து

எழுத்தாளராவர்.

இந்தப் பருவத்து எழுத்தாளர்கள் முற்றிலும் ஒரு புதிய வகையைச் சேர்ந்தவர்கள். இவர்களுக்கும் இவர்களுக்கு முந்தைய பருவத்து எழுத்தாளர்களுக்குமிடையே எவ்வித ஒற்றுமையுமில்லை. இவர்கள் தங்களுக்கு முற்பட்ட காலத்தில் நிகழ்ந்த எதையும் பார்க்கவில்லை, எந்தவிதமான பாரம்பரியத்திற்கும் நன்றி பாராட்டவில்லை; அதைப் பற்றிய நினைவுகூட இவர்களுக்கு இல்லை. இருட்டடிப்பு, பஞ்சம், வகுப்புக் கலவரம், இரத்தம் தோய்ந்த சுதந்திரம் இவையெல்லாம் நிகழ்ந்து சிறிது காலத்துக்குப் பின், அகதிக் குடியிருப்புகளின் ஓரங்களிலோ அல்லது அவற்றுக்கு வெளியிலோ இவர்கள் வாழ்ந்து வளர்ந்தார்கள். இவர்களுக்கு முற்பட்ட எழுத்தாளர்களுக்கு இவர்கள் முற்றிலும் அன்னியப் பட்டவர்களாகத் தோன்றினார்கள். இவ்விரு பிரிவினருக்கு மிடையே எவ்விதப் பிணைப்புமில்லை. இளைய பருவத்தினர் வளரத் தொடங்குவதற்கு முன்னேயே கூட்டுக் குடும்ப வாழ்க்கையின் இதமான மாளிகை இடிந்து தூள் தூளாகிவிட்டது. மரியாதை, பக்தி போன்ற உணர்வுகள் வெறும் உபதேசங்களாகி விட்டன. ஆண்-பெண் உறவு மாறிப்போய்விட்டது. அதாவது அடிப்படை உந்துதல்கள் அப்படியே இருந்தாலும் அவற்றைச் சூழ்ந்திருந்த கற்பனைப் போர்வை இல்லை. தங்களுக்கு எதிரான கலகத்தில், வாழ்வதற்காக ஒன்றிணைந்தோ அல்லது ஒன்றிணைவது போல் பாசாங்கு செய்தோ அவர்கள் தங்களைத் தயார் செய்து கொள்கிறார்கள்; உண்மையில் அவர்கள் முன்னைவிடத் தனியர்கள், அமைதியற்றவர்கள், இயற்கைக்கு மாறான வழிகளிலோ நரம்புக் கிளர்ச்சியிலோ அமைதி காண முயல்பவர்கள்-இவ்வாறுதான் முந்தைய தலைமுறை எழுத் தாளர்கள் இந்தத் தலைமுறை எழுத்தாளர்களைப் பார்க்கிறார்கள். இந்த இரு தலைமுறை எழுத்தாளர்கள் தனித்தனித் தீவுகளாவர்.

'கல்லோல்' யுக எழுத்தாளர்கள், இரண்டாம் உலகப்போர்க் கால எழுத்தாளர்கள், இளைய தலைமுறை எழுத்தாளர்கள் என்னும் இந்த மூன்று பிரிவுகளில் முதலிரண்டு பிரிவினருக் கிடையேயுள்ள வேற்றுமையைவிடப் பின்னிரண்டு பிரிவினருக் கிடையேயுள்ள வேற்றுமை பல மடங்கு அதிகம். கல்லோல் யுகத்துக்குப் பிற்பட்ட பருவத்தில் கல்லோல் யுகத்தின் ரொமான்டிக் தன்மை இல்லாவிடினும் வாழ்க்கையில் மகிழ்ச்சியும், நீதி-நியாயம் போன்ற மரபு நெறிகளிடம் மரியாதையும் இருந்தது. இது இன்றைய எழுத்தாளர்களிடம் இல்லை. இந்த விஷயத்தில் இவர்களிடையே உள்ள பிளவு கடக்க முடியாதது.

இந்தப் பிளவு மனப்போக்கில் மட்டுமல்ல, மொழியிலும்

கட்டமைப்பிலும் கூடத்தான்; வாழ்க்கையை நோக்கும் பார்வையில் மட்டுமல்ல, வாழ்க்கைச் சாதனங்களைப் புதுமையான முறையில் கையாள்வதிலும் இந்தப் பிளவு பிரதிபலிக்கிறது. வங்கச் சிறுகதை ரவீந்திரரின் படைப்பிலேயே கொடுமுடியை எட்டிவிடவில்லை என்பது இதிலிருந்து தெரிகிறது. வங்கச் சிறுகதை மேலும் மேலும் முன்னேறியுள்ளது, அதன் திருப்பு முனைகளைக் குறிக்கும் மணி பல தடவைகள் ஒலித்துள்ளது, அதில் சோதனை முயற்சிகள் குறையவில்லை, வாழ்க்கையைப் புதிய நோக்கில் பார்க்கும் ஆர்வம் ஒருபோதும் வற்றிவிடவில்லை.

சில குறிப்பிட்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, ஒரு குறிப்பிட்ட பக்க எல்லைக்குள், ஒரு குறிப்பிட்ட எண்ணுள்ள சிறுகதைகளைத் தேர்ந்தெடுக்கும்போது அத்தொகுப்பு எல்லாருக்கும் திருப்தியளிக்கும் என்று நாங்கள் எதிர்பார்க்கவில்லை. ஆனால் பல நிபந்தனைகளுக்கும் எல்லைகளுக்கும் உட்பட்டால் இது தவிர்க்க முடியாதது.

ரவீந்திரர்-சரத்சந்திரருக்குப் பிற்பட்ட மூன்று பருவங்களின் சிறுகதைகள் பல்திறப்பட்டவை, வளம் செறிந்தவை. அவற்றிலிருந்து செய்யப்படும் எந்தத் தொகுப்பும் திருப்தியளிக்காது. ஆகையால் வாசகரின் அனுதாபத்தையும் தாராள மனதையும் நம்புவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை.

தற்கால வங்க இலக்கியத்தின் இரண்டு தலைசிறந்த எழுத்தாளர்கள் விபூதிபூஷண் பந்த்யோபாத்தியாயும் மாணிக் பந்த்யோபாத்தியாயும் ஆவர். ஓராண்டு முயற்சி செய்தும் பதிப்புரிமைப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியாததால் முன்னவரின் 'ஆஹ்வான்' சிறுகதையையும் பின்னவரின் 'நமூனா' சிறுகதையையும் இறுதி நேரத்தில் இத்தொகுப்பிலிருந்து விலக்கிவிட நேர்ந்தது. நான் விரும்பாமலே நேர்ந்துவிட்ட இந்தக் குறைக்காக வாசகர்களின் மன்னிப்பைக் கோருகிறேன்.

அருண்குமார் முகோபாத்தியாய்
வங்கமொழி-இலக்கியத்துறை,
கல்கத்தா பல்கலைக் கழகம்.

# இறுதி வார்த்தை

## தாரா சங்கர் பந்த்யோபாத்தியாய்

பூர்வசக் தாலூகாவில் பரத்பூர் கிராமம் பெரிய சொத்து. அங்கே மரங்களின் இலைகள் முறம் மாதிரி இருக்கும், கிளைகள் உலக்கை மாதிரி இருக்கும். மண், அரைத்த சந்தனம் மாதிரி. அதை உடலில் தடவிக்கொண்டால் உடல் குளிர்ந்து விடும். விதைகளைத் தெளித்துவிட்டால் போதும், வெகு விரைவில் பயிர் செழித்து வளர்ந்துவிடும். பரத்பூரில் என்னதான் கிடைக்காது? மண்ணில் தங்கம் என்பார்களே, அது வெறும் பேச்சு அல்ல. உண்மையில் முன்பெல்லாம் அங்கே ஆற்றங்கரை மணலிலிருந்து தங்கம் எடுப்பதுண்டு. மண்ணுக்குக் கீழே தங்கம் இருந்தது. கிராமத்து மக்களோ முட்டாள் கூட்டம். விவசாயம் செய்து பிழைப்பு நடத்துகிறார்கள்; அடித்தால் கோபம் வராது; "நீ அடிச்சாப் பரவாயில்லே, நீ என்ன வேத்து மனுசனா" என்பார்கள். கரையில்லாத அகலக் கட்டைத் துணி கட்டுவார்கள்; நெற்றியில் சந்தனத்தால் நாமம், கழுத்தில் துளசிமணி மாலை, கறுப்பு நிறம். இதிலிருந்தே அவர்கள் முட்டாள்கள் என்று தெரிகிறது. எல்லாரும் விவசாயிகள்; ஜமீந்தாரின் ஆட்கள் அவர்களைக் "குடியானவப் பசங்க" என்பார்கள். முன்காலத்தில் வயலை உழுவார்கள், பயிரிடுவார்கள், புகையிலைப் புகையை இழுப்பார்கள், சாமி கும்பிடுவார்கள், தூங்குவார்கள். இப்போது காலம் மாறிவிட்டது; கலி முற்றிவிட்டது. ஆகையால் இப்போது அரை வயிறு சாப்பிடுகிறார்கள், நோயால் அவஸ்தைப்படு கிறார்கள், எப்படியோ சிரமப்பட்டு விவசாயம் செய்கிறார்கள்; சிலர் கடவுளிடம் முறையிடுகிறார்கள், சிலர் முறையிடுவதில்லை— அதாவது சிலர் அழுகிறார்கள், வேறு சிலர் பல்லைக் கடித்துக கொள்கிறார்கள்.

பத்மா நதிக்கு மறுகரையில் வசிக்கும் சாஹுக்களின் குடும்பந்தான் இப்போது பரத்பூரின் ஜமீந்தார். இதற்குமுன் கிராமம் மியான் குடும்பத்தின் வசத்திலிருந்தது. அப்போது சாஹுக்கள் இந்த பக்கம் வந்து தொழில் தொடங்கினார்கள்.

மியான் குடும்பத்தினரிடையே பூசல் ஏற்பட்டபோது அவர்கள் சாஹுக்களிடம் கடன் வாங்கினார்கள். கடன் ஆயிரம் மடங்காக வளர்ந்தால் கடன்காரர்கள் என்ன செய்வார்கள்? அத்துடன், நீதிமன்றத்தில் வழக்கு வந்தபோது கிராம மக்களின் தலைவன் சாஹுக்களுக்கு ஆதரவாக சாட்சியம் சொன்னான்.

அந்தப் பழைய கதை கிடக்கட்டும். இப்போது மக்கள் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு... அந்தக் கதையும் கிடக்கட்டும், பழைய குப்பையைக் கிளறிப் பிரயோசனமில்லை. எல்லா விவரங்களையும் சொல்வதானால் பெரிய புராணமாகி விடும். இந்தக் காலத்து நடப்பைச் சொல்வதுதான் சரி. இப்போது சாஹுக்கள்தான் ஜமீந்தார்கள். ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு ஆபீஸ், ஒவ்வொரு ஆபீசிலும் ஒரு நாயப் (மானேஜர்), தலைமை ஆபீசில் பெரிய நாயப். இதைத்தவிர, சாஹுக்கள் பத்மாவின் மறுகரையிலிருந்த தங்கள் ஊரிலிருந்து அடியாட்களைக் கெண்டு வந்து ஒவ்வொரு கிராமத்திலும் வைத்துப் பக்கா ஏற்பாடு செய்திருந்தார்கள். மேலும் சாஹுக்களின் உறவினர் பலர் ஜமீந்தாரியில் பல இடங்களில் கடைகள் வைத்து நன்றாகத் தொழில் செய்து வந்தார்கள். பலர் தொழிற்சாலைகளும் அமைத்திருந்தார்கள். கிராமத்து மக்கள் அவற்றிலும் உழைத்தார்கள். இந்தத் தொழிலாளிகளிலும் சிலர் பல்லைக் கடித்துக் கொண்டார்கள். சிலர் அழுதார்கள். பல்லைக் கடித்துக் கொண்டோ அழுதோ எப்படியோ காலம் கழிந்து கொண்டிருந்தது நல்லதும் கெட்டதுமாக. கிராம மக்கள் மரங்கள் மேல் உரிமை கொண்டாடி ஜமீந்தாரின் ஊழியர்களுடன் சச்சரவு செய்தார்கள். நில உரிமை விஷயமாகத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தார்கள். ஜமீந்தாரின் அடியாட்களுடைய பராமரிப்புச் செலவைக் கொடுக்க மறுத்தார்கள். உப்பு, துணி, எண்ணெய் இவற்றின் விலையில் பேரம் பேசிக் கடைக்காரர்களுடன் வாக்குவாதம் செய்தார்கள். தொழிலாளர்கள் கூலிக்காக முதலாளிகளுடன் தகராறு செய்தார்கள்— இவ்வாறு சண்டை சச்சரவுகளோடு காலம் கழிந்து கொண்டிருந்தது. கண்கள் முற்றிலும் மூடப்பட்ட செக்குமாடுகள் கொம்புகளை ஆட்டிக் கொண்டு செக்கு இழுப்பதுபோல் எல்லாம் நடந்து கொண்டிருந்தது. செக்கு ஆடி எண்ணெய் வந்து கொண்டிருந்தது, அதை எடுத்துக் கொண்டான் வணிகன்; பிண்ணாக்குக் கிடைத்தது மாடுகளின் பங்குக்கு.

திடீரென்று பூகம்பம் நேர்ந்தாற்போல் எல்லாம் தலைகீழாகிவிட்டது. பயங்கரமான மாற்றம்! சாஹுக்களுக்கும் ஹல்திபாரி ஜமீந்தார்களான சாயி குடும்பத்தினருக்குமிடையே நிலவிஷயமாகத் தகராறு ஏற்பட்டுவிட்டது. அவ்வளவுதான்;

முன்னறிவிப்போ எச்சரிக்கையோ இல்லாமல் திடீரென்று ஒரு நாள் சாயிக்களின் அடியாட்கள் காடு, வயல்களைத் தாண்டிக் கொண்டு தடிகள் ஈட்டிகளுடன் பரத்பூருக்குப் பக்கத்துக் கிராம மான தர்மபூரின்மேல் படையெடுத்தார்கள். அவர்கள் அந்த ஊர் ஜமீன் ஆபீசுக்குள் புகுந்து அங்கிருந்தவர்களை அடித்துப் போட்டு ஆபீசைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அதுமட்டுமல்ல, அவர்களுடைய நடவடிக்கைகளைப் பார்த்துப் பரத்பூருக்கும் கவலை ஏற்பட்டது. சாயிக்களின் ஆட்கள் தங்கள் தடிகளுக்கு எண்ணெய் தடவி மேலும் அடிதடிக்குத் தயார் செய்து கொண் டிருந்தார்கள். ஆகையால் அவர்கள் பரத்பூரிலும் நுழைந்து தாக்குவார்கள் என்பது குறித்து ஒருவருக்கும் சந்தேகமில்லை. எங்கும் களேபரமாகிவிட்டது. பரத்பூர் ஜமீன் ஆபீஸ்களிலும் போராட்ட ஆயத்தங்கள் தொடங்கின.

கிராமத்து மக்கள் திடுக்கிட்டார்கள். இரண்டு எருதுகள் சண்டை போட்டால் அவற்றின் காலடியிலுள்ள நாணலுக்குத் தான் சேதம் அதிகம். மக்களின் நிலை அந்த நாணலின் நிலையை ஒத்திருந்தது. அவர்களுக்குக் கவலை ஏற்பட்டது.

கிழவன் லால்மோகன் பாண்டேதான் விவசாயிகளின் தலைவன். குட்டையாக வெட்டப்பட்ட தலைமுடி; பற்கள் விழுந்துவிட்டன; மிகவும் மெதுவாகப் பேசுவான், இதமாகச் சிரிப்பான். கிழவன் குழம்பிப்போய்த் தலையைத் தடவிக் கொண்டான்.

பரத்பூர் குடிமக்கள் அங்கு வந்து அவனைச் சூழ்ந்து கொண்டு உட்கார்ந்தார்கள்.

கிழவன் மரியாதையோடு அவர்களைக் கும்பிட்டான்; தாயின் மடியில் தவழும் குழந்தை தன் அப்பா, சித்தப்பா, அக்கா, அண்ணனைப் பார்த்துச் சிரிக்குமே, அந்த மாதிரி சிரித்துக் கொண்டு அவர்களிடம் "வாங்க, பஞ்சாயத்தாரே" என்றான்.

எல்லாரும் உட்கார்ந்தனர். பிறகு "தலைவரே!" என்ற ஒரே யொரு வார்த்தையைச் சொன்னார்கள். அவர்கள் சொல்ல விரும்பியதையெல்லாம் அந்த ஒரு வார்த்தையிலேயே சொல்லி விட்டார்கள். தலைவனுக்கும் எல்லாம் புரிந்துவிட்டது.

கிழவன் இன்பத்திலும் சிரிப்பான், துன்பத்திலும் சிரிப்பான், சிந்திக்கும்போதும் சிரிப்பான்.

அவன் சிந்தித்துக்கொண்டே சிரிக்கத் தொடங்கினான்.

கௌர்பூரைச் சேர்ந்த ஒருவன், "சாஹுங்கதான் நம்ம நில உரிமையை ஒப்புத்துக்கலியே! நாம ஏன் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கக் கூடாது? சாஹுங்களும் ஜமீந்தார், சாயிங்

களும் ஜமீந்தார். சாயிங்க நிலத்திலே நம்ம உரிமையை ஒத்துக் கிட்டாங்கன்னா, அவங்களுக்கு ஆதரவா சாட்சி சொல்லுங்க தலைவரே" என்று சொன்னான்.

கிழவன் தலையை ஆட்டிக் கொண்டு சொன்னான், "ஊஹூம், அது பாவம்!"

"அப்படீன்னா நாமும் அடிதடியிலே இறங்குவோம்"

"ஊஹூம்..."

"ஏன் பயமாயிருக்கா?" ஓர் இளைஞன் ஏளனமாகக் கேட்டான். கிழவன் சிரித்தான், அந்தச் சிரிப்பில் இளைஞன் குறுகிப்போனான். "பயமில்லேப்பா, அது பாவம்" என்று சொன்னான் கிழவன்.

"அப்ப என்ன செய்யப் போறே? என்ன செஞ்சாப் பாவம் வராது? சொல்லு!"

"கொஞ்சம் பொறுத்துக்க. என் மனசைக் கேட்டுக்கறேன், மனசு பகவானைக் கேக்கட்டும், அப்பத்தான்..."

ரத்தன்லால் சொன்னான், "என்ன செய்யணுங்கறதை சீக்கிரம் நிச்சயம் பண்ணு, தலைவரே! நீ சொல்றபடி நான் செய்யறேன்."

கிழவன் சிரித்தான். ரத்தனிடம் அவனுக்கு ரொம்ப நம்பிக்கை. மிகவும் நல்ல பையன் அவன்; அதே மாதிரி துணிவும் அதிகம் அவனுக்கு.

* * *

"நாயப் பாபு, வணக்கங்க" என்று சொல்லிக்கொண்டே கிழவன் ஜமீன் ஆபீசுக்குள் நுழைந்தான்.

"யாரு? லால்மோகனா? வா வா" என்றான் நாயப்.

"ஆமா வந்தேன்..."

"சும்மா வந்தேன்-போனேன்னு சொல்லாதே! எல்லாரும் கச்ச கட்டிக்கிட்டு எறங்கிடுங்க கோதாவிலே! அந்த ராஸ்கல் சாயிக்களை அடிச்சு நொறுக்கிடணும்! ஒரேயடியா வெட்டிப் போடணும்!"

கிழவன் சிரித்தான், "என்ன சொல்றீங்க, நாயப் பாபு"

"ஏன்?"

"வெட்டிப்போட்டா ரத்தம் சிந்தாதா? ஜனங்க செத்துப் போக மாட்டாங்களா? அதெல்லாம் பாவமில்லியா?" கிழவனின் கண்களிலிருந்து நீர் பெருகத் தொடங்கியது.

கிழவனின் இந்த அஷாடபூதித்தனத்தைப் பார்த்து உடம் பெல்லாம் எரிந்தது நாயபுக்கு. ஆனால் கிழவன் கௌரவப்

பட்டவன். ஆகையால் நாயப் தன் கோபத்தை அடக்கிக் கொண்டு நிதானமாகச் சொன்னான், "உம், புரியுது. அவங்க இரத்தம் சிந்துமேன்னு உன் கண்ணிலே தண்ணி வருது. எல்லாம் புரியுது எனக்கு!" என்று சொல்லிவிட்டுக் காகிதத்தில் சில வரிகள் எழுதினான். பிறகு தொடர்ந்து சொன்னான், "அவங்க நம்ம ஆளுங்களை அடிச்சு ரத்த விளாறா ஆக்கிட்டாங்களே, அது..."

கிழவனின் உதடுகள் துடித்தன, கண்ணீர் இருமடங்கு பெருகியது. "அடக் கடவுளே! அதைக் கேட்டதிலேருந்து அழுதுக் கிட்டே இருக்கேன் நாயப் பாபு... ஐயோ, ஐயோ! அவங்களுக்கு அடிபட்டதை நெனச்சுப் பார்த்தா அந்த அடியெல்லாம் என் மாரிலே விழுந்தமாதிரி இருக்குங்க...!"

நாயப் கிழவனை உற்றுப் பார்த்தான். கிழவன் வெறும் பாசாங்குக்காரனா அல்லது உண்மையிலேயே நல்ல மனிதன் தானா? செம்மறியாட்டின் கொம்போடு மோதிக்கொண்டால் வைரத்தின் கூர்மையும் மழுங்கிப் போகும். அதுபோல் நாயபின் கூரிய அறிவால் கிழவனின் மழுங்கிய அறிவைத் துளைக்க முடியவில்லை. நாயப் வெகுநேரம் கிழவனின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, "அப்படீன்னா என்ன செய்யணும்?" என்று கேட்டான்.

"அதுதான் உங்ககிட்டே சொல்றேன்.." கண்ணீருக்கிடையே சிரித்துக்கொண்டு சொன்னான் கிழவன்.

"என்ன சொல்றே?"

"நெலத்துலே எங்க உரிமையை நீங்க ஒப்புத்துக்கங்க, உங்க அடியாளுங்களைக் கூட்டிக்கிட்டுப் போயிடுங்க... நாங்க சாயிங்களை எதுத்து நிக்கறோம்..."

"எதுத்து நிப்பீங்களா...? அடிதடி, கிரிமினல் கேஸ்னா என்னன்னு தெரியுமா உங்களுக்கு? வயலை உழுது சாப்பிடற வங்க நீங்க. தடிபிடிக்கத் தெரியுமா உங்களுக்கு? ஈட்டி எறியத் தெரியுமா?"

கிழவன் சிரித்தான்.

"என்ன சிரிக்கிறே?"

"ஒங்க பேச்சைக் கேட்டுச் சிரிப்பு வருதுங்க... நாங்க தடியும் எடுக்க மாட்டோம், ஈட்டியும் எறிய மாட்டோம்."

"பின்ன எப்படி எதுப்பீங்க?"

"அவங்க தாக்க வந்தாங்கன்னா நாங்க அவங்களுக்கு முதுகைக் காட்டி "தடியிலே அடிங்க"ன்னு சொல்லுவோம், எங்க நெஞ்சைக் காட்டி "ஈட்டியாலே குத்துங்க"ன்னு சொல்லுவோம். எங்க ரத்தம் மண்ணிலே கொட்டும், மண்ணு செவக்கும், நாங்க

செத்துப் போவோம். அப்போது அவங்களுக்குப் புத்தி வரும், அவங்க நெஞ்சு வலிக்கும், அவங்க கண்ணுலே தண்ணி வரும். அப்போ கடவுள் அவங்களுக்கு அறிவைக் குடுப்பார். அவங்க வெக்கப்பட்டுக்கிட்டுத் திரும்பிப் போயிடுவாங்க..."

ஹோஹோவென்று சிரித்தான் நாயப். "இதுதான் உன் அறிவா?"

கிழவன் ஓர் அதிசயப் பிறவி, அவன் சற்றும் நிலை குலைய வில்லை. அவனுடைய பொக்கை வாயில் சிரிப்பு மலர்ந்தது. குழந்தையின் கள்ளங் கபடற்ற சிரிப்பு. "இந்த வழி பலிக்கும், நிச்சயம் பலிக்கும்! என் மனசு கடவுளைக் கேட்டது. கடவுள்தான் இப்படிச் சொன்னார். ஒங்க மனசு கடவுளை ஒண்ணும் கேக்கற தில்லே. அது கேட்டா நீங்க நான் சொல்றதைப் புரிஞ்சுக் கிட்டிருப்பீங்க..."

* * *

தேவனுக்கேற்ற தேவி—பைத்தியக்காரக் கிழவனுக்கேற்ற பைத்தியக் காரப் பெண்டாட்டி!

எல்லாவற்றையும் கேட்டுக் கிழவிக்கும் கவலை ஏற்பட்டது. கிழவனைப்போலவே, நாயபுக்காகக் கவலை!

"இது ரொம்ப சாதாரண விசயமாச்சே? இது ஏன் நாயப் பாபுவுக்குப் புரியலே? ஏன் கிழவா?"

"அதுதானே, கிழவி!"

"இப்போ என்ன செய்யப் போறே?"

"நானா?" கிழவன் வெகுநேரம் யோசித்துவிட்டுச் சிரித்தான். "நான் தீர்மானம் செஞ்சுட்டேன்."

"என்ன?"

"நான் சாகப்போறேன்"

"சாகப்போறியா?"

"ஆமா, சாகப் போறேன். நான் செத்துப்போனா அவங்க வருத்தப்படுவாங்க. கடவுள் அவங்களுக்கு அறிவு கொடுப்பார். அப்போ நம்ம பேச்சு அவங்களுக்குப் புரியும்."

கிழவி சற்றுநேரம் யோசித்தாள். யோசித்துப் பார்த்ததில் மகிழ்ச்சி ஏற்பட்டது அவளுக்கு. அவள் சிரித்துவிட்டுப் பல தடவைகள் தலையை அசைத்துக்கொண்டே சொன்னாள், "ஆமா, நீ சொல்றது சரிதான்."

"சரிதானே?" என்று கேட்டு அவள் பக்கம் திரும்பிச் சிரித்தான் கிழவன்.

"ஆமா. நீ செத்துப்போ. செத்துப் போய் அவங்களுக்குப்

புத்தி சொல்லு."

வெளியிலிருந்து ரத்தன்லால் கூப்பிட்டான், "தலைவரே!"

"வாப்பா, வா!" கிழவன் மலர்ந்த முகத்துடன் சொன்னான். ரத்தன்லால் சிரித்த முகத்துடன் உள்ளே வந்து, "தலைவரே, எல்லாரும் வந்து நின்னுக்கிட்டிருக்காங்க. நாங்க என்ன செய்யணும் சொல்லு" என்று சொன்னான், தீச்சுடர் போல் பிரகாசித்தான் அவன்.

கிழவன் வெளியே வந்து கைகூப்பி, "பஞ்சாயத்தாருக்கு வணக்கம்!" என்றான்.

இதற்குள் ஒரு விபத்து நேர்ந்துவிட்டது. சாஹுக்களின் ஆட்கள் வந்து அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள். சாஹுக் களின் தலைமை நாயப் சாரு சீல், துணிந்த கட்டை. அவன் யாருக்கும் பயப்பட மாட்டான். பைத்தியக்காரக் கிழவனைப் பிடித்து அடைத்து வைக்கும்படி அவன் உள்ளூர் நாயபுக்கு உத்தரவிட்டான்—கிழவனை மட்டுமல்ல, அவனுடைய சீடர்கள் ரத்தன்லால் உள்பட எல்லாரையும்.

கிழவன் புன்சிரிப்புடன் ஜமீன் ஆட்களிடம் "சரி, வாங்க" என்றான்; ரத்தன்லாலிடமும் மற்ற சீடர்களிடமும் சொன்னான், "வாங்க குழந்தைகளா!"

கிழவி சிரித்தவாறே முன்வந்து "நான்?" என்று கேட்டாள்.

"ஆமா நீயுந்தான்!" என்று சாஹு ஆட்கள் சொன்னார்கள்.

"கொஞ்சம் இருப்பா! கிழவனோட கோவணம், என்துணி, தண்ணி குடிக்கற லோட்டா எல்லாம் எடுத்துக்கிட்டு வந்துடறேன். அந்த லோட்டாவிலே தண்ணி குடிக்காட்டி என் தாகம் தீராது" என்று கிழவி சொன்னாள்.

கிழவன் புன்சிரிப்புடன் தலையசைத்தான்.

என்னதான் இருந்தாலும் பெண்பிள்ளைதானே! லோட்டா விடம் உள்ள பாசத்தை விடமுடியவில்லை அவளால்.

* * *

சாஹுக்கள் கிழவனை அடைத்துவைத்தாலும் அவனை நன்றாகத்தான் கவனித்துக் கொண்டார்கள். அந்த விஷயத்தில் அவர்கள் ஒரு குறையும் வைக்கவில்லை. அடைத்து வைக்கப்பட்ட நிலையிலும் கிழவனின் மலர்ச்சி குறையவில்லை. அவன் கடவுளை அழைத்தான், நிறையச் சிந்தித்தான். தனக்குள்ளேயே கடவுளிடம் பேசினான், "கடவுளே என்ன செய்யணும்? நான் சாகவா? நான் செத்தா அவங்க வருத்தப்படுவாங்களா? நீ அவங்களுக்கு அறிவைக் கொடுப்பியா?"

கிழவி அடைபட்டிருந்த வீட்டிலேயே வளைய வந்தாள். அவள் கிழவனுக்காக சமையல் செய்தாள், அவனுடைய படுக்கையை— அதாவது கம்பளியை— உதறிவிட்டு விரித்தாள், லோட்டாவைப் பளபளவென்று தேய்த்து வைத்தாள். அவளுக்கு இந்த வாழ்க்கை பிடித்துப் போய்விட்டது. ஏனென்றால், இப்போது தான் அவளுக்குக் கிழவனுடன் நெருங்கி வாழ வாய்ப்புக் கிடைத் திருந்தது. கிழவன் வெளியிலிருந்தபோது அவனுக்கு ஆயிரம் வேலை; அவளிடம் நாலு வார்த்தை குடும்பத்தைப் பற்றிப் பேச அவனுக்கு நேரமில்லை. அவன் பேசிக்கொண்டிருந்ததெல்லாம் பரத்பூரைப் பற்றிய பேச்சுத்தான், மக்களைப் பற்றிய பேச்சுத்தான். இன்றைக்கு இங்கே, நாளைக்கு இன்னோரிடம்; இவன் வருவான், அவன் வருவான், ஜனங்கள் எப்போதும் அவனைச் சூழ்ந் திருப்பார்கள். இங்கே வந்தபிறகு கிழவிக்கு அவனுடன் இருக்க முடிகிறது. பேச முடிகிறது.

ஆனால் சில நாட்களில் கிழவியின் பிரமை தெளிந்துவிட்டது. கிழவன் மாறவில்லை. இப்போது அவனைச் சுற்றிக் கூட்டம் இல்லை, இருந்தாலும் அவனுடைய மூளையில் சிந்தனைகளின் கூட்டம் குறையவில்லை. "கிழவன் மனசு கல்" என்று ஜனங்கள் சொல்வார்கள். அவர்களுடைய கருத்து சரிதான் என்று தோன்றியது கிழவிக்கு.

அவள் "கிழவா!" என்று கூப்பிட்டாள்.

கிழவன் அவள் பக்கம் திரும்பி "உம்" என்றான். ஆனால் அவனுடைய பார்வை அவள் மேல் இல்லை என்று அவளுக்குத் தோன்றியது. எங்கோ தொலைவில், அதோ அந்த மலையுச்சியில் இருந்த கோவிலின் கும்பத்தில் அவனுடைய பார்வை நிலைத்திருப்பது போல் தோன்றியது.

"என்ன யோசிச்சுக்கிட்டிருக்கே?"

"யோசனையா?" கிழவன் சிரித்தான்.

"சிரிக்காதே கிழவா! உன் சிரிப்பு எனக்குப் பிடிக்கலே."

"உம்..." அந்த 'உம்'முடன் வாயை மூடிக்கொண்டான் கிழவன்.

கிழவி பயத்தாலும் வியப்பாலும் மௌனியாகிவிட்டாள். அவள் தனக்குள் சொல்லிக்கொண்டாள், "கடவுளே, கிழவனைக் காப்பாத்து! இல்லேன்னா யாரு ஜனங்களுக்காக கவலைப்படு வாங்க?"

* * *

திடீரென்று ஒருநாள் கிழவன், "நான் சாகப் போறேன்" என்று

சொன்னான்.

கிழவிக்கு நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. ஆனால் அவளுடைய பயத்தை வெளிப்படுத்த வழியில்லை. அவள் பயத்தை வெளிப்படுத்தினால் கிழவன் சிரிப்பான், "சீ!" என்பான். அந்த அவமானத்திலே கிழவி செத்துப் போய்விடுவாள்.

"நீ ஏன் சாகணும்?" என்று மட்டும் கேட்டாள் அவள்.

"நான் சாகப்போறேன்... நான் அடிதடி செய்யச் சொல்லி வெளியில் இருக்கிற ஜனங்களைத் தூண்டிவிட்டதா சாஹு பாபுமார் சொல்றாங்க. நம்ம ஆளுங்க பாபுக்களோட ஆளுங்களை அடிச்சுட்டாங்க, பாபுக்களுக்கு ரொம்ப நஷ்டம் பண்ணிட்டாங்க. இதெல்லாம் நான் சொல்லித்தான் நடந்ததுன்னு பாபுமார் சொல்றாங்க..."

"அதுக்குப் பதிலா அவங்களுந்தான் நம்ம ஆளுங்களை நல்லா அடிச்சிட்டாங்களே!" ரத்தன் சொன்னான்.

புன்சிரிப்புடன் தலையை அசைத்தான் கிழவன். "அது மட்டும் இல்லே ரத்தன், நம்ம ஆளுங்க அடிச்சது பாவம். நான் செத்துக் கடவுள்கிட்டே போய் "கடவுளே, மன்னிச்சுக்கோ! எங்க ஆளுங்களோட பாவத்தை மட்டுமில்லை, பாபுமாரோட ஆளுங்களோட பாவத்தையும் மன்னிச்சுக்கோ...! அப்படீன்னு சொல்லப் போறேன்.... அப்பறம்..."

"அப்புறம் என்ன?"

கிழவன் சிரித்தான்.

"அப்பறம் பாபுமாருக்குப் புரியும் நான் பாவியில்லேன்னு..."

* * *

கிழவன் சாகும் விரதம் தொடங்கிவிட்டான். அவன் சாப்பிடாமல் கொள்ளாமல் மௌனமாகப் படுத்துக் கிடந்தான்.

கிழவியின் பேச்செல்லாம் தீர்ந்து போய்விட்டாற் போலிருந்தது. அவள் பேசாமல் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தாள். ஐயோ, அவளோட கிழவன் காணாமல் போயிட்டான். அவள் பக்கம் திரும்பிப் பார்க்கக்கூட அவனுக்கு நேரமில்லை. அழுவது வெட்கக்கேடு; ஆகையால் அழக்கூட முடியவில்லை அவளால்.

அவர்கள் அடைபட்டிருந்த வீட்டுக்கு வெளியிலிருந்து மக்களின் கூப்பாடு கேட்டது, "கடவுளே, எங்க தலைவனைக் காப்பாத்து!"

ரத்தன்லாலும் அவனுடைய-தோழர்களும் சோர்ந்து போய் விட்டனர். கிழவியால் சும்மா இருக்க முடியவில்லை. கிழவனிடம்

ஏதாவது சொல்லவும் துணிவில்லை அவளுக்கு. அவள் மனதுக்குள் கடவுளை வேண்டிக் கொண்டாள், "இவ்வளவு ஜனங்களுக்காக, எனக்காக, கிழவனைக் காப்பாத்து, கடவுளே!"

கிழவனின் மனதைவிடக் கடவுளின் மனது மிருதுவானது என்று கிழவிக்குத் தோன்றியது.

கடவுள் சிரிக்கிறார் என்று நினைத்தாள் கிழவி.

* * *

கிழவன் சாகவில்லை. சாவுக்கான அறிகுறிகள் எல்லாம் தோன்றின. சாஹு'க்கள் மருத்துவர்களை அனுப்பினார்கள். அவர்கள் "எங்களால் முடியாது! மனுசன் சாப்பிடலேன்னா பொழைக்க மாட்டான், பொழைக்க முடியாது" என்று சொன்னார்கள். ஆனால் ஆச்சரியம், கிழவன் பிழைத்து விட்டான்! அதைவிட ஆச்சரியம், கிழவனின் கள்ளங்கபடற்ற, குழந்தைத் தனமான புன்சிரிப்பு அவனுடைய முகத்திலிருந்து ஒருகணங்கூட மறையவில்லை. கொஞ்சங் கொஞ்சமாகக் கிழவனின் மரண அறிகுறிகள் மறைந்துவிட்டன; குழம்பியிருந்த கண்கள் தெளிவடைந்து அவற்றில் வெண்தாமரையிதழ்களின் ஒளி மலர்ந்தது; தாயின் மடியில் இருக்கும் குழந்தையின் முகம்போல் கிழவனின் முகம் பிரகாசமாயிற்று. கிழவன் சொன்னான், "நான் பொழைச்சிட்டேன். நான் பாவம் செய்யலேன்னு கடவுள் என் மனசுகிட்டே சொல்லிட்டார்."

கிழவியின் முகத்தில் புன்சிரிப்பு,

"நான் இப்போ சாகப் போறேன்!" என்றாள் அவள்.

"ஏன்?"

"எனக்கு ஒடம்பு ஒரு மாதிரியா இருக்கு, தவிர..."

"தவிர என்ன?"

கிழவி பதில் சொல்லவில்லை. சும்மா சிரித்து மழுப்பினாள்.

அவள் உண்மையிலேயே இறந்து போனாள். சாதாரணக் காய்ச்சல்தான். அந்தக் காய்ச்சலில் இறந்து போனாள் அவள். சாகும் தருணத்தில் அவள் கண்ணிமைக்காமல் கிழவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

மக்கள் சொல்வது சரிதான், கிழவனின் மனம் கல்.

இல்லை, ஜனங்கள் சொல்வது சரியில்லை, சரியில்லை— காரணம், கிழவனின் கண்களில் கண்ணீர்!

ஆம், கிழவனின் கண்களில் கண்ணீர்!

கிழவி "கிழவா!" என்று கூப்பிட்டாள்.

கண்களில் நீர் பளபளத்த நிலையிலும் கிழவனின் முகத்தில்

*புன்சிரிப்பு. "கிழவி, என்ன சொல்றே?" என்று அவன் கேட்டான்.*

*"சாவு ரொம்ப அழகாயிருக்கு, கிழவா! சாவு ரொம்ப அழகு!"*

*கிழவன் சிரிக்கத் தொடங்கினான். அவனது கண்ணீர் டப் டப்பென்று கிழவியின் நெற்றியின் மேல் விழுந்தது. அவன் அதைத் துடைக்கப் போனான்.*

*"ஊஹும், அது இருக்கட்டும்" என்றாள் கிழவி.*

*(சனி பாரேர் சிட்டி, 1944)*

# ஓட்டர் சாவித்திரிபாலா

பனபூல்

அவனுக்கு ஒரு விசித்திரப் பெயர்— ரிபுநாஷ். அவனுடைய அண்ணன் பெயர் தமோநாஷ். ஆனால் காலத்தின் கோலம், அவர்களில் எவராலும் எதையும் நாசம் செய்ய முடியவில்லை; அவர்களேதான் நாசமானார்கள். தமோநாஷ் என்றால் இருளை அழித்தவன் என்று பொருள். ஆனால் ஒரு சிறுதுளி அளவு ஒளி கூட அவனது வாழ்வில் நுழையவில்லை. அவன் "அ, ஆ" கூடக் கற்காமல் முழு முட்டாளாயிருந்தான். அவர்கள் பிராமணப் பையன்கள் என்பதால் அவர்களுக்கு சமஸ்கிருதப் பெயர்கள் இடப்பட்டிருந்தன. அவர்களுடைய தகப்பனார் மோகநாஷ் தர்க்கதீர்த்தா ஒரு திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியர். எல்லாரும் அவரைச் சுருக்கமாக "மோகன் பண்டிதர்" என்று அழைத்தார்கள். இந்தக் காலத்தில் சமூகத்தில் சமஸ்கிருதப் பண்டிதர்களுக்கு முன்போல் மதிப்பு இல்லை. அவர் பரம ஏழை, புரோகிதம் செய்து வாழ்க்கை நடத்தி வந்தார். அவர் இறந்தபோது தமோ நாஷுக்கு ஆறு வயது, ரிபுநாஷுக்கு வயது மூன்று.

குழந்தைகளின் தாய் சமையல் வேலை செய்து வயிறு வளர்த்தாள். பதினாறு வயதிலேயே தமோநாஷ் பழுத்து விட்டான். ஒரு போக்கிரிக் கூட்டத்துக்குத் தலைவனாகி விட்டான். அவன் பெயர் "தம்னா" ஆகிவிட்டது. அவன் ரவுடித்தனம் செய்து ஏதோ கொஞ்சம் சம்பாதித்தான். சம்பாதித்ததில் ஒரு பகுதியைத் தாயிடம் கொடுத்துவிட்டு மிச்சத்தைக் கொண்டு குஷாலாகக் காலங்கழித்தான். ஆனால் இது நீண்டகாலம் தொடரவில்லை. ஓரிடத்தில் ரவுடித்தனம் செய்யப்போய் கத்திக் குத்துப்பட்டு இறந்துபோனான். ஒரு நாள் அவனது சவம் சிறிது நேரம் நடை பாதையில் கிடந்தது. பிறகு போலீசார் சவப்பரிசோதனைக்காக அதைச் சவக்கிடங்குக்கு எடுத்துச் சென்றார்கள். மருத்துவர்கள் அந்த உடலைத் தாறுமாறாகக் கிழித்தார்கள். பிறகு சவம் தோட்டிகளின் கைக்கு வந்தது. தமோநாஷின் அம்மா சவத்தைப் பெற்றுக்கொள்ள முயற்சி செய்யவில்லை. சவத்தை எடுத்து வந்து,

ஆட்களைக் கூட்டிப்போய் அதை எரிக்க அவளிடம் பணமில்லை. அவளுக்கு ஏற்கெனவே நான்கு பக்கங்களிலும் கடன், இன்னும் கடன்சுமையை அதிகமாக்கிக்கொள்ள இஷ்டமில்லை அவளுக்கு. தோட்டிகள் சவத்தின் எலும்புகளை எடுத்துக் கழுவி, "உடற்கூறு" கற்கும் மாணவர்களுக்கு அவற்றை விற்றுக் கொஞ்சம் காசு சம்பாதித்தார்கள். இதோடு தமோநாஷின் வரலாறு முடிந்து விட்டது.

தமோநாஷின் தாய் சாவித்திரி அதிகம் அழக்கூட இல்லை. அவளுடைய முகத்தில், கண்களில் நெருப்பு உள்ளூரக் கனன்றது. அது வார்த்தைகளில் வெளிப்படாத, பார்வைக்குப் புலப்படாத, ஆனால் தீவிரமான ஜுவாலை. சாவித்திரி சமையல் வேலை செய்த வீட்டுக்காரர், தமோநாஷின் மரணத்துக்குப் பிறகு அவளுடைய சம்பளத்தை இரண்டு ரூபாய் உயர்த்துவதாகச் சொன்னார். சாவித்திரி அதற்கு இணங்கவில்லை. "தேவையில்லை" என்று சுருக்கமாக மறுத்து விட்டாள்.

ரிபுநாஷ் தெருக்களில் சுற்றித் திரிந்தான். வீட்டில் இட மில்லாதவர்கள், தெருவில் சுற்றியவாறே காலங்கழிப்பவர்கள், ஏதாவதொரு கிளர்ச்சி, சண்டை, மோட்டார் விபத்து ஏற்பட்டால் அதைப் பார்க்கக் கூட்டங் கூடுபவர்கள், இவர்களே ரிபுநாஷின் தோழர்கள். அவர்கள் அவனை "ரிபுன்" என்று அழைத்தார்கள்.

ஆனால் ரிபுன் தம்னாவைப் போல் பலசாலி அல்ல, நோஞ்சான். அவன் மார்க்கெட் வட்டாரத்தில் சுற்றிக் கொண் டிருப்பான்; மூட்டை தூக்கி ஏதோ சம்பாதித்தான்; பீடி பிடிக்கக் கற்றுக்கொண்டான். தினம் ஒரு கட்டு பீடி வாங்கக் காசை எடுத்துக்கொண்டு மிச்சத்தைத் தாயிடம் கொடுப்பான்.

அவனுக்குப் பதினாறு பதினேழு வயதாயிருந்தபோது ஒரு விபத்து நிகழ்ந்தது. ஒருநாள் அவன் ஒரு கூடை கோசு தூக்கிக் கொண்டு வந்து ஒரு மோட்டாரின் பின்புறப் பெட்டியில் அவற்றை அடுக்கி வைக்கும்போது அவனுக்குத் தொண்டை கமறியது. அவன் இருமத் தொடங்கினான். மோட்டார்க்காரர் அவனுக்குரிய முக்கால் ரூபாய்க் கூலியைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டார். ரிபுன் நடைபாதையில் உட்கார்ந்துகொண்டு இருமத் தொடங்கினான். திடீரென்று இருமலுடன் ஒரு கட்டி இரத்தம் வெளிவந்தது. ரிபுன் அதைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் பிறகு வீடு திரும்பினான். சாவித்திரி பக்கத்து மருத்துவரிடம் ரிபுனைக் கூட்டிச்சென்றாள். அவர் அவனைப் பரிசோதித்து விட்டு, "இவனுக்குக் காசநோய் வந்திருக்கு. எனக்கு நீ பீஸ் ஒண்ணும் தரவேண்டாம், ஆனா மருந்து வாங்கிக் குடுக்கணும். ஊசி மருந்து போடணும். முட்டை, வெண்ணெய்,

மீன், மாமிசம், பழம் இந்த மாதிரி புஷ்டியான சாப்பாடு குடுக்கணும்..." என்றார்.

சாவித்திரி பேசாமல் மருத்துவரின் முகத்தைப் பார்த்துக் கொண்டு நின்றாள். கண்ணுக்குப் புலப்படாமல் அவள் முகத்தில் கனன்று கொண்டிருந்த நெருப்பை அவர் உணர்ந்து கொண்டார் போலும். "ஒன்னாலே முடியலேன்னா பையனை ஆஸ்பத்திரி யிலே சேர்த்திடு. நான் ஒனக்கு ஒரு சீட்டு எழுதித் தாரேன். நீ அதை எடுத்துக்கிட்டு ஆஸ்பத்திரிக்குப் போ" என்று அவர் சொன்னார்.

சாவித்திரி சீட்டை எடுத்துக்கொண்டு ஆஸ்பத்திரிக் கூட்டத்தில் ஒரு வாரம் முயன்று பார்த்தாள். ஒரு பலனுமில்லை. ஒரு நோயாளி அவளிடம், "இங்கேயும் பைசா இல்லாமே ஒண்ணும் நடக்காது. லஞ்சம் குடுக்கணும்" என்று சொன்னான்.

ரிபுன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்படவில்லை, சாவித்திரியிடம் காசு ஏது? சிகிச்சையின்றியே காலங் கடத்தினான் ரிபுன். மறுபடியும் மூட்டை தூக்கவும் தொடங்கினான். ஒருநாள் அவ னுடைய கூட்டாளியொருவன் அவனிடம் சொன்னான், "எனக்கு ஒரு நல்ல யோசனை தோணுது. நீ எப்படியாவது அலிபூர் ஜெயில்ல ஆறுமாசம் இருந்தால் உன் வியாதி குணமாயிடும்..."

"ஜெயில்லே இருந்தா வியாதி குணமாயிடுமா? என்ன சொல்றே நீ?" கூட்டாளியின் பேச்சை நம்பவே முடியவில்லை ரிபுனால்.

கூட்டாளி சொன்னான், "ஹரு ஜெயிலுக்குப்போய் வியாதி குணமாகித் திரும்பி வந்திருக்கான். அவனுக்கும் காசநோய்தான் வந்திருந்தது. அங்கே நல்ல ஆஸ்பத்திரி இருக்கு. எலவசமா சிகிச்சை செய்யறாங்க. நீ ஜெயிலுக்குப் போயிடு!"

சில நாட்களுக்குப் பிறகு ரிபுன் ஒரு டிராமில் பிக்பாக்கெட் செய்யப்போய்க் கையுங்களவுமாகப் பிடிபட்டான். அங்கிருந்த வர்கள் அவனை நன்றாக அடித்துவிட்டுப் போலீசில் ஒப்படைத் தார்கள்.

நீதிமன்றத்தில் நீதிபதி அவனிடம் சொன்னார், "நீ உன் கட்சியை எடுத்துச் சொல்ல ஒரு வக்கீல் வச்சுக்கலாம். வக்கீல் வைக்க உனக்கு வசதியில்லேன்னா சர்க்காரே உனக்கு ஒரு வக்கீல்..."

ரிபுன் கைகூப்பிக்கொண்டு சொன்னான், "வேண்டாம் சாமி, எனக்கு வக்கீல் வேண்டாம். என்மேல் சுமத்தப்பட்ட குத்தம் உண்மைதான். நான் திருடறதுக்காகத்தான் அந்தப் பிரயாணியோட சட்டைப்பையில் கையைவிட்டேன்."

"ஐம்பது ரூபாய் அபராதம், அதைச் செலுத்தாவிட்டால் ஒரு மாதம் ஜெயில்" என்று தீர்ப்பளித்தார் நீதிபதி.

ரிபுன் கை கூப்பியவாறு வேண்டிக்கொண்டான், "ஐயா, என்னாலே அபராதம் செலுத்த முடியாது, ஆனா எனக்கு ஒரு மாச ஜெயில் தண்டைனைக்குப் பதிலா ஆறு மாச தண்டனை கொடுங்க!

நீதிபதிக்கு ஆச்சரியமாகிவிட்டது. "ஏன் ஆறுமாச தண்டனை கேக்கறே?" என்று அவர் வினவினார்.

"எனக்குச் காச நோய் வந்திருக்கு. அலிபூர் ஜெயில்லே காசத்துக்கு நல்ல சிகிச்சை செய்யறாங்களாம். ஆறுமாசத்திலே குணமாயிடுமாம். அதனாலதான்..."

ஆனால் நீதிபதி தன் தீர்ப்பை மாற்றவில்லை. ஜெயில் ஆஸ்பத்திரியில் ரிபுனின் நோய் குணமாகிவில்லை. அவன் ஒரு மாதத்துக்குப் பிறகு இருமிக்கொண்டே சிறையிலிருந்து வெளியே வந்தான். அதற்குப்பின் ஒரு மாதந்தான் உயிருடனிருந்தான் அவன். ஒருநாள் நள்ளிரவில் இருமல் வந்து எழுந்து உட்கார்ந்தான். அம்மாவின் காலடியிலேயே இரத்த வாந்தியெடுத்து உயிரை விட்டான், பாவம்!

திகைத்துப்போய் உட்கார்ந்திருந்தாள் சாவித்திரி. அவளுடைய கண்களிலிருந்து தீப்பொறிகள் பறந்தன.

ஆனால் ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விடவில்லை அவள்.

இதற்கு இரண்டு மாதங்களுக்குப்பின் தேர்தல் வந்தது. சாவித்திரிபாலாவும் ஒரு வாக்காளர். மதிப்புக்குரிய ஒரு பெரிய மனிதர் அவளிடம் ஓட்டுக் கேட்க வந்தார். சாவித்திரி அவரைச் சுட்டெரிப்பதுபோல் உற்றுப் பார்த்துக் கேட்டாள், "ஓங்களுக்கு ஓட்டுப் போடணுமா? நீங்க எனக்கு என்ன ஒபகாரம் செஞ்சிருக் கீங்க? என் புருசன் ஒரு பண்டிதர். நீங்க பதவியிலே இருந்தபோது அவர் ஒரு சாதாரணப் பிச்சைக்காரன் மாதிரி செத்துப் போனார். என்னால என் பெரிய புள்ளெயப் படிக்க வைக்க முடியலே. அவன் ரவுடியாத் திரிஞ்சு கடைசியில் கத்திக் குத்துப்பட்டு செத்துப் போனான். சின்னப் பையன் காசநோயிலே செத்தான். அவனுக்கு சிகிச்சை செய்ய முடியலே. எங்கே போனாலும் லஞ்சம் கேக்கறாங்க... ஓங்களுக்கு எதுக்கு ஓட்டுப் போடணும்? நான் யாருக்கும் ஓட்டுப் போடமாட்டேன்...!"

வேட்பாளர் பேசத் தொடங்கினார், "இதோ பாருங்க ஜனநாயகத்திலே..."

ஆனால் சாவித்திரி அவரைப் பேச்சை முடிக்க விடவில்லை. அவள் உரத்த குரலில், "வெளியே போங்க!" என்று கத்தினாள்.

விரைவாக வீட்டைவிட்டு வெளியேறினார் வேட்பாளர்.

படாரென்று கதவைச் சாத்தினாள் சாவித்திரி...

*(தேஷ், 1971)*

# சாரங்க்

## அசிந்த்ய குமார் சென் குப்தா

அம்மா நசீமை அடித்துவிட்டாள்.

அம்மா அடித்தால் அடிக்கட்டும், அவனும் ஏன் அடிக்கணும்? அடிக்க அவன் யார்?

நான் ஆடு மாடு வளக்கறேன், வளக்கலே, பயிர் செய்யறேன், செய்யலே, அதிலே அவனுக்கென்ன? நெலம் தரிசாக் கிடந்தா அவனுக்கென்ன? வீட்டுக் கூரையை மாத்தணுமா வேணாமாங் கறது எங்க கவலை. கூரையொழுகினா நாங்க— அம்மாவும் பிள்ளையும் நனைஞ்சிட்டுப் போறோம். யாரும் அவனை வந்து கொடை பிடிக்கக் கூப்பிடப்போறதில்லே.

கோல்பானு— அதாவது அம்மா— "இனிமே கஹ்ராலி எல்லாத்தையும் கவனிச்சுக்குவாரு" என்று சொன்னாள்.

"கஹ்ராலி யாரு?" என்று வெடித்தான் நசீம்.

"அவரு பசையான ஆளு. அஞ்சு ஏக்கர் நெலம் இருக்கு அவருக்கு. கணக்கு வழக்கு, கோர்ட் கேஸ் நெறைய இருக்கு"

"அதனால நமக்கு என்ன வந்தது?"

"அவரை அண்டியிருந்தா நம்ம நெலத்தை நல்லபடி கவனிச்சுக்கலாம், உண்ண உடுக்க கஷ்டப்பட வேண்டாம். வீட்டுக்கு ஓலைக் கூரைக்குப் பதிலாத் தகரக்கூரை போட்டுக்கலாம்."

"நமக்கு அதெல்லாம் வேணாம், இந்த ஓட்டைக் குடிசையே நமக்குத் தேவலை. நாம கீரை, கொடிகளைச் சாப்பிட்டுப் பொழைச்சுக்கலாம். நீ அவனை வெரட்டி விட்டுடு."

கஹ்ராலி நசீமை நன்றாக அடித்துவிட்டான். கோல்பானுவும் அவனுடன் சேர்ந்துகொண்டாள்.

அப்பன் மட்டும் உயிரோடிருந்தால் நசீமை இப்படி யாராவது அடிக்க முடியுமா? அவனுடைய அப்பன் வயலில் போய் வேலை செய்யும்படி அவனை ஒருபோதும் கட்டாயப்படுத்த மாட்டான். நசீம் வலையை எடுத்துக்கொண்டு குளங்குட்டைகளில் மீன்பிடிக்கப் போய்விடுவான். "கடைத்தெருவிலே ஒனக்கு ஒரு துணிக்கடை வச்சுத் தந்துடறேன்" என்று சொல்வான் தகப்பன்.

"அதுக்குப் பதிலா எனக்கு ஒரு படகு வாங்கிக் குடுத்துடு. நெலத்தைவிடத் தண்ணிதான் எனக்கு ரொம்பப் பிடிக்கும்." என்பான் நசீம்.

ஆனால் அப்பனுக்குப் படகு வாங்க வசதியில்லை. படகை வாடகைக்கு எடுத்து ஓட்டிப் பணம் சம்பாதிக்கும் அளவுக்குப் பெரியவனாகவில்லை நசீம்.

நசீமின் வலை அறுந்துபோய் வெகுகாலமாகிவிட்டது. இருந் தாலும் அதன் பாசம் அவனை விடவில்லை. அவன் ஆற்றங் கரையில் மௌனமாக மணிக்கணக்கில் உட்கார்ந்திருப்பான். கண்ணீர் அவனுடைய கன்னங்களில் வழிந்தோடும்.

அம்மா கஹ்ராலியை நிக்காஹ் செய்துகொள்ளப் போவ தாகக் கேள்விப்பட்டான் அவன். அவர்களிருவரும் ஒரே அறையில் இருப்பார்கள். நசீமுக்கு இடம் எங்கே? வாசல் திண்ணை அல்லது புறக்கடைதான். அவனுடைய அம்மாவிடம் யாராவது "இவன் யாரு?" என்று கேட்டால், அவள் "என் முதல் புருஷனோட புள்ள" என்று சொல்வாள். யாராவது அவனை "உனக்கு யாரு சோறு போடறாங்க?" என்று கேட்டால் "கஹ்ராலி" என்று சொல்லவேண்டும் அவன். நசீமுக்கு நெஞ்சு பற்றியெரிந்தது.

அங்கிருந்து சுமார் ஒரு மைல் தூரத்தில் சணல் வயல்களுக்கு அருகில் நீராவிப் படகு வந்து நிற்கும். படகுத்துறை எதுவும் கட்டப்பட்டிருக்கவில்லை. கரையிலுள்ள வாதா மரத்தின் அடித் தண்டையொட்டி, ஆனால் அதனுடன் மோதிக்கொள்ளாமல், படகு நிற்கும். படகிலிருந்து கரையைச் சேர்க்கப் படிக்கட்டை இறக்குவார்கள். படிக்கட்டின் ஒரு மூலையிலிருந்து மறு மூலைக்கு ஒரு மூங்கில் தடியைப் பிடித்துக்கொண்டு இரண்டு படகு ஊழியர்கள். பிரயாணிகள் படிகள் வழியே ஏறி இறங்குவார்கள். டிக்கெட் குமாஸ்தா வாதா மரத்தடியில் ஒரு தகரப் பெட்டியில் டிக்கெட்டுகளை வைத்துக்கொண்டு விற்பான்; படகிலிருந்து இறங்குபவர்களிடமிருந்து டிக்கெட்டுகளை வாங்கிக் கொள்வான், டிக்கெட்டில்லாமல் பிரயாணம் செய்தவர்களோடு பேச்சு வார்த்தை நடத்திக் கொள்வான்; பிறகு படகுக்குள் வந்து கணக் கனிடம் டிக்கெட் வசூல் கணக்குக் கொடுப்பான். அவன் படகிலிருந்து இறங்கிப்போகும் வரையில் படிக்கட்டு கரையில் இறக்கப்பட்டிருக்கும். ஆனால் அவனுக்கு மூங்கில் கழியைப் பிடித்துக்கொள்ளத் தேவையில்லை. தாழ்வான நிலம் எப்போதும் நீரில் மூழ்கியிருக்கும்; அடிமரம் மட்டும் உறுதியாக வேரூன்றி யிருக்கும். படகிலிருந்து இறங்கும் பிரயாணிகள் தண்ணீரில் நடந்து கிராமத்துப் பாதைக்கு வந்து சேர்வார்கள். அவர்களிடம் மூட்டை முடிச்சுகள் இருந்தால் அவற்றை ஒரு தோணியில்

வைத்துக் கையால் தள்ளிக்கொண்டே தண்ணீரைக் கடப்பார்கள். குழந்தை குட்டிகளைத் தோளில் வைத்துக் கொள்வார்கள். பெண்டாட்டி, உருவத்தில் சிறியவளாயிருந்தால் அவளை அப்படியே அலாக்காகத் தூக்கிக்கொண்டு தண்ணீரைக் கடப் பார்கள்....

"படியைத் தூக்கு!" மேல்தட்டிலிருந்து உத்தரவிடுகிறான் சாரங்க்—படகின் தலைவன்.

படகுத்துறைக் குமாஸ்தா இன்னும் இறங்கவில்லையா?

இறங்கிவிட்டான், கோணல் மாணலாகக் கால்வைத்து இறங்கிவிட்டான். படிக்கட்டு படகின் மேலேறியது. தடிமனான சங்கிலியில் பிணைக்கப்பட்டிருந்த நங்கூரம் மடமடவென்று மேலே ஏறத் தொடங்கியது.

ஒரு ஆள் இந்த அவசரத்தில் இறங்க முடியவில்லை போலிருக்கிறது. யார் அவன்? பத்து—பன்னிரெண்டு வயதுப் பையன். பிரயாணியா? யார் கண்டார்கள்? படகைப் பார்க்க அதில் ஏறியிருக்கிறான். அப்படியானால் அடுத்த துறையில் இறங்கிக்கட்டும். அங்கேயிருந்து சின்னத் தோணியிலே வீடு திரும்பிக்கலாம். அதற்குள் இருட்டிப் போயிடும். இருட்டிலே எப்படி வீட்டுக்குப் போய்ச் சேருவான்? பாவம், அவனோட அப்பா அம்மா எவ்வளவு கவலைப்படுவாங்க!

சிறிய படகு. மேல் தட்டில் மூன்றாம் வகுப்பு மட்டுந்தான். முன்பக்கம் புறாக்கூண்டு மாதிரி முதல் வகுப்பு அறைகள் இரண்டு. அவற்றுக்கு முன்னால் திறந்தவெளி மூலையில் சாரங்கின் சுக்கான். நசீம் நேரே அங்கே போய்ச் சேர்ந்தான்.

முதலில் யாரும் அவனைப் பொருட்படுத்தவில்லை. படகின் இயந்திரங்கள் இயங்குவதை வேடிக்கை பார்க்க யாரோ வந்திருக் கிறான் என்று நினைத்தார்கள். ஆனால் பையன் அங்கிருந்து நகரவில்லை.

காலில் செருப்பும் தலையில் படகுபோன்ற தொப்பியும் அணிந்துகொண்டு ஹுக்கா பிடித்தவாறு நின்று கொண்டிருந்த சாரங்க் திரும்பி அவனைக் கேட்டான். "என்ன வேணும்?"

"ஒங்களுக்கு ஒரு வேலைக்காரன் தேவைப்பட்டா என்னை வச்சுக்கலாம்."

"நீ எந்த ஊரு?" சற்றுநேரம் அவனைப் பார்த்துவிட்டுக் கேட்டான் சாரங்க்.

"இந்தப் பக்கந்தான்— கனக்தியா."

"அப்பா அம்மா இருக்காங்களா?"

"ஒருத்தரும் இல்லே."

சாரங்க் இன்னும் சிறிது நேரம் அவனைப் பார்த்துக்

கொண்டே நின்றான். பிறகு "ஒன்னால வேலை செய்ய முடியுமா?" என்று கேட்டான்.

"என்னென்ன வேலைங்க?"

"சமையல் செஞ்சு பரிமாறுவது, படகைத் தொடச்சுப் பெருக்கிறது, துணி துவைக்கிறது, பாத்திரம் தேய்க்கிறது இதெல்லாந் தான். முடியுமா? அப்படீன்னா இருந்துக்க. எலவசமா வேலைக்கு ஆள் கிடைச்சா நல்லதுதானே!" என்று சொல்லிவிட்டு சாரங்க் சுக்கானை இயக்கிக் கொண்டிருந்த இயாத் அலியைத் திரும்பிப் பார்த்தான்.

"கொறஞ்சது ஹூக்காவிலே புகையிலை போட்டுக் குடுப்பான், தேவைப்பட்டாக் கைகால் பிடிச்சுவிடுவான்-"

"சம்பளம் ஒண்ணும் கிடையாதா?" இயாத் அலி கேட்டான்.

"சம்பளம் வேறயா?" என்று சீறினான் சாரங்க்.

"பாசியைக் கொண்டு கறி சமைக்கணுமா? அப்படியொண்ணும் அவசியமில்லே எனக்கு! இருக்கறதுன்னா இருக்கட்டும், இல்லேன்னா கீழே எறக்கி விட்டுடுவேன்- ஏய் டிக்கெட் இருக்கா?"

"இல்லீங்க. எனக்குச் சம்பளம் வேணாம்!"

படகில் இடம் கிடைத்ததே பெரிய காரியம் நசீமுக்கு. அப்பன் இல்லே, சித்தப்பன் இல்லே, முதலாளி இல்லே, யாரோ ஒரு வேத்து மனிதன்கிட்டே அடிவாங்கிக்கிட்டு வாயை மூடிக் கிட்டு இருக்கறதைவிட எவ்வளவோ தேவலை இது. முற்றிலும் புதிய அனுபவம் கிடைக்கிறதே, அதுவே ஒரு சுகந்தான்.

நன்றாக வேலை செய்தால் ஒருநாள் படகிலேயே நிரந்தரமாக வேலை கிடைத்துவிடும். முதலில் படிக்கட்டை ஏற்றி இறக்கும் வேலை, பிறகு மேல் தட்டுப் பொறுப்பு, அதற்குப்பிறகு பட கோட்டும் வேலை, கடைசியில் சாரங்க்! இப்படி நடக்காதென்று யார் சொல்ல முடியும்? முதலில் சம்பளமில்லாத வேலைக்காரன், கடைசியில் படகுக்கே தலைவன்!

சாரங்க் அடர்த்தி குறைந்த தன் வெண்தாடியை உருவி விட்டுக்கொண்டான்.

ஆனால் முதல் நாளிரவே நசீமுக்கு நல்ல உதை கிடைத்தது சாரங்கிடம். அவன் கவனக்குறைவாக ஒரு கண்ணாடி ஜாடியை உடைத்துவிட்டான். பிறகு அவ்வளவுதான்! அவன் எதிர்பாராத விதமாக அவன் முகத்தில், தலையில், முதுகில் பளார் பளார் என்று அடிகள் விழுந்தவண்ணம் இருந்தன. ஹோவென்று அழுதுவிட்டான் நசீம். ஆனால் அவன் ரொம்பக் கத்திக் கூப்பாடு போட்டால், சாரங்க் அவன் கைகால்களைக் கட்டி ஆற்றின் கறுப்புத் தண்ணீரில் அவனை எறிந்து விடுவான்.

நசீமுக்கு வருத்தத்தைவிட ஆச்சரியந்தான் அதிகம் ஏற்பட்டது. ஆனால் இதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. இந்தப் படகு வாழ்க்கையில் இதுதான் வழக்கம். எல்லாரும் சாரங்கிடம் அடிவாங்கத்தான் வேண்டும். படிக்கட்டு இறக்கி ஏற்றுபவர்கள், மேல்தட்டைக் கழுவுபவர்கள், சமையல் பணியாளர், கயிறு இழுப்பவர்கள், விளக்குக் காட்டுபவர்கள் இவர்களுடைய வேலை யில் ஒரு சிறிய தவறு நேர்ந்தாலும் அவர்களுக்கு அடி உதைதான்.

படகின் கீழ்ப்பகுதியில் இயந்திரங்கள் இருக்கும். கரி போடுபவன், நெருப்பை வளர்ப்பவன், இயந்திரம் இயக்குபவன் இவர்களெல்லாரும் கீழேதான் இருப்பார்கள். எல்லாரையும் கண்காணிக்கும் பொறுப்பு சாரங்குக்கு. யாராவது தவறு செய்து விட்டால், ஒரு இயந்திரத்துக்கு பதிலாக வேறொரு இயந்திரத்தை இயக்கிவிட்டால், ஒரு கழிக்குப் பதிலாக இன்னொரு கழியை இழுத்துவிட்டால் அவன் கதி அதோ கதிதான்! அடி உதை, மட்டமான வசவுகள், செருப்படி கூட விழும் அவனுக்கு. இவ்வளவும் போதாவிட்டால் வேலையே போய்விடும்.

காரணம், படகுக் கம்பெனிக்கு சாரங்கை மட்டுந்தான் தெரியும். மற்ற ஊழியர்களுடன் அதற்கு எவ்விதத் தொடர்பும் இல்லை. சாரங்க்தான் படகுக்கு மாஜிஸ்டிரேட் மாதிரி. எல்லாப் பொறுப்பும் அவனுடையதுதான். படகு செல்லும் வழியில் ஒரு தோணியுடன் மோதி அதை மூழ்கடித்துவிட்டால் அதற்கு நஷ்ட ஈடு கொடுக்க வேண்டியவன் சாரங்க்தான். மழை புயலில் அடி பட்டு அந்தப் படகே முழுகினாலும் பொறுப்பு சாரங்க்தான், கம்பெனி முதலாளிகளல்லர். படகு சம்பந்தமாக எழும் எல்லா வழக்குகளுக்கும் அவன்தான் பொறுப்பு. அதேபோல் படகு பெரும் புயலிலிருந்து தப்பிக்கரைக்குப் பத்திரமாக வந்து சேர்ந்து விட்டால் சாரங்குக்குப் பரிசு உண்டு. படகின் மற்ற பணி யாளர்கள் எவ்வளவுதான் கடினமாக உழைக்கட்டும், எவ்வளவு தான் சாமர்த்தியத்தைக் காட்டட்டும், அவர்களுக்கு இந்தப் பரிசின் ஒரு துளிகூடக் கிடைக்காது. எல்லா சன்மானங்களும் மெடல்களும் சாரங்கின் கழுத்தில்தான் விழும்.

"என்ன ஆச்சு?"

நீராவிப்படகு மணலில் சிக்கிக்கொண்டு விட்டது. மூடுபனி யில் மணல்மேடு புலப்படவில்லை. படகின் அடிப்பகுதி மணலில் நன்றாக மாட்டிக்கொண்டு விட்டது. அதை விரைவில் மணலி லிருந்து விடுவிக்க முடியுமென்று தோன்றவில்லை. ஒரு தோணியைப் படகிலிருந்து இறக்க வேண்டும். ஒருவன் அந்தத் தோணியில் போய், தந்தி வசதியுள்ள படகுத்துறையில் செய்தி தெரிவிக்க வேண்டும். அத்தகைய படகுத்துறையெதுவும் அருகில்

இல்லை. பெரும்பாலான துறைகள் மரத்தடிகள் அல்லது வயல் வெளிகள்தாம். இன்றைக்குக் குறைந்தது ஏழெட்டு மணிநேரம் படகு தாமதப்படும். வழியில் உள்ள துறைகளிலெல்லாம் பிரயாணி கள் இரவு முழுதும் படகுக்காகக் காத்துக் கொண்டிருப்பார்கள். அவர்களுக்குத் தொலைவில் புகை தெரியும், படகின் ஊதல் ஒலி கேட்கும், ஆனால் படகு வராது.

குற்றம் யாருடையது?

மாலுமியின் குற்றம், இரண்டாவது, 'மேட்'டின் குற்றம். ஆனால் இவர்கள் கட்டுமஸ்தான் உடல்வாகு கொண்டவர்கள். இவர்களை அடிப்பது சுகமில்லை, அடிப்பவனுக்குத்தான் கை கால் புண்ணாகும். ஆனாலும் இவர்கள் தப்பமுடியாது. இவர் களுடைய சம்பளம் முழுவதும் பறிமுதலாகிவிடும். இவர்கள் தங்கள் சாப்பாட்டைக்கூடக் காசு கொடுத்து வாங்கிக்கொள்ள வேண்டும்.

சாரங்க் படகை நிரந்தரமாகக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டவன் மாதிரி. படகுக்கான தளவாடச் செலவுகள், கரிக்கான செலவு, ஊழியர்களின் சம்பளம் இவற்றையெல்லாம் கணக்கிட்டு ஒரு மொத்தத் தொகையைக் கம்பெனி சாரங்கிடம் கொடுத்துவிடும். அதைக்கொண்டு சம்பளப் பட்டுவாடாவும் மற்ற செலவுகளும் செய்துகொள்வான் சாரங்க். அவன் தன்னிஷ்டத்துக்கு சம்பளம் கொடுப்பான், அபராதம் விதிப்பான், சாப்பாட்டை நிறுத்துவான்; தன்னிஷ்டத்துக்கு ஆட்களை வேலையைவிட்டு நீக்குவான். அவனுக்கெதிராக எந்தப் புகாரும் எடுபடாது, அப்பீலும் இல்லை. படகின் உள்துறை நிர்வாகத்தைப் பற்றிக் கம்பெனிக்குக் கவலையில்லை. படகு, ஆட்களையும் சரக்குகளையும் ஏற்றிக்கொண்டு போகவேண்டும், கணிசமான தொகை லாபம் காட்டவேண்டும் என்பதில்தான் அதற்கு அக்கறை.

ஆகையால் படகு ஊழியர்களுக்கு சாரங்கின் வார்த்தைதான வேதவாக்கு. அவர்கள் அவனுடைய அடிமைகள். அவன் வெறும் சாரங்க் அல்ல, பெரிய வைசிராய்.

"அழுது பிரயோசனமில்லேப்பா" பக்கத்திலிருந்த மக்பூல் சொன்னான். "இது மாதிரி இன்னும் எவ்வளவோ அடிவாங்க வேண்டியிருக்கும். அடிவாங்கி வாங்கித்தான் வேலை உயர்வு கிடைக்கும்."

மக்பூலும் முதலில் வேலைக்காரனாகத்தான் படகில் சேர்ந்தான். சமையல் வேலையல்ல; துணிச்சலவை, செருப்புத் தைக்கும் வேலை. மூன்றாண்டுகளுக்குப்பிறகு அவனுக்குப் படிக்கட்டு ஏற்றி இறக்கும் வேலை கிடைத்தது. பிறகு மேல்

தட்டில் வேலை, அதன்பின் கயிறு இழுக்கும் வேலை. அடி வாங்காவிட்டால் படகில் பதவி உயர்வுக்கு வழியில்லை.

“சாரங்க் துரையோட நல்ல பார்வை படலேன்னா ஒண்ணும் பிரயோசனமில்லே. பத்துப் பன்னெண்டு வருசம் ஒழைச்ச பிறகு துரைக்குத் தயவு வந்தா சான்றிதழ் கொடுப்பாரு. பிறகு அந்த சான்றிதழை வச்சுக்கிட்டு சாரங்க் பரீச்சை எழுதலாம்” என்று சொன்னான் மூன்றாவது மேட் அப்சாருதீன், “அந்தச் சான்றிதழ் இல்லேன்னா எல்லா ஒழைப்பும் வீண்.. அதனாலே சாரங்கோட காலிலே அழுத்தமா எண்ணெய் தடவிக்கிட்டு இருக்கணும். பரீச்சை மட்டும் பாஸ் பண்ணீட்டா அப்பறம் கட்டிப்பிடிக்க முடியாது. அப்பறம் நீதான் ஜமீந்தார், நீதான் பொக்கிஷதார், நீதான் எல்லாம்!”

“ஆனா இதிலே இன்னொரு விசயம் இருக்கு. ‘சிட்டகாங்’ ஆளுங்கன்னா சாரங்குக்கு ரொம்பப் பிரியம்” என்று தாழ்ந்த குரலில் சொன்னான், பாய்லரில் வேலை செய்யும் விலாயத் அலி. “சாரங்கோட சொந்த ஊர் சிட்டகாங். ‘சிட்டகாங்கைத்தவிர வேறே எங்கே நல்ல சாரங்க் கிடைப்பான்?’ அப்படீன்னு சொல்லுவாரு. ‘சாரங்க், மீன், வத்தல், தர்கா இந்த மூணும் சேர்ந்தது சிட்டகாங்’ அப்படீன்னு ஒரு பழமொழியே இருக்கு. அதே மாதிரி இன்னொரு பழமொழி ‘நெல், கொள்ளைக்காரன், வாய்க்கால் இந்த மூணும் சேர்ந்தது பரிசல்...!’ சாரங்க் வேலை கொள்ளைக்காரன் வேலையில்லியே!”

“ஏண்டா பயலே, ஒன் ஊரு எது?” என்று எல்லாரும் கேட்பார்கள், “இந்தப் பக்கந்தான்” என்று சோகமாகப் பதிலளிப் பான் நசீம். அவன் கண்கள் நீரால் மல்கும். அவன் முன்னே நிற்பவர்கள் மங்கலாகத் தெரிவார்கள்.

மறுநாள் அப்துலுக்கு செமை அடி கிடைத்தது. அவன் தண்ணீரின் ஆழத்தை அளக்கும்போது இரும்புக் கம்பியைத் தண்ணீரில் போட்டுவிட்டான்.

சாரங்க் யாரையாவது அடித்தால் அடிபட்டவனை விலக்க யாரும் முன்வர மாட்டார்கள். அடிபடுவது எல்லாருக்கும் பழகிப்போன விஷயம், அன்றாட நிகழ்ச்சி. இருந்தாலும் அடி பட்டவன் அழத்தான் செய்வான்.

அப்துல் ஆற்றுநீரில் கண்களைத் துடைத்தவாறு விம்மினான், “குச்சியோட வெலையையும் அதுக்கான வட்டியையும் சம்பளத்தி லேருந்து எடுத்துக்கப் போறாரு, அதோடே இந்த அடி வேறே அடிக்கறாரு!”

அப்படியும் சாரங்கை எதிர்த்துப் பேச முடியாது. தனக்கு சாதகமாக இரண்டு வார்த்தை சொல்ல முடியாது. அடிக்கும்போது

*திமிற முடியாது.*

*இவர்களெல்லாருமே தன்னைப்போல் தந்தை—தாயில்லாத அனாதைகள் போலும் என்று நினைத்தான் நசீம்.*

*படகின் படிக்கட்டு வேலையிலிருந்து தொடங்கிப் பதவி உயர்வு வேண்டுபவர்கள்தாம் எல்லாரும். அவர்கள் எல்லாருக்கும் சாரங்கின் சான்றிதழ் தேவை. சாரங்க் அடிப்பதை அனுமதிக்கா விட்டால் அவன் ஏன் பேனாவைக் கையிலெடுத்து சான்றிதழ் எழுதித் தரவேண்டும்.*

*ஆகவேதான் அன்றொரு நாள் நசீம் மக்பூலுடன் வேடிக்கை யாகப் பேசிக்கொண்டவாறு தவறுதலாக ஒரு வாளியைத் தண்ணீரில் போட்டுவிட்டதற்காக நன்றாக உதைபட்டபோது அவனுக்கு வெட்கம் ஏற்படவில்லை. அவமான உணர்வு துளிக்கூடத் தோன்றவில்லை அவனுக்கு. மாறாக அவன் மனதில் மற்ற ஊழியர்களுடன் தோழமையுணர்வு ஏற்பட்டது.*

*"ஒனக்கென்ன சம்பளம் கிம்பளம் கிடையாது. சும்மா அடி யோட சரி" என்று அழுதுகொண்டே சொன்னான் மக்பூல். "வாளியோட வெலைக்காக என் சம்பளம் பூராவையும் எடுத் துக்குவாரு, எனக்குச் சோத்துக்கு காசு வேணும்னா, தன் கிட்டேயிருந்து கடன் வாங்கிக்கன்னு சொல்வாரு. ரூபாய்க்கி ரெண்டணா வட்டி... படகிலே ஒக்காந்துகிட்டே லேவாதேவி செய்யறாரு... உம், நம்மளைக் கவனிக்க ஆளில்லே" என்று சொல்லி ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தான் மக்பூல்— கடவுளிடம் புகார் செய்வதுபோல்.*

*"நீ வேற படகுக்குப் போயிடக் கூடாதா?" நசீம் கேட்டான்.*

*"நீ எந்த உலகத்தில இருக்க? ஒரு படகைவிட்டு வெலகினா வேறெந்தப் படகிலேயும் வேலை கெடைக்காது. சாரங்குகளுக் குள்ளே ரொம்ப ஒத்துமை உண்டு. அதனால்தான் வாயை மூடிக்கிட்டு அடியை வாங்கிக்கிட்டு வேலை நெலைக்கணுமேன்னு கிடக்கேன். ஒரு தடவை வேலை போயிருச்சின்னா வேறே வெனையே வேண்டாம். தண்ணியை விட்டுட்டுப் போய்க் கலப்பையைக் கட்டிக்கிட்டு அழவேண்டியதுதான்!"*

*"தவிர எந்தப் படகுக்குப் போவே நீ?" பக்கத்திலிருந்த இயாத் அலி கேட்டான். "எல்லாப் படகிலயும் இதே வழக்கந்தான்"*

*"ஓடிப்போயிட முடியாதா?" நசீமின் கேள்வி.*

*இதைக்கேட்டு எல்லாரும் சிரித்துவிட்டார்கள். படகின் படிக்கட்டில் தொடங்கி மேலும் மேலும் உயரும் முயற்சியில் தீவிரமாக இருப்பவர்களுக்கு இந்தக் கேள்வி அசட்டுத்தனமாகத் தானே தோன்றும்!*

*"ஓடிப்போறது அப்படியொண்ணும் சுலபமில்லேப்பா" சீரியஸாகப் பதிலளித்தான் இரண்டாவது மேட்.*

“ஒம் பேரு விலாசம் எல்லாம் சாரங்க் துரையோட நோட்டுப் புஸ்தகத்தில் எழுதி வச்சிருக்கு. நீ ஓடிப்போனா ஒம்பேரிலே போலீசுக்குப் புகார் போகும்.. நீ சாரங்கோட பையிலேருந்து பர்சைத் திருடிட்டதா, கடிகாரத்தைத் திருடிட்டதா.. கம்பெனி சாரங்கைத்தான் ஆதரிக்கும். கடைசியில் நீ படகிலேருந்து ஜெயிலுக்குப் போகவேண்டியதுதான்!”

அப்படியானால் இப்படியேதான்—அலுப்பைத் தரும் அலையோசையைக் கேட்டவாறு—காலங்கழிக்க வேண்டுமா அவன்? சம்பளமில்லை, பற்றிக்கொள்ள எதுவுமில்லை, இப்படியே இரவும் பகலும் அவன் மிதந்துகொண்டே போகவேண்டியதுதானா?

“தொரையைக் குஷிப்படுத்து எப்படியாவது! படிக்கட்டு வேலை கிடைக்குமா பாரு!”

இன்னும் எப்படித்தான் துரையைக் குஷிப்படுத்துவது? அவன் தினம் சாரங்கின் கை கால் உடம்பை அமுக்கி விடுகிறான், சாரங்குக்கு உடலில் எண்ணெய் தடவி விடுகிறான், தலைவாரிச் சீவி விடுகிறான். கைகால் அயரும் வரை வேலை செய்கிறான். சமையலில் மாலுமியும் அவனுக்குக் கொஞ்சம் உதவி செய்வதால் தான் இன்னும் தாக்குப் பிடித்துக் கொண்டிருக்கிறான் அவன். அப்படியும் சம்பளம் இல்லை, சாரங்குக்குத் திருப்தியில்லை. மாறாக அவனுக்கு அபராதம் போடமுடியவில்லையே என்று வருத்தம் சாரங்குக்கு! அதற்காகத்தான் அவன் சில சமயம் நசீமைப் பட்டினி போட்டு வெங்காயத்தையும் பச்சை மிளகாயையும் மிச்சப்படுத்துகிறான்.

படகில் அரிசி, உப்பு, வெங்காயம், மிளகாய் இவற்றைத் தருவது சாரங்கின் பொறுப்பு. மற்றவற்றை—எண்ணெய், மசாலா, மீன், காய்கறி—அவரவர் தங்கள் செலவில் போட்டுக் கொள்ள வேண்டும். மாதம் முடிந்தபின் அரிசி, உப்பு, வெங்காயம், மிளகாயின் விலை ஊழியர்களின் சம்பளத்திலிருந்து பிடித்துக் கொள்ளப்படும்-அதுவும் சாரங்கின் இஷ்டப்படிதான்.

“சாரங்கைக் குஷிப்படுத்தணுமின்னாத் திருட்டிலே இறங்கு!” யாரோ நசீமின் காதில் கிசுகிசுத்தான்.

சில சமயம் இந்தப் படகோடு சரக்குத் தோணியொன்றை இணைத்து விடுவார்கள். அந்தத் தோணி நிறைய அரிசி, உப்பு, மிளகாய் போன்ற சரக்குகள் இருக்கும். அத்துடன் சில ஆட்களும் இருப்பார்கள். அவர்களுக்கும் இந்தப் படகின் சாரங்குக்கு மிடையே ஏதாவது ஏற்பாடு இருக்கும்.. படகுக்கு வேண்டிய சரக்குகள் வாங்கிப் போடுவதிலும் கொஞ்சம் பணம் மிச்சப் படுத்துவான் சாரங்க்.

நசீமுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. படகில் வேலை

செய்வதில் அவனுக்கு ஒரு பிரயோசனமும் இல்லை. படகு ஒருநாள்விட்டு ஒருநாள் ஒரே வழியில் பயணிக்கும். அந்தி நேரத்தில் வந்து சேர வேண்டிய இடத்துக்கு வந்து சேர ஒவ் வொரு சமயம் நள்ளிரவு ஆகிவிடும், ஒவ்வொரு சமயம் மறுநாள் பொழுது புலர்ந்துவிடும். இது ஒன்றுதான் இந்த பயண வாழ்க்கையில் நேரும் மாறுதல். மற்றபடி எல்லாமே அலுப்பைத் தரும் ஒரே மாதிரியான நிகழ்ச்சிகள்தான்— தண்ணீரின் சலசலப்பு, பயணிகளின் கூட்டம், நங்கூரம் இறங்கி ஏறும் கடகட ஒலி, படிக் கட்டு போடப்படும் போதும் கயிறு இழுக்கப்படும்போதும் எழும் கூக்குரல்கள்...

நசீமுக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. படகு சில நாட்களுக் கொருமுறை கனக்தியாவுக்குப் போய்வரும். ஆறு இவ்வளவு சிறியதாக இருக்கும், அதன் தண்ணீர் இவ்வளவு குறைவாக இருக்கும் என்று அவன் நினைத்ததே இல்லை. ஆறு ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்குப் போகும், இப்படி வெகு தொலைவு போய்க் கடைசியில் கடலில் சேரும் என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தான் அவன்.

இருட்டில் தனியாக உட்கார்ந்துகொண்டு தண்ணீரைப் பார்த்துக் கொண்டிருந்தான் நசீம். கறுப்புத் தண்ணீரில் மின் மினிகள் போல் பளபளப்பு... இன்று நள்ளிரவும் படகு கனக்தியா வுக்கு வந்திருந்தது. நசீமுக்குத் தன் வீடு நினைவு வந்தது. ஊஹூம், அவனுக்கு வீடு வாசல் ஏது? அவனுடைய வீடு வாசலாயிருந்தது இப்போது பிசாசு இருக்குமிடம். பழைய நினைவுகள் வந்தன. அம்மாவின் முகம். "எனக்கு அம்மா இல்லை" என்று அவன் நினத்துக் கொண்டான். அவனுடைய அம்மா எப்போதோ செத்துப் போய்விட்டாள். இந்தக் கறுப்பு நீரில் தெரியும் நிலவு அவனுடைய அம்மாவின் வெளிறிய முகத்தை நினைவூட்டுகிறது...

பெரிய திருட்டு எதுவும் செய்யமுடியாவிட்டாலும் சின்னஞ் சிறு பொருள்களைத் திருடலாமே அவன்...!

பக்கத்துக் கிராமத்திலிருந்து ஒருவன் இளநீர் விற்க வந்தான். நசீம் அவனிடமிருந்து சாரங்குக்காக இரண்டரையணாவுக்கு இரண்டு இளநீர் வாங்கினான். நசீம் படகில் ஏறியபிறகு படிக்கட்டு தூக்கப்பட்டது. நசீம் சாரங்கிடமிருந்து ஓரணா வாங்கிக் கரையிலிருந்த இளநீர்க்காரனிடம் எறிந்தான்.

"இன்னும் ஒண்ணறையணா?"

நசீம் வாயைக் கோணி அழகு காட்டினான். இளநீர்க் காரன் ஆற்றங்கரைச் சேற்றையள்ளி நசீம் மீது எரிந்தான். அதற்குள் படகு நகர்ந்துவிட்டது. சேற்றின் ஒரு துளிகூட நசீமின் மேல் படவில்லை. சாரங்கும் நசீமும் சிரித்தார்கள்.

இதே மாதிரி பான்ஸ் பாதாமீனும் கய்ராமீனும் விற்பனைக்கு வரும். அதிலும் கொஞ்சம் திருடுவார்கள். பால்காரன் பானையில் பால் எடுத்து வருவான். மூங்கில் உழக்கால் அளந்து தருவான். நசீம் கரைக்குப்போய் அதை வாங்கிக்கொண்டு படகிலேறுவான். படகிலிருந்து பணங்கொடுப்பதாகச் சொல்வான், கொடுக்காமல் ஏமாற்றிவிடுவான். வயலிலிருந்து பிஞ்சு வெள்ளரிக்காய் கூடை கூடையாக விற்பனைக்கு வரும். அதை மீனோடு சேர்த்துச் சமைக்கலாம், அல்லது தனியாகப் பச்சையாகவே தின்னலாம். "நான் சாரங்கோட வேலைக்காரன். ஒன் காசைக் கொடுத்துடுவேன்" என்று சொல்லி நசீம் வெள்ளரிக்காய் வாங்கிக் கொண்டு படகில் ஏறிவிடுவான். ஆனால் காசு கொடுக்க மாட்டான்.

இவ்வளவு காலத்துக்குப்பின் சாரங்க் அவனுக்கு ஒரு அரைக்கை சட்டை கொடுத்தான். லுங்கி எப்போது கொடுப்பானோ?

ஒருநாள் நசீம் சாரங்கிடம் ஓரணா கேட்டுவிட்டான்.

இதுவரை யாரும் துணிந்து சாரங்கிடம் காசு கேட்டதில்லை. சாரங்க் புருவத்தை உயர்த்திக்கொண்டு கேட்டான், "என்ன காசா?"

அசட்டுத் துணிச்சலில் ஒரு பயங்கரத் தவறு செய்துவிட்ட உணர்வு ஏற்பட்டது நசீமுக்கு. அவன் பயத்துடன் விழித்தான்.

"எதுக்குக் காசு?"

"ஒரு மண்குடுவை டீ குடிக்க..."

உடனே ஒரு பலமான அறை விழுந்தது நசீமின் கன்னத்தில். அவன் நிலைகுலைந்து கீழே விழுந்தான்.

சாரங்க் கர்ஜித்தான், "என்ன அதிகப் பிரசங்கித்தனம்! எங்கிட்டே பீடிக்குக் காசு கேக்கறானே...! பீடி வாங்கணுமாம், பீடி...! இன்னொரு நாள் கள்ளு போத்தல் வாங்கணும்பான்...! இந்த மாதிரி திமிரு பண்ணினா ஆத்துக்குள்ளே தூக்கி எறிஞ்சிருவேன், ஆமா!"

அழுகையினூடே அம்மாவின் நினைவு வந்தது நசீமுக்கு. அவன் இருட்டில் தண்ணீரைப் பார்த்தவாறு அம்மா செத்துப் போனபின் அவளுடைய முகம் எப்படியிருக்கும் என்று கற்பனை செய்ய முயற்சி செய்தான். இந்தக் கற்பனை அவனுக்குத் தெம்பளித்தது. அடியைத் தாங்கிக்கொள்ளத் திராணி ஏற்பட்டது. "அம்மா!" என்று கூவியழக்கூட வழியில்லை அவனுக்கு. அந்த நிலையில் விழும் அடியையெல்லாம் வாங்கிக்கொள்ளத்தானே வேண்டும்!

ஆனாலும் இந்தக் கொடுமைக்குள்ளானவர்கள் சாரங்குக்

கெதிராக ஒன்று சேர்வதில்லை. அவர்களுடைய புகாரெல்லாம் கடவுளிடந்தான். படகிலிருந்து விடுதலையும் கிடைக்காது அவர்களுக்கு. எப்போது படிக்கட்டு வேலை கிடைக்கும், எப்போது மேல்தட்டு வேலை, கயிறு இழுக்கும் வேலை, நங்கூரம் பாய்ச்சும் வேலை அல்லது இயந்திர வேலை கிடைக்குமென்று எல்லாரும் காத்திருந்தார்கள்.

சாரங்குக்கு வட்டி கொடுத்தோ, லஞ்சம் கொடுத்தோ, அவனுக்காகத் திருடியோ, அவனிடம் அடிவாங்கியோ அவனிடம் நல்ல பெயர் வாங்கிக்கொள்ள அவர்களெல்லாருக்கும் ஆசை.

சாரங்கின் ஆட்சித்திறமை அபாரந்தான்!

நசீம் அன்றிரவே ஒரு பிரயாணியின் செருப்புகளைத் திருடினான். ஆனால் சாரங்க் அவற்றைத் தண்ணீரில் எறிந்து விட்டான். "ஆகா, என்ன மூளை ஒனக்கு! நான் அந்தச் செருப்பைப் போட்டுக்கிட்டேன்னா போலீஸ் என்னைப் பிடிக்காதா?" என்று கேட்டான்.

மறுநாள் நசீம் ஒரு பிரயாணியின் தகரப் பெட்டியைத் திருடினான். ஆனால் அதிலிருந்தவை ஏதோ கோர்ட்டு வழக்கு சம்பந்தப்பட்ட காகிதங்கள், பத்திரங்கள், வரவு செலவுக் கணக்கு நோட்டுகள் இவைதாம். அந்தப் பெட்டியும் ஆற்றில் எறியப்பட்டது.

என்ன செய்தும் சாரங்கின் நன்மதிப்பைப் பெறமுடிய வில்லை அவனால். "உன்னால முடியும், முயற்சி செஞ்சுக் கிட்டேயிரு!" என்று சாரங்க் தன் பார்வையால் அவனுக்கு ஊக்கமூட்டுவதாகத் தோன்றியது. சாரங்க் நசீமின் அசட்டுத்தனத் துக்காக அவனைக் கோபித்துக் கொண்டாலும் அவனை இப்போதெல்லாம் அடிப்பதில்லை. இதுவே உற்சாகமளித்தது நசீமுக்கு.

படகில் வெளிச்சம் மங்கல்; மழை பெய்தால் பயணிகள் நனையாதிருக்கக் கித்தான் கூரையில்லை; ஆண்களும் பெண்களும் தனித்தனியாகத் தங்க அறைகள் இல்லை; ஆனால் தூக்கம் எல்லாருக்கும் வருகிறது. அந்தப் படகில் பிரயாணம் செய்பவர்கள் சீட்டாடியோ, பாட்டுப் பாடிக்கொண்டோ, அரட்டையடித்துக்கொண்டோ இரவைக் கழிக்கும் நடுத்தர மக்கள் அல்லர்; அவர்கள் விவசாயிகள், கூலி வேலை செய்பவர்கள். அவர்கள் பகலில் கடுமையாக உழைத்துவிட்டு இரவில் மரக்கட்டைபோல் தூங்கு வார்கள்.

அலங்கோலமாகக் கிடந்து தூங்கும்போது ஒரு பிரயாணியின் மடியிலிருந்து பணமுடிச்சு வெளியே வந்து தொங்கிக் கொண்டிருக்கும். நசீம் அதை லாவகமாக எடுத்து விடுவான். அதில் எவ்வளவு பணம் இருக்கிறதென்பதை எண்ணிப் பார்க்

கலாம் என்று நினைப்பான். அடுத்த துறையில் இறங்கி ஓடிப் போய்விடலாம் என்று எண்ணுவான். ஆனால் இறுதியில் ஏதோ மந்திரத்துக்குக் கட்டுப்பட்டவன்போல் அதை எடுத்துப்போய் சாரங்கிடம் கொடுத்துவிடுவான். புலியின் வாயில் போய் விழும் மாடுபோல, சாரங்க் அவனை எப்போதும் அடிக்கிறான், உதைக் கிறான்; அவனோடு சிரித்த முகத்துடன் பேசுவதில்லை; அவனுக்குக் கிடைக்கவேண்டிய உரிமையெதுவும் அளிப்பதில்லை. அப்படியும் அவனுக்கு சாரங்கைத் திருப்திப்படுத்துவதில் அவ்வளவு ஆர்வம். சாரங்க் ஊழியர்கள் ஒருவரையொருவர் அடித்துக் கொள்ளத் தூண்டுகிறான், அவர்களுக்கெதிரான கோள்களைக் காது கொடுத்துக் கேட்கிறான்; அப்படியும் அவனை குஷிப்படுத்த ஊழியர்களிடையே எவ்வளவு போட்டி! சாரங்கின் அன்பைப் பெறுவதில் ஒருவரையொருவர் மிஞ்சிவிட முயற்சி!

"ஏழு ரூவா ஒம்பதரையணாதானா?" மக்பூல் சொன்னான். "இதை வச்சுக்கிட்டு என்ன செய்ய முடியும், கொறஞ்சது நாப்பத்தேழு ரூவாயாவது சேர்றவரையில பிரயோசனமில்லேன்னு நம்ம சாரங்க் துரை சொல்லுவாரு..."

துணிமணி திருடுவதைவிடப் பணங்காசு திருடுவது மேல். தங்கம், வெள்ளி, நகை திருட முடிந்தால் அதைவிட நல்லது. இந்தக் காலத்திலே அவற்றுக்குத்தான் மதிப்பு. அவற்றுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தக் காகிதப் பணம் வெறும் குப்பை!

இவ்வளவு நாட்களுக்குப் பிறகு நசீமுக்கு ஒரு லுங்கி கிடைத்தது. குடியானவப் பெண்களிடம் நகைகள் ஏது? அதிகமாகப் போனால் மூக்குத்தி, மோதிரம்... கையில் கண்ணாடி வளையல், தங்கம் கிங்கம் இல்லை.

இல்லையில்லை, ஒருத்தியிடம் நகை நிறைய இருக்கிறது. ஒரு புதுமணப்பெண் புக்ககம் போய்க்கொண்டிருக்கிறாள். அவள் கழுத்தில் தங்க நெக்லஸ், கையில் கங்கணம், காலில் வெள்ளிக் காப்பு, கால் விரலில் மெட்டி. அரக்கு நிறப் புடைவையணிந்த அவள் முக்காடு போட்டுக்கொண்டு ஒரு பக்கம் தூங்குகிறாள். கலியாணத்துக்கு வந்திருந்தவர்கள் ஆளுக்கொரு பக்கம் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். யார் எங்கேயிருக்கிறார் என்று தெரிந்து கொள்ள வழியில்லை. இன்று படகில் ஒரே கூட்டம். இந்த கூட்டத்தில் சரியான தருணம் பார்த்துக் காத்திருந்தான் நசீம்.

அவன் மணப்பெண்ணின் மிருதுவான கழுத்தில் கை வைத்தான். அவனுடைய விரல்கள் நடுங்கவில்லை.

ஒரே இழுப்பில் நெக்லஸைப் பறித்துவிட்டான்.

"திருடன், திருடன்!"

நசீம் கூட்டத்தில் முண்டிக்கொண்டு கொஞ்சம் முன்னேறு

வதற்குள் பிரயாணிகள் அவனைப் பிடித்து விட்டார்கள். எல்லாரும் அவனை அடிக்கத் துவங்கினர். சரியான அடி. அங்கு வந்து "என்ன விஷயம்?" என்று விசாரிப்பவன் ஒவ்வொருவனும் தன் பங்குக்கு நசீமை உதைத்தான். மணப்பெண் போட்ட கூச்சலில் அவன் நகையை அவளுடைய படுக்கையோரத்திலேயே போட்டுவிட்டான். அதனாலென்ன? பெண்பிள்ளையின் உடம்பில் கை வைத்திருக்கிறான்! அவளுடைய நகையைப் பறித் திருக்கிறான்! அடி, உதை! முறை போட்டுக்கொண்டு உதை!

"ஐயோ!" ஓலமிட்டு அழுதான் நசீம்.

நீண்ட அங்கியணிந்த சாரங்க் தலையில் படகுத் தொப்பியும் காலில் செருப்புமாக அங்கே வந்து "என்ன ஆச்சு? எம்புள்ளயை ஏன் அடிக்கிறீங்க?" என்று கேட்டான்.

புள்ளயா? எல்லாரும் திடுக்கிட்டனர். சாரங்கோட புள்ளயா?

"ஒங்க புள்ளெயா? வேலைக்காரன்னு நெனச்சோம்!" ஒருவன் சொன்னான்.

"வேலைக்காரனா? பொய்! அவன் என் சொந்தப் புள்ளெ! அம்மா இல்லே அவனுக்கு, அவனை அடிச்சது யாரு?"

"அவன் மணப்பெண்ணோட கழுத்து நகையைப் பறிச் சிருக்கான்..."

"பொய்! நிச்சயம் பொய்தான்! வாங்க, நானே போய்க் கேக்கறேன் அந்தப் பொண்ணை!"

சாரங்க் அந்தப் பெண்ணிடம் போய்க் கேட்டான், "ஒங்க நெக்லஸை யாராவது பறிச்சாங்களா?"

மணப்பெண் முகத்தை மூடிக்கொண்டு தாழ்ந்த குரலில் சொன்னாள், "இல்லே. தூக்கக் கலக்கத்திலே அது நழுவி கீழே விழுந்துடுச்சு..."

லதாபாரி படகுத்துறை நெருங்கிவிட்டது. மாப்பிள்ளை வீட்டார் அங்குதான் இறங்கவேண்டும். படகின் வேகம் குறைந்தது. நங்கூரம் கடகடவென்று கீழே இறங்கியது. துறையில் ஒரு மரத்தோடு கயிறு கட்டப்பட்டது.

"படியை இறக்கு! படியை இறக்கு...! நசீம் எங்கே? அவன் இன்னிக்குப் படிக்கட்டைப் பிடிச்சுக்கட்டும்!" சாரங்க் கத்தினான்.

படகு ஊழியர்களிடையே ஒரே பரபரப்பு. இவ்வளவு சீக்கிரமாக நசீமுக்கு முறையான வேலை கிடைத்துவிட்டதே! திருடி அகப்பட்டுக் கொண்டதில் அதிருஷ்டம் வந்துவிட்டது பயலுக்கு! அகப்பட்டுக் கொள்ளாமல் திருடிக் கொண்டிருப் பவர்கள் இன்னும் திணறிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு இன்னும் படிக்கட்டிலிருந்து மேல் தட்டுக்குப் பதவி உயர்வு கிடைக்கவில்லை. இந்த நசீம் இன்றைக்குப் படிக்கட்டு, நாளைக்கு

மேல்தட்டு, அதற்கு மறுநாள் சுக்கான்— அப்புறம் ஒரேயடியாக சாரங்காக—படகுத் தலைவனாக ஆகி விடுவான்!

"பிடிச்சுக்கங்க, பிடிச்சுக்கங்க...! அவன் சின்னப் பையன். அவனால ஒன்டியாத் தூக்க முடியுமா? எல்லாரும் கூடப் பிடியுங்க!" மேலேயிருந்து அழுத்தந் திருத்தமாக ஆணையிட்டான் சாரங்க்.

சுழல் விளக்கின் ஒளியில் நசீமின் கண்களில் நீர்த்துளிகள் பளபளத்தன.

மணப்பெண் லதாபாரியில் இறங்கப் போகிறாள். அவள் மெட்டி குலுங்க நடந்து வருகிறாள்.

படகின் வெளிச்சம் மரஞ்செடிகளுக்கு மேலே வெகு தொலைவு வரை பரவியிருக்கிறது. நசீம் படிக்கட்டோடு இணைந்த மூங்கிலைப் பிடித்துக் கொண்டிருக்கிறான்.

அவன் மணப்பெண்ணிடம் சொன்னான், "மூங்கிலைப் பிடிச்சுக்குங்க! இல்லாட்டித் தடுமாறி விழுந்துடுவீங்க."

"வேண்டாம்" என்று சொல்லிவிட்டு மூங்கிலைப் பிடித்துக் கொள்ளாமலேயே முன்னேறினாள் மணப்பெண்.

பின்னாலிருந்து யாரோ நசீமை இடித்தான். திடுக்கிட்டுத் திரும்பினான் நசீம். அவனை நையப் புடைத்தவன்தான் அங்கே நின்று கொண்டிருந்தான். விளக்கொளியில் அவனை அடையாளம் கண்டு கொண்டான் நசீம். அவன்தான் கஹ்ராலி!

கோல்பானு—மணப்பெண்—வெளிச்சம்படாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தாள். போர்த்தியிருந்த போர்வையால் முகத்தை நன்றாக மூடிக்கொண்டிருந்தாள். படகுத் துறையில் வேற்று மனிதர்களின் நடமாட்டம் அதிகம்.

படிக்கட்டை ஒவ்வொரு படியாகத் தூக்கத் தொடங்கினான் நசீம். கரையையடுத்த, குழம்பிய தண்ணீரின் நிழலில் தாயின் வெளிறிய முகத்தைப் பார்த்தான் அவன்.

மேற்புறத்தில் நின்றுகொண்டு சாரங்க் அவனைத் தாராளமாகப் பாராட்டிக் கொண்டிருந்தான். சாரங்கின் வெள்ளை அங்கியும் வெண்தாடியும் காற்றில் அசைந்து கொண்டிருந்தன. சூரியன் மாதிரி பளபளத்தது சாரங்கின் முகம்—

(முதல் பிரசுரம், 1946)

# ராணி பசந்த்

## அன்னதா சங்கர் ராய்

வெகுநாட்கள் காத்திருந்தபின் நீராவிப் படகு கிடைத்தது. சில இடங்களை மேற்பார்வையிடுவது பாக்கியிருந்தது. ஆண்டு முடிவதற்குள் இந்த வேலையை முடித்தாக வேண்டும். இருபுறமும் ஆற்றங்கரைக் காட்சிகள்; முன்னால் ராங்கா மாட்டிப் பிரதேசத்தின் மலைவரிசை; கர்ணபூலி ஆற்றில் பயணம் தொடங்கும்போது ரொமான்டிக் உணர்வு ஏற்பட்டது. காகிதமும் பேனாவும் கையோடு எடுத்து வந்திருந்தேன். வெகுநாட்களுக்குப் பிறகு கவிதை எழுதத் திட்டம். படகின் சாரங்க், மாலுமி, மற்ற ஊழியர்கள், என் வேலைக்காரன், சமையல்காரன் இவர்கள்தாம் என் சக பிரயாணிகள். அவர்கள் யாரும் என்னைத் தொந்தரவு செய்யக்கூடதென்று அவர்களுக்கு கடுமையாக உத்தரவிட்டிருந்தேன். மேல்தட்டில் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு நங்கூரம் தூக்கப்படுவதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது அவரசர அவசரமாக ஓடிவந்தார் போலீஸ் இன்ஸ்பெக்டர். அவரது கையில் ஒரு கடிதம்.

என்ன விஷயம்? மறுபடி என்ன விபத்து நேர்ந்து விட்டது? இவர்கள் என்னை இங்கிருந்து நகர விடமாட்டார்களா என்ன?

கடிதத்தைப் பிரித்துப் பார்த்தேன். அப்படியொன்றுமில்லை. கல்கத்தாவிலிருந்து ஒரு பெரிய போலீஸ் அதிகாரி வந்திருக்கிறாராம். அவருக்கும் அவசரமாக ராவுஜான் போகவேண்டுமாம். நான் அவரை என்கூட அழைத்துப் போகலாமா? எனக்கு அசௌகரியம் இருக்காதே? போலீஸ் இலாகாப் படகு நாளைதான் வரும். என்னுடன் வரவில்லையென்றால் அந்தப் போலீஸ் அதிகாரி ஒருநாள் இங்கேயே காத்திருக்க வேண்டும்.

இந்த ஏற்பாட்டால் எனக்கு அசௌகரியம் ஏற்படத்தான் செய்யும். ஆனால் இதை எழுத்தில் தெரிவிக்க முடியுமா? நான் கவிதை எழுதி வாழ்ந்தேன்! மனதுக்குள் அந்த அதிகாரியைச் சபித்துக்கொண்டு, போலிச் சிரிப்பு சிரித்தவாறு “ஆகா, இது என் நல்லதிருஷ்டமல்லவா!” என்று சொன்னேன். இன்ஸ்பெக்டர்

குதிகாலோடு குதிகாலைச் சேர்த்து ஒரு அழுத்தமான சலாம் செய்துவிட்டுப் போனார்.

நான் நாற்காலியில் சாய்ந்தவாறே எண்ணத் தொடக்கினேன். "மறுத்திருந்தால் என்ன பெரிய பண்புக் குறைவு நேர்ந்திருக்கும்? அந்த அதிகாரி ஒருநாள் தாமதித்தால் வேலை கெட்டுப் போய் விடுமா...?

வந்த அதிகாரி கான் பகதூரைப் பண்பில் யாரும் விஞ்ச முடியாது. எனக்கு நன்றி கூறப் பொருத்தமான வார்த்தைகள் அவருக்கு வங்காளியில் கிடைக்கவில்லை. ஆகையால் ஆங்கிலத் தையும் உருதுவையும் பயன்படுத்தினார். அவர் ஒரு பஞ்சாபி முஸ்லீம். என்னைவிட வயதில் மிகவும் பெரியவர். மீசை தாடி வைத்துக் கொள்ளாததால் சற்று வயது குறைந்தவராகத் தோற்ற மளித்தார். கலகலப்பான மனிதர். நான் ஒரு எழுத்தாளன் என்பதை இதற்குள் தெரிந்துகொண்டிருந்தார்.

"உங்களைச் சந்தித்துப் பேசணும்னு எனக்கு ரொம்ப நாளா ஆசை. அந்த ஆசை இப்படித் தீரும்னு யாரு எதிர்பார்த்தாங்க? ஆனா ஒங்க தனிமையைக் கெடுக்க நான் விரும்பவேயில்லே. நான் ஒரு நாள் காத்திருக்கத்தான் நெனைச்சிருந்தேன். எஸ்.பிதான் வலுக்கட்டாயமா அனுப்பிட்டார் ஒங்களோட படகுக்கு... செய்தி கேள்விப்பட்டிருப்பீங்களே?" என்றார் கான் பகதூர்.

நான் வியப்புடன் கேட்டேன், "என்ன செய்தி?"

"ரொம்ப மோசமான செய்தி," அவர் என் காதருகில் சொன்னார். "இல்லாட்டி நான் டிரங்க் கால்லே செய்தியைக் கேட்டதும் இப்படி கல்கத்தாவிலேருந்து ஓடி வந்திருப்பேனா...? சீ, வெட்கக்கேடு!"

விஷயம் என்ன என்று தெரிந்துகொள்ள எனக்கு மிகவும் ஆவல்தான். ஆனால் எப்படியும் கான் பகதூர் தாமாகவே விஷயத்தைச் சொல்லிவிடுவார் என்று தெரியுமாதலால் எனக்குப் பிறர் பற்றிய வம்பில் அக்கறையில்லாதது போல் பாசாங்கு செய்தேன். "நீங்க இலக்கியவாதிகள். அடிக்கடி 'சத்தியம், சிவம், சுந்தரம்'னு சொல்லுவீங்க. ஆனா சத்தியமாயிருக்கறது சிவமா, அதாவது மங்களமா இல்லே; சுந்தரமாயிருக்கறதும் சிவமில்லே— இதுதான் நான் என் நாப்பத்தஞ்சு வருஷ அனுபவத்திலே அறிஞ்சுக்கிட்டது. நான் என்னிக்காவது ஒரு புஸ்தகம் எழுதி னேன்னா என்ன எழுதுவேன், தெரியுமா? 'அழகான பெண்கள் அநேகமாகக் கெட்டவங்களாயிருப்பாங்க, கெட்ட பெண்கள் பெரும்பாலும் அழகாயிருப்பாங்கன்னு எழுதுவேன்' என்று சொல்லிவிட்டு ஹாஹாவென்று சிரித்தார் கான்பகதூர்.

நானும் சிரித்துவிட்டேன்; இருந்தாலும் கூடவே "எங்க

*வங்காளத்திலே மட்டும் இப்படியில்லே" என்று சொன்னேன்.*

*கேலியாகப் பேசினார் கான்பகதூர், "உம், வங்காளத்திலே இல்லையாக்கும்! வங்காளத்திலே வேலை பார்த்துப் பார்த்துத் தலை நரைச்சுப் போச்சுங்க... நான் இப்போ போயிக்கிட்டிருக்கேனே ராவுஜானுக்கு. அந்த ராவுஜான் வங்காளத்துக்கு வெளியில இருக்கா?"*

*உரையாடல் சுவாரசியமாகத் தொடர்ந்தது. நான் என் சமையற்காரனைக் கூப்பிட்டேன். அதற்குள் அவர் என்னை இடைமறித்து, "இல்லேயில்லே நீங்க என்னோட விருந்தாளி!" என்றார்.*

*நல்ல வேடிக்கை! பார்க்கப்போனால் படகே என்னுடையது, நான் எப்படி அவருடைய விருந்தாளி ஆவேன்? ஆனால் என் பேச்சு எடுபடவிலை. அவரே மாலை நேரச் சிற்றுண்டிக்கு ஆர்டர் கொடுத்தார். இதற்குள் படகு துறையைவிட்டுக் கிளம்பி விட்டது.*

*நாங்களிருவரும் சாய்வு நாற்காலிகளைப் போட்டுக்கொண்டு மலைவரியைப் பார்த்தவாறு அருகருகே வசதியாக உட்கார்ந்தோம். கான் பகதூர் பேசத் தொடங்கினார்...*

*"அவன் சாதாரண ஆளில்லே. ஒரு சர்க்கிள் இன்ஸ்பெக்டர். ஒரு காலத்திலே நான் அவனோட சூபரின்டெண்டாயிருந்தேன், அவனோட வேலையைப் பாராட்டியிருக்கேன். அவன் கிறுக்கு இல்லே, கவி இல்லே—நான் சொல்றதுக்கு மன்னிக்கணும் ஒழுங்கான நடத்தையுள்ளவன்னு நல்ல பேரும் இருந்தது அவனுக்கு. இப்படிப்பட்டவன் திடீர்னு வேலையைத் துறந்துட்டு, குழந்தை குட்டிகளை மறந்து—நல்லவேளை, அவனோட மனைவி உசிரோடே இல்லே—காணாமப் போயிட்டான்-!"*

*"காணாமப் போயிட்டானா?" நான் திடுக்கிட்டேன்.*

*"அந்த வெக்கக்கேட்டை ஏன் கேக்கறீங்க!" கான் பகதூர் பட்டுக் கைக்குட்டையால் தன் முகத்தைத் துடைத்துக் கொண்டு தொடர்ந்தார்: "ஒரு கொலையைப் பத்தி விசாரிக்கப் போயிருந்தான். கொலை செய்யப்பட்டவன் ஒரு வங்காளி முஸ்லீம். அவன் ரங்கூன்லேருந்து ஒரு பர்மாக்காரியைக் கலியாணம் பண்ணி கூட்டிக்கிட்டு வந்திருந்தான். அவ ஒரு பிசாசுதான். ரொம்ப அழகாயிருப்பாளாம்; பர்மாவிலேயே அவ மாதிரி அழகி இல்லையாம்... புருசனோட இங்கே வந்தவ அவனுக்கு ஏற்கெனவே கலியாணமாயிருக்குன்னு தெரிஞ்சதும் புருசனோட கழுத்திலே கத்தியாலே குத்திட்டா!"*

*"அப்படியா? நான் இதைப் பத்திக் கேள்விப்படலியே!"*

*"முதல்லே புலன்விசாரணைக்கு இன்ஸ்பெக்டர்தான்*

போனான். ஆனா பர்மாக்காரிக்கு வங்காளி தெரியாதுங்கறதுக்காக இந்த சர்க்கிள் இன்ஸ்பெக்டரும் போக வேண்டியதாச்சு. இந்த விசாரணைதான் அவனுக்குக் கேடா முடிஞ்சது— ஒரு நாளாச்சு, ரெண்டு நாளாச்சு, புலன் விசாரணை முடியலே— கடைசியிலே ஒரு நாள் குத்தவாளியையுங் காணோம், விசாரணைக்குப் போன அதிகாரியையுங் காணோம்! ஹா ஹா ஹா...!"

இது சிரிப்புக்குரிய விஷயமல்ல. பெண்கள் கடத்தப்படுவதை அறவே வெறுப்பவன் நான். ஆகவே சற்றுக் கோபத்துடன் அவரைக் கேட்டேன், "பின்னே இவ்வளவு நாள் நீங்க என்ன பண்ணிக்கிட்டிருந்தீங்க? ஏன் அவனைக் கைது செய்யலே? இது போலீஸ் இலாகா மட்டும் சம்பந்தப்பட்ட விஷயமில்லே, இதிலே கோர்ட்டுக்கும் சம்பந்தமிருக்கே!" கான் பகதூர் சற்றுக் கடுமை யான குரலில் சொன்னார், "கோர்ட்டுக்கு இதிலே சம்பந்தம் இருக்காங்கறது சந்தேகந்தான். அந்த பர்மாக்காரி வயது வந்தவ, விதவை. ஆகையால் அவளை ஆசை காட்டிக் கடத்திக்கிட்டுப் போனதாக் குத்தஞ் சாட்ட முடியாது. குற்றச் சட்டத்திலே எந்தப் பிரிவின் கீழே அவனைக் கைது செய்வீங்க, சொல்லுங்க!"

என்னிடம் பதிலில்லை.

அவர் குறும்பாகச் சிரித்துக்கொண்டு தொடர்ந்தார். "அப்பறம்... அவங்க கலியாணம் பண்ணிக்கிட்டிருந்தாங்கன்னா...? உம், அவ்வளவு எளிசான விஷயமில்லீங்க இது. அவனை வேலையைவிட்டு நீக்கலாம்... கல்கத்தாவிலே இதுக்கான ஏற்பாடு செய்வாங்க. ஆனா அதுக்கு மேலே அவனுக்குத் தண்டனை கொடுக்கணும்னா சட்டத்தை நல்லாப் படிச்சுப் பார்க்கணும்."

அவர் கூறியது உண்மைதான்... பெரிய மீன் ஒன்று தூண்டிலில் அகப்பட்டுக் கொள்ளாமல் நழுவிப் போய்விட்டால் மீன் பிடிப்பவனுக்கு எப்படி இருக்கும்? அப்படியிருந்தது எனக்கு.

ஆனால் இதற்காக வருத்தப்படவில்லை கான் பகதூர். அவர் சொன்னார், "அவங்க சிட்டகாங் மலைப் பிரதேசத்திலே ஒளிஞ்சுகிட்டிருக்கறதாகக் கேள்வி. அங்கேருந்து நடந்தே பர்மா போவாங்க போலிருக்கு. அதுக்கப்பறம் அவனுக்கு எவ்வளவு நாள் பர்மிய அழகியோட தயவு இருக்குமோ, யார் கண்டாங்க! அவ அவனைக் கொஞ்சநாள் குரங்காட்டம் ஆட்டிப்பிட்டுப் பிறகு கொன்னு போடுவாளோ, அல்லது உதைச்சு விரட்டப் போறாளோ...! நான் அழகான முகத்தைப் பார்த்தா, தூரத்தி லிருந்தே அதற்கு ஒரு சலாம் போட்டுட்டு நகர்ந்து போயிடுவேன்."

என்னிடம் அப்போது சட்டப் புத்தகம் எதுவுமில்லை. ஆகையால் ஒரு குற்றவாளி தப்பியோட உதவுபவனுக்குச் சட்டத்தில் தண்டனையேதும் உண்டா என்று திட்டவட்டமாகச்

சொல்ல முடியவில்லை என்னால். ஆனால் உள்ளூரச் சங்கடப் பட்டேன். இதைக் கவனித்த கான் பகதூர் சொன்னார், "நான் போலீஸ்காரனாயிருக்கறதாலே போலீஸ்காரன் மேலே எனக்கு அனுதாபம், நான் முஸ்லீமாயிருக்கறதாலே இன்னொரு முஸ்லீம் மேலே எனக்குப் பரிவுன்னு நீங்க நினைக்கலாம். ஆனா அப்படி யில்லே. அவன் ஒரு ஆம்பளைங்கறதால அவன்மேலே அனுதாபப் படறேன்... அந்தப் பொண்ணுதான் அவனைக் கடத்திக் கிட்டுப் போயிருக்கா!"

நான் இயற்கையிலேயே பெண்களிடம் அனுதாபங் கொண்டவன். ஆகவே அவரது கூற்றை மறுக்காமலிருக்க முடிய வில்லை என்னால். நான் சொன்னேன், "பெண்களிடம் சிறிதாவது மதிப்புள்ள எவனும் அவங்களைக் குத்தஞ் சொல்ல முடியாது. எப்போதும் குத்தம் ஆண்களோடதுதான்... ஆனால் சில சமயங்களிலே ஆண் மேலயும் குத்தமில்லாமே, பெண் மேலயும் குத்தமில்லாமே இருக்கலாம். அப்போது சொல்ல வேண்டியது இயற்கையைத்தான், விதியைத்தான்."

"ஆமா, ஆமா, அது சரி! விதிதான் குத்தவாளி!" கான் பகதூர் மகிழ்ச்சியோடு ஒப்புக்கொண்டார். "இதே மாதிரி விதியின் விளையாட்டு ஒண்ணை நான் என் இளம்வயசிலே பார்த் திருக்கேன்... என் சிநேகிதன் ஒருத்தன் வாழ்க்கையிலே... அவன் இந்து. அடே, இதென்ன? இந்துவும் முஸ்லீமும் நண்பர்களா, என்று நீங்க நினைக்கலாம். ஆனா இப்போ இருக்கற மோசமான சூழ்நிலை இருபது வருஷத்துக்கு முன்னாலே இல்லே. நாங்க முதல் உலக யுத்தம் முடிஞ்சப்பறம் மிலிட்டரியை விட்டு வந்து போலீஸ் வேலையிலே சேர்ந்தபோது இந்து முஸ்லீம் பாகுபாடு கிடையாது. அந்தக் காலம் திரும்பி வராதா...?"

அவருடைய குரலில் உண்மையான வருத்தம் தொனித்தது. அவர் நினைவுப் பாதையில் இருபதாண்டுகள் பின்னோக்கிப்போய் விட்டார். பிறகு ஏதோ நினைவுகளை அசைபோட்டவாறே சொன்னார், "ரொம்பப் பழைய காலக்கதை. நானே மறந்து போயிட்டேன். இப்போ திடீர்னு ஞாபகம் வருது நல்லா ஞாபகம் வருது... கண்ணுக்கு முன்னால நடக்கற மாதிரி தெளிவாகத் தெரியுது..."

அவர் பக்கம் திரும்பிப் பார்த்தேன். அதே மனிதர்தானா, அல்லது வேறு யாராவதா...? ஓர் இளைஞன் நாற்காலியில் சாய்ந்தவாறு கனவு காண்கிறானா...?

காற்று நன்றாக வீசுகிறது, காற்றைத் தள்ளிக் கொண்டு முன்னேறுகிறது படகு. துணி கிழிபடுவது போல படகின் இரு பக்கமும் தண்ணீர் கிழிபடுகிறது. பின்னால் தங்கிவிடுகின்றன

அலைகள். அந்த அலைகளின்மேல் மேலுங் கீழுமாக ஊசலாடுகிறது பின்னால் வரும் தோணி. கான் பகதூர் கதை சொல்லத் தொடங்கினார்...

* * *

மேகர்பான் சிங் ராஜபுத்திர இனத்தைச் சேர்ந்தவன். என் முன்னோர்களும் ராஜபுத்திரர்கள்தான். ரத்த பாசம் என்று ஒன்று இருக்கிறது. எனக்கு மற்ற முஸ்லீம்களைவிட ராஜபுத்திரர் களிடம் அதிக ஈடுபாடு உண்டு. ஆனால் இந்து மதத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. மத விஷயத்தில் நான் ஒரு தீவிர முஸ்லீம். மதத்தைப் பொருத்தவரையில் இந்த முஸ்லீம் சாரங்க், மாலுமி, வேலைக்காரன், சமையற்காரன் எல்லாரும் என் சொந்த மக்கள், மேகர்பான் சிங் ஒரு சிநேகிதன் மட்டுமே.

ஆனால் அந்தக் காலத்தில் அவனைப் போன்ற நண்பன் எனக்கு இல்லை. நாங்களிருவரும் தினம் சந்திப்போம். மணிக் கணக்காகப் பேசுவோம், பகற்கனவு காணுவோம். எங்களிரு வருக்கும் விளையாட்டில் ஆர்வம் உண்டு. வேட்டையிலும் நாட்டம் உண்டு. அந்தக் காலத்தில் இப்போதிருப்பதுபோல சினிமா கிடையாது. நாங்கள் வேலை செய்த இடத்தில் எப்போ தாவது ஒரு தடவை ஒரு டூரிங் டாக்கீஸ் வந்து சில நாட்கள் திரைப்படக் காட்சிகள் நடத்தும். அந்த நாட்களில் நாங்கள் சேர்ந்தே சினிமாவுக்குப் போவோம். நாங்கள் மற்ற போலீஸ் அதிகாரிகளைப் போல் பாட்டுக் கேட்கத் தொழில் முறைப் பாடகிகளின் வீடுகளுக்குப் போவதில்லை. நாங்கள் இந்த விஷயத்தில் பழைய கட்டுப்பாடுகளை மதிப்பவர்கள்.

மேகர்பானுக்குத் திருமணப் பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருந்தது. என் மனைவி பிறந்தகம் போயிருந்தாள். மேகர்பான் படித்த பெண்ணாகத் தேடிக் கொண்டிருந்தான். அந்தக் காலத்தில் பெண்கள் கல்வி கற்கும் வழக்கம் இல்லை.

நாங்கள் இருந்தது பஞ்சாபில் ஒரு கண்டோன்மென்ட் நகரம். அங்கே ஒரு பட்டாளத்துக் காண்டிராக்டர் இருந்தான். பெரிய லட்சாதிபதி. நாங்கள் அங்கு போய்ச் சேர்வதற்குச் சிறிது காலம் முன்புதான் அவன் இறந்து போயிருந்தான். அவனுடைய சொத்தை அவனுடைய இரண்டு மனைவிகளும் பகிர்ந்து கொண்டார்கள். இருவருக்கும் குழந்தைகள் இல்லை. மூத்தவள் எப்போதும் பூஜை புனஸ்காரங்களில் ஈடுபட்டிருந்தாள். இளையவளோ கேளிக்கை, விளையாட்டுகளில் பொழுது போக்கினாள். இருவரும் அவரவர் மாளிகைகளில் தனித்தனியே

வாழ்ந்து வந்தனர். தனித்தனி வேலைக்காரர்கள், தனிவண்டிகள். அவர்களுடைய கணவனுக்கு “ராஜா” பட்டம் கிடைத்திருந்ததால் அவர்கள் “பெரிய ராணி”, “சின்ன ராணி” என்றழைக்கப் பட்டார்கள்.

சின்ன ராணியின் பெயர் சூரஜ்பான். அவள் போன்ற அழகி உலகத்திலேயே இல்லை என்று நாங்கள் கேள்விப்பட்டோம். ஆனால் அவளது நடத்தை அவ்வளவு சரியில்லையாம். அவள் பர்தா வழக்கத்தைக் கடைப்பிடிக்கவில்லை. கிளப்புக்குப் போவாள், வெள்ளைத் துரைகளுடன் நடனமாடுவாள், ஊரிலுள்ள அதிகாரிகளை அழைத்து விருந்து வைப்பாள். அவள் ஒரு சேலையை இரண்டாம் முறை அணிந்து யாரும் பார்த்த தில்லை. அவளிடம் குறைந்தது ஐந்நூறு ஜோடி செருப்புகள் இருக்குமாம். அவள் பாலாடையை உடம்பில் தேய்த்துக்கொண்டு பால் தொட்டியில் குளிப்பாளாம். பின்னர் அந்தப் பால் ஊரில் விற்பனைக்கு வருமாம்.

யாராவது ஒருவனை—அவன் யாராயிருந்தாலும் சரி—அவளுக்குப் பிடித்துவிட்டால் அவனுடைய எல்லா ஆசை களையும் தீர்த்து விடுவாளாம். அவளுக்குப் பணம் தேவையில்லை, பரிசு தேவையில்லை; அவனை அவளுக்குப் பிடித்திருக்வேண்டும் என்பதுதான் ஒரே நிபந்தனை. ஆனால் அவளுக்கு யாரையும் எளிதில் பிடித்து விடாது. நாங்கள் அந்த ஊருக்கு வந்து சில நாட்களுக்குப் பிறகு எனக்கு சூரஜ்பானிடமிருந்து அவள் நடத்தும் விருந்து ஒன்றுக்கு அழைப்பு வந்தது. அவளுடைய பூங்காவில் விருந்து. மேகர்பானைக் கேட்டால் அவன் தனக்கும் அழைப்பு வந்திருப்பதாகச் சொன்னான். ஆனால் அவன் போகப்போவ தில்லையாம். நான் வேடிக்கையாகச் சொன்னேன், “ஒருவகை மாம்பழம் இருக்கு, அதுக்குப்பேர் ‘ராணி பசந்த்’, அதாவது ‘ராணிக்குப் பிடித்தது..’ உனக்கு ‘ராணி பசந்த்’ ஆக இஷ்ட மில்லையாக்கும்!”

“நான் மாம்பழமில்லே. எனக்குத் தன்மானம் இருககு. பலகாலமா ஆண்பிள்ளைதான் தனக்குப் பிடித்த பெண்ணைத் தேர்ந்தெடுத்துக்கிட்டு வந்திருக்கான். தேர்ந்தெடுக்கற உரிமை ஆணுக்குத்தான். இங்கே விஷயம் நேர்மாறாயிருக்கு. சூரஜ்பான் என்னைத் தனக்குப் பிடிச்சிருக்கான்னு பார்க்கணுமா?” பேசும் போதே மேகர்பானின் இரத்தம் கொதித்தது.

“ஏன் சுயம்வர வழக்கம் இல்லியா? அதுவும் ராஜபுத்திரர் களிடம் உண்டே!”

“உண்டுதான். ஆனா, சுயம்வரத்திலே பெண்ணால் தேர்ந் தெடுக்கப்படாதவங்க சண்டைபோட்டு வலுக்கட்டாயமாக

அவளைத் தூக்கிட்டுப் போற வழக்கமும் உண்டே...! தவிர, அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்? குமரிப்பெண்ணோட சுயம்வரம் எங்கே, நடத்தை கெட்டவளோட காமவேட்டை எங்கே!"

இதற்குப் பிறகு நான் மேகர்பானைத் தொந்தரவு செய்ய வில்லை. நான் தனியாகவே விருந்துக்குப் போனேன். சூரஜ்பான் உண்மையிலேயே பிரமாத அழகிதான்! அவளை எப்படி வருணிப்பேன் நான்! நான் உங்க மாதிரி கவியில்லே. இருண்ட இரவில் வாணவேடிக்கை பார்க்கிறோம். வானத்தை ஒளிமய மாக்கிக் கொண்டு பல நிற நட்சத்திரங்கள் வெடித்துச் சிதறு கின்றன. இது வெறும் கந்தகம், வெடியுப்பு போன்ற பொருள்களின் விளையாட்டுதான் என்பதை நாம் கணநேரம் மறந்து மெய் மயங்கிப் போகிறோம். அது மாதிரிதான் இருந்தது. அந்தப் பூங்கா விருந்தில் சூரஜ்பானின் வருகை. அங்கிருந்தவர்கள் கிளர்ந்து சிலிர்த்துக் கொண்டார்கள். கண்ணாடி கிடைத்தால் அவர்கள் அதில் தங்கள் முகங்களைப் பார்த்துக் கொண்டிருப்பார்கள். தங்களை ராணிக்குப் பிடிக்குமா என்று கவலைப்பட்டிருப்பார்கள்.

அதன்பிறகு அழைப்புக் கிடைத்தபோதெல்லாம் நான் அவளுடைய விருந்துகளுக்குப் போயிருக்கிறேன்— 'ராணி பசந்த்' ஆவதற்காக அல்ல, 'வாண வேடிக்கை' பார்ப்பதற்காக. ஆனால் மேகர்பான் ஒரு பிரச்சினையாகி விட்டான். அவனுக்கு விருந்து களில் கலந்து கொள்ள இஷ்டமில்லை. ஆனால் போகாமல் ஒதுங்கியிருக்கவும் முடியவில்லை. மாற்றல் வாங்கிக்கொண்டு வேறோரிடத்துக்கு ஓடிப்போகவும் முடியவில்லை. அவனுடைய அகம்பாவம் அவனை ஓடவிடவில்லை. சூரஜ்பானைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலோ அவனை ஒதுங்கியிருக்கவிடவில்லை. கடமையுணர்வு அவனை ஓடிப்போக அனுமதிக்கவில்லை. அவன் உள்ளூறத் துடித்துக் கொண்டிருப்பது எனக்குத் தெரிந்தது.

"நீ லீவு எடுத்துக்கிட்டு ஊருக்குப் போய்க் கலியாணம் பண்ணிக்கிட்டு வா!" என்று நான் அவனிடம் சொன்னேன். அவன் பேசாமல் கேட்டுக் கொண்டான்; பதில் சொல்லவில்லை.

ஒருநாள் சூரஜ்பான் என்னிடம் "மேகர்பான் சிங் உங்க சிநேகிதர்தானே? அவர் ஏன் என் பார்ட்டிக்கெல்லாம் வர்ற தில்லே? நீங்க அவரைக் கூட்டிக்கிட்டு வரக்கூடாதா?" என்று கேட்டாள்.

நான் அவளிடம் உண்மையை எப்படிச் சொல்வது "எப்போதும் உண்மையே பேசவேண்டும்" என்ற உபதேசம் பாடப் புத்தகத்துக்குத்தான் பொருந்தும். ஆகையால் எதையோ சொல்லி மழுப்பினேன்.

பிறகு மேகர்பானிடம் இந்த விஷயத்தைச் சொன்னேன். இதைக்கேட்டு அவன் சஞ்சலமடைந்தான். மகிழ்ச்சியடைவதா அல்லது கோபித்துக் கொள்வதா என்று புரியவில்லை அவனுக்கு. அவன் என்னை விட்டுவிட்டுத் தனியே உலவப் போய்விட்டான்.

சூரஜ்பான் அளித்த அடுத்த விருந்துக்கு மேகர்பானும் வந்திருந்தான். நான்தான் அவனை அவளுக்கு அறிமுகம் செய்து வைத்தேன். எனக்குக் கண்ணாடி கிடைத்திருந்தால் அதை மேகர்பானின் முகத்துக்கு நேரே நீட்டியிருப்பேன். ஆனால் கண்ணாடி எதற்கு! சூரஜ்பானின் கண்களேதான் கண்ணாடியாக இருந்தனவே? அவளுடைய அழகிய கருத்த கண்களில் அவன் தன் சிவந்துபோன முகம் பிரதிபலிக்கக் கண்டான்.

ஒன்றிரண்டு கணங்களில் எவ்வளவு பெரிய நிகழ்ச்சியொன்று நடந்துவிட்டது! அதை யாரும் கவனிக்கவில்லை—என்னைத் தவிர.

மேகர்பானைக் கேலி செய்து அவனுக்குக் கோபமூட்ட நினைத்தேன்! ஆனால் துணியவில்லை. அவனுடைய முகத் தோற்றத்தைப் பார்த்துப் பின்வாங்கினேன். அவன் இயந்திரம் போல் தன் கடமைகளைச் செய்தான், நல்ல முறையில் செய்தான். என்னுடன் எப்போதும்போல் பழகவும் செய்தான்; ஆனால் உள்ளூர மாறிக் கொண்டிருந்தான். நானும் வலியப்போய் அவனுடன் பேசுதில்லை. அவன் ஏதாவது சொன்னால் கேட்டுக் கொள்வேன், அவ்வளவுதான். அவனுடைய உடல் முழுதும் ஒருத்திக்காக ஏங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய மனமுந்தான். ஆனால் அவன் இந்த உண்மையை ஒப்புக் கொள்ளவில்லை. அவன் பேசியது வேறு. "நான் அவளை வெறுக்கிறேன். அவ ஒழுக்கங் கெட்டவ. அவ ஒரு தேவடியாதானே! பணம் வாங்கிக்காத தேவடியா! எனக்குத் தேவைப்பட்டா நேரடியா ஒரு தேவடியாகிட்டே போவேன். நான் இஷ்டப்பட்டவகிட்டே போவேன். காசு கொடுத்து அவளை அனுபவிப்பேன். நான் ஏன் சூரஜ்பான்கிட்டே போகணும்? நான் அவகிட்டே போனா அவ இஷ்டந்தான் ஜெயிக்கும். அவ விலைகொடுத்து என்னை அனுபவிப்பா. நான் என்ன ராணி பசந்தா?"

இந்த மாதிரி ஒவ்வொரு நாளும் என்னிடம் சொல்லிக் கொண்டிருப்பான் மேகர்பான். அவனுள்ளே ஒரு போர் நடந்து கொண்டிருந்தது. அவனுக்கு அமைதியில்லை. சூரஜ்பான் அவன் மனதைக் கவர்ந்துவிட்டாள் என்ற உண்மையை அவன் என்னிடம் ஒப்புக்கொள்ள விரும்பவில்லை. எனக்கு எல்லாம் புரிந்திருந்தது. ஆனால், நான் புரிந்திருப்பதாகக் காட்டிக் கொள்ளவில்லை.

"யாரும் உன்னை அவகிட்டே போகக் கட்டாயப்படுத்தலே.

நீ போகலேன்னா யாரும் ஒண்ணும் நினைச்சுக்கப் போறதில்லே. அவ எல்லாரையும் விருந்துக்கு அழைக்கற மாதிரி உன்னையும் அழைச்சிருக்கா. அவ தனக்கு யாரைப் பிடிச்சிருக்கு, யாரைப் பிடிக்கல்லேன்னு விளம்பரம் பண்றாளா? அதையெல்லாம் ஜாடை மாடையா உணர்த்திடுவா. அவ தனக்குப் பிடிச்ச ஆளை ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு வரச் சொல்லுவா. அங்கே அவளோட கார் வந்து அவனைக் கூட்டிக்கிட்டுப் போகும். யாரும் அதைக் கவனிக்க மாட்டாங்க. அப்பறம் அவனை இன்னொரு இடத்திலே இறக்கி விட்டுடுவா..." என்று நான் சொன்னேன்.

"மோசக்காரி! முண்டை! ராட்சசி! பிசாசு!" என்றெல்லாம் கெட்ட வார்த்தைகளால் திட்டுவான் அவன்.

"நீ ஏன் இப்படி அசிங்கமாத் திட்டறே அவளை? அவ உனக்கு என்ன கெடுதல் பண்ணினா? நீ ஏன் இவ்வளவு அநாகரீகமா நடந்துக்கறே?" என்று அவனைக் கடிந்து கொள்வேன்.

ஒரு நாள் மேகர்பான் என்னிடம் சொன்னான், "எல்லாம் ஜாடைமாடையா ஏற்பாடாயிடும்னு நீ சொன்னியே. என்ன ஜாடைமாடை? கடையிலே மட்டரகப் புத்தகம் விக்கறாங்களே, அந்தப் புத்தகத்திலே இந்த ஜாடைமாடையெல்லாம் எழுதி யிருக்கு."

"அதைப்பத்தி உனக்கென்ன? நீதான் அவகிட்டே போகப் போறதில்லையே...! இல்லே, போகப்போறியா?"

"நான் போவேனா அந்தத் தேவடியாகிட்டே! அது நடக்காது! என் பேரு மேகர்பான் சிங். நான் சௌஹான் வம்சத்து ராஜபுத்திரனாக்கும்! காலக்கோளாறு, போலீசிலே வேலை பார்க்க வேண்டியதாயிருக்கு. அதுக்காக நான் தாழ்ந்து போவேனா? நீ கூட என்னைப் புரிஞ்சுக்கலியே!"

நான் மௌனமாகக் கேட்டுக் கொண்டேன். அவன் நாளுக்கு நாள் பைத்தியமாகிக் கொண்டிருந்தான். அவனுக்கு உள்ளூற ஏற்பட்டிருந்த ஆசையைத் தீர்த்துக் கொள்வதானால் அவனது கௌரவமும் அழிந்துவிடும். ஆனால் அந்த ஒழுக்கங் கெட்டவளோ அவனைப் பலமாகத் தன்பக்கம் ஈர்க்கிறாள். அவள் விரும்பிய யாரும் அவளிடமிருந்து தப்பியதில்லை; அவள் அவனைக் காந்தம்போல் இழுத்துக் கொண்டுவிடுவாள்.

அவள் என்னை விரும்பவில்லை என்பது என் அதிருஷ்டந் தான். அவள் மேகர்பானுக்கு வசிய மருந்து போட்டு விட்டாள். அதற்கு முன் எனக்கு வசியக் கலையில் நம்பிக்கையில்லை. இப்போது கொஞ்சங் கொஞ்சமாக நம்பிக்கை வந்தது. மேகர்பான் என் விடுதிக்குப் பக்கத்து விடுதியில் வசித்தான். நான் அவனுடைய நடமாட்டங்களைக் கவனிக்கத் தொடங்கினேன்.

அவன் இரவு பத்துமணிக்கு வெளியே போவான். விடியு முன்னர் திரும்பி வருவான். அலங்கோலமாகத் தோற்றமளிப்பான் அவன். பைத்தியக்காரனின் பார்வை. தொடர்போ ஒழுங்கோ இல்லாமல் ஏதேதோ பேசுவான். அவன் பேச்சில் அசிங்கமான திட்டுக்களைத் தவிர வேறெதுவும் புரியாது. கூடைகூடையாய்க் கெட்ட வார்த்தைகள். நாளுக்குநாள் அவை பெருகுவதைக் கவனித்தேன்.

அவன் வீட்டாருக்குத் தகவல் அனுப்பிக் குடும்பத்துப் பெரியவர் யாரையாவது வரவழைக்கத் தோன்றியது எனக்கு. விவகாரம் இன்னும் முற்றிவிடவில்லை. மோசம் நிகழ்ந்து விட வில்லை இன்னும். நல்ல அழகான ஒரு பெண்ணாகப் பார்த்து அவனுக்கு கலியாணம் செய்து வைத்துவிட்டால் ஒரே நாளில் அவனுடைய அசட்டுப் பைத்தியம் தெளிந்துவிடும். அதன் பிறகு சியால்கோட்டிலிருந்து லாகூருக்கோ அமிருதசரசுக்கோ மாற்றலாகிப் போய்விட்டால் சூரஜ்பானின் நினைவு வாண வேடிக்கைபோல் அணைந்து போய்விடும்.

ஆனால் மேகர்பானின் குடும்பத்துக்குச் செய்தியனுப்பத் துணிவு ஏற்படவில்லை எனக்கு. அவன் கோபித்துக் கொள்வானே என்ற பயம். அவன் சாதாரணமாக நிதானமானவன்தான். ஆனால் கோபம் வந்துவிட்டால் கண்மண் தெரியாது அவனுக்கு.

இதன்பிறகு ஒரு நாள் சூரஜ்பான் அளித்த விருந்துக்கு நானும் போனேன், அவனும் போனான். அன்றே எல்லாம் ஜாடை மாடையாக ஏற்பாடாகி விட்டது.

சில நாட்களுக்குப் பிறகு ஒருநாள் நான் அணிவகுப்புக்குப் போக உடையணிந்து கொண்டிருந்தபோது மேகர்பான் அங்கே வந்தான். அவனது உடலுறுப்பு ஒவ்வொன்றிலும் மகிழ்ச்சிக் கிளர்ச்சி. ஆனால் அவன் அதை மறைத்துக் கொண்டு வருத்தக் குரலில் "நான் செத்துப் போயிட்டேன்!" என்றான்.

அவன் என்ன சொல்கிறான் என்று நான் புரிந்து கொண்டாலும் புரியாதவன்போல, "என்ன ஆச்சு?" என்று கேட்டேன்.

"நான் ராணிபசந்த் ஆயிட்டேன்" என்றான் சோகக் குரலில்.

"நீ செய்யறது சரியில்லே. அதுக்கு அடையாளம் நீ இப்போ அணி வகுப்புக்கு மட்டம் போடறதுதான். இப்படிப் பண்ணினா உனக்கு வேலை போயிடும்!" நான் சொன்னேன்.

அவன் பெருமூச்சு விட்டுக்கொண்டு சொன்னான், "எனக்கு வேற வழியிலே. விதி என்னை எங்கேயோ இழுத்துக்கிட்டுப் போகுது... நீ என் சிநேகிதன், எனக்கு ஒரு யோசனை சொல்லுவியா?"

"என்ன யோசனை?" அவனுக்காக அனுதாபம் ஏற்பட்டது எனக்கு.

"நான் அனுபவிச்சதுக்கு விலை கொடுக்க ஆசைப்படறேன்," ஒடுங்கும் குரலில் சொன்னான் அவன். "விலை கொடுக்கலேன்னா நான் அவளோட அடிமையாயிடுவேன். என் கௌரவம் போயிடும்"

நான் சற்றுச் சிந்தித்துவிட்டுச் சொன்னேன், "அவகிட்டே என்ன இல்லே? உன் பணம் அவளுக்கு எதுககு? நீ அம்பது ரூபாய் மதிப்புள்ள பரிசு கொடுத்தா, அவ உனக்கு ஐயாயிரம் ரூயாய் மதிப்புள்ள பரிசு தருவா."

"நான் அவளுக்கு ஒரு லட்ச ரூபாய் மதிப்புள்ள பரிசு தருவேன்!" அழுத்தந் திருத்தமாகப் பதிலளித்தான் மேகர்பான். "ஆனா அவ்வளவு பணம் எங்கே கிடைக்கும். சர்க்கார் கஜானா வைக் கொள்ளையடிக்கட்டுமா?"

கேட்டுத் திடுக்கிட்டேன் நான். உடனே அவன் வீட்டாருக்குக் கடிதம் எழுதினேன், மூடி மறைத்துக் குறிப்பாக விஷயத்தைத் தெரிவித்தேன். அவனை ஜாக்கிரதையாகக் கண்காணிக்கவும் செய்தேன். கிறுக்குத்தனமாக எங்காவது கொள்ளையடித்து விடுவானோ என்ற பயம் எனக்கு.

அவன் அணிவகுப்புக்குப் போவதைத் தவிர்ப்பதற்காக ஒரு சான்றிதழ் வாங்க டாக்டரிடம் போனான். அவனை ஆஸ்பத்திரி யில் சேர்த்துவிடும்படி நான் டாக்டரிடம் சொல்லி வைத்தேன். அவனை ஊருக்கு அழைத்துப் போக அவனுடைய அண்ணன் வந்தார். லீவு கிடைக்காமல் ஊருக்குப் போவது எப்படி? லீவுக்கு மனு செய்தான். லீவு அனுமதிக்கப்படும்வரை காத்திருக்க நேர்ந்தது.

இதற்கிடையில் ஒரு விபரீதம் நிகழ்ந்துவிட்டது. ஒரு நாள் காலையில் மேகர்பானைக் காணவில்லை. விசாரித்துப் பார்த்ததில் சூரஜ்பானையும் காணோம் என்று தெரியவந்தது

ஊரெங்கும் தூற்றுப் பேச்சு. சூரஜ்பானின் பக்தர்கள் வருத்தப்பட்டார்கள் மேகர்பானுக்காக— "பாவம், தற்காலிகமான வெறிக்கு ஆட்பட்டுத் தன் வாழ்க்கையைக் கெடுத்துக் கொண்டானே மனுஷன்!" என்று ஒரு சிலர் வேடிக்கையாகப் பேசிக் கொண்டார்கள்—"ராஜகுமாரியும் பாதி ராஜ்யமும் கிடைச்சா நாங்களும் ஓடிப்போகத் தயார்! சூரஜ்பானும் கெட்டிக் காரிதான்! அவளோட காதலன் நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவன், நல்ல அழகனுங்கூட!"

எனக்குத் தாங்கமுடியாத வருத்தம். மேகர்பானின் அண்ணன் அழுதுகொண்டே ஊர் திரும்பிச் சென்றபோது அவருக்கு விடையளிக்க நானும் சிறிது தூரம் சென்றேன். "எல்லாம்

அதிருஷ்டம்” என்றார் அவர். “ஆமா, எல்லாம் கிஸ்மத்துதான்” என்றேன் நான். நாம் இந்துவானாலும் சரி, முஸ்லீமானாலும் சரி, விதியை நம்புபவர்கள். விதி விதிப்பது நடந்தே தீரும்.

மாதங்கள் கழிந்தன. மேகர்பானைப் பற்றிச் செய்தி எதுவுமில்லை. சூரஜ்பானின் வீடு இருண்டு கிடந்தது. அவள் எங்கிருக்கிறாள் என்று அவளுடைய வேலைக்காரர்களுக்குத் தெரியவில்லை.

ஓராண்டுக்குப்பின் அஜ்மீரிலிருந்து அவனுடைய கடிதம் கிடைத்தது. “அஜ்மீருக்கு யாத்திரையாக வாயேன்!” என்று எழுதியிருந்தான். அவனுக்கு என் யோசனை தேவை என்று உணர்ந்தேன். லீவு எடுத்துக்கொண்டு அஜ்மீர் போனேன். அவன் என்னைச் சந்தித்துத் தன் இருப்பிடத்துக்குக் கூட்டிக்கொண்டு போனான். அவர்களிருவரும் சந்தோஷமாகக் குடித்தனம் நடத்திக் கொணடிருந்தார்கள். சூரஜ்பான் குடும்பப்பெண் மாதிரி நடந்து கொண்டாள். என்னிடம்கூட ஓரளவு பர்தா முறையைக் கடைப்பிடித்தாள்.

அவர்கள் சியால்கோட்டிலிருந்து ஓடிவந்த பின் வெவ்வேறு ஊர்களுக்குப் போனார்களாம். அவர்கள் எங்கே போனாலும் அவர்கள் யார்? அவர்கள் புருஷன் பெண்சாதியா? என்ற கேள்வி அவர்களை எதிர் கொண்டது. சுரஜ்பான் “ஆமா” என்று சொல்லி விடுவாள். ஆனால் மேகர்பான் வாயை மூடிக் கொண்டிருப்பான். அவளைத் தன் மனைவி என்று ஏற்றுக் கொள்ள அவனுக்குத் தயக்கம். அப்படிச் சொல்வது பொய் மட்டுமல்ல, அவனுக்குப் பிடிக்காத விஷயமுங்கூட. ஆனால் அவர்கள் தங்களைக் கணவன்-மனைவி என்று சொல்லிக் கொள்ளாவிட்டால் அவர்களுக்கு வீடு கிடைக்காது, வேலைக்காரன் கிடைக்கமாட்டான், சமூகத்தின் உதவியோ அங்கீகாரமோ கிடைக்காது. வேசிகளின் குடியிருப்பில் போய் வாழ வேண்டியிருக்கும். இதற்கு இணங்குவாளா சூரஜ்பான்? தன்மானம் மிக்கவள் அவள். அவள் என்ன சாதாரண வேசியா!

ஆனால் அவர்கள் போகுமிடங்களிலெல்லாம் சிறிது காலத்துக்குப் பிறகு அவர்களைப் பற்றிய உண்மை வெளியாகி விட்டது. அதன்பிறகு அங்குள்ள இளவட்டங்கள் சூரஜ்பானின் இளமையையும் அழகையும் பங்கு போட்டுக் கொள்ள முற்பட்டனர். மனைவியல்லாத ஒருத்தியின் அழகை ஒருவனே அனுபவிப்பதை மற்றவர்கள் பொறுத்துக் கொள்வதில்லை. அவர்கள் காதலரிருவரையும் தொந்தரவு செய்யத் தொடங்கினர். போலீசிடம் உதவிக்குப் போய் பயன் இல்லை. போலீசார் கலியாணம் நடந்ததற்கான ருசு கேட்பார்கள் அல்லது பெரியதொகையை

லஞ்சமாகக் கேட்பார்கள். அழகைப் போட்டியின்றி அனுபவிக்க வேண்டுமென்றால் அதைக் கைப்பற்றினால் மட்டும் போதாது. அதன்மேல் சட்டப் பூர்வமான உரிமையும் இருக்க வேண்டும் என்று மேகர்பான் புரிந்து கொண்டான். சூரஜ்பான் தன் மனைவி என்பதற்கான சான்றைக் காட்ட வேண்டும்.

குழம்பித் தவித்தான் அவன். ராஜபுத்திரனான அவன் ஒரு வியாபாரியின் விதவையைக் கலியாணம் செய்து கொள்வதா? அதுவும் நடத்தை கெட்ட சூரஜ்பானை! அவனுக்கு இதயம் வெடித்துவிடும் போலிருந்தது. ஏற்கெனவே அவனுக்குத் தலைகுனிவு ஏற்பட்டுவிட்டது. இனி அவனது மானம் மண்ணோடு மண்ணாகி விடும். தப்பியோடவும் வழியில்லை என்று கண்டான் மேகர்பான். இனி வேலை கிடைக்காது. சொந்த ஊருக்குப் போய் விவசாயம் செய்வதானால் இரண்டு வேளையும் பெரியவர்களின் ஏச்சைக் கேட்டுக் கொள்ள வேண்டும். அவனை யார் கலியாணம் செய்து கொள்வார்கள்? கலியாணம் இல்லாவிட்டால் பெண் துணைக்கு என்ன செய்வது? இந்த வயதிலேயே அவன் சன்னியாசியாக வேண்டுமா?

அவன் எங்கும் ஓடாமலிருப்பதென்றால் ஒன்று, சூரஜ் பானைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டும், அல்லது அவளை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டும். இரண்டு வழிகளுமே பிடிக்கவில்லை மேகர்பானுக்கு. சூரஜ்பானுக்கு இந்த இரண்டுமே பிடித்திருந்ததாக அவனுக்குத் தோன்றியது.

பகிர்ந்துகொள்வதைவிடச் சாவது மேல். ஆகையால் கலியாணந்தான் ஒரேவழி. கலியாணப் பேச்செடுத்தாலே அவனது கண்களில் நீர் பெருகியது. இதயம் தவித்தது. அவனது குலப் பெருமைக்கு இழுக்கு, ஆண்மைக்கு அவமானம்...

இந்த மாதிரி ஒரு கட்டாய நிலை ஏற்படாவிட்டால் அவன் கலியாணம் செய்துகொண்டிருக்கமாட்டான். ஒரு வைசியப் பெண்ணை, அதுவும் நடத்தை கெட்டவளைக் கலியாணம்! பங்கு கேட்பவர்களின் தொல்லை தாங்கமுடியாமல், அவள்மேல் தன் உரிமையை நிலைநாட்டிக் கொள்வதற்காக, அவளைப் போட்டியின்றி அனுபவிப்பதற்காகக் கலியாணம் செய்துகொண்டு விட்டான் கடைசியில். கலியாணமானபின் சூரஜ்பான் பர்தா முறையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று வற்புறுத்தினான். சூரஜ்பான் இதற்குத் தயாராயில்லை இருந்தாலும் கலியாண மானதில் அவளுக்குத் திருப்திதான். ஒரு உயர்ந்த குலத்தைச் சேர்ந்த ராஜபுத்திரனைத் திருமணம் செய்து கொள்வது அவளது சிறு பிராயக் கனவு. அந்தக் கனவு நனவாகியதற்காக அவள் சில தளைகளைப் பொறுத்துக்கொள்ள இணங்கினாள். மனைவியைப்

பர்தாவுக்குள் வைத்தபின் சற்றுக் கவலை குறைந்தது மேகர் பானுக்கு. இப்போது அவன் வாழ வழி தேடவேண்டும். அதற்காகப் பஞ்சாபுக்கு வெளியே போகத் தீர்மானித்தான் அவன். அங்கெல்லாம் ஒளிவு மறைவாக வாழ வேண்டிய அவசியமில்லை. உண்மையான முறையில் அவர்கள் தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளலாம்.

அவன் எங்கெங்கோ சுற்றிவிட்டுக் கடைசியில் அஜ்மீர் வந்து சேர்ந்தான். தன் ராணுவ அனுபவத்தைக் காட்டி ரயில் வேயில் ஒரு வேலை தேடிக் கொண்டான். சம்பளம் அதிகமில்லை, இருந்தாலும் சொந்த சம்பாத்தியம்.

இப்போது ஒரு புதிய பிரச்சினை தலையெடுத்தது. இந்த வேலையில் அவன் மாதத்தில் இருபது நாட்கள் வெளியூர்களில் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது. போகுமிடமெல்லாம் மனைவியைக் கூட்டிப்போக முடியாது. தனியாக விட்டுவிட்டுப் போகவும் மனமில்லை. இப்பேர்ப்பட்ட விலை மதிப்பற்ற மாணிக்கத்தை வீட்டில் வைத்துவிட்டு அவன் வெளியூரில் இரவுகளைக் கழித்தால் யாராவது வீட்டில் கன்னம் வைத்து விடுவானே! நகை, துணிமணி, பாத்திரம் பண்டம் திருடப்பட்டதாகப் போலீஸ் ரிகார்டில் எழுதப்படும். ஆனால் உண்மையில் திருடு போன பொருளை எழுதி வைக்க முடியாதே! அந்தப் பொருளுக்கு உரிமையுள்ளவன் வெளியூரில் சுற்றிக் கொண்டிருப்பான்.

மேகர்பான் என்ன செய்வான், பாவம்! அவன் வீட்டைக் கவனிப்பானா, வெளி வேலையைப் பார்ப்பானா? மனைவியைக் காப்பாற்றிக் கொள்வானா அல்லது வேலையைக் காப்பாற்றிக் கொள்வானா? சூரஜ்பானுக்கு இந்தப் பிரச்சினை எதுவுமில்லை. அவள் தன் கனவு நனவாகி விட்டதில் திருப்தியடைந்திருப்பதாகத் தோன்றியது. ஆனால் இந்த முடிவையா மேகர்பான் கனவு கண்டான்!

இந்த சமயத்தில்தான் அவன் என்னிடம் யோசனை கேட்க என்னை அஜ்மீருக்கு அழைததான்.

அவர்கள் திருமணம் செய்து கொண்ட செய்தி கேட்டு எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. நான் முஸ்லீம். இந்த மாதிரிக் கலியாணத்தில் எனக்கு அருவருப்பு இல்லை. மேகர்பான் கோபித்துக் கொள்வானே என்று பயந்துதான் நான் முன்னமேயே அவனுக்குக் கலியாண யோசனையைச் சொல்லவில்லை. என் யோசனையைக் கேட்காமலேயே இந்தச் சரியான காரியத்தை அவன் செய்ததில் எனக்குத் திருப்திதான். ஆனால் இனியும் மனைவியைச் சந்தேகிப்பது! இது அசட்டுத் தனம். வாழ்நாள் முழுதும் குடும்பம் நடத்த வேண்டிய மனைவியிடம் இந்த மாதிரி சந்தேகப்படலாமா?

நான் அவனைக் கடிந்து கொண்டபோது அவன், "ஆனா அவ ரொம்ப அழகாச்சே! அவ அவலட்சணமாயிருந்தா சந்தேகப்பட மாட்டேன்..."

மனைவியின் அழகுக்குத்தான் அவன் பயப்படுகிறான் என்று புரிந்தது எனக்கு. இந்த பயம் எப்படித் தெளியும்? அவளுக்கு ஏழெட்டுக் குழந்தைகள் பிறந்தாலா? அல்லது தீராத நோய்வாய்ப் பட்டாலா? அல்லது அவளது இளமை கழிந்த பிறகா?

ஆனால் இவற்றுக்கெல்லாம் நிறைய நேரமிருந்தது. சூரஜ்பான் எங்கள் வயதுதான். அகாலத்தில் கிழமாகும் எண்ணம் அவளுக் கில்லை.

"மனைவி அவலட்சணமாயிருக்கணும்னு ஆசைப்படாதே! உன் ஆசை நிறைவேறினா அப்பறம் கஷ்டப்படப் போறவன் நீதான்!"

அமிலத்தைக் கொட்டி அவளை அவலட்சணமாக்கலாமா என்றுகூட நினைத்தான் அவன்! ஏதோ தற்செயலாக நிகழ்ந்த மாதிரி அமிலத்தைக் கொட்டி விடுவது! நான் திடுக்கிட்டேன். அவனைக் கடுமையாகக் கடிந்து கொண்டேன். "அப்படீன்னா அவளை விவாகரத்து பண்ணிடு, அல்லது அவளை விட்டுட்டுப் போயிடு!" என்றேன்.

அதற்கும் தயாரில்லை அவன். "நான் போலீஸ் வேலையிலே இருந்திருந்தா சம்பளமும் பென்ஷனுமா சில லட்சங்கள் சம்பாதிச்சிருப்பேன். செலவெல்லாம் போக ஒரு லட்ச ரூபாயாவது மிச்சப் படுத்தியிருப்பேன். பார்க்கப்போனா, அந்த ஒரு லட்ச ரூபாயை சீதனமாகக் கொடுத்துத்தான் இவளை கலியாணம் பண்ணிக்கிட்டிருக்கேன், இலவசமா இல்லே. நான் ஏன் விவாகரத்து பண்ணிக்கணும்? விட்டுட்டுப் போகணும்? விதி எங்களை ஒண்ணாப் பிணைச்சிருக்கு".

சட்டென்று எனக்கு ஒரு யோசனை தோன்றியது. "அது சரி, அவ உனக்கு ஒரு லட்ச ரூபாய் தந்தா நீ அவளை விட்டுடுவியா?" என்று கேட்டேன்.

அவன் திடுக்கிட்டான்; சற்று நேரம் என்னைப் பார்த்து மலங்க மலங்க விழித்தான்; "கேலி செய்யறியா?" என்று கேட்டான்.

"இல்லே, சீரியஸாத்தான் சொல்றேன், இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு இது ஒண்ணுதான்!" என்றேன்.

"நீ அவகிட்டே இதைச் சொன்னா, அவ உடனே ஒரு லட்ச ரூபாயை உன்கிட்டே விட்டெறிவா. நான் அவளோட அடிமை யாயிடுவேன்—ராணி பசந்த்!"

சூரஜ்பான் தனக்கு எசமானியாவதை அவன் விரும்ப வில்லை. தானே அவளுக்கு எசமானனாக இருக்க விரும்பினான்.

அத்துடன் அவள் அழகான யுவதியாக இருக்கக் கூடாது, அவலட்சண மனைவியாக இருக்க வேண்டும். அப்படியிருந்தால் அவன் கவலையில்லாமலிருக்கலாம். ஆனால் இவ்வாறு வெளிப் படையாக அவளிடம் சொல்ல முடியாதே!

நான் காஜா சாயபுவின் தர்காவில் பிரார்த்தனை செலுத்திவிட்டு அஜ்மீரிலிருந்து திரும்பினேன். அதற்குச் சில நாட்களுக்குப்பின் திடீரென்று ஒருநாள் சூரஜ்பானின் வீட்டில் விளக்குகள் பிரகாசமாக எரிவதைக் கண்டு வியப்பு ஏற்பட்டது. என்ன விஷயம்...? ராணி திரும்பி வந்து விட்டாள்...! கூட யாராவது வந்திருக்கிறார்களா...? இல்லை, வேறு யாரும் வரவில்லை...

* * *

கான் பகதூர் தொடர்ந்து கூறினார், "அதுக்கப்புறம் மேகர் பானோடு சந்திப்பு ஏற்படலே. கடிதப் போக்குவரத்தும் இல்லே. நான் பஞ்சாபிலேருந்து வங்காளத்துக்கு மாற்றலாயிட்டேன். இரகசியப் புலன் விசாரணை இலாகாவில் போட்டுவிட்டார்கள். அதிலேருந்து இங்கேயே இருக்கேன். கதை இத்தோட முடிஞ்சது."

"முடிஞ்சு போச்சா?" என் ஆவல் தீரவில்லை. "அப்பறம் என்ன ஆச்சு? சூரஜ்பான் என்ன ஆனா? மேகர்பான் என்ன ஆனார்?" நீராவிப் படகு நீரைக் கிழித்துக் கொண்டு விரைந்தது. நீர்த்துளிகள் எங்கள்மேல் விழுந்தன. சிற்றுண்டி அருந்தி வெகு நேரமாகிவிட்டது. நான் இரவுச் சாப்பாட்டுக்கு ஆர்டர் கொடுத்தேன். இப்போது கான்பகதூர் என் விருந்தினர். "சொல்லக் கஷ்டமாயிருக்குங்க... மனிதர்களைப் புரிந்து கொள்வதிலேயே காலங் கழிஞ்சிடுச்சு. கிழவனாயிட்டேன். ஆனா அப்போ எனக்கு இவ்வளவு தெரியாது. அதனால்தான் திடுக்கிட்டுப் போயிட்டேன்."

"ஏன், ஏன்?" நான் ஆவலடங்காமல் கேட்டேன்.

"மேகர்பான் நிசமாகவே அவ மூஞ்சியிலே அமிலத்தைக் கொட்டப் பார்த்திருக்கான். ஒரு சில துளிகள் அவளோட கன்னத்திலோ, கழுத்திலோ விழுந்துவிட்டது. அதனாலே அவ இப்போ விருந்து வைக்கறதில்லே, வீட்டைவிட்டு வெளியே வரதில்லே. நல்லவேளை, அதிகக் கேடு ஏற்படலே, அவகிட்ட சுமார் ஒரு லட்ச ரூபாய் மதிப்புள்ள நகைகள் இருந்தது. அவ அதையெல்லாம் அப்படியே மேகர்பான்கிட்டே கொடுத்திட்டு ரயில்வே ஸ்டேஷனுக்கு ஓடி வந்தா. நேரே சியால்கோட் வந்து சேர்ந்துட்டா."

நான் அருவருப்பில் காதுகளைப் பொத்திக் கொண்டேன்.

இந்த அக்கிரமத்தைக் கேட்கப் பிடிக்கவில்லை எனக்கு.

மேகர்பானுக்கு நகைகளைப் பத்திரப்படுத்துவதில் கவனம், அவன் எப்படி அவள் பின்னால் ஓடுவான்? எது முக்கியம்— நகையா? அல்லது நாயகியா? நகைதான் அவனுக்கு முக்கியமாகத் தோன்றியிருக்கு...”

சூள்கொட்டினார் கான் பகதூர். அவருடைய அனுதாபம் அந்தப் பெண்ணிடந்தான் என்று தோன்றியது. காதுகளிலிருந்து கைகளைச் சற்று நகர்த்திக் கொண்டேன்.

ஆனால் என் எண்ணம் தவறு.

நன்றாக இருட்டிக் கொண்டு வந்தது. நாங்கள் போக வேண்டிய இடம் வந்து சேர வெகுநேரமாகும். இரவுச் சாப்பாட்டுக்கும் நேரமாகும். கதை முடிந்து போய் விட்டால் சாப்பாட்டு நேரம் வரையில் நாங்கள் என்ன செய்வது?

நான் கைகளைக் காதுகளிலிருந்து எடுத்துக் கொண்டேன்.

கான் பகதூர் சொன்னார், “நடந்த வரையிலே நல்லதுதான். சூரஜ்பான் நல்ல வேளையாத் தப்பிச்சுட்டா. இது மாதிரி எத்தனையோ பார்த்து விட்டேன். மேகர்பான் அவளைக் கொன்னிருக்கலாமே! அழகிகள் மனம் சபலப் படறது இயற்கை தான். என்னிக்காவது ஒரு நாள் அவளுக்குச் சபலமேற்பட்டா அவன் அவளைக் கொன்று போட்டிருப்பான். அவ பொழைச்சு வந்தது பெரிய காரியம். அமிலம்பட்டு அவ அழகு கொஞ்சம் கெட்டுப் போச்சேன்னா, அது அவளோட பாவங்களுக்கான தண்டனைன்னு வச்சுக்கலாம்.”

நான் பதில் சொல்லவில்லை. பாவ தத்துவத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. தவிர, ஒரு பாவிக்கு இன்னொரு பாவி தண்டனை கொடுப்பதை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. மேகர்பானும் பாவிதானே!

“யோசிச்சுப் பாருங்க!” கான் பகதூர் சொன்னார். “கடைசியிலே அந்தப் பொண்ணுக்கு என்ன பெரிய நஷ்டம் ஏற்படுது, சொல்லுங்க? நஷ்டப்பட்டவன் அவன்தான்! அவனோட நஷ்டத்துக்கு அந்த நகைகள் ஈடாகாது. வேலையிலே இருந்திருந்தா அவன் ஐ.ஜி. ஆகாட்டியும் டி.ஐ.ஜி. ஆகவாவது ஆயிருப்பான். விதி! விதிப்படிதான் எல்லாம் நடக்கும். அந்த ரயில்வே உத்தியோகமும் நிலைக்கலே அவனுக்கு. லட்சரூபாய் நகை கிடைச்சதும் அவன் மூளை கெட்டுப் போச்சு. அந்த நகைகளை சீதனமாகக் கொடுத்து ஒருகௌரவமான ராஜபுத்திரக் குடும்பத்திலே கலியாணம் பண்ணிக்கிட்டான். அவங்க அவனை இங்கிலீஷ்காரன்கிட்டே வேலை பார்க்க விடலே. அவங்க அவனை ஒரு சுதேச ராஜாவோட ராணுவத்திலே சேர்த்துட்

டாங்க. அந்த வேலையிலே பதவிப் பெருமையைத் தவிர வேற என்ன இருக்குங்க?"

நான் உம்மென்று உட்கார்ந்திருந்தேன். என்ன சொல்வ தென்று தெரியவில்லை எனக்கு.

"இப்போ இந்த சர்க்கிள் இன்ஸ்பெக்டரோட நிலை என்ன ஆச்சுன்னு பார்க்கணும். இவன் இன்னொரு ராணி பசந்த். இந்தப் பொண்ணு அபூர்வ அழகியாம். அழகியாயிருந்தா நடத்தை கெட்டவளாயிருப்பாங்கறதிலே என்ன ஆச்சரியம்? எவ்வளவுக் கெவ்வளவு கெட்டவளாயிருப்பாளோ அவ்வளவுக்கவ்வளவு அழகியாயிருப்பா."

பெருமூச்சு விட்டார் கான் பகதூர்...

# காணாமற்போனவன்

பிரேமேந்திர மித்ரா

மிகவும் மோசமான நாள். குளிர்காலத்தில் மேகங்கள் கவிந் திருக்கும் நாளைப்போல் எரிச்சலூட்டும் நாள் வேறொன்றும் இருக்க முடியாது. மழையும் பெய்யவில்லை, மேகம் மூடிய வானமும் மங்கிய பூமியும் ஜீவனின்றிக் கிடந்தன. திடீரென்று சோமேஷ் அங்கு வந்திராவிட்டால் நான் எப்படித்தான் நண்பகல் நேரத்தைக் கழித்திருப்பேனோ தெரியாது.

ஆனால் அன்று சோமேஷூம் ஏனோ சுரத்தில்லாமல் இருந்தான். செய்திப் பத்திரிகையை ஓரிருமுறை புரட்டிப் பார்த்து விட்டு அவனிடம் அதை எறிந்துவிட்டுச் சொன்னேன், "ஒரு விஷயம் பார்த்தியா?"

"என்ன?"

"இன்னிப் பேப்பர்லே காணாமப் போனவங்களைப் பத்தி ஒரே சமயத்திலே ஏழு விளம்பரங்கள்!" இந்தச் செய்தியில் எவ்வித ஆர்வமும் காட்டவில்லை சோமேஷ். இயந்திரம்போல் சும்மா சிகரெட் புகையை ஊதிக் கொண்டிருந்தான். நிசப்தமான அறையில் புகை சுருள்சுருளாகக் கிளம்பி உயரே போய்க் கொண்டிருந்தது. மற்றபடி எல்லாம் சலனமற்றிருந்தது. வெளியி லிருந்த சோர்வு எங்கள் மனதிலும் தொற்றிக்கொண்டுவிட்டாற் போலிருந்தது.

இந்தச் சோர்வுமிக்க சூழ்நிலையைக் கலைத்து விடுவதற் காகவே நான் பேசத் தொடங்கினேன், இந்தக் 'காணாமற் போன' விளம்பரங்களைப் பார்த்தா எனக்குச் சிரிப்புத்தான் வருது. முக்கால்வாசி கேஸ் என்ன தெரியுமா..? பையன் ராத்திரி சினிமா பார்த்துட்டு ரொம்ப நேரங்கழிச்சு வீடு திரும்புவான். கொஞ்ச நாளா இந்த மாதிரி அடிக்கடி செய்வான். சில சமயம் சாப்பிட உட்காரும் போது அப்பா தன் மனைவியிடம் கேட்டிருப்பார்.

"ஒம்புள்ளெயெக் காணமே! எங்கே போயிருக்கான்?" மனைவி எரிந்து விழுவாள், "சும்மா அனத்தாதீங்க! இந்த

மாதிரிப் புள்ளே போயிட்டாலே தேவலாம்!" அப்புறம் பெரிதாக அழுவாள் அவள்.

அப்பா பல்லைக் கடித்துக்கொண்டு பேசினாலும் உள்ளூரத் தன்னிடமுள்ள நம்பிக்கையைத்தான் வெளிப்படுத்துவார். "அப்படிப் போய்த் தொலைஞ்சா நா பிழைச்சுப் போயிடுவேனே! பாரு, கொஞ்ச நேரத்திலே திரும்பி வந்துடுவான்! இந்த மாதிரி காசு வாங்காமே சாப்பாடு போடற ஓட்டல் வேற எங்கே கிடைக்கும்?"

அம்மா இப்போது அழுதுகொண்டே சொல்வாள், "இந்த நடுக்கற குளிர்லே, ராத்திரியிலே என்ன செய்யறானோ? என்ன பண்ணிடுவானோன்னு பயமாயிருக்கு"

"உம், என்ன பயம்?" அப்பா கேலிப் பேச்சாலேயே அவளுடைய பயத்தை உதறித் தள்ளப் பார்ப்பார். "நம் புள்ளெ ஒண்ணும் பண்ணிடல்லே. யாராவது ஒரு சிநேகிதன் வீட்டிலே மஜாவா இருப்பான். அசௌகரியம் ஏற்பட்டா உடனே வந்து சேர்ந்துடுவான்!"

அம்மாவின் அழுகை ஓயாது. "அவன் எவ்வளவு ரோசக் காரன்னு ஒங்களுக்குத் தெரியுமே!"

எரிச்சலுடன் எழுந்து போய்விடுவார் அப்பா. மாலையில் ஆபிசிலிருந்து திரும்பிவந்து, நிலைமை இன்னும் மோசமாகி விட்டதைப் பார்ப்பார். பையன் வீடு திரும்பவில்லை. அம்மாக்காரி படுத்த படுக்கையாகி விட்டிருப்பாள்.

"என்னை நிம்மதியா இருக்கவிட மாட்டியா! இதைவிட வனவாசம் மேல்!" என்று எரிந்து விழுந்துவிட்டு அப்பா நேரே செய்திப் பத்திரிகை ஆஃபிசுக்குப் போய்விடுவார்.

பத்திரிகை ஆஃபீஸ் என்பது ஒரு சிக்கலான விஷயம். அங்கே எந்த இடத்தில் என்ன இருக்கிறது என்று தெரிந்து கொள்வது மிகவும் கஷ்டம். அப்பா ஒன்றும் புரியாமல் சற்று நேரம் இங்குமங்கும் அலைந்துவிட்டுக் கடைசியில் ஓர் அறையில் நுழைந்து சாதுவாகத் தென்படும் ஒருவரைக் கேட்கத் துணிவு கொள்வார்— "ஒங்க பேப்பரிலே... அதாவது... ஒரு செய்தி வெளியிடணும்..."

அந்த மனிதர் தலையை நிமிர்த்திக் கேலியாகப் பேசுவார்—"செய்தியா? ஏன் நாங்க போடற செய்தியெல்லாம் ஒங்களுக்குப் பிடிக்கல்லியா...? நாங்க இவ்வளவு நாளா ராம நாடகமா பிரசுரிச்சுக்கிட்டிருக்கோம்?"

* * *

பையனின் கெஞ்சல தாங்காமல் அம்மா தான் திருட்டுத் தனமாகச் சேர்த்து வைத்திருக்கும் சிறுவாட்டுப் பணத்திலிருந்து கொஞ்சம் பணம் கொடுத்திருக்கிறாள் அவனுக்கு. ஆகையால், பொய் பேசத் துணியாமல் கணவனின் குற்றச்சாட்டைப் பொறுத்துக் கொள்கிறாள்.

அப்பா சொல்லிக் கொண்டு போகிறார், "இருட்டி இவ்வளவு நேரமாகியும் இன்னும் வர முடியல்லே பெரியவருக்கு! போன தடவைதான் பெரிய தயவு பண்ணிப் பரீட்சையிலே பெயிலானார். இந்தத் தடவையும் என்ன செய்யப்போறார்னு நல்லாப் புரியுது. என் காசெல்லாம் அவருக்கு ஓட்டாஞ் சல்லிதானே! அதனாலே நவாபு இஷ்டம்போல செலவு செய்கிறார்... விரட்டிவிடப் போறேன். இந்தத் தடவை நிச்சயம் விரட்டி விட்டுடப் போறேன்!"

இந்த ஆர்ப்பாட்டத்தோடு விஷயம் முடிந்திருக்கும். ஆனால் அதே சமயத்தில் அங்கு வந்து சேர்ந்து விட்டான் அருமைப் பிள்ளை!

அப்பா இப்போது சும்மா இருக்க முடியாது. தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காவது அவர் ஏதாவது சொல்லத் தான் வேண்டும்.

ஆகவே அவர் கத்துகிறார், "இந்த மாதிரிப் புள்ளெ எனக்கு வேணாம்! நீ வெளியே போ!"

ரோசக்காரப் பிள்ளை அப்பாவின் இந்த ஆணையைக் கடைப்பிடிக்க முற்படுகிறான்.

எந்தப் பக்கம் சமாளிப்பது என்று தெரியாமல் தவிக்கும் அம்மா வேதனையோடு சொல்கிறாள், "சோறு திங்கற சமயத்திலே ஏன் இப்படியெல்லாம் சொல்றீங்க! அப்பறம் சொல்லக் கூடாதா?"

அப்பா தன் மனைவி மேல் எரிந்து விழுகிறார். "நீ செல்லங் கொடுத்துத்தான் இவன் இப்படிக் குட்டிச் சுவராப் போயிட்டான்!"

அம்மா புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொள்கிறாள், பையன் வெளியேறி விடுகிறான்.

மறுநாள் ஒரே களேபரம். அம்மா முதல் நாளிரவிலிருந்து ஒன்றும் சாப்பிடவில்லை. இன்றும் படுக்கையிலிருந்து எழுந்திருக்க மாட்டாள் போலிருக்கிறது. அப்பாவும் இரவு முழுதும் தூங்க வில்லை. ஆனால் இதை ஒப்புக்கொள்ளக் கூச்சமாயிருக்கிறது அவருக்கு.

* * *

செய்திப் பத்திரிகை ஆஃபீசில் அந்த மனிதரின் கேலிப் பேச்சைக்

கேட்டுத் திகைத்துப் போய் இங்குமங்கும் பார்க்கிறார்.

பக்கத்தில் உட்கார்ந்திருந்த மனிதர் பார்ப்பதற்குச் சற்று முரடராகக் காணப்பட்டார். ஆனால் அவர்தான் அனுதாபத் துடன், "பாவம், இவர் ஏதோ கேக்கறார், நீ ஏன் இப்படிப் பேசறே இவர்கிட்டே...? உக்காருங்க சார்!" என்று சொல்கிறார்.

அப்பா தயக்கத்தோடு ஒரு நாற்காலியில் உட்கார்ந்த பின் அந்த மனிதர் கேட்கிறார், "என்ன செய்தி, சொல்லுங்க!"

"செய்தியொண்ணும் இல்லே... ஒரு விளம்பரம்..."

"விளம்பரமா? எந்த மாதிரி விளம்பரம்? எவ்வளவு இடம் வேணும். காப்பி கொண்டு வந்திருக்கீங்களா?"

"இல்லீங்க.. விளம்பரம் இல்லே... பாருங்க, என் பையன் வீட்டிலேருந்து ஓடிப்போயிட்டான்..."

அவர் பேசி முடிப்பதற்குள் அந்த மனிதர், "புரிஞ்சுது, காணாமற்போனகேஸ்தானே...? என்ன விளம்பரம் தரப்போறீங்க? அங்க அடையாள வர்ணனையா, இல்லே, திரும்ப வான்னு வேண்டுகோளா?" என்று கேட்கிறார்.

அப்பாவுக்கு இப்போதுதான் கொஞ்சம் தெளிவு ஏற்படுகிறது. "வேண்டுகோள்தான்... அவனோட அம்மா அழுதுக்கிட்டே யிருக்கா..."

"புரியுது, புரியுது... கோவிச்சுக்கிட்டுப் போயிட்டானாக்கும்?" அந்த மனிதர் அப்பாவிடம் ஒரு காகிதத்தைக் கொடுத்து விட்டுச் சொல்கிறார், "எழுதிக் கொடுங்க...!"

"எழுதியா?"

அவருடைய குழப்பத்தைக் கண்டு பத்திரிகைக்காரருக்கு அனுதாபமேற்படுகிறது. "சரி நாங்களே எழுதிக்கறோம். நீங்க பேரு, விலாசம் மட்டும் எழுதிக் கொடுங்க" என்று சொல்கிறார்.

பெயர் விலாசத்தை எழுதிக் கொடுத்துவிட்டுப் புறப்படும் போது அப்பா வேண்டிக் கொள்கிறார், "கொஞ்சம் நல்லா எழுதுங்க! இவனோட அம்மா நேத்திலேருந்து ஒரு சொட்டுத் தண்ணி கூடக் குடிக்கலே..."

"அதெல்லாம் நீங்க சொல்லவே வேண்டாம். நாங்க எழுதின் விளம்பரத்தைப் படிச்சுட்டு உங்க பையன் அழுது தீர்த்துடப் போறான்... உங்களுக்குக் கவலையே வேணாம்!"

சற்று மனம் தேறி வீடு திரும்புகிறார் அப்பா.

ஆனால் விளம்பரம் வெளியாகுமுன்னரே வீடு திரும்பி விடுகிறான் பையன். வீட்டில் தங்கிவிட அல்ல, தனக்குத் தேவையான சில புத்தகங்களை எடுத்துக் கொண்டு போகத்தான்..

இப்போது அம்மாவுக்கு வந்ததே கோபம்! "போறதுன்னாப் போயிக்கோயேன், குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக் காம்பு!

ஒரு பிள்ளையும் அப்பாகிட்டே திட்டு வாங்கறதில்லே! நீதான் ஒரு மகாத்மாவாப் பொறந்துட்டே...! அவர் நேத்து ராத்திரி பூரா இமையை மூடல்லே, தெரியுமா உனக்கு? கவலைப்பட்டுக் கவலைப்பட்டு அவர் மூஞ்சி எப்படி ஆயிருக்குன்னு பார்த்துட்டு வா! கோவிச்சுக்கிட்டுப் போறாராம் பெரிய மனிசர்...!"

அப்பா வீட்டுக்குள் நுழைந்தவாறு மனைவியை அடக்கு கிறார், "ஏன் திட்டிகிட்டிருக்கே? விட்டுத் தள்ளு!"

இப்போது அம்மா பொரிந்து தள்ளுகிறாள், "நீங்க சும்மா இருங்க! இவ்வளவு செல்லம் ஆகாது! ஏதோ நாலு திட்டுக் கேட்டது பொறுக்கலியாம், வீட்டைவிட்டுப் போயிடுவாராம்! என்ன திமிரு...!"

பெரும்பாலான "காணாமற்போன" விளம்பரங்களின் வரலாறு இதுதான்..." என்று சொல்லி முடித்தேன் நான். இதற்குள் சோமேஷின் சிகரெட் தீர்ந்துவிட்டது, அவன் இவ்வளவு நேரம் என் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தான் என்று தோன்றவில்லை, சற்றே அசையக்கூட இல்லை அவன்.

நான் எரிச்சலடைந்து, "உனக்கு என்ன ஆச்சு, சொல்லு! நான் பேசிக்கிட்டே இருக்கேன், நீ உம்முன்னு உக்காந்திருக்கியே!"

சோமேஷ் பதிலொன்றும் சொல்லாமல் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு தன் கையிலிருந்த சிகரெட் துண்டை எறிந்தான். பிறகு, "இந்த மாதிரி விளம்பரங்களுக்குப் பின்னாலே பல உண்மையான சோக நிகழ்ச்சிகளும் இருக்கு, தெரியுமா?" என்று சொன்னான்.

"நான் இல்லேன்னு சொல்லலே. சில சமயம் ஓடிப் போனவன் திரும்பி வர்றதில்லே..."

சோமேஷ் சிரித்துக் கொண்டு சொன்னான், "நான் அதைச் சொல்லலே... திரும்பி வந்ததே ஒரு சோக நிகழ்ச்சியா ஆன கதை ஒண்ணு எனக்குத் தெரியும்..."

"அப்படீன்னா...?"

"கேளு, சொல்றேன்..."

வெளியே மறுபடி மழை தொடங்கி விட்டது. ஜன்னலின் கண்ணாடிக் கதவு வழியே தெருவும் வீடுகளும் மங்கலாகத் தெரிகின்றன. நாங்களிருவரும் உலகத்திலிருந்தே விலகிப்போய் விட்ட மாதிரி ஓர் உணர்வு...

"ரொம்ப வருஷத்துக்கு முன்னால் ஒரு முக்கியமான செய்திப் பத்திரிகையிலே நாள் கணக்கிலே ஒரு விளம்பரம் வந்துக்கிட்டிருந்தது. அது வெறும் விளம்பரமில்லே, ஒரு முழு வரலாறு. அந்த விளம்பரங்களையெல்லாம் வரிசையாப் படிச்சுக்கிட்டு வந்தா ஒரு முழுக்கதை தெரியவரும். அச்சடிச்ச எழுத்திலே காது கொடுத்துக் கேட்டா உண்மையிலேயே வேதனையொலி கேக்கும்.

தொடக்கத்திலே அந்த விளம்பரத்திலே ஒரு தாய் தன் காணாமற் போன பிள்ளையைத் திரும்பி வரச் சொல்லிக் கெஞ்சறா. அதன் மொழியிலே தெளிவில்லே, வேகமில்லே, ஆனா அதுக்குள்ளே தொனித்த வேதனையை அதைப் படிச்சவங்கதான் உணர முடியும். அதுக்கப்பறம் வந்த விளம்பரங்களிலே தாயோட அந்த சோக அழைப்பு கொஞ்சங் கொஞ்சமா மறைஞ்சு போச்சு. அப்பறம் வந்த விளம்பரங்களிலே தந்தையோட உணர்ச்சி கரமான— ஆனால் கூடவே நிதானமான-வேண்டுகோள் "சோபன், திரும்பி வா! உன் அம்மா படுத்த படுக்கையாயிருக்கிறாள். உனக்குக் கொஞ்சமும் கடமையுணர்வு இல்லையா?"

"விளம்பரங்கள் இதன் பிறகும் தொடர்ந்தன. தந்தையின் சோகச் சுமையால் கனத்தாற் போன்ற, தொண்டையில் அடைத்துக் கொண்டாற் போன்ற விளம்பர வாசகங்கள்... "சோபன், இப்போது, நீ திரும்பி வராவிட்டால் அம்மாவை உயிருடன் பார்க்க முடியாது! "இதிலும் சோபனின் மனம் இளகவில்லை போலும். விளம்பரங்கள் தொடர்ந்தன, ஆனால் தந்தையால் இன்னும் தாக்குப் பிடிக்க முடியாது போலிருந்து. இப்போது வெளியான விளம்பரங்களில் உருக்கமான கெஞ்சல்... நம்பிக்கையிழப்பு... "சோபன், நாங்கள் எப்படி உயிர் வாழ்கிறோம் என்று உனக்குத் தெரியாது, உடனே வா! இனியும் எங்களைத் துன்புறுத்தாதே!"

"விளம்பரங்கள் ஓலங்களாக மாறிவிட்டன. சிறிது காலத் துக்குப்பின் அவற்றின் தன்மை முற்றிலும் மாறியது. ஒரு சாதாரண அறிவிப்பு: "இந்த வயதுள்ள இந்த மாதிரி தோற்றமுள்ள பையனை ஒரு வருடமாகக் காணவில்லை கண்டுபிடிப்பவர்களுக்குப் பரிசு வழங்கப்படும்."

"பின் வந்த விளம்பரங்களில் பரிசுத்தொகை படிப்படியாக உயர்ந்தது: பதினாறு—பதினேழு வயதுப் பையன்—இரட்டை நாடி உடம்பு. அடையாளம்-வலது காதுக்கருகில் ஒரு பெரிய மச்சம். அவன் உயிரோடிக்கிறானா இறந்துவிட்டானா என்பதைத் தெரிவித்தால் சன்மானம் அளிக்கப்படும்..."

சோமேஷ் சற்று நேரம் பேசாமலிருந்தான். மழைச்சாரல் பட்டு ஜன்னல் கண்ணாடிகள் முற்றிலும் மங்கலாகி விட்டன. அறைக்குள் குளிரத் தொடங்கி விட்டது. கம்பளியை எடுத்துக் கொண்டால் தேவலை என்று தோன்றியது.

"சரி, இதெல்லாம் விளம்பரம் சொல்ற கதை. நிஜமா என்ன நடந்தது?" என்று கேட்டேன்.

"சோபனை எனக்குத் தெரியும். அவன் ஏதோ ரொம்பக் கோவத்திலே வீட்டை விட்டு ஓடி வந்துட்டான்னு நினைக்காதே.

வீட்டைவிட்டு ஓடிப்போறதுங்கறது அவனுக்கு ரொம்ப சாதாரண விஷயம். ஏதாவதொரு சின்னக் காரணம் இருந்தாப் போதும். உலகத்திலே ஒரு சில பேர் இயற்கையாவே விட்டேத்தியாக இருக்காங்க. அவங்க உண்மையிலேயே கல்நெஞ்சக்காரங்க இல்லே. அவங்க நெஞ்சிலே எண்ணெய் தடவினாப்பல இருக்கும். எதிலேயும் அவங்களுக்குப் பிடிப்பு, பாசம் இருக்காது. உனக்கு இதைக் கேக்க ஆச்சரியமாயிருக்கலாம்— விளம்பரங்கள் வந்துக் கிட்டிருக்கறது அவனுக்குத் தெரிஞ்சாலும் அவன் அதையெல்லாம் கவனமாப் படிக்கலே. என்னிக்காவது ஒரு நாள் ஒரு விளம்பரம் அவன் கண்ணிலே பட்டிருக்கும். அவன் அதைப் படிச்சுட்டு அப்பறம் மறந்து போயிட்டான். வீடு வாசலை விட்டுட்டு வெளி யுலகத்திலே காலங்கழிக்கறதுன்னா எவ்வளவு அசௌகரியங்கள் இருக்கும்! அதையெல்லாம் அசௌகரியமாவே கருதலே அவன். அதிலேதான் அவன் சுதந்திர உணர்வை அனுபவிச்சான், மத்தவங்க அவனைப் பத்தி என்ன நினைச்சுக்கிட்டிருந்தாலும் அவன் தன்னை ஒரு சின்னக் குடும்பத்தோட செல்லப்பிள்ளையா நினைச்சுக்கலே.

"ஆனால் திடீர்னு ஒரு நாள் விளம்பரங்கள் நின்னு போன போது அவன் மனசுகூட சஞ்சலப்பட்டது.

விளம்பரங்கள் நின்னு போனதுகூட ஒரு விசித்திரமான விதத்தில்தான். அவை கொஞ்சங் கொஞ்சமாகக் ஊக்கங் குறைஞ்சு நின்னு போகலே, திடீர்னு ஒரு நாள் ஒரு விபத்தை அறிவிச்சுட்டு விளம்பரம் நின்னு போச்சு: "சோபன், இனி உன்னாலே உன் அம்மாவைப் பார்க்க முடியாது. அவள் இன்னும் உன் பெயரைச் சொல்லிப் புலம்பிக் கொண்டுதானிருக்கிறாள்..." இதுதான் கடைசி விளம்பரம்.

"இதுக்குள்ளே ரெண்டு வருஷம் ஆயிட்டது. திடீர்னு ஒருநாள் சோபன் தன் ஊருக்குப் போனான். அவன் நடந்து கொண்ட மாதிரியிலேருந்து நீ அவனோட சுபாவத்தை ஓரளவு புரிஞ்சுக்கலாம். அவன் தான் வர்ற விஷயத்தை முன்கூட்டித் தெரிவிக்கலே. அவன் ஒரு நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த வனில்லே. பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவன்னு சொன்னாலும் போதாது. பழையகாலத்து ஜமீந்தார் பரம் பரையைச் சேர்ந்தவன் அவன். அந்தக் குடும்பத்துப் பெருமையும் சொத்தும் ரொம்பத் தேய்ஞ்சு போயிருந்தாலும் இன்னும் நிறையவே மிஞ்சியிருந்தது. அது எல்லாத்துக்கும் ஒரே வாரிசு சோபன்தான்.

"இந்த ரெண்டு வருஷ காலத்திலே சோபன் எவ்வளவோ அசௌகரியங்களுக்கு, கஷ்டங்களுக்கு உள்ளாகியிருந்தாலும்

அவற்றை அவன் பொருட்படுத்தலே. ஆனால் அவற்றாலே அவன் மேலே பாதிப்பு ஏற்பட்டிருந்தது, வெளித்தோற்றத்திலே ரொம்ப மாறிப் போயிருந்தான் அவன். இருந்தாலும் ஜமீன் சிப்பந்திகள் தன்னை அடையாளம் கண்டு கொள்ள மாட்டார்கள் என்று அவன் நினைக்கவேயில்லை.

அவன் தன் ஊர் போய்ச் சேர்ந்ததும் நேரே தன் மாளிகைக்குள் நுழையப் போனான்.

நாயப்—அதாவது ஜமீனின் நீண்டகால மானேஜர்— அவனை இடைமறித்துக் கேட்டார், "யாரைப் பார்க்கணும்?"

சோபன் சிரித்தவாறு சொன்னான், "வீட்டுக்குள்ள போகணும்..."

நாயப் அவனைச் சற்றுநேரம் உற்றுப் பார்த்துவிட்டுப் புன்சிரிப்புடன் சொன்னார், "ஓ, உள்ளே நுழைய ஏன் இவ்வளவு அவசரம்? கொஞ்சநேரம் வெளியறையிலே இளைப்பாறிட்டுப் போங்களேன்!"

சோபன் ஆச்சரியத்துடன் கேட்டான், "நாயப், உங்களுக் கென்ன வந்தது?"

"எனக்கொண்ணும் ஆகலியே"

"அம்மா சௌக்கியமா இருக்காங்களா?" சோபனின் குரலில் அக்கறை தொனித்தது.

நாயப் முன்போலவே விசித்திரப் புன்னகையுடன், "நல்லாத் தானிருக்காங்க.. வாங்க என்னோடே!"

சோபன், "உள்ளேயே போகலாமே!" என்றான்.

நாயப் சற்றுக் கடுமையான குரலில், "அதெல்லாம் முடியாது! என்னோட வாங்க!" என்றார்.

சோபன் ஒன்றும் புரியாமல் நாயபுடன் வெளியறைக்கு வந்தான். இந்த ரெண்டு வருஷத்திலே அங்கே சில மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. அவர்களோட பழைய குமாஸ்தாவைக் காணோம். ரெண்டு புதிய குமாஸ்தாக்கள் கணக்கு எழுதிக் கிட்டிருந்தாங்க. பழைய பொக்கிஷதார் கிழவரே இன்னும் இருந்ததைப் பார்த்துக் கொஞ்சம் தெம்பு வந்தது சோபனுக்கு.

நாயப் அவனை ஒரு நாற்காலியிலே உட்காரச் சொல்லி விட்டுப் பொக்கிஷதார்கிட்டே "இவருக்கு உள்ளே போகணுமாம்!" என்றார்.

நாயபோட குரல் ஒரு மாதிரியாக இருந்தது. பொக்கிஷதார் தன் மூக்குக் கண்ணாடியை விரலாலே மூக்குமேலே தூக்கிவிட்டுக்கொண்டு அவனை உற்றுப் பார்த்துவிட்டு, "இன்னிக்குத்தான் வந்தாராக்கும்!" என்று சொன்னார்.

"ஆமா, இப்பத்தான்!"

சோபன் பொறுமையிழந்துபோய், "நீங்க என்ன சொல்ல விரும்பறீங்க? தெளிவாச் சொல்லுங்களேன்! அம்மாவுக்கு என்னவாவது ஆயிடுச்சா? அப்பா எப்படி இருக்காங்க?"

அங்கிருந்த எல்லாரின் பார்வையும் அவன் மேலே நிலைத்திருந்தது, எல்லாரும் கொஞ்சநேரம் பேசாமலிருந்தாங்க. அப்பறம் நாயப் சொன்னார், "அவங்க நல்லாத்தான் இருக்காங்க, ஆனா நீங்க அவங்களைப் பார்க்க முடியாது!"

சோபனுக்குக் கோபம் வந்துவிட்டது. "ஏன் பார்க்க முடியாது? உங்களுக்குப் பைத்தியம் பிடிச்சுடுச்சா? நான் உள்ளே போறேன்!"

சோபன் எழுந்தான். உடனே நாயபும் எழுந்திருந்து வாசல்பக்கம் போய் அமைதியாகச் சொன்னார், "இதோ பாருங்க, அனாவசியமாத் தகராறு பண்ணாதீங்க. அதனாலே பிரயோசனமில்லே."

அப்போதுதான் சோபனுக்கு ஒரு பயங்கர உண்மை புரிஞ்சது. அவன் ஆச்சரியமும் பயமுமாகக் கேட்டான், "உங்களுக்கு என்னைத் தெரியல்லியா?"

எல்லாரும் மௌனம்.

"நான்தான் சோபன்... நான் சோபன்தான்னு உங்களுக்குத் தெரியலியா?"

நாயப் இப்போது, "நீங்க கொஞ்சம் இருங்க. இதோ வரேன்" என்று சொல்லிவிட்டுப் பக்கத்து அறைக்குப் போனார். அங்கே ஒரு மேஜை டிராயரைத் திறந்து எதையோ எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தார். சோபனோட பழைய போட்டோதான். அது, சாதாரண போட்டோ. கொஞ்சம் பழுப்பேறி மங்கிப் போயிருந்தது.

"இந்தப் பையனைத் தெரியுமா?" என்று கேட்டார்.

சோபன் ஆச்சரியத்துடன் சொன்னான், "இது என் போட்டோதான்...! நீங்களே ஒப்பிட்டுப் பாருங்களேன்! சே, இதைப் பொறுக்க முடியல்லியே!"

அவன் தலைமுடியைக் கையால் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

நாயப் அவன்கிட்டே உட்கார்ந்து கொண்டு சொன்னார், "பாருங்க, நான் சொல்றதுக்கு வருத்தப்படாதீங்க. உங்களுக்கும் இந்த போட்டோவுக்கும் கொஞ்சம் ஒத்துமை இருக்கு, வாஸ்தவந்தான். ஆனா, இதுக்கு முன்னாலே வந்த ரெண்டு பேருக்கும் இந்த மாதிரி போட்டோவோடே ஒத்துமை இருந்தது. அவங்க உடம்பிலேயும் மச்சம் இருந்தது. இப்படி வர்றவங்களோட தகராறு செய்யக்கூடாதுன்னு எங்களுக்கு உத்தரவு. அதனாலே நாங்க

உங்களை ஒண்ணும் செய்யமாட்டோம். நீங்க இப்பவே இங்கேயிருந்து போயிடுங்க!"

சோபன் திகைத்துப் போய் அங்கிருந்த மற்றவர்களைப் பார்த்தான். அவர்களுடைய பார்வையில் அவனிடம் நம்பிக்கையின்மை தெரிந்தது.

அவன் கெஞ்சும் குரல்லே சொன்னான், "நீங்க என்னை நம்பமாட்டேங்கறீங்க. என்னை ஒரு தடவை என் அப்பா அம்மாவைப் பார்க்கவிடுங்க..."

சோர்வோடு கையை அசைத்தார் நாயப், "அப்படீன்னாக் கேட்டுக்கங்க. ஏழுநாள் முன்னாலே சோபன் செத்துப் போயிட்டதா எங்களுக்குத் தகவல் கிடைச்சிருக்கு..."

சோபனால் அந்த நிலையிலும் சிரிக்காமலிருக்க முடியல்லே. "எப்படிச் செத்துப் போனான்?" என்று அவன் கேட்டான்.

அவன் குரல்லே ஒலித்த கேலியைப் பொருட்படுத்தாமல் நாயப் பதில் சொன்னார், "ஒரு சாலை விபத்திலே கார் ஏறிச் செத்துப் போயிட்டானாம். விபத்து நடந்த இடத்திலே அவனை யாரும் அடையாளம் காணல்லே. ஆனா அங்கே அந்த சமயத்திலே இருந்த சில பேர் பத்திரிகையிலே எங்க விளம்பரத்தைப் பார்த்து எங்களுக்குத் தகவல் தெரிவிச்சாங்க. ஆஸ்பத்திரியிலேயும் நாங்க விசாரிச்சுத் தெரிஞ்சுகிட்டோம். டாக்டரோட வர்ணனை சோபனோட அங்க அடையாளத்தோடு ஒத்திருக்கு..."

சோபன் இப்போ என்ன செஞ்சிருப்பான்னு சொல்ல முடியாது. ஆனா அந்த சமயத்திலே அவன் தன்னோட அப்பா வீட்டுக்குள்ளேயிருந்து வெளியே வர்றதைப் பார்த்தான். அவன் இலக்கியம் படிச்சவன்தான். இருந்தாலும் ஒரு மனிதனைப் புயலால் முறிந்த ஒரு மரத்தோடு ஒப்பிட முடியும்னு அவனுக்கு அவரைப் பார்க்கறதுக்கு முன்னாலே தோணினதில்லே. அவருக்கு ஏற்பட்டிருந்த சோகத்தோட பாதிப்பு அவரோட நடையில கூடத் தெரிஞ்சுது.

மத்தவங்க ஏதாவது புரிஞ்சுக்கறதுக்குள்ளே சோபன் அறைக்கு வெளியே ஓடினான். மத்தவங்க அவனுக்குப் பின்னாலே ஓடிவந்தாங்க. அதுக்குள்ளே அவன் தன் அப்பாகிட்டே போய்ச் சேர்ந்துட்டான்.

"அப்பா!"

கிழவர் திடுக்கிட்டு நின்றார். அவரது முகத்தில் காணப்பட்ட வேதனைத் திகைப்பு அவனோட நெஞ்சைக் குத்தியது.

"அப்பா, என்னை அடையாளந் தெரியுதா?"

கிழவர் தடுமாற்றத்தோடு இன்னொரு அடிவைத்து விட்டுப் பிறகு மறுபடி நின்றார். அவரோட கிழடு தட்டின முகத்தைத் தீவிர உணர்ச்சி வேகம் மேலும் கெடுத்துவிட்டது.

இதுக்குள்ளே நாயப், குமாஸ்தா எல்லாரும் அங்கே வந்துட்டாங்க.

கிழவனார் நடுங்கற கையைத் தூக்கி, நடுங்கற குரல்லே "யாரு?"ன்னு கேட்டார்.

நாயப் சோபனோட தோள்மேலே கையை அழுத்தமா வச்சிக்கிட்டு, 'ஒருத்தருமில்லே... அந்த தடவை மாதிரி இப்போ மறுபடியும்... இதோடே மூணு தடவை ஆயிடுச்சு" என்றார்.

ஒரு குமாஸ்தா சொன்னான், "நாங்க வரவிடல்லே... இவன் திமிறிக்கிட்டு ஓடி வந்துட்டான்..."

கிழவர் அவனை இடைமறித்து, "ஒண்ணும் சொல்ல வேணாம், போகவிடு...!"ன்னு சொன்னார். பிறகு சோபனைப் பரிதாபமாய் பார்த்துவிட்டு வீட்டுக்குத் திரும்பினார்.

திகைச்சுப்போய் நின்னுக்கிட்டிருந்தான் சோபன். நாயப் அவன்கிட்டே ஏதோ சொன்னார். அவன் அதைக் காதிலே போட்டுக்கலே. அவன் எப்போ வெளிப்பக்கத்து அறைக்கு வந்தான்னு அவனுக்குத் தெரியாது.

கொஞ்ச நேரங்கழிச்சு அவனோட திகைப்பு ஒரு வழியாக் குறைஞ்சது... வீட்டுக்குள்ளேயிருந்து ஒரு வேலைக்காரன் வந்து நாயப்கிட்டே என்னவோ சொன்னான். நாயப் சோபன்கிட்டே ஏதோ சொன்னார். முதல்லே அவனுக்கு ஒண்ணும் புரியல்லே. அப்பறம் புரிஞ்சது... நாயப் கையிலே ஒரு கட்டு கரன்சி நோட்டு. அவர் குரல்லே கெஞ்சல். சோபனிடம் ஏதோ உதவி கேக்கறார்...

"நீங்க ஒரு உதவி பண்ணணும்... ராணியம்மா சாகக் கிடக் கறாங்க, பிள்ளை செத்துப்போன செய்தி தெரியாது அவருக்கு. எப்படியும் பிள்ளையைப் பார்க்கலாம் என்கிற நம்பிக்கையிலே உசிரை வச்சிக்கிட்டு இருக்காங்க. நீங்க அவங்களோட காணாமல் போன பிள்ளை மாதிரி அவங்களுக்கு முன்னாலே போய் நில்லுங்க. இப்போ இருக்கிற நிலையிலே அவங்களுக்கு நிசம், போலி எதுவும் கண்டுபிடிக்க முடியாது. நிசமாவே உங்களுக்கும் காணாமல் போன பிள்ளைக்கும் நிறைய ஒத்துமை இருக்கு. சாகப்போறவங்களுக்கு இந்த ஆறுதலையாவது கொடுக்கும்படி ராஜாபகதூர் உங்களைக் கேட்டுக்கறார். இதனாலே உங்களுக்கு ஒரு நஷ்டமுமில்லே..." இதைச் சொல்லிட்டு நாயப் அவன் கையிலே நோட்டுக் கட்டைத் திணிச்சார்.

சோமேஷ் மௌனமானான், சிறிதுநேரம் வரை வெளியே மழை பெய்யும் அரவம் தவிர வேறு ஒலி இல்லை.

நான் கடைசியில் சொன்னேன், "சோமேஷ், உன் காதுக்குப் பக்கத்திலே ஒரு மச்சம் இருக்கே!"

சோமேஷ் சிரித்துக் கொண்டு சொன்னான், "அதனால்தான்

கதை கட்டறது சுலபமாயிருந்தது."

ஆனால் ஏனோ தெரியவில்லை... அந்தக் குளிர்காலத்தின் மேகம் கவிந்த, இயற்கைக்கு மாறாக இருட்டிப் போய்விட்ட பிற்பகல் நேரத்தில் அவனுடைய சிரிப்புப் பேச்சை நம்பத் தோன்றவில்லை எனக்கு...

*(க்வசித் கக்கனோ, 1962)*

# சரிவு

## சதிநாத் பாதுரி

அவளுடைய மார்பிலிருந்து அதைப் பலவந்தமாகப் பிடுங்கி எடுத்துக் கொண்டுபோக வேண்டியிருந்தது பர்சாதிக்கு. அதைக் கொண்டு போய் ஆற்றில் எறிய வேண்டுமே! இந்த மாதிரி இறந்து போனவற்றைப் புதைக்கக் கூடாது, தண்ணீரில் எறிந்துவிட வேண்டும்.

வீட்டுக்குள் இருக்கும்வரை பர்சாதி அழவில்லை. மன்சனியா பார்த்து விடுவாளோ என்ற பயத்தில், கண்ணோரத்தில் நீர் சேரும்போது முகத்தைத் திருப்பிக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டான். இவ்வளவு நேரத்தில் ஒரு தடவைகூட மன்சனியாவின் பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை. அவனுடைய கண்களைச் சந்தித்தால் அவளுக்கு வெட்கமாயிருக்கும். இந்த மாதிரி சமயங்களில் யாரையும் நேருக்கு நேர் பார்க்க முடியுமா? ஏற்கெனவே சோகத்தாலும் வெட்கத்தாலும் செத்துக் கொண்டிருக்கிறாள் மன்சனியா. அவளுடைய துக்கச் சுமையை அதிகமாக்கலாமா–? பர்சாதி வீட்டுக்கு வெளியே வந்த பிறகு அழுதான்.

மன்சனியாவுக்குக் குழந்தை பிறக்காது என்றுதான் இதுவரை எல்லாரும் நினைத்திருந்தார்கள். எவ்வளவு மருந்து, மாயம், மந்திரம் தந்திரம், தாயத்து, பிரார்த்தனை செய்தாகிவிட்டது! சாகும் தருவாயில் வாயில் தண்ணீர் ஊற்ற ஒரு பிள்ளை வேண்டும் என்ற ஆசை யாருக்குத்தானிருக்காது–! கடைசியில் கடவுள் கண் திறந்து பார்த்து விட்டார் என்று தெரிந்த பிறகு அவன் பொறுமையின்றி நாட்களை எண்ணிக் கொண்டிருந்தான். மன்சனியாவுக்காக என்ன செய்வது என்று தெரியவில்லை அவனுக்கு. கேள்விகளால் துளைத்தெடுத்தான் அவளை—என்ன சாப்பிடப் பிடிக்கும்? பிள்ளையா, பெண்ணா? குழந்தை யார் மாதிரி இருக்கும்? வயித்துக்குள்ளே அசையுதா? மண் திங்கணும் போல் இருக்கா? இன்னும் எவ்வளவோ சிந்தனைகள்– சாமார்ஸியுடன் குசுகுசுப் பேச்சுக்கள், தெருவிலுள்ளவர்கள் அவன் செய்யும் ஆர்ப்பாட்டத்தைக் கண்டு கேலியாகப் பேசிக்

கொண்டார்கள்.

—அதன் பிறகு புதனோடு புதன் பதினாலு நாள், வியாழன், வெள்ளி, சனி—இந்தப் பதினேழு நாட்கள் அவன் சுவர்க்கம் தன் கைக்கு வந்துவிட்ட மாதிரி மகிழ்ச்சியாயிருந்தான். பதினேழு நாட்களுக்குப்பின் கடவுள் தன் சொத்தை தன்னிடமே அழைத்துக் கொண்டுவிட்டார். மனிதனால் என்ன செய்யமுடியும்? எவ்வளவு பேரின் குழந்தைகள் எவ்வளவு விதமாகச் சாகின்றன...! வெல்லம் கொதிக்கிற அண்டாவிலே விழுந்து குழந்தை செத்தாகக் கேள்விப் பட்டிருக்கிறான், கொதிக்கிற பாலுக்குள்ளே குழந்தை விழுந்து சாகறதைப் பார்த்திருக்கிறான்... ஆனால் இந்த மாதிரிச் சாவு...! ஐயோ, ஒரு சின்ன இரத்தப் பிண்டம்...! நீலம் பாரிச்சுப் போயிட்டது. மூச்சுவிடத் திணறி, மூச்சுவிட அது பண்ணின முயற்சியிலே அதன் இரு கண்களும் பெரிதாகி உடம்பைவிட்டு வெடித்து வந்துவிடும்போல... ஐயோ, என்ன பரிதாபம்!

சப்பிக் கொண்டிருந்திருக்கும்... பயம் என்றால் என்ன என்று தெரிந்து கொள்வதற்குமுன், ஆபத்து என்ன என்று புரிந்து கொள்ளுமுன், தாயின் நெஞ்சு திடீரென்று கீழே சரிந்து வந்தது. கீழே இருட்டு. அந்த இருட்டில் கடைசி ஓலங்கூட வெளிப்பட இயலவில்லை...

வெகுநேரம் கழித்துத்தான் விஷயம் தெரிந்தது மன்சனியா வுக்கு. எவ்வளவு நேரமாகியிருந்ததோ யார் கண்டார்கள்...! அந்த இடத்தில் ஏன் இவ்வளவு குளிர்ச்சி? சில சமயம் அப்படி ஆகி விடுகிறது. தூக்கக் கலக்கத்தில் கம்பளியை நன்றாக மேலே இழுத்துப் போர்த்திக் கொண்டபோதுகூட அவளுக்கு இன்னொரு ஜீவனைப் பற்றிய ஞாபகம் வரவில்லை. அவள் இயற்கையாகவே தூக்கத்துக்கு அடிமை... இருந்தாலும் அந்த இடத்திலே ஏன் இவ்வளவு சில்லுன்னு இருக்கு...! காளி கோவில் மணி அடிக்கிறது, விடிவதற்கு அதிக நேரமில்லை. அவள் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள்... துணி நனைந்தால்கூடக் கம்பளிக்குக் கீழே இவ்வளவு குளிர்ச்சியாயிருக்காதே...! இது ஏதோ ஒரு மாதிரியா... அவளது நெஞ்சு நடுங்கியது. விளக்கை ஏற்ற நான்கு தீக்குச்சிகள் தேவைப்பட்டன. விளக்குத் திரியைத் தூண்டிவிட்டுப் படுக்கைப் பக்கம் பார்த்தவுடன் மனதிலிருந்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையும் அணைந்து போய்விட்டது. அவள் போட்ட கூச்சலில் பர்சாதி விழித்துக்கொண்டு எழுந்தான்.

உயிர் நீங்கிவிட்ட சடலத்திலே மறுபடி சூடு எப்படி வரும்! ஒன்றும் பலிக்கவில்லை, அந்தப் பதினேழு நாள் வயதான மாமிசப் பிண்டத்தை நெஞ்சோடு சேர்த்துப் பிசையப் பயப்பட வில்லை மன்சனியா. அவளது நெஞ்சு கண்ணீரிலேயே மிதந்தது.

மன்சனியாவின் கிழட்டு நாய் பர்சாதியோடு கொஞ்ச தூரம் போய்விட்டுத் திரும்பி வந்து அவளருகில் உட்கார்ந்தது. அவளது நாய் நல்ல கறுப்பு. அதனால் அதன் பெயர் காரியா. அது அவளுடைய நீர் ததும்பும் கண்களையும், விரிந்து கிடந்த தலைமுடியையும் பார்த்துக் கொண்டிருந்தது. அது வெகு காலமாக இந்தக் குடும்பத்துடன் இருப்பதால் குடும்பத்தில் ஒருவன் போல் அதற்கு எல்லாம் புரியும்.

"த்விராகமனு"க்குப் புக்ககம் வரும்போது காரியாவைப் பிறந்தகத்திலிருந்து கூட்டி வந்தாள் மன்சனியா. (திருமணத்துக்குப் பின் மணப்பெண் இரண்டாம் முறையாகப் பிறந்தகத்திலிருந்து புக்ககம் வரும் நிகழ்ச்சிக்கு "த்விராகமன்' என்று பெயர்). உண்மையில் அவள் கூட்டி வரவில்லை, அதுவாகவே வந்து விட்டது! அது என்ன இன்றைய நேற்றைய நிகழ்ச்சியா! அவளது நான்காம் வயதில் அவளுக்குக் கலியாணம். அதற்குப் பதினைந்து வருடங்களுக்குப் பிறகு த்விராகமன். பர்சாதி அதற்காகப் பணம் சேர்த்து வைத்துக் கொண்டு மாமனாருக்குப் பல தடவை செய்தியனுப்பி விட்டான். மாமனார் அவனை லட்சியம் செய்ய வில்லை, தாமதம் செய்து கொண்டே இருந்தார். ஊர்க்காரர்கள். பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். அப்போது மன்சானியா அவளுடைய கிராமத்தில் தாசில்தார் வீட்டில் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளும் ஆயாவாக வேலை பார்த்து வந்தாள்.

"அப்பன்காரன் பொண்ணு மூலம் சம்பாதிச்சுச் சாப்பிட்டுக் கிட்டிருக்கான். பொண்ணுக்கு வருமானம் அவளோட சம்பளம் மட்டும் இல்லே" என்றெல்லாம் ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். இதையெல்லாம் கேட்டு இரத்தம் கொதித்தது பர்சாதிக்கு. இளவயதின் சூடு, சேர்த்து வைத்திருந்த பணத்தின் சூடு, அவன் எண்ணெய் தடவப்பட்ட தடியை எடுத்துக்கொண்டு மாமனா ரிடம் போனான். அவனோடு அடிதடி, சண்டை போட்டுத் தன் உரிமையான பெண்சாதியைக் கூட்டிக்கொண்டு வந்தான். கிராமத்து எல்லையில் ஆமணக்கு வயலுக்கருகில் அவர்களுடைய மாட்டுவண்டி வந்து கொண்டிருந்தபோதுதான் கறுப்பு நாய் வண்டிக்குப் பின்னால் வந்து கொண்டிருப்பதை அவன் கவனித்தான்.

"இது யாரோட நாய்?" இதுதான் மன்சனியோவோடு பர்சாதியின் முதல் பேச்சு.

"என்னுதுதான்," பயந்துகொண்டே சொன்னாள் மன்சனியா.

"ஒன்னுதா?"

மன்சனியா பருமன்தான். ஆனால் அவளுக்குக் கணவனிடம் பயம். கறாரான ஆள் அவன். அவளுடைய அப்பனோடு

சண்டை போட்டுவிட்டு அவளைக் கூட்டிப் போகிறான். ஆகையால் கொஞ்சம் தயங்கிவிட்டுக் கேட்டாள், "இதை வண்டியிலே ஏத்திக்கட்டுமா?"

"ஒன்னோட இருக்குமா?"

"இருக்கும்"

வண்டி போய்க்கொண்டிருக்கும்போதே அவள் குனிந்து நாயைத் தூக்கிக் கொள்ள முயற்சிப்பதைப் பார்த்துப் பர்சாதி, "என்ன செய்யறே நீ! நீ அவ்வளவு குனிய முடியுமா- இன்னும் கொஞ்சம் முன்பக்கமா நகர்ந்து உக்காந்துக்க!"

புடைவையைச் சரிப்படுத்திக்கொண்டு மன்சனியா நாயை வண்டிக்குள் ஏற்றிக்கொண்டாள். அதன்மூலம் தான் பருமனா யிருந்தாலும் வேலைக்கு லாயக்கில்லாதவளல்ல என்பதை அவனுக்குப் புலப்படுத்தினாள். யாராவது அவளுடைய பருமனைப் பற்றிக் கேலி செய்தால் அவள் குறுகிப்போய் புடைவைத் துணியால் உடம்பை மூடிக்கொள்ள முயற்சி செய்வாள். அவளுடைய இந்த வழக்கத்தை முதல்நாளே கவனித் திருந்தான் பர்சாதி.

"எவ்வளவு கனமான சுமையைத் தூக்கிக்கிட்டு நடக்க முடியும் ஒன்னாலே?"

"ஒரு மணு சுமப்பேன் நிச்சயமா!" என்று சொல்லி மன்சனியா ஒரு மணு கனமான கூடையைத் தூக்கிக் கொண்டு நின்றாள். ஆனால் அவள் கஷ்டப்படுவது தெளிவாகத் தெரிந்தது. அதுமுதல் பர்சாதி ஜாக்கிரதையாகி விட்டான். "ஹர்தாச் சந்தை நம்ம கிராமத்திலேருந்து ஆறு மைல் தூரம். அங்கே நாம காய்கறி வாங்கிக்கிட்டுப் பட்டணத்துக்குக் கொண்டுபோய் விப்போம்" எனறு அவன் மன்சனியாவிடம் சொன்னான்.

இதுதான் பர்சாதியுடன் மன்சானியாவின் முதல் உரை யாடல்— அவளுடைய நாயைப் பற்றி, அவளுடைய பருமனான உடம்பைப் பற்றிய உரையாடல். அவன் என்னதான் சந்தையைப் பற்றி, காய்கறிகளைப் பற்றிப் பேசினாலும் தன் பேச்சின் மூலம் எதைக் குறிப்பிடுகிறான் என்று மன்சனியாவுக்குப் புரிந்தது.

இதோடு விஷயம் முடியவில்லை. அவர்கள் வண்டியில் சற்றுதூரம் போனபிறகு தாசில்தாரின் சிப்பாய்கள் இருவரைச் சந்தித்தார்கள். அவர்கள் பர்சாதிக்காகக் காத்திருந்தார்கள். அவர் களுடைய எஜமான் பர்சாதியை உதைக்கும்படி அவர்களுக்கு உத்தரவிட்டிருக்கலாம். ஆனால் அவர்கள் அவனை அதிகம் துன்புறுத்தவில்லை. தங்கள் எஜமானைப் பற்றி கெடுதலாகப் பேசியதற்காக அவனைத் திட்டிவிட்டுக் கடைசியில் அவனைக் கேலி செய்தார்கள், "நீ ரெண்டு கறுப்பு நாய்களைக் கூட்டிக்கிட்டுப்

போறே. எங்க கிராமமே இருட்டாயிடுச்சு... ஆனாப் பாரு, அந்த தடிக்குட்டி ஒல்லி குட்டியைவிட நெறையச் சாப்பிடுமாக்கும்!" இவ்வாறு சொல்லிவிட்டு இருவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

இதெல்லாம் நடந்தது பத்து வருடங்களுக்கு முன்னால். அதுமுதல் நாய் இங்கேயே இருக்கிறது. அதுமுதல் அந்தக் கிராமத்து ஜனங்களுக்கு மன்சனியாவின் நினைவு வரும் போதெல்லாம் கூடவே அந்த நாயின் நினைவும் வரும். மன்சனியா கிணற்றடிக்கோ, ஹர்தாச் சந்தைக்கோ, வேறொருவர் வீட்டுக்கோ எங்கே போனாலும் அவள் பின்னாலேயே நாயும் வந்துவிடும். சிறு பையன்கள் நோஞ்சல் காரியாவையும் கொழுத்த மன்சனியா வையும் சேர்த்துப் பேசிக் கேலி செய்வார்கள். சிறுவர்கள் ஏன்தான் இவ்வளவு ஈவிரக்கமற்றவர்களாக இருக்கிறார்களோ தெரியவில்லை.

மன்சனியா காய்கறிக் கூடையைச் சுமந்து கொண்டு வியர்க்க விறுவிறுக்கத் தெருவில் வந்தால் சிறுவர்கள் கோலி விளையாடுவதை நிறுத்திக்கொண்டு ஒருவருக்கொருவர் கண்களால் ஜாடை செய்து கொள்வார்கள். ஒருவன் ராகம் போட்டு "மன்சனியா" என்று கத்துவான். இன்னொருவன் அதே ராகத்தில் "தத்தக்கா பித்தக்கா" என்பான். காரியா வாலை மடக்கிக் கொண்டுவிடும். மன்சனியா அருகில் வந்ததும் அந்த சிறுவர்களில் மிகவும் போக்கிரிகளான இருவர் அவளுக்கு இருபுறமும் நின்று கொள்வார்கள்; அவளுடைய நடையைக் கேலி செய்தவாறு நடந்து கொண்டே "தத்தக்கா பித்தக்கா... தத்தக்கா பித்தக்கா..." என்று கத்துவார்கள்.

அவமானமாயிருக்கும் மன்சனியாவுக்கு. வாயடி அடிக்க அவளுக்கும் தெரியும். வேறு ஏதாவது காரணத்துக்காக அவர்கள் அவளைக் கேலி செய்தால் அவளும் பதிலடி கொடுக்காமலிருக்க மாட்டாள். அவள் கத்தித் திட்டத் தொடங்கினால் சிறுவர்கள் ஓட வேண்டியதுதான். ஆனால் அவர்கள் அவளுடைய பொதுக்கை உடம்பையல்லாவா கேலி செய்கிறார்கள்! அவள் அசட்டுச் சிரிப்பு சிரிப்பாள். அவளது இரு கைகளும் கூடையைப் பிடித்துக் கொண்டிருப்பதால் மேல் துணியால் உடம்பை நன்றாகப் போர்த்திக் கொள்ளவும் வழியில்லை.

சிறுவர்களின் கேலிப்பேச்சிலிருந்து விடுதலை பெற்ற பிறகு காரியா கொஞ்சதூரம் போய் வாலை நிமிர்த்திக் கொள்ளும். பிறகு அவர்களிருக்கும் பக்கம் திரும்பி இரண்டு தடவை "வாள், வாள்!" என்று குரைக்கும். எண்ணி இரண்டே தடவைதான். பிறகு தனக்கு மிகவும் பரிச்சயமான மன்சனியாவின் வாசனையை மோப்பம் பிடித்துக் கொண்டு வழி நடக்கத் தொடங்கும்.

மன்சனியாவின் இந்தக் கூச்சம் கடந்த சில மாதங்களாகச் சிறிது குறைந்திருந்தது. புதிதாக ஏதோ ஒன்று நிகழப் போகும் தருவாயில் உலகமே புதிதாகத் தோன்றும், பெரும் சுமையும் லேசாகத் தெரியும்; பொருத்தமில்லாத பொருளும் பொருத்தமாக ஆகிவிடும், மனமும் உரம் பெறும். தன் உடம்பின் அழகின்மை யிலும் ஓர் அர்த்தத்தைக் கண்டாள் அவள்...

ஆனால் இதுவும் சிறிது காலத்துக்குத்தான்! அவளுடைய பதினேழு நாள் ராஜத்துவம் முடிந்து போய்விட்டது. அவள் தன் எந்த உடலுறுப்பைக் குறித்து வெகுகாலமாகக் கூச்சப்பட்டுக் கொண்டிருந்தாளோ, எந்தச் சுமை காரணமாக அவள் மற்றவர் களுக்கு முன்னால் கூனிக் குறுகிக் கொண்டிருந்தாளோ, அந்த உறுப்பே இவ்வளவு காலத்துப் பிறகு அவளுக்குப் பெருங்கொடுமை இழைத்து விட்டது!

சத்துரு...! சத்துரு!

மன்சனியா கால்களைப் பரப்பிக் கொண்டு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறாள். கிழட்டு நாய் அவளுடைய காலை நக்கிக் கொண்டிருக்கிறது. அதன் கண்ணோரத்தில் இருப்பது நீர்த்துளியா பீளையா என்று தெரியவில்லை. மன்சனியா அறியாமலேயே அவளது கை காரியாவின் நெஞ்சை, முதுகைத் தடவத் தொடங்குகிறது. அவளுடைய விரல்களின் இடைவெளி களில் சொரசொரப்பான முதுகு ரோமம். மார்பின் ரோமம் இதைவிட மிருது. துருத்திக் கொண்டிருக்கும் எலும்புகளில் கைபடுகிறது. அவள் நாயின் வற்றிக் கிடந்த மடியை விரல்களால் தடவிக்கொண்டே அதை நன்றாகக் கவனித்தாள். மடிக்காம்புகள் மச்சங்கள்போல் சின்னஞ் சிறிதாக இருக்கின்றன. நன்றாக உற்றுப் பார்க்காவிட்டால் கறுப்பு ரோமத்துக்குள் அவை இருப்பதே கண்ணுக்குத் தெரியாது. அதன் காதிலுள்ள உண்ணிகளை விடச் சிறியவை அவை. நாய் கிழடாகிவிட்டதால் கடந்த ஓராண்டாக அது குட்டிபோடுவது நின்று போய்விட்டது.

காரியா ஒரு தடவை மன்சனியாவின் முகத்தைப் பார்க்கிறது, இன்னொரு தடவை தலையைச் சாய்த்து அவளுடைய விரல்களைப் பார்க்கிறது. அவளைப் புரிந்து கொள்ள முயல்கிறது. அவளுடைய முகத் தோற்றத்தைப் பார்த்தால் அவள் தன்னைச் செல்லங் கொஞ்சுவதாகவும் தெரியவில்லை. அவள் மடிக்காம்புகளைத் தடவும்போது அதற்குக் குறுகுறுப்பு ஏற்படுகிறது.

துக்கம் ஏற்படுகிறது இருக்கட்டும்; இந்த மாதிரி வயிற்றுக் குழந்தை இறந்துபோவதில் உள்ள அவமானத்தை வார்த்தைகளால் விளக்க இயலாது. பொதுக் கிணற்றங்கரையில் எல்லாரும்

அவளைப் பற்றித்தான் பேசுகிறார்கள். என்னென்னவோ பேசுகிறார்கள். வீட்டை விட்டு வெளியே வரத் துணிவு வரவில்லை அவளுக்கு. அப்படியாவது நிம்மதி உண்டா! தெருவாசிகள் அவளுக்கு ஆறுதல் சொல்ல வருகிறார்கள். ஆறுதலாவது மண்ணாவது... எல்லாம் புரிகிறது அவளுக்கு. யாராவது அவளுடன் பேசவந்தால் அவள் போர்வையை நன்றாகப் போர்த்திக்கொண்டு பாயில் படுத்துக்கிடப்பாள். வந்தவள் என்ன வேண்டுமானாலும் சொல்லிக்கொண்டே போகட்டும், அவள் பதில் பேசமாட்டாள். பர்சாதி வீட்டிலிருந்தால் அவன் அக்கம் பக்கத்தார் மன்சனியாவைத் தொந்தரவு செய்யாமல் பார்த்துக் கொள்வான். மன்சனியாவைத் தேற்றவந்த ஒரு கிழவி அவளுடைய ஆழ்ந்து தூங்கும் வழக்கத்தைக் குறிப்பிட்ட போது பர்சாதி கிழவியை அதட்டி பேசாதிருக்கச் சொன்னான்.

காரியா எப்போதும் மன்சனியாவின் பாய்க்கருகில் உட்கார்ந்திருக்கும். பரிச்சயமானவர்கள் அங்கு வந்தால்கூட அது இரண்டுமுறை குரைத்துத் தன் எரிச்சலை வெளிப்படுத்தும்.

மன்சனியா பேசிய ஒரு பேச்சிலிருந்து அவளது மனநிலையை சரியாக ஊகித்தறிந்து கொண்டான் பர்சாதி. அவள் தரையைப் பார்த்தவாறு, மிகவும் தயக்கத்துடன், பொதுக்கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவரும்படி அவனிடம் சொன்னாள்.

"குடி தண்ணியா?"

அவளிடமிருந்து பதிலில்லை.

"குளிக்கத் தண்ணியா?" அவளுடைய கண்களில் நீர் வந்து விட்டது. எந்தப் பெண்ணாவது தன் கணவனைப் பொதுக்கிணற்றி லிருந்து குளிப்பதற்குத் தண்ணீர் கொண்டு வரச் சொல்வாளா? ஏற்கெனவே அவள் பருமன். குளிக்காமலிருக்க முடியாது அவளால். இப்போது உடம்பில் கெட்டுப்போன பாலின் நாற்றம் வேறு. அவளுக்கே அருவருப்பாயிருக்கிறது. அதனால்தான் அவள் வெட்கத்தைவிட்டு அவனைக் குளிப்பதற்குத் தண்ணீர் கொண்டு வரச் சொன்னாள். மற்ற பெண்கள் கூடியிருக்கும் கிணற்றடிக்குப் போய்த் தண்ணீர் எடுத்து வருவது இன்னும் வெட்கக்கேடு.

அவள் மண்பானையைப் பர்சாதியிடம் கொண்டுவந்து கொடுத்தாள். அவன் அதை எடுத்துக்கொண்டு தண்ணீரெடுக்கப் போனான். ஓர் ஆண்பிள்ளை பொதுக்கிணற்றிலிருந்து பானையில் தண்ணீர் எடுத்து வருவதைப் பார்த்துத் தெருவாசிகள் என்ன சொல்வார்களோ!

மன்சனியாவின் நினைவை எப்போதும் வேறு விஷயங்களில் ஈடுபடுத்தி வைக்க முயற்சி செய்யவேண்டும் என்பது பர்சாதிக்கு இயற்கையாகவே புரிந்திருந்தது. தோட்டம் நிறையக் காய்கறிச்

செடிகள், மன்சனியா தன் கையால் விதைத்து வளர்த்தவை. அவற்றைக் கவனித்துக் கொண்டாலும் அவளுக்குச் சற்று ஆறுதலா யிருக்கும். ஆனால் அதை எங்கே செய்கிறாள்! இரவும் பகலும் வராந்தாவில் உட்கார்ந்துகொண்டு என்னதான் சிந்திப்பாளோ, யாருக்குத் தெரியும்! அவன் சந்தைக்குக் காய்கறிகள் கொண்டு போவதற்காக அதிகாலையில் எழுந்திருந்து அவரைப் பந்தலி லிருந்து காய்களைப் பறிப்பது வழக்கம். ஆனால் இந்த மூன்று நாட்களாக அவரைக்காய் பறிக்கக் கூட மறந்துவிட்டாள் அவள்.

நேரங்கிடைக்கும் போதெல்லாம் அவன் அவளுடன் பேசி அவளது கவனத்தைத் திருப்ப முயற்சி செய்தான். ஆனால் பேச்சைத் தொடங்கிச் சிறிது நேரத்திலேயே பேச விஷயம் இல்லாமற் போய்விடுகிறது அவனுக்கு. போய்விட்ட ஜீவனைப் பற்றிப் பேசத் தோன்றுகிறது. ஆனால் அதைப் பற்றிப் பேசக் கூடாதே! அவன் வேறு ஏதாவதைப் பற்றிப் பேச முற்பட்டாலும் அவனறியாமல் பேச்சு தடைப்படுகிறது.

காய்கறிகளின் விலைவாசியைப் பற்றிப் பேச்சைத் தொடங்குவதுதான் அவர்களுடைய நெடுங்கால வழக்கம், பர்சாதி அவரைக்காய் விலையைப் பற்றிப் பேசத் தொடங்குவான், "இப்போ அவரைக் காய்க்கு நல்ல விலை. ஆனா ஒரு மாசங் கழிச்சுக் காயெல்லாம் நாய்க்காது மாதிரி முத்திப் போயிடும். அப்பறம் யாரு வாங்குவாங்க அதை? சாத்புதியா அவரையிலே தான் நல்ல காசு. நல்லாக் காய்க்கும். ஒவ்வொரு கொத்திலேயும் ஏழு அவரைக்காய் இருக்கும். நம்ம தோட்டத்து அவரைக்கொடி தசராவுக்கு முன்னாலேயே காய்க்கத் - தொடங்கிடுச்சு. நான் உனக்கு கக்ரியா ஹாட் தசராத் திருவிழாவிலேருந்து தயிர்வடை வாங்கிக்கிட்டு வந்தேனே ஞாபகமிருக்கா...?"

பேசிக்கொண்டே போனவன் சட்டென்று மௌனமாகி விடுகிறான். இந்தப் பேச்சை எடுத்திருக்கக் கூடாது. அப்போது மன்சனியா பிள்ளைத் தாய்ச்சி. அவள் தயிர்வடை சாப்பிட ஆசைப்பட்டாள்.

"பருவமில்லாத காலத்திலே விளையற காய்கறியிலேதான் நிறைய லாபம். அவரைக்கொடி போன வருசத்துக் கொடிங் கறதாலதான் இந்த வருசம் இவ்வளவு சீக்கிரம் காய்க்க ஆரம்பிச் சுட்டது. போன வருசம் அதுலே காய்ப்பு நின்னதும் நீதான் அதைப் பிடுங்கியெறியணும்னு சொன்னே. என் பேச்சைக் கேட்டுத்தான் சித்திரை மாசத்திலேருந்து அதுக்குத் தண்ணி ஊத்த ஆரம்பிச்சே. நான் சொன்னேனா இல்லையா?"

பேசிக் கொண்டிருக்கும்போது மன்சனியாவின் முகம் என்னவோ மாதிரி ஆவதைக் கண்டு அவன் பேச்சை நிறுத்தினான்.

"சொரக் கொடியோட வீரியத்தைப் பார்த்தியா? கூரை பூராப் படந்திருக்கு. தண்டு கட்டைவிரலை விடப் பருமனா யிருக்கு. நீ தினம் அதோட வேரிலே வடிச்ச கஞ்சிய ஊத்திறியே, அதனால்தான் அதுக்கு இந்த செழிப்பு. ஆனா தண்டு இவ்வளவு தடித்தடியா வளர்ந்தா நல்லாக் காய்க்குமா? தண்டை வெட்டி விக்கறதுதான் லாபம் பாரேன், பிஞ்சு வைக்குது, வெம்பிக் கீழே விழுந்துடுது..."

சீ, என்ன அசட்டுத்தனமாகப் பேசிவிட்டான் அவன்! அவளுடைய முகம் சட்டென்று இருண்டு போய்விட்டதே!

மேலும் பேசத் தோன்றவில்லை பர்சாதிக்கு. அவன் எழுந்து விட்டான். இவ்வளவு ஜாக்கிரதையாக எவ்வளவு நேரந்தான் பேசமுடியும்?

துணி தைக்க உட்கார்ந்தால் அவள் கவனம் சற்றுத் திரும்பலாம். ஆகையால் பர்சாதி காய்கறி விற்றுவிட்டுத் திரும்பும் போது அவளுக்காகச் கொஞ்சம் சட்டைத்துணி வாங்கி வந்தான்.

துணியைப் பார்த்துவிட்டு மன்சனியா, "இந்தத் துணி யெல்லாம் நனைச்சப்பறம் ரொம்பச் சுருங்கிப் போயிடுமே" என்றாள்.

"அவ்வளவு இறுக்கமா ஏன் சட்டை தச்சுக்கறே? கொஞ்சம் தொளதொளன்னு தச்சுக்கோயேன்."

அவன் யோசித்துப் பேசவில்லை. இருந்தாலும் மன்சனியா பார்வையைக் கீழே தாழ்த்திக் கொண்டாள். அவளுடன் நிறையப் பேசிக்கொண்டிருக்க வேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டு வந்திருந்தான் அவன். ஆனால் இப்போது மனைவியின் கூச்சத்தைப் பார்த்து அவனது திட்டம் தேய்ந்து போய்விட்டது.

அவன் முயற்சி செய்வதில் குறை வைக்கவில்லை. மறு நாள் ஒரு நாய்க்குட்டியைக் கொண்டுவந்தான். ரொம்பச் சின்னக்குட்டி. இப்போதுதான் கண் திறந்திருக்கிறது.

"இதை எதுக்குக் கொண்டு வந்திருக்கே?"

"காரியா கெழடாயிடுச்சு, எப்போ செத்துப் போகுமோ தெரியாது, இப்போலேருந்தே ஒரு புது நாய் வளக்கறது நல்லது... வழியிலே குளிர்லே கெடந்து கத்திக்கிட்டிருந்தது, தூக்கிக்கிட்டு வந்தேன்."

அன்று மன்சனியா வேலை செய்ய வெளியே கிளம்பத் தயார் செய்து கொண்டிருந்தாள். எவ்வளவு நாள்தான் வீட்டுக்குள் அடைந்து கிடப்பது! அவர்களது நிலையில் உள்ளவர்கள் சும்மா வீட்டில் உட்கார்ந்திருந்தால் நடக்குமா? இதற்கிடையில் கணவன் ஒரு நாய்க்குட்டியை கொண்டு வந்து விட்டான்!

சங்கடந்தான்! இவ்வளவு நாள் ஒவ்வொரு வருஷமும்

காரியா நிறையக் குட்டிகள் போட்டுக் கொண்டிருந்த காலத்தில் நாய்க்குட்டி வளர்க்கத் தோன்றவில்லை அவனுக்கு. எவ்வளவோ குட்டிகளை நரி தின்றுவிட்டது, எவ்வளவோ குட்டிகளை அக்கம் பக்கத்துப் பையன்கள் எடுத்துக்கொண்டு போனார்கள். என்ன தான் சாப்பிட்டு மிஞ்சியதைக் கொடுத்தாலும் நாய் வளர்ப்பதிலும் ஒரு செலவு இருக்கத்தானே செய்கிறது! சாப்பிட்டு மிஞ்சியதை மட்டும் கொடுத்தால் நாய்க்குட்டி நன்றாக வளருமா? அது எப்போது பார்த்தாலும் ஒரு வீட்டு எச்சில் இலையிலிருந்து இன்னொரு வீட்டு எச்சிலிலைக்கு ஓடிக் கொண்டேயிருக்கும்.

ஆனால் கணவனே கொண்டு வந்திருக்கும்போது இதை வைத்து வளர்க்கத்தான் வேண்டும்.

மன்சனியா கூடையைக் கீழே வைத்துவிட்டு நாய்க் குட்டியைக் கையில் வாங்கிக் கொண்டாள். அவளுக்கு வீட்டை' விட்டு வெளியே போகக் கூச்சமாயிருந்தது. இப்போது நாய்க்குட்டி வந்ததில் அவளுக்கொரு லாபம். வீட்டுக்கு வெளியே போவதை இன்னும் ஒரு வேளை ஒத்திப்போட சாக்குக் கிடைத்தது அவளுக்கு.

ரொம்பச் சின்னக்குட்டி. புஸ்புஸ் என்று சப்தம் செய்து கொண்டு மூக்கை நீட்டி மோப்பம் பிடிக்கிறது. அவளுடைய ஆடைக்குள் முகத்தைப் புதைத்துக் கொள்கிறது. செக்கச் சிவந்த நாக்கு நுனியால் அவளுடைய உள்ளங்கை, விரல்கள், கையை நக்கிப் பார்க்கிறது. அவளுடைய உடலின் மணம் அதற்குப் பிடித் திருக்கிறது. தாய்ப்பாலின் மணம் அதற்குப் பரிச்சயமானதுதான். அது இழந்துவிட்டிருந்த அந்த மணம் இப்போது அதற்கு மறுபடியும் கிடைத்துவிட்டது. இந்த மணத்தை மோப்பம் பிடித்துத்தான் தன்னால் பாலின் ஊற்றைக் கண்டுபிடிக்க முடியும் என்பது அதற்கு இயற்கையாகவே புரிந்திருந்தது.

"ஐயோ அப்பா! கொஞ்சநேரங்கூட சும்மா விட மாட்டேங்கறே-! சும்மா உக்காரு இங்க!" அவள் நாய்க்குட்டியை மடியிலிருந்து இறக்கித் தன் பக்கத்தில் உட்கார வைத்தாள்.

காரியாவின் தொண்டையிலிருந்து "கர்ர்ர்-" என்ற உறுமல் வெளிப்பட்டது. புதிய விருந்தாளியின் நடவடிக்கைகள் அதற்குப் பிடிக்கவில்லை. விஷயம் எவ்வளவு தூரம் போகிறது என்பதைக் கவனித்துக் கொண்டிருக்கிறது அது. அது ஒருமுறை நாய்க் குட்டியை நெருங்கி அதை முகர்ந்து பார்த்தது. முகர்ந்ததில் அதற்கு என்ன புரிந்ததோ! அது சோம்பல் முறித்தவாறு வராந்தா விலிருந்து கீழிறங்கி வாசலில் உட்கார்ந்துகொண்டு தூங்கி வழியத் தொடங்கியது. நாய்க்குட்டியிடம் அதற்குச் சிறிதும் அக்கறை ஏற்படவில்லை.

நாய்க்குட்டியின் மிருதுவான ரோமத்தை மன்சனியாவின் கைகள் அளைந்தன. அப்படி அளைவதில் பட்டைத் தடவுவது போன்ற சுகம் ஏற்பட்டது. அப்படி அளையும்போது அவளுடம்பில் ஒருவகைச் சிலிர்ப்பு ஏற்படுகிறது. அந்தச் சிலிர்ப்புக் கூட இதமாகத்தானிருக்கிறது. ஒரு மிருதுவான உடலின் கதகதப்பைத் தன் விரல் நுனிகளில் உணர்ந்து சற்றுத் தன்னை மறந்துவிடுகிறாள் அவள்.

தினம் அவளுடைய பாலைப் பீய்ச்சிப் பீய்ச்சி வெளியே கொட்ட வேண்டியிருந்தது. அவள் ஒரு தகர டப்பாவின் மூடியில் பாலைப் பீய்ச்சி வைத்து அதை நாய்க்குட்டிக்கு முன்னால் வைக்கிறாள். அது சர்சர் என்று உறிஞ்சி அதைக் குடிக்கிறது. அந்த சர்சர் ஒலிகூட இனிமையாக இருக்கிறது. அவள் கண்கொட்டாமல் நாய்க்குட்டியைப் பார்க்கிறாள்.

வாசலில் காரியாவின் அலட்சியம் மறைந்துவிட்டது. அது காதுகளை விறைத்துக்கொண்டு அந்த ஒலியைக் கேட்டு, வராந்தாவுக்கு ஓடிவந்து டப்பா மூடிக்கு அருகில் நின்றது.

"நீ ஏன் இங்கே வந்தே! போ வெளியே!" மன்சனியா அதட்டினாள்.

மறுபடி உறுமல் காரியாவிடமிருந்து.

"நீ சாப்பிடற சாமானா இது? சும்மா கோவிச்சுக்கிட்டா போல ஆச்சா? ஒரு சின்னக் கொழந்தையோட என்ன கோபதாபம்? வெக்கமாயில்லே? ஓடிப்போ!"

"கர்ர்ர்..." அதாவது இந்த ஏற்பாடு காரியாவுக்குப் பிடிக்க வில்லை. ஆனால் எசமானியின் உத்திரவையும் மீற முடியாதே...!

மன்சனியா வீட்டு வேலையை முடித்துக்கொண்டு, கூடையைத் தலையில் வைத்துக்கொண்டு வெளியே வந்தாள். வழக்கம்போல் காரியாவும் சோம்பல் முறித்துக்கொண்டு எழுந்து வந்து நின்றது.

"நீ எதுக்கு எழுந்திருந்தே? இன்னிக்கு நீ என்கூட வர வேண்டாம்! இங்கேயே இரு-! சொன்னாக் கேக்கறதில்லே! போ, போ, உள்ளே!"

அவள் காரியாவை உள்ளே தள்ளிவிட்டு படலை சாத்திக் கொண்டு போய்விட்டாள். பாவமாகக் குரைத்து ஊரைக் கூட்டியது காரியா.

அவள் எதற்காக வீட்டுக்கு வெளியே வரக் கூச்சப் பட்டாளோ அதுவே நடந்துவிட்டது. கேலி செய்ய விஷயம் கிடைத்துவிட்டால் சிறுவர்களுக்கு உண்மையில் தயை தாட்சணியம் இருப்பதில்லை. இன்றும் மன்சனியா வருவதைக் கண்டு அவர்களுடைய கோலி விளையாட்டு நின்று போய் விட்டது... பொதுக்கைக் காய்கறிக்காரி இன்னிக்கு ஏன் தனியா

வந்திருக்கா? அந்த நோஞ்சான் நாய் ஏன் வரல்லே..?

இன்று அவர்கள் அவளைக் கேலி செய்து பாட்டுப்பாடி அவளைப்போல் நடந்து காட்டவில்லை, அவர்கள் தங்களுக்குள் பூதனை ராட்சசியின் கதையைச் சொல்லிக் கொண்டார்கள்—அவள் காதில் விழும்படி. அவள் எப்படியோ அவர்களிடமிருந்து தப்பியோடினாள்.

இதன்பின் அவள் காய்கறி விற்கச்சென்ற இடங்களி லெல்லாம் வீட்டுப் பெண்கள் அவள் வீட்டில் நடந்த விபத்து பற்றித் துருவித் துருவிக் கேட்டார்கள். போலீஸ் கூட அவளை சந்தேகிக்கவில்லை. இவர்கள் அவள்மேல் சந்தேகப்படுகிறார்கள் என்று தோன்றியது இவர்களுடைய கேள்விகளிலிருந்து. அவள் அதிருஷ்டம் அப்படி! இல்லாவிட்டால் குழந்தைகளைப் பெற்ற வர்கள் இப்படியெல்லாம் அவளைக் கேள்வி கேட்பார்களா..?

இன்னும் கொஞ்சநாட்கள் அவள் வீட்டுக்கு வீடு போய்க் காய்கறி விற்கவேண்டாம் என்று பர்சாதி அவளிடம் சொல்லி யிருந்தான். கடைத்தெருவில் உட்கார்ந்துகொண்டு காய்கறி விற்கச் சொன்னான். அவன் சொன்னது சரிதான். அவள்தான் அவனைப் புரிந்து கொள்ளவில்லை. வீட்டுக்கு வீடு போய் விற்பதென்றால் அவளுக்குச் சிரமம் அதிகம் என்பதற்காகத்தான் அவன் அப்படிச் சொல்கிறான் என்று அவள் நினைத்துவிட்டாள்..

இதன்பின் அவள் வீடு வீடாகப் போகாமல் கடைத்தெருவில் உட்கார்ந்து காய்கறி விற்கத் தொடங்கினாள்.

அவளும் பர்சாதியும் ஒன்றாகத் திரும்பினார்கள். அவர்கள் வீட்டுப் படலைத் திறந்தபோது காரியா வழக்கம்போல் வாலை ஆட்டிக்கொண்டு அவர்களை வரவேற்க வரவில்லை. வீட்டுக்குள் எந்த வித அரவமுமில்லை. என்ன விஷயம்? விளக்கேற்றிப் பார்த்தார்கள்—காரியா கால்களைப் பரத்திக்கொண்டு படுத்திருக்க, நாய்க்குட்டி அதன் உலர்ந்த மடிக் காம்புகளைச் சூப்பிக் கொண்டிருந்தது. நடுநடுவே ஒரு காம்பை விட்டு இன்னொரு காம்பை வாயால் கவ்விச் சப்பியது நாய்க்குட்டி. மன்சனியா அதனருகில் போய் அதைக் கையில் எடுத்துக் கொண்டதும் காரியா உடலைச் சிலிர்த்துக் கொண்டு எழுந்து நின்றது. "நீ சொன்னதுக்காக ரொம்ப நேரம் இதைப் பார்த்துக்கிட்டு இருந்தாச்சு, இப்போ ஒன் பொறுப்பை நீ ஏத்துக்க..! ஒரே பக்கமாப் படுத்துக்கிட்டு இருந்ததிலே உடம்பெல்லாம் மரத்துப் போச்சு!" என்று சொல்வதுபோல.. பிறகு காரியா மண்ணை முகர்ந்துகொண்டே வெளியே போய்விட்டது.

"இந்தக் குட்டிக்கு ஒரு பேர் வைக்கணும்.. இதைப் "பச்சா" (குழந்தை)ன்னு கூப்பிடலாமா?" மன்சனியா சொன்னாள்.

"பச்சா நல்ல பேருதான்."

"பச்சா! ஏ பச்சா! திருதிருன்னு முழிக்கிறதைப் பாரு! வெரலை நக்காதே! முட்டாள்! அதையா சப்பறது! பசிக்குதா? ஆமா, பசிக்கத்தானே செய்யும்! ரொம்ப நேரமாச்சே! பால் குடிக்கற கொழந்தைகளுக்கு மணிக்கு மணி பசிக்கும்... வா வா!"

"குட்டி 'குயின் குயின்'னு கத்தறதே, பசிச்சா அப்படித்தான் நாய்க்குட்டி கத்தும்."

"பசிக்கறபோது மட்டுமில்லே, வேறே சமயத்திலும் அப்படிக் கத்தும்..." குறும்பாகச் சிரித்தாள் மன்சனியா. அவள் அந்தக் குறும்புச் சிரிப்பு சிரிக்காவிட்டால் அவன் அவளது குறிப்பைப் புரிந்து கொண்டிருக்கமாட்டான்.

ஐந்து நாட்களுக்குப்பிறகு இன்றுதான் முதல் தடவையாகச் சிரிக்கிறாள் மன்சனியா.

"அதெல்லாம் ஒனக்குத்தான் தெரியும். சின்ன வயசிலேருந்தே நாய் வளர்த்தவளாச்சே!"

மறுநாள் முழுவதும் காரியா சோம்பலாகப் படுத்திருக்க, பச்சா அதனுடைய மடியைச் சப்பிக் கொண்டிருந்தது. மன்சனியா கூடையை எடுத்துக்கொண்டு வெளியே கிளம்பிய போது காரியா அவளோடு வரவில்லை. அவள் அதை இருக்கச் சொல்லவில்லை. அது தானாகவே தங்கி விட்டது.

அவள் கடைத்தெருவிலிருந்து திரும்பியபோது காரியா முன்பிருந்த நிலையிலேயே படுத்துக் கிடந்தது, நாய்க்குட்டி அதன் மடியைச் சப்பிக் கொண்டிருந்தது. ஆனால் இப்போது மடிக்காம்புகள் மச்சம் மாதிரி சிறிதாக இருக்கவில்லை, சற்றுப் பெருத்திருந்தன. மடியும் சிறிது உப்பியிருந்தது. அதில் சிறிது ஊதா நிறம் படிந்திருந்தது. ஏதாவது சிராய்ப்பு ஏற்பட்டிருக்கிறதோ? பச்சா சும்மா சப்புவதோடு நிற்பதில்லையே, பிறாண்டிக் கடித்து இம்சை செய்கிறதே...!

மன்சனியா காரியாவின் மடியைத் தொட்டுப் பார்த்தாள். இல்லை, சிராய்ப்பு இல்லை. மடியிலிருந்த ஊதா நரம்புகள் புடைத்துக் கொண்டிருந்தன. தோலில் ஒரு வழவழப்பு. மன்சனியா தன்னைச் சோதித்துப் பார்ப்பது காரியாவுக்குப் பிடிக்கவில்லை... 'ஆ'ன்னு பார்க்கறதுதக்கு இதிலே என்ன இருக்கு? இதெல்லாம் முன்னால பார்த்ததே இல்லியா...?

மன்சனியா டப்பா மூடியைக் கையிலெடுத்துக் கொண்டு வராந்தாவிலிருந்து, "பச்சா, பச்சா! துத் துத்து... வா இங்கே!" என்று அழைத்தாள்.

அவள் எதற்குக் கூப்பிடுகிறாள் என்பது பச்சாவுக்குத் தெரியும். அது எழுந்து அவளிடம் வந்தது. அவளுடைய மேல் துணியைப் பிறாண்டியது. அவள்மேல் ஏறப் பார்த்தது.

"இரு, இரு! பொறுக்கல்லியாக்கும்...! காரியாகிட்டே போ! புது அம்மாவைப் பிடிச்சிருக்கியே, போ, அவளப் போய்ச் சப்பு...! என்ன ஏன் மோந்து பாக்கறே."

இது இனிமே என்ன பிரயோசனம்...! செத்துப் போய்விட்ட ஜீவனின் நினைவு வருகிறது அவளுக்கு. அதை மறக்க முடியுமா?

முற்றத்தில் படுத்திருக்கும் காரியா தலையை நிமிர்த்தி அவளைக் கவனிக்கிறது. இப்போது அதன் கண்ணில் பீளை இல்லை. அது மன்சனியாவின் பேச்சை, அங்க அசைவுகளைக் கவனமாகப் பார்க்கிறது. அவள் டப்பா மூடியைக் கையிலெடுத்துக் கொள்ளும்போது அதன் காதுகள் விறைத்துக் கொள்கின்றன. பச்சாவிடமிருந்து விடுதலை கிடைத்ததும் அது வெளியே போய் ஒரு சுற்று சுற்றிவிட்டு வந்திருக்கவேண்டும். அப்படிச் செய்யாமல் அது வாலைச் சுருட்டிக்கொண்டு பச்சா திரும்பி வருவதற்காகக் காத்திருக்கிறது...

பச்சா டப்பா மூடியிலிருந்த பால் முழுவதையும் நக்கிய பிறகும் ஏன் இன்னும் 'குயின், குயின்' என்று கத்திக்கொண்டு நிற்கிறது? ஏன் அங்கே கிடக்கும் பிரிமணையை முகர்ந்து பார்க்கிறது?

"ஆச்சா இல்லியா?"

மன்சனியாவின் இந்தக் குரல் கொஞ்சல் அல்ல, இதில் ஆபத்து இருக்கிறதென்பது காரியாவுக்குத் தெரியும். காரியா வராந்தாவில் சட்டென்று ஏறிப் பச்சாவை வாயில் கவ்விக் கொண்டு கீழே வருகிறது— வா, ஒன்னிடத்துக்கு வா! வந்து ஒன்னிஷ்டப்படி செய்...!

காரியா தன் பழைய இடத்துக்குப் பச்சாவைக் கொண்டு வந்து அதன் கழுத்தை இதமாக நக்கிக் கொடுக்கிறது. பிறகு கால்களைப் பரப்பிக் கொண்டு படுத்துக் கொள்கிறது... இனி என்ன செய்யவேண்டுமென்று பச்சாவுக்கு யாரும் சொல்லிக்கொடுக்க வேண்டியதில்லை.

மன்சனியா மூங்கில் தூணில் சாய்ந்தவாறு ஆச்சரியத்துடன் இதைப் பார்க்கிறாள்... கிழட்டுக் காரியாவுக்கு இன்னும் ஆசை தீரவில்லை போலும்...!

ஈ பச்சாவைத் தொந்திரவு செய்கிறது. காரியா தன் உடலை அசைக்காமல் தலையை மாத்திரம் ஆட்டியாட்டி ஈயை விரட்டப் பார்க்கிறது... உடலை அசைத்தால் மடியைச் சூப்பும் பச்சாவுக்கு இடைஞ்சல், தவிரக் காரியாவின் சொந்த சுகத்துக்கும் இடையூறு—

கிழட்டு நாயின் மடி உப்பியிருப்பதைப் பர்சாதி கவனித்திருப்பானோ? அதை அவனுக்குக் காட்ட அவளுக்கு ஆசைதான், இருந்தாலும் கூச்சம்.

பர்சாதியும் இதைக் கவனித்திருக்கிறான். ஆனால் இதைப்போய் மன்சனியாவிடம் எப்படிச் சொல்வது...?

அன்றிரவு மன்சனியாவுக்கு அடிக்கடி உறக்கம் கலைந்தது. இரவு முழுவதும் அக்கம் பக்கத்தில் நரி இருப்பதை மோப்பம் பிடித்துக் குரைத்துக் கொண்டிருந்தது காரியா. காலையில் எழுந்தபோது காரியாவையும் பச்சாவையும் முற்றத்தில் காண வில்லை. எங்கே போயிருக்கும்? சாத்புதியா அவரைப் பந்தலுக்குக் கீழே பெட்டி மாதிரி ஒரு மர வீடு உண்டு. ஒரு காலத்தில் மன்சனியா வாத்து வளர்த்தாள். அப்போது வாத்துகளுக்காக இந்த மர வீட்டைச் செய்திருந்தாள். இப்போது அந்த மர வீட்டுக்குள் பச்சாவைப் பக்கத்தில் போட்டுக்கொண்டு படுத் திருந்தது காரியா. பெட்டியன் ஒரு புறத்தில் வாத்து நுழைய ஒரு சிறிய ஓட்டை உண்டு. அதன் மற்ற பக்கங்கள் மூடியிருக்கும். சின்ன ஓட்டை. காரியா கூட சிரமப்பட்டுத்தான் அதற்குள் நுழைய முடியும்.

மன்சனியா அருகே சென்று குனிந்து பார்த்தாள். உள்ளே இருட்டாயிருந்ததால் ஒன்றும் சரியாகத் தெரியவில்லை.

'கர்ர்ர்... இங்கே என்ன வேலை ஒனக்கு?"

"போக்கிரி! சும்மா இரு, காரியா!" மன்சனியா அதட்டினாள்.

அவள் அவரைப் பந்தலிலிருந்து காய் பறித்துக் கொண டிருந்தாள். அந்த அரவம் கேட்டுக் காரியா குலைக்கத் தொடங்கியது.

"அது ஏன் இப்படிக் குலைக்குது?" பர்சாதி கேட்டாள்.

"நான் காய் பறிக்கறது அதுக்குப் பிடிக்கல்லே."

"அவரைப் பந்தல் அதோட ராஜ்யம் போலேருக்கு!"

"ஆமா, அதுதான்!"

"புதுக் கொழந்தை கெடைச்சிருக்காக்கும் அதுக்கு?"

"ஆமா, ஏழு ஜன்மத்துக் கொழந்தை!"

கணவன் மேலும் பேச்சைத் தொடர வாய்ப்பளிக்காமல் அவள் பானையை எடுத்துக் கொண்டு பொதுக் கிணற்றடிக்குப் போய்விட்டாள்.

பர்சாதிக்கும் நிம்மதி ஏற்பட்டது. அவர்களது உரையாடல் அவர்களறியாமலேயே ஒரு சங்கடமான விஷயத்தை நெருங்கி விட்டிருந்தது.

இன்று அவர்கள் காய்கறி வாங்க ஹர்தாச் சந்தைக்குப் போகவேண்டும். முன்னதாகவே புறப்படவேண்டும். ஆகையால் பர்சாதி அடுப்பு மூட்ட உட்கார்ந்தான். அவன் சுள்ளிகளை ஒடிக்கும் அரவங்கேட்டுக் குரைத்தது காரியா.

"அடேயப்பா! ஒரு குச்சியைக் கூட ஒடிக்கக் கூடாதாம்!"

அப்படித்தான் நடந்து கொண்டது காரியா. காகம் பந்தலின் மேல் உட்கார்ந்தால் குரைத்தது. பர்சாதி கொல்லையில் நடமாடினால் குரைத்தது. வீட்டுக்கூரையின் மேல் பருந்து உட்கார்ந்தால் குரைத்தது. வாசலில் பூனையைக் கண்டால் குரைத்தது. எல்லாரையும் எதிரிகளாகக் கருதியது. எவராலும் ஆபத்து நேரலாம். பத்திரமாகக் குட்டியைப் பார்த்துக் கொள்ள வேண்டும். ஆபத்து ஏற்படும் போலிருந்தால் குரைத்து எதிரியைப் பயமுறுத்த வேண்டும். நாள் முழுதும் கண்ணையும், காதையும் திறந்து வைத்திருக்கவேண்டும். யாரையும் நம்பக்கூடாது, எதிரி தாக்க வருவதற்குள் எதிரியைத் தாக்க வேண்டும். எதிரிக்குச் சற்று அவகாசம் கொடுத்துவிட்டால் பிறகு தன்னால் சமாளிக்க முடியாது...

சாக்கடைக்கருகில் ஒரு கீரியைப் பார்த்து வாத்துக் கூட்டி லிருந்து வெளியே ஓடிவந்தது காரியா. அடுப்பருகில் இருந்தவாறே பர்சாதி அதை நன்றாகக் கவனித்தான்... அதன் கண்கள் சிவந்திருந்தன. புதிதாகக் குட்டிபோட்ட நாயின் அறிகுறிகள் அதன் உடலில்... பச்சாவும் அதைப் பின் தொடர்ந்து வாத்துக் கூண்டிலிருந்து வெளியே வந்தது. கீரி பயந்து போய் ஓடிவிட்டது. அதன்பிறகும் காரியாவின் குரைப்பும் ஆர்ப்பாட்டமும் நிற்க வில்லை... அதன் மடி கனத்துக் கீழே தரையைத் தொடுமளவுக்குத் தொங்கியது. அது நடந்துபோகும் போதும் பச்சா அதன் மடியைச் சப்புவதை விடவில்லை...

இதென்ன...! நிசமாத்தான்...! இது எப்படி...?

நாயும் குட்டியும் மறுபடி வாத்துக் கூண்டுக்குள் நுழைந்துவிட்டன... பர்சாதிக்கு ஒரே திகைப்பு... மிருகங்களில் இந்த மாதிரி நடக்கும் என்று இதுவரை அவனுக்குத் தெரியாது. மன்சனியா இதைக் கவனித்தாளா? அவளுக்குச் சொல்லலாமா? அக்கம் பக்கத்தாரைக் கூப்பிட்டு இந்த வேடிக்கையை அவர் களுக்குக் காட்டவேண்டும் போலிருந்தது அவனுக்கு. ஆனால் அப்படிச் செய்ய வழியில்லை. அவனுக்குப் பேச வாயில்லை...

ஹர்தாச் சந்தைக்குப் போகும் வழியில் மன்சனியா நாய்களிரண்டையும் பற்றிப் பேசினாள். அவள் காரியாவைச் சாப்பாட்டுக்குக் கூப்பிட்டபோது அது வரவில்லையாம். குட்டி யையும் வரவிடவில்லையாம். குட்டிக்காகக் கவலைப்பட்டாள் அவள்.

"சாப்பிடாமா இருக்க முடியுமா?" என்றான் பர்சாதி. இதை விடத் தெளிவாகப் பேசமுடியவில்லை அவனால். மன்சனியா புரிந்து கொண்டால்தானே!

அவர்கள் வீடு திரும்ப மாலையாகி விட்டது. சின்னக்குட்டி

இவ்வளவு நேரமாகப் பட்டினியாயிருக்கிறதே என்று மன்சனியா வுக்குக் கவலை. அவள் டப்பா மூடியை எடுத்துக் கொண்டு வாத்துக் கூண்டுப் பக்கம் போனாள்… "பச்சா! பச்சா! வா, வா! குர் குர் குர்…!"

"ஆமா, அது வரப் போகுதாக்கும்!" என்றான் பர்சாதி.

குட்டி உண்மையிலேயே வரவில்லை.

காரியா கூண்டின் ஓட்டை வழியே தலையை நீட்டிக் குரைத்தது. கடிக்க வருவதுபோல் பல்லைக் காட்டியது.

"நீ ஏன் கூப்பிட்டுக்கிட்டே இருக்கே? சும்மா இரு!" பர்சாதி சொன்னான்.

மன்சனியா கையை நீட்டியதும் உறுமிக் கொண்டு வெளியே வந்தது காரியா. இது அவர்களுக்குப் பழக்கமான காரியா அல்ல, முற்றிலும் புதிய ஒரு பிராணி. மன்சனியா விஷயத்தைச் சரியாகப் புரிந்து கொள்வதற்குள் அது மேல் விழுந்து அவளைப் பிறாண்டிக் கடித்துக் கிழிக்க முற்பட்டது. மன்சனியா சுரைக்கொடியின் மேலே போய் விழுந்தாள். அவளுடைய துணி நார் நாராகக் கிழிந்து போய்விட்டது. அவளுடைய கையிலிருந்து இரத்தம் பெருகியது.. பர்சாதி கத்திக்கொண்டே தடியை எடுத்து வந்தான்.

ஆனால் மன்சனியாவின் கவனம் இவற்றிலெல்லாம் இல்லை. காரியா மறுபடியும் வாத்துக் கூண்டுக்குள் நுழையும் வரையில் அவளுடைய பார்வை அதன் மடியிலிருந்து விலகவில்லை… அதன் மடியில் பால் சுரந்திருக்கிறது…! அது அவள் மேல் பாய்ந்தபோது அதன் வெதுவெதுப்பான, ஈரமான மடியின் பாரம் அவளுடைய கைமேல் விழுந்தது– ஈர மடி! பால் கொட்டிக் கொண்டிருந்தது காரியாவின் மடியிலிருந்து…! அவளுடைய கையில் காரியாவின் மடிபட்ட இடத்தில் பாலின் ஈரம்…

தனக்கு மட்டும் விதிக்கப்பட்ட சாபக் கேட்டின் சுமை பாறாங்கல்லாக அழுத்தியது மன்சனியாவின் இதயத்தை…

*(பத்ர லேகார் பாபா, 1959)*

# எல்லைக்கோட்டின் எல்லை

## ஆஷாபூர்ணா தேவி

எல்லாரும் தோல்வியுற்றுத் திரும்பிவிட்டார்கள்.

கடைசியில் சதிநாத் தாமே இரண்டாம் மாடிக்கு ஏறி வந்து கடுமையான குரலில் சொன்னார், "சவி! அநாகரீகத்துக்கும் ஒரு எல்லை இருக்கு, எல்லை இருக்கணும்! ஆனா விருந்தாளிகள் கூடியிருக்கிற இந்தக் கல்யாண வீட்டிலே நீ செஞ்ச அநாகரீகத் துக்கு எல்லையில்லே! இவ்வளவு உறவுக்காரங்களுக்கு முன்னாலே என் கௌரவத்தை மண்ணாக்கினே, நீயும் கேலிக்கு ஆளாகிக் கிட்டே! இப்பவாவது தயவு செஞ்சு வா!"

வீட்டுக்கு இரண்டாம் மாடி கட்ட அனுமதி கிடைக்க வில்லை. இருந்தாலும் இரண்டாம் மாடியில் சவிக்காகச் சீமை ஓடு வேய்ந்த ஓர் அறை கட்டப்பட்டிருந்தது. அறைக்குள் அப்போது விளக்கு எரியவில்லை. கீழே பந்தலில் எரிந்து கொண்டிருந்த எண்ணற்ற விளக்குகளின் வெளிச்சம் மட்டும் ஓரளவு அந்த அறை வாசலில் பிரதிபலித்தது.

ஒருக்களித்திருந்த அறைக்கதவில் கைவைத்து நின்று கொண் டிருந்தாள் சவி. அந்தக் கைவிரல்களும் அவளது கன்னத்தின் ஒரு பக்கமும்தான் கண்ணிற்குத் தெரிந்தன. இதன் மூலம் அவர்களுடைய முகபாவத்தைப் புரிந்துகொள்ள இயலவில்லை.

ஆகையால் அவள் முன்போலவே விறைப்பாக இருக்கிறாளா அல்லது இளகி வருகிறாளா என்பதும் புரியவில்லை.

சதிநாத் வந்து கூப்பிட்டபிறகும் அவள் பிடிவாதமா யிருந்தால் அவளும் அவளுடைய கணவன் மாதிரி பைத்தியந்தான் என்று நினைத்துக்கொள்ள வேண்டியதுதான்.

சவியிடம் மாறுதல் எதுவும் தெரியவில்லை. சவி ஒரு விசித்திரமான, வறண்ட குரலில் சொன்னாள், "அண்ணா, நீ எதுக்கு இவ்வளவு கஷ்டப்பட்டுக்கிட்டு ஏறிவந்தே? நான் தான் சொல்லிட்டேனே..."

"ஆமா தெரியும்..." கசப்பும் கோபமும் கலந்த குரலில் சொன்னார் சதிநாத். "வீட்டிலே இருக்கறவங்க எல்லாரும் ஒருத்தர்

*மாத்தி ஒருத்தர் உன்னை சமாதானப்படுத்த வந்தாங்க, நீ 'கீழே எறங்க மாட்டேன், சாப்பிட மாட்டேன்'னு சொல்லி எல்லாரையும் வெரட்டிட்டேன்னு தெரியும் எனக்கு. உன் அண்ணி வந்து கைகூப்பிக் கும்பிட்டும் நீ அசைஞ்சு குடுக்கலே..."*

சவியின் முகத்தை இப்போதும் பார்க்க முடியவில்லை. அவள் அந்த அறையை விட்டுச் சற்று வெளியே வந்தால் அவளுடைய முகத்தைப் பார்க்கலாம். ஆனால் வெளியே வர வில்லையே அவள்! யாரோ அறை வாசலில் ஒரு கோடு போட்டு அதை அவள் தாண்டக்கூடாதென்று ஆணையிட் டிருந்தாற்போல் அவள் அறைக்குள்ளேயே நின்றிருந்தாள்.

ஆனால் கதவை ஒரேயடியாகச் சாத்திவிட்டுப் படுக்கையில் போய் விழவும் வழியில்லை அவளுக்கு. சாயங்காலத்திலிருந்து ஒருவர் மாற்றி ஒருவர் அவளை அழைக்க வந்து கொண்டே யிருக்கிறார்கள்.

"சவி! ஐநூறு பேர் வந்திருக்காங்க கீழே... எவ்வளவு பேர் 'சவி எங்கே? சவி எங்கே'ன்னு கேட்டுக்கிட்டிருக்காங்க! வாயேன் ஒரு தடவை...! சவி! உன் அண்ணாவுக்கு எவ்வளவு அழகான மாப்பிள்ளை கிடைச்சிருக்கான், வந்து பாரேன்...! அத்தை! கன்யாதானம் நடக்கற எடத்திலே நீ ஏதோ செய்யாமே வந்துட்டியாமே, அப்பா கோவிச்சுக்கறார், சீக்கிரம் வாயேன்...!"

ஆனால் சவி அசையவில்லை, அவளுடைய கோபம் குறைய வில்லை. "எனக்குத் தலை வலிக்குது" என்று சொல்லித் தட்டிக் கழிக்கிறாள் அவள்.

இவ்வளவு நாள் இந்தக் கல்யாணம் சம்பந்தப்பட்ட எல்லாக் காரியங்களையும் சவிதான் கவனித்து வந்திருக்கிறாள். அன்று பகலில் சமையலறை, உக்கிராணம், சாப்பாட்டுக் கூடம், பூஜையறை என்று சக்கரம் மாதிரி சுழன்றிருக்கிறாள்... மாலை நேரத்தில் தற்செயலாக அந்த நிகழ்ச்சி நேர்ந்துவிட்டது. அதைப் பெரிதாக எடுத்துக்கொண்டு சவி கோபத்தில் தன் அறையில் போய்ப் படுத்துக்கொண்டுவிட்டாள் என்பதை யாரும் கவனிக்கவில்லை. கன்யாதானத்தின்போதுதான் அவளைத் தேடத் தொடங் கினார்கள்.

"சவி எங்கே...? எங்கே சவி?"

"முடிச்சுப் போடறதுக்கு வேண்டிய மஞ்சள் சோழியைச் சவி எங்கே வச்சிருக்கா...? மணப்பெண்ணோட பட்டுப் புடவை எங்கே?"

இந்தப் பொருளெல்லாம் பக்கத்திலேதானிருந்தது, கிடைச் சுட்டது. இருந்தாலும் அதையெல்லாம் எடுத்து வச்சிக்கிட்டுத் தேவைப்படறபோது கொடுக்க ஆளில்லாட்டி அசௌகரியந்

தானே! மஞ்சள் சோழி, பட்டுப்புடவை மட்டுமில்லே, சடங்குக்குத் தேவையான ஒவ்வொரு சாமானும் சவியோட பொறுப்பிலே தானிருந்தது! கலியாணப் பொண்ணோட அம்மா எந்தப் பக்கந் தான் சமாளிப்பா? விருந்தாளிகளைக் கவனிக்க வேணடாமா அவ?

இதெல்லாம் தெரிஞ்சும் ரொம்ப முக்கியமான நேரத்திலே ஒளிஞ்சுக்கிட்டாளே இந்த சவி! சீ.. சீ..! அதட்டப்பட்ட புருசனை சமாதானப்படுத்தப் போயிருக்கா, வேறென்ன! அதுக்கு இதுதானா நேரம்? பைத்தியக்கார மனுசன், மறுபடி ஒண்ணு கெடக்க ஒண்ணு செஞ்சுடுவான். தூக்க மருந்து கொடுத்து அவனைத் தூங்க வச்சுட்டுக் கீழே வர வேண்டியதுதானே! கல்யாணப் பொண்ணும் பிள்ளையும் மணையிலே ஒக்காந்தப்பறம் விருந்துச் சாப்பாட்டை மேலே எடுத்துக்கிட்டுப் போய்ப் புருசனை எழுப்பி அவனுக்கு ஊட்டிவிட்டுக் கொஞ்சட்டுமே! அப்படிச் செய்யாம இதென்ன..! இந்த ஆகாத்தியத்தைப் பொறுத்துக்க முடியாது!

வீடு நிறைய ஜனங்க. அவங்களுக்கு முன்னாலே நீ கோவிச்சுக் கிட்டு ஆம்படையானோடே ஒன் ரூமிலே போய் உக்காந்துக்கிட்டு, ‘அவரும் சாப்பிட மாட்டார், நானும் சாப்பிட மாட்டேன்’னு சொல்லிக்கிட்டிருக்கியே! சீ... சீ..! இவ்வளவு லட்சணமா மாப்பிள்ளை வந்திருக்கான், அண்ணாவோட பலநாள் ஆசை நிறைவேறியிருக்கு, கல்யாணச் சடங்கு ஒண்ணையும் வந்து பார்க்கலியே நீ! சாப்பிடறதிலே கூடப் பிடிவாதம் பிடிக்கிறியே! இந்த கல்யாணக் கொண்டாட்டம், பிரமாதமான சமையல், பலவகைக் கறி, இனிப்பு இது ஒண்ணையும் நீங்க ரெண்டுபேரும் தொடக்கூட மாட்டீங்களா? பட்டினி கிடப்பீங்களா? இதனாலே உன் மருமகளுக்குக் கெடுதல்ங்கறதைப் பார்க்க மாட்டியா? அண்ணா—அண்ணியைத் தலைகுனிய வப்பியா? நீசத்தனத்துக்கு ஒரு எல்லையில்லையா? அண்ணா, ஒன் அண்ணா, ஒன்னைவிட இருவது வயது பெரியவன். ஒனக்கு அப்பா மாதிரின்னுதான் சொல்லணும். அப்பா மாதிரிதான் ஒன்னை வளர்த்தான், கல்யாணம் பண்ணிக் கொடுத்தான். அதுக்கப்பறம் மாசம் முப்பது நாளும் வருசத்திலே பன்னெண்டு மாசமும் ஒன்னையும் ஒன் பைத்தியக்காரப் புருசனையும் வச்சுக் காப்பாத்தறான், ஒங்களுக்காகத் தனி அறை கட்டிக் கொடுத்திருக்கான்.. அந்த அண்ணா ஒம் புருசனை ஒரு அதட்டு அதட்டிட்டா, ஒரு தள்ளு தள்ளிட்டா அதுக்காக இப்படியா பண்ணுவே நீ? நன்றியே இல்லையா ஒன் ஒடம்புலே?

இவ்வளவு பெரிய நன்றிகெட்ட செய்கையைச் செய்துவிட்ட

சவியைப் பார்க்க அவளுடைய அறைக்கு முன்னால் கூட்டம் கூடிவிட்டது. தேர்த் திருவிழாக் கூட்டம்.

சிலர் சவியிடம் அனுதாபம் காட்டுகிறார்கள்—ஒளிவு மறைவாகத்தான்!

காரணம், விருந்தாளியாக வந்துவிட்டு விருந்துக்கு அழைத்தவருக்கு எதிராப் பேசுவதென்றால் ஒளிவு மறைவாகத்தானே முடியும். "பாவம், சவி!" என்று குசுகுசுக்க முடியும்.. "தங்கை புருசன் பைத்தியம், பாவம், அதனால்தான் அவன் அந்த மாதிரி நடந்துகிட்டான். நீ கெட்டிக்காரன், விஷயம் தெரிஞ்சவன், ஒன் பொண்ணுக்குக் கலியாணம் நடந்துக்கிட்டிருக்கு, இந்த நல்ல நேரத்திலே ஒன் தங்கை புருசனை இப்படித் தள்ளிவிட்டியே! ஒன் தங்கை வேற வழியில்லாம ஒன்னை அண்டியிருக்காங்கறதினாலேதானே நீ இப்படி செஞ்சுட்டே! தங்கை பணக்காரியாயிருந்தா இந்த மாதிரி நடந்துக்கிட்டிருப்பியா?"

வேடிக்கை என்னவென்றால், மேலே நின்றுகொண்டு சவிக்கு ஆதரவாகக் குசுகுசுத்தவர்கள் கீழே இறங்கி வந்ததும் சவியைக் கண்டித்துப் பேசினார்கள்.

ஏன் பேச மாட்டார்கள்?

அவர்கள் என்ன கிறிஸ்துவா, சைதன்யரா? அவர்களுக்கு கோபம் வராதா? அவர்களுடைய சவி அனுதாபத்தை நன்றியோடு ஏற்றுக்கொண்டு கண்ணீர் விடவில்லையென்றால், "நீங்க ஒண்ணும் பேசாதீங்க, எனக்கு ஒண்ணும் பிடிக்கலை, நீங்க கீழே போயிடுங்க!" என்று முகத்திலறைந்தாற்போல பேசிவிட்டால் அவர்களுக்கு அவள் மேல் எரிச்சல் வராதா?

சைதன்யருக்கும் கிறிஸ்துவுக்கும் கூட எரிச்சலேற்பட்டுவிடும்!

இதெல்லாம் மாலையில் நடந்த நிகழ்ச்சி. இரவு வெகு நேரமாகிவிட்டது. விருந்தாளிகள் சாப்பிட்டுவிட்டுப் போய் விட்டார்கள். வீட்டிலுள்ளவர்கள் மட்டுந்தான் சாப்பிட வேண்டும்.. சதிநாத் தம் மாப்பிள்ளையின் அழகிலும் குணத்திலும் மயங்கிப் போய்விட்டார். தம் சாமர்த்தியதைப் பற்றி அபார பெருமை அவருக்கு. சட்டென்று ஏதோ நினைவு வந்தது அவருக்கு. "சதீஷ் சாப்பிட்டானா?" என்று கேட்டார்.

அன்று மாலையில் கல்யாணக் கூட்டத்துக்கு நடுவில் சதீஷ் ஒரு அழுக்குத் துணியில் லுச்சியையும், இனிப்புகளையும் குவித்து வைத்துக் கொண்டு சாப்பிட உட்கார்ந்ததைப் பார்த்து எரிச்சலடைந்து அவர் சதீஷைக் கழுத்தைப் பிடித்து சபையிலிருந்து வெளியேற்றியது இப்போது நினைவு வந்தது.

தாம் செய்தது சரியில்லைதான் என்பதை உள்ளூர உணர்ந்தார் அவர். இருந்தாலும் அவரும் ஒரு மனிதர்தனே!

அப்போதுதான் மாப்பிள்ளை வீட்டார் வந்து சபையில் அமர்ந்திருந்தார்கள். கன்யாதானம் செய்ய வேண்டியிருந்ததால் அவர் உபவாசமிருந்தார்; அலுப்பும் கவலையும் அவரை சஞ்சலப் படுத்திக் கொண்டிருந்தன; இந்தச் சமயத்தில் சதீஷின் இந்த அசிங்கமான நடத்தையைப் பொறுத்துக் கொள்வது எளிதா?

அவரால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை.

ஆனால் அவரால் விரட்டிவிடப்பட்டதை இவ்வளவு பெரிய அவமானமாக அந்தப் பைத்தியக்காரன் எடுத்துக் கொள்வான் என்றும் அவர் எதிர்பார்க்கவில்லை. அவன் மறுபடியும் சமையல் காரர்களிடம் போய் உட்கார்ந்து கொள்வான் என்றுதான் அவர் நினைத்திருந்தார். சவி அங்கே இல்லாததைக் கவனித்த பிறகுதான் அவருக்கு ஓரளவு விஷயம் புரிந்தது. சவி இல்லாததால் அசௌகரியப்பட்டது அவர் மட்டுமல்ல. அவள் இல்லாததால் கல்யாண நிகழ்ச்சியில் ஏகப்பட்ட குழப்பம். எங்கே பார்த்தாலும் "சவி! சவி எங்கே?" என்று கூப்பாடு.

அப்புறம் அவருடைய பெரிய மைத்துனிதான் அவரிடம் விஷயத்தைச் சொன்னாள், "எனக்கொண்ணும் தெரியாதுப்பா! நீ ஒன் தங்க புருசனை ஏதோ சொல்லிட்டியாம், கழுத்தைப் பிடிச்சு வெளிய தள்ளினியாம். அதனாலே ஒன் தங்கை கோவிச் சுக்கிட்டுப் புருசனோடே தன் ரூமிலேபோய் ஒக்காந்துக் கிட்டிருக்கா. அப்பறம் கீழே எறங்கி வரவேயில்ல. ஒன் தங்கை புருசன் பட்சணம் பண்றவங்ககிட்டேயிருந்து ஒரு பொட்டலம் பட்சணம் வாங்கிட்டு வந்திருந்தாராம். அதெல்லாம் முத்தத்தில படியிலே இறைஞ்சு கிடக்கு. கோவத்திலே தூக்கியெறிஞ்சிட்டார் போலிருக்கு! அவர்தான் பைத்தியம், ஒன் தங்கச்சி பைத்தியம் இல்லியே?"

இதைக் கேட்டபோது சதிநாத் அடைந்த கோபத்துக்கு அளவில்லை. ஆனால் அப்போது அவர் கன்யாதானம் செய்ய மணையில் உட்கார வேண்டியிருந்ததால் ஒன்றும் செய்ய முடிய வில்லை.

இப்போது அவர் சந்தோஷமாயிருந்தார். ஆகையால் "சதீஷ் சாப்பிட்டானா?" என்று கேட்கும் மனநிலை பிறந்திருந்தது.

மாலையிலிருந்து இதுவரை குறைந்தது ஐம்பதுபேர் சவியிடம் போய் அவளைக் கீழே இறங்கி வந்து மற்றவர்களுடன் உட்காரும் படி, கல்யாணத்தைப் பார்க்கும்படி, பந்தியில் உட்கார்ந்து சாப்பிடும்படி கேட்டுக்கொண்டுவிட்டார்கள். அவர்களுடைய கெஞ்சலுக்கு அவள் அசைந்து கொடுக்கவில்லை. கீழேயே இறங்கி வரவில்லை.

இந்தச் செய்தியைத் தம் மனைவி சொல்லக் கேட்டபிறகும் அவர் சுமுகமாக இருப்பார் என்று எதிர்பார்க்கலாமா?

அவர் வேகமாக எழுந்து சவியின் அறைக்குப் போனார். "நான் கைகூப்பிக் கேட்டுக்கறேன், எங்களோட சாப்பிட வா!" என்று அவளிடம் சொன்னார்.

சவியின் குரலில் சிறிது நடுக்கமா?

அல்லது அது சதிநாத்தின் பிரமைதானா?

பிரமையாகத்தானிருக்கும். ஏனென்றால் சவியின் குரல் தெளிவாகத்தானிருந்தது "இப்படியெல்லாம் ஏன் சொல்றே அண்ணா? என்னாலே சாப்பிட முடியாது. ஒரே தலைவலி எனக்கு."

சதீஷ் பட்சணம் சாப்பிட உட்கார்ந்த காட்சி இப்போது சதிநாத்துக்கு நினைவு வந்தது. தாம் சதீஷைத் திட்டியதும் ஞாபகம் வந்தது.

பைத்தியமாயிருந்தாலும் அவன் சவியின் கணவனல்லவா!

அவர் இதமான குரலில், "ஒன்னாலே சாப்பிட முடியாட்டியும் ஒரு தடவை வந்து ஒக்காரேன்...! நான் சதீஷோட சாப்பாட்டை மேலே அனுப்பச் சொல்றேன். அவனுக்குச் சாப்பாடு போட்டுட்டுக் கீழே வா!" என்று சொன்னார்.

சவி அதே வறண்ட குரலில், "அவர் சாப்பிடமாட்டார், அண்ணா!" என்றாள்.

மறுபடி பொறுமையிழந்தார் சதிநாத். இதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை.

"நன்றி கெட்டவங்க இப்படித்தான் இருப்பாங்க...!" என்று திட்டிக்கொண்டே அவர் கீழே இறங்கி வந்தார்.

அதே சமயத்தில் மேலே ஏறி வந்தான் அமல். அவன் தான் சாப்பாடு பரிமாறும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்தான். ஒரு பெண்ணின் அசட்டுப் பிடிவாதத்தால், கடைசிப் பந்தி தாமதப் படுகிறது. மணி பன்னிரண்டுக்கு மேலாகிவிட்டது.

அமல் இவர்களுடைய உறவினன் அல்ல. அந்த தெருவாசி, அவ்வளவுதான். அவன் இவ்வளவு பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை, அப்படியும் ஏற்றுக் கொண்டிருந்தான். அது அவன் சுபாவம். ஆனால் ராத்திரி இன்னும் நேரமானால் அவன் வீட்டில் திட்டமாட்டார்களா? அவன் மாடிப்படியில் சதிநாத்தோடு மோதிக்கொள்ள இருந்தான்.

சதிநாத் அவனைப் பார்த்துக் கேலியாகக் கேட்டார், "நீ ஒருத்தன் பாக்கி இருந்தியாக்கும்!" பிறகு கீழே இறங்கிப் போய் விட்டார்.

அமல் அதே தெருவில் வசிப்பவன். அவர்களோடு வெகு காலமாகப் பழகுபவன். ஆகையால் அவன் சவியைச் சமாதானம் செய்யப் போவதில் அவருக்கு வியப்பு ஏற்படவில்லை. ஆனால் அதனால் பலனேற்படுமென்றும் அவர் நம்பவில்லை.

அமலுக்கும் நம்பிக்கையில்லைதான். நடந்த நிகழ்ச்சி, பேசப் பட்ட பேச்சுக்கள் எல்லாமே அவனுக்குத் தெரியும்.

இருந்தாலும் அவனுக்குத் தன்னம்பிக்கை இருந்தது. மேலும் சவியை ஒருமுறை பார்க்க வேண்டுமென்ற ஆவல்—இவ்வளவு பிடிவாதம் செய்யும்போது சவி எப்படித் தோற்றமளிக்கிறாள் என்று பார்க்க விரும்பினான் அவன். சவி அப்போதுதான் அறைக்கதவை மூடிக் கொண்டிருந்தாள். இப்போதாவது கொஞ்சம் படுத்துக் கொள்ளலாம் என்று அவள் நினைத் திருக்கலாம்.

அமலைக் கண்டதும் அப்படியே நின்றாள். கதவு பாதி மூடியபடியே இருந்தது.

சட்டென்று ஒரு நெருப்புக் குச்சி கிழித்து அவளுடைய முகத்தைப் பார்க்கலாமா என்று தோன்றியது அமலுக்கு. ஆனால் அவன் நெருப்புக் குச்சி கிழிக்கவில்லை. "வெளக்கை ஏத்தேன்!" என்று சொன்னான்.

"என்னத்துக்கு?"

"அவசியமில்லேதான்... இருந்தாலும் இருட்டிலே ஒன்னைப் பார்த்தா பூதம் மாதிரி, ஆவி மாதிரி இருக்கு அதனாலேதான்..."

சவி அவனை எதிர்த்துப் பேசவில்லை, சற்றும் சஞ்சலப் படவில்லை. சிறு வயது நினைவுகளுக்கு மதிப்பளித்து அவனுடைய வேடிக்கைப் பேச்சுக்குச் சிரிக்கவுமில்லை. அவள் அந்த நிழலிருட்டில் சித்திரம்போல் அசையாமல் நின்றாள்.

சவி பாதி மூடியிருந்த கதவின்மேல் சாய்ந்து கொண்டிருந்த தால் அமலால் அறைக்குள்ளே பார்க்க முடியவில்லை. "சதீஷ் பாபு தூங்கறாரா?" என்று கேட்டான். சவி காரணமின்றி மெல்லச் சிரிப்பதாக அவனுக்குத் தோன்றியது. "ஆமா" என்று அவள் சொன்னாள்.

"சதிநாத் அண்ணா அவரை 'ஏதோ' செஞ்சுட்டார்னு கேள்விப்பட்டேன்... என்ன இருந்தாலும் நீ அதுக்காக இவ்வளவு ஆர்ப்பாட்டம் பண்ணவேண்டாம்! ஒன் பிடிவாதத்தைப் பார்த்து எனக்கு வெக்கமாயிருக்கு..."

சவி சிரித்தே விட்டாள் இப்போது.

உண்மையிலேயே சவியைப் பார்த்தால் ஒரு பூதம் மாதிரி, ஒரு ஆவி மாதிரித் தானிருக்கிறது. அவளுடைய சிரிப்பு இயற்கையான மனிதச் சிரிப்பு அல்ல, ஆவியின் சிரிப்பு. "நான் வெக்கங்கெட்டுப் போனதுக்கு நீ ஏன் வெக்கப்படறே?"

இப்போது நெருப்புக் குச்சி கிழித்துச் சவியின் முகத்தைப் பார்க்கத்தான் வேண்டுமென்று தோன்றியது அமலுக்கு. வெட்கத்தைத் துறந்ததோடு கொடூரமான சவியின் முகம் எப்படியிருக்கும் என்று பார்க்க வேண்டும்!

ஆனால் இருட்டில் அவளது முகத்தைப் பார்க்க முடிய வில்லை. சவியின் அண்ணன் ஏமாந்துபோய் அவளை ஒரு பைத்தியக்காரனுக்குக் கலியாணம் செய்து வைத்து விட்டார். இருந்தாலும் சவி ஒருநாளும் தன் அண்ணனைக் குறை கூறிய தில்லை. சவியின் மைத்துனர் அவளையும் அவள் கணவனையும் அவளுடைய அண்ணனிடம் விரட்டியனுப்பியதற்காக மைத்துன ரையும் திட்டியதில்லை அவள்.

சவி சதீஷின் பயங்கொள்ளித்தனத்துக்காக அவனை ஏச வில்லை. அவள் இதுகாறும் இயல்பாகவே தன் காரியங்களைச் செய்து வந்தாள். குமரிப் பெண்ணாயிருந்தபோது இந்தக் குடும்பத்தின் பொறுப்பை ஏற்று உழைத்தாற்போல் இப்போதும் உழைத்து வருகிறாள். இப்போது அவளுக்கு ஒரு அதிகப்படியான பொறுப்பு—தன் பைத்தியக்காரக் கணவனைக் கவனித்துக் கொள்வது.

இவ்வளவு பொறுப்பையும் ஒரு விளையாட்டுப்போல் அனாயசமாகச் சுமந்து வந்திருக்கிறாள் சவி. அமலுக்குத் தெரியாதா? அவன்தான் இங்கு அடிக்கடி வருபவனாயிற்றே!

சதீஷை வெகுநேரம் காணாவிட்டால் சவி கவலைப் படுவாள்! அதுகூட வேடிக்கையாகத்தான். யாருடனாவது பேசிக் கொண்டிருக்கும்போது திடீரென்று எழுந்து, "ரொம்ப நேரமா என் பொக்கிஷத்தைப் பார்க்கவேயில்லையே! திடீர்னு சன்னியாசம் வாங்கிக்கிட்டுப் போயிட்டாரான்னு பார்க்கறேன்" என்று சொல்லிவிட்டுப் போவாள்... "மணி என்ன ஆச்சு? அடே, இவ்வளவு நேரமாச்சா? என் நாதர் தானே சமையலறைக்குப் போய்ப் பாத்திரத்தை உருட்டறாரான்னு போய்ப் பார்க்கறேன்" என்பாள்... திடீர்னு மூஞ்சியை 'உர்'ருனு வச்சுக்கிட்டுப் போயிட்டார் என் பிராணநாதர்! நாம சந்தோஷமாப் பேசிக்கிட்டு இருக்கறது அவருக்குப் பிடிக்கலே... நான் போய் அவரை சமாதானப்படுத்தறேன். இல்லாட்டி. மகாகோபம் வந்துடும் அவருக்கு" என்று சொல்வாள்.

பைத்தியக்காரக் கணவனின் நடத்தையை யாராவது கேலி செய்தாலோ அல்லது குறை கூறினாலோ சவி கோபித்துக் கொண்டதில்லை. அவளும் அவர்களோடு சேர்ந்து கொண்டு, "சொல்லுங்க! நீங்களும் சொல்லுங்க! என் வேலை கொஞ்சம் குறையட்டும். மாப்பிள்ளையாச்சேன்னு மரியாதை கொடுக்காம ரெண்டு அடி கொடுத்தால் பிரயோசனமாயிருக்கும்" என்று சிரித்தவாறு சொன்னாள்.

ஆனால். இன்று அவர் உண்மையிலேயே அவமானப் படுத்தப்பட்டபோது அவள் முற்றிலும் மாறிப்போய் இவ்வளவு

கோபித்துக் கொள்கிறாளே!

அப்படியானால் சதிநாத்தின் மனைவி சொல்வதுதான் உண்மையாயிருக்குமோ...! பொறாமையாத்தான் சவி ஒரு அற்ப விஷயத்தைப் பெரிதுபடுத்தி ஆர்ப்பாட்டம் செய்கிறாளோ? அண்ணா பெண்ணுக்கு நல்ல இடத்தில் கல்யாணமாகிவிட்டது, அழகான மாப்பிள்ளை கிடைத்துவிட்டான் என்று சவிக்கு வயிறு எரிகிறதோ?

சவியைப்பற்றி இப்படி நினைக்கக் கூடாதுதான். ஆனால் அவள் தானே தன் நடத்தையால் இப்படி மற்றவர்களை நினைக்கச் செய்கிறாள்! அவளது அசட்டுத்தனமான நடத்தை அப்படித்தானே நினைக்கச் செய்கிறது!

பொறாமைதான்..! இல்லாவிட்டால் என்றுதான் அவள் தன் கணவனிடம் இவ்வளவு பக்தியைக் காட்டியிருக்கிறாள்? அவளுடைய அண்ணியே எவ்வளவு தடவை, "புருஷன் பைத்தியமாயிருக்கிறானேன்னு கொஞ்சங்கூடக் கவலையில்லே சவிக்கு! கல் நெஞ்சக்காரி!" என்று சொல்லி வியந்திருக்கிறாள்.

ஆகையால் சவியின் கல்நெஞ்சும் பொறாமையால்தான் பாளம் பாளமாக உடைந்து போயிருக்க வேண்டும்!

அமல் தன் உணர்ச்சிகளை வெளிப்படுத்தவில்லை. "சவி என்ன இருந்தாலும் நீ ரொம்பக் கல் நெஞ்சுக்காரி!" என்று மட்டும் சொன்னான்.

"இன்னிக்குத்தான் தெரிஞ்சுதா?" சவி கேட்டாள், "ஏன் நீயும் வந்துட்டே? சாப்பிடக் கூப்பிடவா?"

அமல் வருத்தத்துடன் சவியை நன்றாகப் பார்க்க முயற் சித்தான். பிறகு சொன்னான், "இல்லே, ஒன்னைக் கூப்பிடற துணிச்சல் எனக்கு இல்லே. அண்ணாவைத் தண்டிக்கறதுக்காக சதீஷ் பாபுவைச் சாப்பிடவிடாமே நிறுத்தி வச்சிருக்கியேன்னு நினைச்சேன். சதீஷ் பாபு பாவம், அவரைப்போய் அடக்கி வைக்கிறே.. 'அமல் நீ எனக்குச் சாப்பாடு பரிமாறணும். இவங்க என்னை நல்லாக் கவனிச்சுக்க மாட்டாங்க!'ன்னு என்கிட்டே ரொம்ப ஆசையாச் சொல்லியிருந்தார்..."

சொல்லிவிட்டுச் சற்றுச் சிரித்துக்கொண்டான் அமல், காரணம், சதீஷ்பாபு அவனுடன் பேசும்போது 'இவங்க' என்று சொல்லவில்லை, 'இந்த ராஸ்கல்கள்' என்று குறிப்பிட்டான்.

இவ்வளவு நேரம் பட்டினி கிடந்ததால் சவியின் தொண்டை உலர்ந்துபோய் விட்டதா? அல்லது அவள் தன் அசட்டுத்தனத் துக்காக வருத்தப்படுகிறாளா...? அவளுடைய குரல் இனிமையா யிருக்குமே, ஏன் இப்படி ஆகிவிட்டது!

அந்த வறண்ட குரலிலேயே சொன்னாள் சவி, "அவர்தான்

நீ பரிமார்ற வரைக்கும் பொறுக்கலியே, தானே கொண்டுவந்து வச்சிக்கிட்டு..."

"அந்தப் பேச்செல்லாம் வேண்டாம். சவி- நீ சாப்பிட்டாலும் சரி, சாப்பிடாட்டாலும் சரி. ஆனா அவரை மட்டும் எழுப்பிவிடு. நான் அவருக்கு சாப்பாடுபோட்டு என் வார்த்தையைக் காப்பாத் திக்கறேன்."

சவி அமலுடன் தான் கழித்த சிறு பிராயத்தின் நினைவு களுக்கும் மரியாதை கொடுக்கவில்லை. "அவர் சாப்பிட மாட்டார்!" என்று உறுதியான குரலில் சொன்னாள்.

"சவி, நீ அளவுக்கு மிஞ்சி அநாகரீகமா நடந்துக்கறே... எல்லாத்துக்கும் ஒரு எல்லை இருக்கணும்...! இன்னிக்குக் கோவிச்சுக்கிட்டு அவரைப் பட்டினி போடறே, நாளைக்குச் சாப்பாடு போடத்தானே வேணும்? அப்போ...?"

இந்த தடவை உரக்கவே சிரித்து விட்டாள் சவி. "அமல், அவர் நாளைக்கும் சாப்பிட மாட்டார், நாளன்னிக்கும் சாப்பிட மாட்டார். ஒருநாளும் சாப்பிட மாட்டார்!" என்றாள்.

சவி சாதாரணக் கோபத்தில் பேசிய இந்தப் பேச்சில் அமலுக்கு ஏனிந்த பயம்? சவியின் சிரிப்பைக் கேட்டு அவள் ஒரு பூதந்தான் என்று நினைத்து விட்டானோ?

அவன் "சவி" என்று வேதனையோடு கத்தினான். சவி பதில் சொல்லவில்லை, அசையவும் இல்லை.

சவியின் இந்த நிலையைக் கண்டு அவன் தான் வெகு காலமாக மறந்துவிட்டிருந்த ஒரு பழைய அசட்டுத் தனத்தைச் செய்து விட்டான். அவன் அவளை நெருங்கி அவளுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு "சவி, விளக்கு ஏத்து!" என்று சொன்னான்.

சவி மெதுவாகத் தன்னை விடுவித்துக் கொண்டு "என்ன பணணப் போறே?" என்று கேட்டாள்.

"நான் அவரைப் பார்க்கணும்!"

"பார்க்கறதுக்கு ஒண்ணுமில்லே."

"நீதான் எப்போதும் சரின்னு நினைச்சுக்காதே சவி! கதவை விட்டு நகர்ந்துக்க! நான் பார்க்கறேன்."

ஆனால் சவி நகரவில்லை. "நெசமாவே பார்க்கறதுக்கு ஒண்ணுமில்லே" என்று சொல்லிவிட்டாள்.

அமலும் ஓர் ஆவியாகிவிட்டனா? அவனைப் பார்த்தால் பூதம் மாதிரி இருக்கிறதே!

அவன் இவ்வளவு நேரமாகக் கீழே திரும்பி வராதது கண்டு மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் என்று யோசிக்கவில்லையே அவன்! அவர்களிருவருடைய பழைய வரலாற்றை மற்றவர்கள்

மறந்திருப்பார்களா?

கீழேயும் ஓர் உலகம் இருக்கிறது என்ற விஷயம் வெகு நேரங்கழித்துத்தான் நினைவு வந்தது அமலுக்கு. அவன் திரும்ப வேண்டும்.

"சவி, நீ என்ன கல்லா?"

"இருக்கலாம்"

"சவி, நான் கீழேபோய் அவங்ககிட்ட என்ன சொல்லுவேன்?"

"ஒண்ணும் சொல்ல வேண்டாம், அமல்! ஒன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன்! கல்யாணப் பொண்ணும் பிள்ளையும் மண வறைக்குப் போயிருக்காங்க. அவங்களோட இந்த இரவை நாசமாக்கிடாதே!"

"சவி, ஒன்னாலே எப்படி இவ்வளவு கொடூரமா இருக்க முடியுது?"

முடியத்தான் வேணும், அமல்! எல்லைக்கோட்டை நான் மறக்க முடியுமா? அவங்களோட இந்த மகிழ்ச்சிகரமான நேரத்தில நான் என்னோட..."

"ராத்திரி பூரா இப்படியே இருக்கப் போறியா?"

"இல்லே, படுத்துக்கப் போறேன். ரொம்பத் தூக்கம் வருது... கீழே விழுந்துடுவேன் போலேயிருக்கு..."

சவி சற்றும் நாகரீகமின்றி அமலுக்கு முன்னாலேயே கதவைச் சாத்தி உட்புறம் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டாள்.

ஆம், கதவை மூடிகொள்ளாமல் இருக்க முடியவில்லை சவியால். சதிநாத் கூறியது அவளுக்கு ஞாபகம் வந்தது. "எல்லாத் துக்கும் ஓர் அளவு உண்டு, இருக்கணும்!"

இன்னும் சில மணி நேரம் இந்தக் குளிர்ச்சியான இருட்டில் அமிழ்ந்திருக்க முடிந்தால் அவள் தான் இழந்து போன பலத்தை மீண்டும் பெற முடியும். மறுநாள் காலையில் எழுந்திருந்து கீழே போய் இயற்கையான குரலில் சொல்ல முடியும்— "நேத்திக்குக் கல்யாண அமர்க்களத்திலே ஒங்களைத் தொந்தரவு பண்ணலே, ஆனா இனியும் சொல்லாமே இருக்க முடியாது...! மேலே வந்து பாருங்க...! இனிமே என்னென்ன சடங்குகள் செய்யணுமோ அவையெல்லாம் நீங்கதானே செய்யணும்...!"

(காஞ்ச் பூத்தி ஹீரே, 1967)

# மோசக்காரி

## சுபோத் கோஷ்

சநாதன், அவனுடைய பெண் சுதா. அப்பனுக்கு ஏற்ற பெண், பெண்ணுக்குத் தகுந்த அப்பன்!

அவர்களுடைய குடும்பத்தில் துக்க நிகழ்ச்சிகள் நேரும். அப்போதெல்லாம் சநாதன் இடிந்துபோய் விம்மி விம்மி அழுவான். துன்பச் சுமையால் தலை நிமிர முடியாது பெண்ணுக்கு. அவள் முந்தானையால் கண்களை மூடிக்கொண்டு பொருமிப் பொருமி அழுவாள். அருகிலிருந்து பார்ப்பவர்கள் உணர்ச்சிவசப் படுவார்கள், கண்ணீர் விடுவார்கள், பெருமூச்சு விடுவார்கள்.

சநாதனுக்கு உலகத்தில் சுதாவைத்தவிர வேறு நாதியில்லை. அவளுக்குக் கல்யாணமானதும் அவளைப் புக்ககத்துக்கு அனுப்பும்போது சநாதனின் மனம் என்ன பாடுபடும்!

கல்யாணத்துக்கு மறுநாள் பிள்ளை வீட்டுக்காரர்களும் வேறு சிலரும் சுதாவைப் புக்ககத்துக்கு அழைத்துச் செல்லத் தயாராகிய போது சநாதன் விம்மி விம்மி அழுதான், சுதா பொருமிப் பொருமி அழுது தீர்த்தாள்.

ஆனால் ஒரு மாதம் கழிவதற்குள்ளேயே சுதாவின் கணவனுக்கும் மற்ற புக்ககத்தாருக்கும் நன்றாகத் தெரிந்துவிட்டது. அப்பாவுக்கேற்ற பெண்தான் சுதா என்று. சநாதன் சரியான மோசக்காரன், சுதா பலே மோசக்காரி. மனிதர்களை ஏமாற்றும் தந்திரத்தில் இருவருமே கை தேர்ந்தவர்கள். ஒருவருக்கொருவர் இளைத்தவர் அல்ல. அப்பனுக்கேற்ற பெண்!

“பெண்ணுக்கேற்ற அப்பன்!” என்றது போலீஸ். இந்த மாதிரி மூன்று தடவை நடந்து விட்டது. இது மூன்றாவது நிகழ்ச்சி. முதல் தடவை தாரகேஸ்வரிலும், இரண்டாவது தடவை பசீர்ஹாட்டிலும் இதே மாதிரி மோசடி நிகழ்ந்திருக்கிறது. இரண்டுமாத இடைவெளிக்குள் இரண்டு மோசடிகள். இது மூன்றாவது. மூன்றிலும் ஒரே அப்பனும் ஒரே பெண்ணும் சம்பந்தப்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. இதுதான் அவர்

களுடைய தொழில்.

பாட்பாராவின் கடைத்தெருவுக்கருகில் ஒரு சந்தில் பூட்டப் பட்டிருந்த ஒரு சிறு அறையின் பூட்டை உடைத்துச் சோதனை செய்தது போலீஸ். ஆனால் அந்த அறைக்குள் ஒரு துரும்புகூட இல்லை. சநாதனும் சுதாவும் ஏதோ ஒரு மந்திரம் போட்டுக் காற்றோடு காற்றாக மறைந்துபோய்விட்டார்கள். அவர்கள் எப்போது ஓடிப்போனார்கள், எங்கு போனார்கள் என்று யாருக்கும் தெரியவில்லை. ஒரு மாதத்துக்கு முன்னால் அப்பனும் பெண்ணும் விம்மி விம்மியழுவதைப் பார்த்து உணர்ச்சி வசப் பட்டுத் தாங்களும் அழுதுவிட்ட அக்கம் பக்கத்தாருக்கு அதைப் பற்றி நினைத்தாலே வெட்கமாயிருந்தது. 'இந்த உலகம் ஒரு அதிசயமான மிருகக் காட்சிசாலைதான், இதிலே என்னென்ன ஆச்சரியங்கள் நடக்குது!' என்று வியந்தார்கள் அவர்கள்.

"மிருகக்காட்சி சாலையிலே இந்த மாதிரி அசிங்கமெல்லாம் நடக்காது, மனுஷங்களோட சமூகத்திலேதான் இப்படியெல்லாம் நடக்கும்" என்று சிலர் சொன்னார்கள்.

ஒருவர் சொன்னார், "நம்ம தெருவிலே நம்ம கண்ணுக்கு முன்னாலே இந்த மாதிரி ஒரு மோசடி நடந்துடுச்சுங்கறது வெட்ககரமான விசயம். ஒரு ஆம்பளையும் ஒரு பொண்ணும் எங்கேயிருந்தோ வந்து ஒரு சில நாளுக்குள்ளேயே நம்ம எல்லாரையும முட்டாளாக்கிட்டு மாயமா மறைஞ்சு போயிட் டாங்களே! அவங்க மேலே யாருக்கும் சந்தேகம் வரலியே!"

ஆமாம், யாரும் அவர்கள் மீது சந்தேகப்படவில்லை. அப்பன், மகள் இருவருடைய இந்தப் பரிதாப அழுகைக்குப் பின்னால் ஒரு மோசடிச் சதி சிரித்துக் கொண்டிருக்கிறது என்பது அந்தத் தெருவாசிகளுக்கோ மாப்பிள்ளை வீட்டாருக்கோ தெரியவில்லை. எப்படித் தெரியும்? அந்த அழுகையை நினைத்தால் இப்போது கூட அது ஒரு பாசாங்கு என்று அவர்களால் எண்ணமுடிய வில்லை.

உண்மையில் அவர்கள் அப்பன்—மகள்தான் என்று போலீசுக்குத் தெரிய வந்தது. அவர்கள் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு புதிய பெயர் வைத்துக்கொண்டு சில நாட்கள் தங்குவார்கள். பிறகு பெண்ணுக்குக் கல்யாணமாகும். பெண் சில நாட்களுக்குப் பிறகு தகப்பனுடன் மாயமாய் மறைந்து விடுவாள்.

ஒரு மாதத்துக்குப்பின் ஓர் அந்தி வேளையில் மணமகனுக் குரிய குல்லாய் அணிந்துகொண்டு— ஓர் ஏழைத்தந்தையின் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு போனவர்— தம் மனைவியைத் தேடிக்கொண்டு மாமனார் வீட்டுக்கு வருவார். தெருவாசிகள் வெட்கிப்போய், குற்ற உணர்வுடன் அவரைப்

பார்த்துக்கொண்டு நிற்பார்கள். அந்தத் தெருவிலுள்ள சில இளைஞர்கள் முகத்தைத் திருப்பிக் கொண்டு சிரிப்பதுமுண்டு.

மனிதர் சற்று வயதானவர், நாற்பத்தைந்து வயதுக்குமேல் ஏறக்குறைய ஐம்பது வயது இருக்கும். நைஹாட்டியில் துணிக் கடை வைத்திருக்கிறார். மனைவியையிழந்தவர், குழந்தை குட்டி இல்லை. மறுமணம் செய்து கொள்ள விரும்பவில்லை அவர். ஆனால் சநாதனுடன் பழக்கமேற்பட்டு அவனுடைய வறுமை நிலையைப் பற்றிக் கேள்விப்பட்டபோது அவருக்கும் இந்த வயதில் குடும்ப வாழ்க்கையில் ஒரு துணைவியின் புன்சிரிப்பைப் பெறும் ஆவல் ஏற்பட்டு விட்டது. ஒருநாள்அவர் சநாதனின் அழைப்பையேற்று இந்த சந்தில் இந்த வீட்டுக்கு வந்து கொஞ்சம் பாயசமும் கொழுக்கட்டையும் சாப்பிட்டுவிட்டு ஒரு குமரிப் பெண்ணின் சுமையிலிருந்து சநாதனை விடுவிக்கத் தீர்மானித்து விட்டார். தன் சாதியைச் சேர்ந்த ஓர் அழகான, ஏழைப்பெண் இந்த மாதிரி, கல்யாணத்துக்கு வழியின்றி, இந்த இருட்டுச் சந்தில் முடங்கிக் கிடப்பதைப் பார்க்க அந்த மனிதருக்குப் பொறுக்க வில்லை. நைஹாட்டி கணேஷ் வஸ்திராலயாவின் முதலாளியான அவர் சநாதனுக்கு ரொக்கப் பணம் ஐநூறு ரூபாயும், கல்யாணத்தில் செய்யவேண்டிய தானப்பொருள்கள் வாங்கப் பணமும், பெண்ணுக்குப் பத்துப் பவுன் நகையும் கொடுத்து பெண்ணை கல்யாணம் செய்துகொடுக்க சநாதனைச் சம்மதிக்கச் செய்தார். கல்யாணத்துக்கு நாள் நிச்சயிக்கப்பட்டது. கல்யாணத் தன்று மணப்பெண்ணின் முக்காடு அணிந்த முகத்தைப் பார்த்துப் பூரித்துப் போனார் அவர். மறுநாள் காலையில் அவர் இதே வீட்டிலிருந்து விடைபெற்றுக்கொண்டு பெண்ணை அழைத்துப் போனார். பாவம், அவர்தான் போலீசுடன் வந்து அறைவாசலில் நிற்கிறார். கல்யாணத்துக்கு ஒரு வாரத்துக்குப்பின் சநாதன் பெண்ணைப் புக்ககத்திலிருந்து தன் வீட்டுக்கு அழைத்து வந்திருக் கிறான். அதற்குப் பிறகு அவர்கள் எவ்வளவு நாள் இருந்தார்கள் என்று ஒருவராலும் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை.

நைஹாட்டிக்காரர் சநாதனுக்குக் கடிதம் எழுதியும் பதில் வராமல் போகவே ஒருநாள் தாமே சநாதனின் வீட்டுக்கு வந்திருக்கிறார். வீடு பூட்டிக் கிடக்கிறது!

போலீசுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. இதற்குமுன் இது மாதிரி இரண்டு தடவை நடந்து விட்டது, இது மூன்றாவது தடவை என்கிறது போலீஸ். அப்பன் பெண்ணின் உண்மைப் பெயர் போலீசுக்கும் தெரியாது.

தாரகேஸ்வரில் அவர்களிருவரும் பிராமண இனத்தவராக நடித்தார்கள். பசீர்ஹாட்டில் காயஸ்தர்களாகவும், பாட்பாராவில்

வைத்திய சாதியினராகவும் நடித்திருக்கிறார்கள். தாரகேஸ்வரில் அவர்களுடைய பெயர்கள் பிரசன்ன சக்ரவர்த்தி, சுநயனா. பசீர்ஹாட்டில் அவர்கள் சதானந்த கோஷ், மாதவி. இங்கே, பாட்பாராவில் அவர்கள் சநாதன் சென், சுதா என்ற பெயர் களோடு சிறிது காலம் வாழ்ந்து, அப்பனும் பெண்ணுமாக ஓர் அதிசய நாடகமாடிவிட்டு மாயமாய் மறைந்து போய்விட்டார்கள். கள்ளங் கபடற்ற மூன்று பேர்களை இவ்வாறு ஏமாற்றிவிட்டு அந்த மோசக்கார ஜோடி இப்போது எங்கு மறைந்து கொண்டிருக் கிறதோ!

அப்பனுக்கேற்ற பெண், பெண்ணுக்குத் தகுந்த அப்பன்! இந்த மோசடியைப் பற்றி யோசித்துக்கொண்டே பாட்பாரா கிராமத்துச் சந்திலிருந்து திரும்பிப் போய்விட்டது போலீஸ். தெருவாசிகள் திகைத்துப்போய் நின்றார்கள். கணேஷ் வஸ்திராலயாவின் முதலாளி, சுதாவின் சாந்தமான, புன்சிரிப்பு தவழும் முகத்தை நினைத்துப் பார்த்து, "ஐயோ, இப்படியும் ஒரு மனுசன் இன்னொரு மனுசனை ஏமாத்துவானா!" என்று ஆச்சரியப்பட்டார்.

ஆனால் அதே சமயத்தில் பாட்பாராவாசிகளோ போலீசோ, கணேஷ் வஸ்திராலயா முதலாளியோ கற்பனையில்கூட நினைத்துப் பார்க்க முடியாத ஒரு நிகழ்ச்சி ராணா காட்டில் நிகழ்ந்து கொண்டிருந்தது. அங்கு ஒரு குடியிருப்புப் பகுதியில் ஒரு சிறிய வீட்டின் ஜன்னல் பக்கம் பார்த்துக் கொண்டிருந்த ஓர் இளைஞன் ஒரு மோசடி வலையில் விழத் தயாராகிக் கொண்டிருந்தான். அவன் பெயர் ரமேஷ். விஜய் பாபு என்பவரின் இளம் பெண் கரபியுடன் அவன் பேசிக் கொண்டிருந்தான்.

வீட்டுக்குள்ளிருக்கும் கரபி ஜன்னலருகில் நின்று கொண்டு மெல்லிய குரலில் வெளியே நிற்கும் ரமேஷைக் கேட்டாள், "நீங்க ஏன் இங்கே மறுபடி வரீங்க?"

உற்சாகம் பொங்கச் சிரித்தான் ரமேஷ். "ஒரு ஜோசியர் என் கையைப் பார்த்து என்ன சொல்லியிருக்கார் தெரியுமா...? எனக்கு வரப்போற மனைவியின் பெயர் 'க'விலே தொடங்குமாம்!"

கரபி சிரித்துவிட்டுச் சொன்னாள், "ஆனா நீங்க இப்படி தினம் ஜன்னல் பக்கம் வந்து நின்னா நாலு பேர் நாலு சொல்லு வாங்க. எனக்குக் கெட்டபேர் வரும். வேறே ஒண்ணும் லாபமில்லே!"

"என்னால வராமே இருக்க முடியலியே, கரபி! நீ என்னை முதமுதல்ல பார்த்த அன்னிக்கே எனக்குத் தெரிஞ்சு போச்சு, உன்கிட்டேதான் எனக்கு அமைதியும் சுகமும் கிடைக்கும்னு!"

"இதெல்லாம் உங்க மாதிரி பெரிய மனுசங்களோட

கிறுக்குத்தனம். இப்போ இங்கே வரப் பிடிக்குது உங்களுக்கு. இன்னும் கொஞ்சநாள் கழிச்சு இந்தப் பக்கத்து நினைவே வராது ஒங்களுக்கு. வரப்பிடிக்காது இங்கே. வரவும் மாட்டீங்க. பின்னே ஏன் அனாவசியமா...”

“நான் பெரிய மனுசனும் இல்லே, பெரிய மனுசங்களோட கிறுக்குத்தனமும் எனக்கில்லே. ஒன்னைப் பார்க்காம இருக்க முடியலேன்னுதான் ஓடியோடி வரேன் ஒன்கிட்டே.”

“நீக்க பெரிய மனுசர் இல்லியா?”

“இல்லவேயில்லே!”

“நீங்க என்ன வேலை செய்யறீங்க?”

“நான் ஆர்ட்டிஸ்ட்.”

“அப்படீன்னா?”

“நீ கல்கத்தாவுக்குப் போயிருக்கியா?”

“உம், அங்கே கொஞ்சநாள் இருந்திருக்கேன்.”

“சினிமா பார்த்திருக்கியா?”

“ஒண்ணு ரெண்டு பார்த்திருக்கேன்.”

“சினிமா தியேட்டர் சுவரிலே பெரிய பெரிய படம் போட்டிருக்குமே பார்த்திருக்கியா?”

“பார்த்திருக்கேன்.”

“அந்த மாதிரிப் படம் வரையறது என் தொழில்.”

“அதுக்கு காசு கொடுக்கறாங்களா?”

“ஆமா. அதுதான் என் வருமானம். கடவுள் கிருபையால் என் சம்பாத்தியம் அப்படியொண்ணும் கொறைச்சலில்லே.”

“மாசம் அம்பது ரூவா கிடைக்குமா?”

“கிடைக்கும்”

“சரியா எவ்வளவு கிடைக்கும்? சொல்லுங்க!”

“எவ்வளவு கிடைச்சா என்ன! ஒன்னை சந்தோஷமா வச்சுக்க முடியும் என்னாலே.”

கரபி முகத்தை ‘உம்’மென்று வைத்துக்கொண்டு சொன்னாள். “ஆமா, ஒரு பரம ஏழையோட பொண்ணை சந்தோசமா வச்சுக்க என்னவேணும்—வருசத்துக்கு ஒரு ஜோடி புடைவை, தினம் ஒருவேளைக்கு ரெண்டுபிடி சோறு. அவ்வளவுதானே!”

முகத்தைச் சுளித்தான் ரமேஷ் “ஏன் இப்படிச் சொல்றே? நான் வருசத்திலே ஒரு ஜோடி வேட்டிதான் வாங்கிக் கட்டிக்கறேனா? தினம் ஒரு வேளை ரெண்டு பிடி சோறுதான் சாப்பிடறேனா?”

“அப்படீன்னா ஒங்ககிட்டே பணமிருக்குன்னு சொல்லுங்க!” என்று சொல்லிச் சிரித்தாள் கரபி.

“ஒன்னை அலங்காரம் பண்ணி வச்சுக்கும்படி, ஒனக்கு

கஷ்டமில்லாமே ஒன்னை வச்சுக்கக்கூடிய அளவுக்கு என்கிட்டே காசு இருக்கு" என்று சொல்லிய ரமேஷ் பக்கத்திலிருந்த ஒரு பணக்கார மார்வாடியின் மாளிகையைச் சுற்றிக்காட்டி, "அந்த வீட்டுக்காரன் மாதிரி நான் பணக்காரனில்லே, நீயுமில்லே, அதனாலே..." என்றான்.

"கல்யாணச் செலவுக்குக் காசு எங்கேயிருந்து வரும்?"

ரமேஷ் சற்றுநேரம் பேசாமல் யோசித்துக் கொண்டிருந்தான். பிறகு "விஜய் பாபுகிட்டே கொஞ்சங்கூடப் பணம் இல்லையா?"

கரபியின் கண்களில் நீர் துளிர்த்தது. "இருந்தால் இப்படி..."

"எவ்வளவு பணம் தேவைப்படும்?"

"ஒரு கௌரவமான குடும்பத்துப் பெண்ணைக் கல்யாணம் செய்துவைக்கணும்னா ரொம்பக் குறைச்சலா செலவு செஞ்சாலும் ரெண்டாயிரம் ரூபாயாவது ஆகுமே!"

"ரெண்டாயிரமா?"

கரபியின் கண் மூலையில் சந்தேகமும் எரிச்சலும் தென்பட்டன, "என்ன யோசிக்கிறீங்க? இந்த ரெண்டாயிர ரூவா கூட ஒங்களாலே ஏற்பாடு செய்ய முடியாதா?"

"முடியும். ஆனா இவ்வளவு சீக்கிரமா ஏற்பாடு பண்ற துன்னா... நூறு, இருநூறுன்னு பல எடத்திலே கடன் வாங்கறதைத் தவிர வேறே வழியில்லே" என்று வருத்தத்துடன் சொன்னான் ரமேஷ்.

"அப்படீன்னா அதையே செய்யுங்க... கடன் வாங்கினாப் பின்னாலே திரும்பிக் கொடுத்துடலாம். நீங்க தாமதம் பண்ணினா...?" கரபியின் பேச்சு தடைபட்டது. அவளது கண்களில் நீர் பளபளத்தது.

"என்ன ஆச்சு?"

"நெசமாவே நீங்க என்னைக் காதலிக்கிறீங்களா?"

"ஆமா, கரபி"

"அப்போ சீக்கிரம் ஏற்பாடு பண்ணுங்க! இல்லேன்னா நான் தற்கொலை செஞ்சுக்க வேண்டியதுதான்!"

"ஏன் இப்படிச் சொல்றே?" ரமேஷ் திகைத்துப் போய்க் கேட்டான்.

"வைத்தியவாடியிலே ஒரு கிழவனுக்கு என்னை ரெண்டாந் தாரமாகக் கொடுக்க ஏற்பாடு செய்யறார் என் அப்பா. அந்தக் கிழவன் கல்யாணச் செலவுக்காக அப்பாவுக்கு மூவாயிர ரூவா தர்றதாச் சொல்லியிருக்கான்..."

ரமேஷ் தான் சாய்ந்திருந்த சைக்கிளின் கைப்பிடியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். அவனுடைய முகத்திலும் கண்களிலும் ஒரு உறுதி வெளிப்பட்டது. அவன் கரபியைப்

பார்த்துச் சொன்னான், "அந்தக் கல்யாணம் நடக்க விட மாட்டேன், கரபி! அந்தக் கிழவனோட பணத்தைத் தொட வேணாம்னு நீ ஒன் அப்பாகிட்டே சொல்லி வை!" சைக்கிளின் மிதியை அழுத்தியவாறு அவன் உரக்கச் சொன்னான், "கரபி, எல்லாக் கல்யாணச் செலவும் என்னுது! நான் இன்னும் பத்து நாளிலே வந்து உன்னைக் கல்யாணம் பண்ணிக் கூட்டிக்கிட்டுப் போயிடறேன்!"

ராணாகாட் வீட்டில் கலியாணச் சடங்கு அடக்கமான முறையில் நடந்தேறியது. அந்தத் தெருவுக்கு வந்து வசித்த நாட்களிலேயே ஏழைத் தந்தையும் பெண்ணும் தங்கள் நடத்தையால் தெருவாசிகளின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டனர். விஜய் பாபு அவர்களுக்கு எளியமுறையில் ஒரு விருந்து வைக்க விரும்பினார். ஆனால் அந்த அனாவசியச் செலவு வேண்டாமென்று தெருவாசிகளே தடுத்து விட்டார்கள். "உங்கள் நிலையில் உள்ளவர்கள் இந்தச் செலவெல்லாம் செய்யக்கூடாது!" என்று சொல்லிவிட்டார்கள் அவர்கள்.

விஜய்பாபு ஆயிரத்தைநூறு ரூபாய் செலவில் பெண்ணுக்கு நகைககள் செய்து போட்டார். மிகவும் எளிய முறையில் கல்யாணத்தை நடத்தினார். அவர் தன் வாழ்நாள் சேமிப்பு முழுவதையும் இந்தக் கலியாணத்துக்காகச் செலவு செய்து விட்டதாகத் தெருக்காரர்கள் நம்பினார்கள். அவர் இவ்வளவு நகைகள் போட்டிருக்க வேண்டாம், காரணம் பிள்ளைவீட்டிலிருந்து எந்தவிதக் கோரிக்கையுமில்லை. இருந்தாலும் கரபி அவருடைய ஒரே பெண். அவளுக்கு நல்ல முறையில் கல்யாணம் செய்து பார்க்க வேண்டும் என்ற ஆசையிருக்காதா அவருக்கு! இதன் விளைவாக அவர் பக்கிரியாகி விட்டார், பாவம்! தன் பெண்மேல் தான் எவ்வளவு பிரியம் அவருக்கு..!

கரபி ரமேஷ் கொடுத்த பணத்தில் நகை வாங்கிப் போட்டுக் கொண்டு அவனுடைய மனைவியாகப் புக்ககம் சென்றாள். தாரகேஷ்வர், பசீர்ஹாட், பாட்பாரா ஆகிய இடங்களில் நிகழ்ந்தது போலவே இப்போதும் கரபி தந்தையிடமிருந்து விடைபெறும் போது ஓர் உருக்கமான காட்சி அரங்கேற்றப்பட்டது. விம்மி விம்மியழுதார் விஜய்பாபு, பொருமிப் பொருமியழுதாள் கரபி.

இவ்வாறு ராணாகாட்டின் ஒரு தெருவில் வசிப்பவர்களின் கண்களை நீரில் முழுக்காட்டிவிட்டு விடைபெற்ற கரபி அன்று மாலையில் கல்கத்தாவின் பாக் பஜார் பகுதியில் ஒரு குறுகிய சந்தில் ஒரு சிறு வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

அதற்கு இரண்டு நாட்களுக்குப்பின் அந்த வீட்டில் இரவு முழுதும் பிரகாசமாக விளக்கு எரிந்தது. முதலிரவையொட்டி

விருந்து. விழாவில் ஆர்ப்பாட்டமில்லை, ஆனால் மகிழ்ச்சிக்கும் சத்தத்துக்கும் பஞ்சமில்லை. இந்த உலகத்தில் ரமேஷுக்கு வேண்டியவர்களாயிருந்த ஒரு சிலர் இந்த விழாவில் பங்கேற்றனர். ரமேஷின் சித்தி தன் மூன்று பெண்களுடன் வந்திருந்தாள். ஒரு சித்தப்பா தன் பத்துக் குழந்தைகளுடன் வந்தார். ரமேஷின் இரு நண்பர்களின் தாய்களும் ஒரு நண்பனின் மனைவியும் வந்தார்கள். பெண்ணைப் பார்த்து எல்லாரும் மகிழ்ந்தார்கள். ஓர் இரவும் அதையடுத்த பகலும் அந்த அறை விருந்தினர்களின் மகிழ்ச்சி யொலிகளால் கலகலப்பாயிருந்தது.

அவர்கள் . எல்லாரும் புறப்பட்டுச் சென்றபோது மாலை வெயில் ஜன்னல் வழியே அறைக்குள் நுழைந்தது. புதுமணப் பெண் ஓர் ஆழ்ந்த பெருமூச்சு விட்டாள். முக்காட்டை விலக்கிக் கொண்டு மை தீட்டிய தன் பெரிய விழிகளைச் சுழற்றி அறையின் நாற்புறமும் பார்த்தாள். ரமேஷோ அவளுடைய முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றான்.

"கரபி, நான் ஒன் படம் ஒண்ணு வரையப் போறேன். ரெண்டு நாளிலே வரைஞ்சு முடிச்சிடுவேன்... அப்போ ஒனக்குத் தெரியும் என்னாலே என்ன செய்ய முடியும்னு..." ரமேஷ் சொன்னான்.

"நீங்க என்ன சொல்றீங்க, புரியலியே!"

"ஒன் ரெண்டு கண்ணையும் அப்படியே தத்ரூபமாச் சித்திரத்தில் தீட்டிடுவேன்!"

"தீட்டி வையுங்க, நான் திரும்பி வந்து பார்க்கறேன்."

"எங்கே போகப் போறே?" ரமேஷ் வியப்புடன் கேட்டான்.

"அப்பாகிட்டே"

"போகலாம்... ஆனா இன்னிக்கி நாளைக்கிப் போகப் போறதில்லியே?"

"போக ஆசையில்லேதான்– ஆனா அப்பா வந்து கூப்பிட்டா போகாம இருக்கமுடியாது."

"ஒன் அப்பா வரப்போறதாச் சொல்லியிருக்காரா?"

"சொல்லலே... ஆனா நாளைக் காலம்பரவே வந்தாலும் வந்துடுவார்" என்று சொல்லிவிட்டுச் சற்று நேரம் மௌனமா யிருந்தாள் கரபி. பிறகு திடீரென்று பொறுக்க முடியாத வேதனையால் துடிப்பவள்போல், "அப்பா ஞாபகம் வந்தால் ரொம்பக் கஷ்டமாயிருக்கு எனக்கு– இன்னும் அழுதுக்கிட் டிருப்பார் அவர்!" என்றாள்.

ரமேஷ் அவளுக்கு ஆறுதல் கூறினான். "அது இயற்கைதான். நீ அவரோட ஒரே பொண்ணு. அவரோட வருத்தம் எனக்குப் புரியுது. ஆனா... சரி, ஒன் அப்பா வரட்டும். நானேஅவருக்கு சமாதானம் சொல்றேன்."

"என்ன சொல்லுவீங்க?"

"அவர் இன்னும் ஒரு மாசங்கழிச்சு ஒன்னைக் கூட்டிக்கிட்டுப் போகட்டும், இப்பவே வேணாம்னு..."

"அப்பா சம்மதிக்க மாட்டார்... நீங்களும் அவரோட ஆசையைத் தடுக்காதீங்க, அவருக்கு வேதனை கொடுக்காதீங்க!"

"ஆனா என்னோட கஷ்டம் அவருக்குப் புரியாதா?" ரமேஷ் வருத்தத்தோடு கேட்டான்.

"ஒங்களுக்கு என்ன கஷ்டம்?"

"நீ நாளைக்கு அவரோட போயிட்டா எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்குமே, கரபி!"

மை தீட்டிய தன் பெரிய கண்களால் ரமேஷை உற்றுப் பார்த்தாள் கரபி.

"அப்படி நீ போகத்தான் வேணும்னா நானும் ஒன்னோட வரேன். ரெண்டுநாள் அங்கேயிருந்துட்டு மறுபடி உன்னைக் கூட்டிக்கிட்டு வந்துடறேன்."

"ஒங்களுக்கு சுயமரியாதை இல்லியா? மாமனார் அழைக்காமே நீங்க அவர் வீட்டுக்குப் போகலாமா?"

"ஒன் அப்பா என்னை அழைக்க மாட்டாரா? ஏன்?"

"ஏனோ, தெரியாது" தயங்கித் தயங்கிச் சொன்னாள் கரபி.

"நீயாவது ஒன் அப்பாகிட்டே சொல்லலாமே!"

"என்ன சொல்றது?"

"அவர் என்னைத் தன் வீட்டுக்கு அழைக்கும்படி..."

"சீ, நான் என்ன வெட்கம், மானம் இல்லாதவளா? நான் எப்படி அப்பாகிட்டே இந்த மாதிரி கேப்பேன்? இது அவமானம் இல்லியா?"

ரமேஷ் பேசாமலிருந்தான்.

"ஏன் இவ்வளவு கோபமா இருக்கீங்க? ஏதாவது சந்தேகமா இருக்கா?" கரபி கேட்டாள்.

"சந்தேகமா...? நான் ஏன் சந்தேகப்படணும்?"

"எனக்கு ஒங்ககிட்டே ஆசையில்லேன்னு சந்தேகம்..."

"அந்த மாதிரி சந்தேகம் வர்றதுக்கு முன்னாலே, நான் செத்துப் போயிடுவேன்!"

கரபியின் கண்கள் துடித்தன. ஏதோ ஓர் இனம்புரியாத பயம் அவளுடைய நெஞ்சைத் தாக்கியது. அவள் நடுங்கும் குரலில் மெதுவாகச் சொன்னாள், "நீங்க ஏன் சாகணும்? நானே செத்துப்போறேன். அதுக்கப்பறம் நீங்க இன்னொரு பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு வருவீங்க. என்னைப் பத்தி அவகிட்டே சொல்லிச் சிரிப்பீங்க."

"வெளையாட்டுக்குக்கூட இந்தமாதிரி அச்சானியமாப் பேசாதே, கரபி!"

"அதிருஷ்டசாலியோட பெண்டாட்டி சாவாள்" என்று சொல்லிச் சிரித்தாள் கரபி.

"சீ, அசட்டுப் பேச்சு!" என்று சொல்லிக் கொண்டு ரமேஷ் அவளருகில் வந்து அவள் கையைப் பற்றிக் கொண்டான். "இந்த மாதிரிப் பொண்டாட்டி யாருக்கும் கிடைக்க மாட்டாள்!"

கரபி திடுக்கிட்டாள்.

"இந்த மாதிரி மனைவி செத்துப் போயிட்டா, அவளோட அதிருஷ்டங்கெட்ட புருசன் பிழைச்சிருந்து என்ன பிரயோசனம்!"

கரபி தன் கையை அவனிடமிருந்து விடுவித்துக்கொண்டு வேறுபக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். பிறகு எழுந்து போய்க் கட்டிலின் ஒரு மூலையில் உடம்பைக் குறுக்கிக்கொண்டு உட்கார்ந்தாள். அவளுக்கு ரமேஷின் முகத்தைப் பார்க்கவோ, ரமேஷுக்குத் தன் முகத்தைக் காட்டவோ விருப்பமில்லை என்று தோன்றியது.

இருட்டி விட்டது. கரபி திடீரென்று, "சாப்பிடப் போற தில்லையா, எனக்கும் சாப்பாடு போடப் போறதில்லையா?" என்று கேட்டாள்.

"ஏன் இப்படிக் கேக்கறே?"

"நீங்க என்னை சமைக்கவும் சொல்லலே, சாப்பாடும் வெளியிலிருந்து வரவழைக்கலியே!"

இதைக்கேட்டு ரமேஷுக்கு ஒரே மகிழ்ச்சி. "நீ சமைக்கறியா?" என்று கேட்டான்.

"ஆமா, இன்னிக்கு ஒரு ராத்திரிதானே! சமைச்சுப் போட்டுட்டுப் போறேனே!" கரபி சிரித்தாள்.

ரமேஷும் சிரித்துக்கொண்டு சொன்னான், "இந்த விஷயத்தைச் சொல்றதுக்குத்தான் இவ்வளவு நேரம் தவிச்சுக் கிட்டிருந்தேன்."

"எந்த விஷயம்?"

"இவ்வளவு காலமாத்தான் ஓட்டல் சாப்பாடு சாப்பிட்டுக் கிட்டிருந்தேன், இப்போ நீ வந்தப்பறமும் ஓட்டல் சாப்பாடு சாப்பிடக் கொஞ்சக்கூடப் பிடிக்கலே எனக்கு."

"என் கைச்சமையல் சாப்பிட அவ்வளவு ஆசையா ஒங்களுக்கு?"

"ஆமா."

கரபி ஏதோ நினைவில் ஆழ்ந்தவள்போல் வேறு பக்கம் பார்த்தவாறு திடீரென்று சொன்னாள், "நீங்க இந்த மாதிரி ஆசைப்படாம இருந்திருந்தா நல்லாயிருந்திருக்கும்"

"அதெல்லாமில்லே. நான் வெகுகாலம் இந்தமாதிரி ஆசைப்பட்டுக்கிட்டுதான் இருப்பேன்."

இதன்பின் சிறிது நேரத்தில் அந்த பாக் பஜார் சந்து

வீட்டுக்குள்ளிருந்து கரிப்புகை வெளியே மிதந்து வந்தது. ஒரு புதிய மணப்பெண்ணின் புதுக் குடித்தனம் தொடங்கும் மகிழ்ச்சி, பாத்திரங்களும் கரண்டிகளும் எழுப்பும் ஒலியில் வெளிப்பட்டது. புதுக் குடித்தனக்காரி தன் புதுப்புடைவையின் தலைப்பை இடுப்பில் செருக்கி கொண்டு, கையில் மஞ்சள் அப்பிக் கொண்டிருந்ததால் புறங்கையால் நெற்றியில் விழுந்திருந்த முடிக்கற்றைகளை விலக்கியவாறு சமையல் செய்தாள்.

சமையல் முடிந்ததும் கரபி ரமேஷ் சாப்பிட உட்காரப் பலகையை போட்டாள்.

ரமேஷ் பலகையின் மேல் உட்கார்ந்து கொண்டு கரபியின் முகத்தைப் பார்த்தான். அவளிடம் ஏதோ சொல்லத் துடித்தான் போலும்.

"சாப்பிட ஒக்காந்துகிட்டு ஏன் இவ்வளவு கடுமையா இருக்கீங்க?"

"ஒண்ணு சொல்லவா?"

"சொல்லுங்க."

"தனியா சாப்பிடப் பிடிக்கலே."

"அப்பஎன்னா?"

"நீயும் வந்து ஒக்காரு! நாம ரெண்டு பேரும் ஒரே தட்டிலே சாப்பிடலாம்."

கரபி திடுக்கிட்டாள். ஒன்றும் சொல்லத் தெரியாமல் திகைத்துப் போய் நின்றாள்.

ரமேஷ் எழுந்து நின்றான்; சிரித்துக்கொண்டே அவளுடைய கையைப் பிடித்து அவளை வலுக்கட்டாயமாகத் தனக்கருகில் உட்கார்த்தி வைத்துக்கொண்டு சொன்னான், "இனிமேல் இந்த மாதிரி வாய்ப்பு கிடைக்கறது கஷ்டம். எனக்கு வேலைப்பளுவிலே நேரங்கிடைக்காது. ஒன்னோட ஒக்காந்துகிட்டு ஒரே தட்டிலே சாப்பிடற மகிழ்ச்சி வாழ்க்கையிலே இன்னும் எவ்வளவு தடவை கிடைக்குமோ, யார் கண்டாங்க?"

கரபியும் ரமேஷும் சேர்ந்து சாப்பிடத் தொடங்கினர். அவர்கள் சேர்ந்தாற்போல் ஒரு சுடு சோற்றுக் கட்டியை உதிர்த் தார்கள். வாழ்க்கையில் ஒரு புதிய விளையாட்டு விளையாடும் மனநிலை அவர்களுக்கு.

சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது கரபி அழுகை தொனிக்கும் குரலில் கேட்டாள், "ஒங்க வேலை ரொம்பக் கஷ்டமானாதா?"

"ஆமா! வேலை யாருக்கும் தயவு தாட்சணியம் காட்டாது.. நான் எவ்வளவோ நாள் காய்ச்சலோடே வேலைக்குப் போயிருக்கேன்!"

"ஏன் இவ்வளவு கஷ்டப்பட்டு ஒழைக்கணும்?"

"வயித்துக்காகத்தான்."

"எவ்வளவு சம்பாதிப்பீங்க?"

"ஒரு மாசம் அம்பது ரூவா கிடைக்கும், ஒரு மாசம் நூறு கிடைக்கும், இன்னொரு மாசம் ஒண்ணுமே கிடைக்காது."

"இப்போ நான் வேறே வந்து சேர்ந்திருக்கேன், அதனால நீங்க இன்னும் ஒழைச்சுப் பைத்தியமாயிடுவீங்க!"

"இல்லவேயில்லே, இனிமேல நான் சந்தோஷமா ஒழைப்பேன், இன்னும் கடுமையா ஒழைப்பேன்."

"நீங்க நிறையக் கடன் வேறே வாங்கியிருக்கீங்களே!"

ரமேஷ் தன் கடன் சுமையை மிகவும் அற்பமாகக் கருதுபவன் போல் சிரித்தான். "ரெண்டு வருஷம் கொஞ்சம் கொஞ்சம் கூட வேலை செஞ்சு அதை அடைச்சிடுவேன். அதைப்பத்திக் கவலை யில்லே எனக்கு"

சட்டென்று தலையைக் குனிந்து கொண்டாள் கரபி. குனிந்த தலையைக் கையால் தாங்கிக்கொண்டு சற்று நேரம் பேசாமலிருந்தாள்.

"என்ன ஆச்சு, ஏன் சாப்பிடாம இருக்கே?" ரமேஷ் கேட்டான்.

கரபியிடமிருந்து பதிலில்லை.

அவன் அவளுடைய அசைவற்ற கையைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான். சற்று நேரத்துக்குப்பின் எதையோ பார்த்து விட்டுத் திடுக்கிட்டு, "இதென்ன கரபி?" என்று வேதனைக் குரலில் கத்தினான்.

கரபியின் கண்களிலிருந்து ஒரு துளி நீர் அவனது கையின் மேல் விழுந்திருந்தது.

கரபி எழுந்து கை கழுவிக் கொண்டாள். இடுப்பில் செருகி யிருந்த புடவைத் தலைப்பைப் பிரித்துக் கண்களைத் துடைத்துக் கொண்டு சொன்னாள், "கேளுங்க!"

"என்ன?"

"ஒங்களுக்குப் பிழைச்சிருக்க ஆசையா?"

"இது என்ன கேள்வி?"

"நீங்க பிழைச்சிருக்கணும்னா இப்பவே போலீசைக் கூப்பிட்டு என்னைப் பிடிச்சுக் குடுத்திடுங்க!"

ரமேஷ் திடுக்கிட்டான். "ஒன் பேச்சுக்கு என்ன அர்த்தம்?"

"நான் ஒங்களை ஏமாந்த வந்திருக்கேன். நான் ஒங்க சாதியில்லே, நான் குமரியில்லே, என் பேரும் கரபி இல்லே... நான்... நான் ஒரு மோசக்கார அப்பனோட மோசக்காரப் பொண்ணு. நான் ஒங்களோடே குடித்தனம் நடத்த வரல்லே, ஓடிப்போறதுக்காக வந்திருக்கேன்!"

கரபியின் நடத்தையைப் பார்த்தால் அவள் ஒரு நாடகப் பாத்திரமாக மாறி வேடிக்கையாக நடித்துக் காட்டுவதாகத் தோன்றியது; விளையாட்டுக்காக ரமேஷைப் பயமுறுத்துகிறாள் என்று தோன்றியது.

வெகுகாலத்துக்கு முன் ரமேஷ் பார்த்த ஒரு நாடகத்தில் இப்படித்தான் ஒரு ராட்சசி ராஜகுமாரியாக உருமாறி வந்து ஒரு ராஜாவை மயக்கிக் கல்யாணம் செய்து கொள்கிறாள். பிறகு திடீரென்று இதே மாதிரிதான் சற்றும் கூச்சமில்லாமல் தன்னைப் பற்றிய உண்மையை வெளிப்படுத்தி அந்த ராஜாவைப் பயமுறுத்து கிறாள். ரமேஷுக்கு அந்த நாடகத்தின் பெயரோ அந்த அதிர்ஷ்டங்கெட்ட அரசனின் பெயரோ நினைவு வரவில்லை.

கரபியின் பேச்சு நடிப்புதான் என்றாலும் ரமேஷுக்குச் சற்று பயம் ஏற்பட்டது. தனக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப் படுவதுபோல் தோன்றியது அவனுக்கு. அவன் அவளது முகத்தை உற்றுப் பார்த்தான். இந்த முகம் உண்மையிலேயே ஒரு மோசக் காரியின் முகமாக இருக்க முடியுமா?

"நீங்க போலீசைக் கூப்பிட்டு என்னைப் பிடிச்சுக் குடுக்க மாட்டீங்கன்னு எனக்குத் தெரியும், நீங்க அசடு, திராணி யில்லாதவர்!" என்று சொல்லிவிட்டுக் கரபி தன் நகைகளை ஒவ்வொன்றாகக் கழற்றித் தரையில் வைக்கத் தொடங்கினாள். "இந்தாங்க, ஒங்க ஆயிரத்தைநூறு ரூவாயாவது தப்பிச்சுது...! இப்போ என்னைப் போகவிடுங்க!"

"எங்கே போகப்போற நீ?"

கரபியிடமிருந்து பதிலில்லை.

"ஒன் பயங்கர அப்பன்கிட்டயே திரும்பிப் போகப்போறியா?" கூடுமையான குரலில் கேட்டான் ரமேஷ்.

இப்போதும் கரபியிடமிருந்து பதிலில்லை

"என் கேள்விக்குப் பதில் சொல்லு, கரபி!"

"நீங்க என்னைப் போகவிட விரும்பலேன்னு சொல்றீங்களா?" கரபி அழுதுகொண்டே கேட்டாள்.

சற்றுநேரம் பேசாமல் யோசனையிலாழ்ந்திருந்தான் ரமேஷ். பிறகு கண்களில் நீர் மல்கக் கரபியின் கைகளைப் பிடித்துக் கொண்டு சொன்னான், "ஒன்னைப் போகவிட எனக்கு இஷ்ட மில்லே."

"அப்படீன்னா நான் சொல்றதைக் கேளுங்க!"

"சொல்லு"

"நாம ரெண்டு பேரும் இங்கேயிருந்து ஓடிப் போயிடுவோம்."

"எங்கே?"

"நீங்க எங்கே கூட்டிக்கிட்டுப் போனாலும் சரி!"

ரமேஷ் அதற்குமேல் தாமதிக்கவில்லை. அன்றிரவே அந்தச் சிறிய வீடு காலியாகி விட்டது.

மோசக்காரன் ஏமாந்து போய்விட்டான் இந்தத் தடவை. மறுநாள் காலையில் ராணாகாட்டிலிருந்து அந்த பாக்பஜார் வீட்டுக்கு வந்த விஜய் பாபு வாசலில் பூட்டு தொங்குவதைக் கண்டான். கெட்டியான, ஈவிரக்கமற்ற பூட்டு. கதவிடுக்கு வழியே உள்ளே பார்த்தான். அறைக்குள் ஒன்றுமில்லை. ஒரு பயங்கர சூனியம்!

ஆனால் விஜய்பாபு திகைப்புடன் வெகுநேரம் நின்று கொண்டிருக்கவில்லை அங்கே. சிறிது நேரத்திற்குள் போலீஸ் வந்து அவனைப் பிடித்துக் கொண்டது.

உரக்க அழத் தொடங்கினான் விஜய் பாபு. “சீ, பொண்ணா யிருந்துக்கிட்டு அப்பாவையே ஏமாத்திட்டியே மோசக்காரி...!”

*(கல்ப சங்கரஹ, 1/1970)*

# ஒரு காதல் கதை

## நரேந்திரநாத் மித்ரா

பிரபாத் பாபு ஜன்னல் வழியே எட்டிப் பார்த்து, "எழுதிக்கிட்டிருக்கீங்களா? சரி எழுதுங்க. நான் ஒங்களைத் தொந்தரவு பண்ணலே" என்று சொன்னார்.

நான் காகிதத்தையும் பேனாவையும் தள்ளி வைத்துவிட்டு என் மதிப்புக்குரிய, வயதில் பெரிய நண்பனை வரவேற்றவாறு, "வாங்க, வாங்க..! உள்ளே வாங்க!" என்று அழைத்தேன்.

பிரபாத் பாபு சற்றுத் தயக்கத்துடன், "நீங்க ஏதோ எழுதிக்கிட்டிருந்தீங்களே..!" என்றார்.

"எல்லா எழுத்தும் எழுத்தாயிருமா? சும்மா ரெண்டு மூணு கடிதங்களுக்குப் பதில் எழுதிக்கிட்டிருந்தேன், அவ்வளவுதான்!" என்று அவரைச் சமாதானம் செய்தேன்.

அழைப்புப்பெற்ற பிரபாத் பாபு உள்ளே வந்தார். சோபாவில் அமர்ந்துகொண்டு தன் குடையைத் தனக்கு முன்னால் தரையில் வைத்தார். போகும்போது அதை மறந்துவிட்டுப் போய்விடாமலிருக்க இந்த ஏற்பாடு. அவரது பிரியத்துக்குரிய பொருள் கண் முன்னாலேயே இருக்க வேண்டுமாம்.

நானும் நாற்காலியை விட்டிறங்கி அவருக்கெதிரிலிருந்த தாழ்வான சோபாவில் உட்கார்ந்தேன்.

அவர் சிரித்துக்கொண்டு சொன்னார், "நெறைய லெட்டரெல்லாம் எழுதறீங்க போலிருக்கு. எனக்கும் ஒரு காலத்திலே நெறைய லெட்டர் எழுதற பழக்கம் இருந்தது. ராத்திரி கண் முழிச்சு நண்பர்களுக்குக் கடிதமெழுதுவேன். அந்த விஷயத்திலே என்னை "மேன் ஆஃப் லெட்டர்ஸ்"னு அழைக்கலாம்!"

நான் புன்சிரிப்புடன் அவர் தமக்களித்துக் கொண்ட பட்டத்தை ரசித்துவிட்டு, "டீ குடிக்கறீங்களா?" என்று கேட்டேன்.

'டீ' என்ற வார்த்தையைக் கேட்டும் அவரது முகம் மலர்ந்தது. "குடிக்கலாந்தான்... ஆனா இந்த நடுப்பகல்லே டீ வேணும்னு சொன்னால் ஒங்க இல்லறத்துக்குத் தொந்தரவு ஆயிடுமே ென்னவோ...! நான்தான் சம்சாரி இல்லே... அதனாலே

மத்தவங்களோட குடும்பத்திலே அமைதி என்னால் கலைஞ்சிடு மோன்னு பயமாயிருக்கு..."

நான் உள்ளே போய் இரண்டு கப் டீ கொடுக்கச் சொல்லிவிட்டு வந்தேன்.

அவருக்குப் பெயர்தான் பிரபாத் (காலைநேரம்). ஆனால் அவர் வெளியே சுற்றும் நேரம், கதை பேசும் நேரம் இதெல்லாம் நடுப்பகலும் நள்ளிரவுந்தான். வயது எழுபத்து நான்கு அவருக்கு. உடல் தளர்ந்தாலும் மனதைத் தளரவிடவில்லை அவர். பஸ்ஸிலும் டிராமிலும் சிரமமில்லாமல் பிரயாணம் செய்கிறார். கலகலப்பான மனிதர். தமக்குப் பிடித்த இலக்கியக் கூட்டங்களுக்குப் போவார். பழைய நண்பர்களைச் சந்தித்துப் பேசுவார். புதிய நண்பர்களைச் சம்பாதித்துக் கொள்வதிலும் தங்கு தடையில்லை. அவருக்கு அடுத்த தலைமுறையிலும் அதற்கடுத்த தலைமுறையிலுங்கூட நண்பர்கள் உண்டு. ஆனால் அவருக்குப் பிள்ளையுமில்லை, பேரனுமில்லை. அவர் திருமணமே செய்து கொள்ளவில்லை.

பேச்சுவாக்கில் அவரிடம் சொன்னேன், "என்ன பிரபாத் பாபு! முந்தாநாள் ராத்திரி ஒங்களை வரச் சொல்லியிருந்தேன், நீங்க வரவேயில்லே! என்னோட ரெண்டு சிநேகிதங்க ஒங்களைச் சந்திக்கணும்னு வந்திருந்தாங்க. நாங்க ரொம்பநேரம் காத்துக் கிட்டிருந்தோம் ஒங்களுக்காக."

பிரபாத் பாபு வெட்கமடைந்து நாக்கைக் கடித்துக் கொண்டார். "அடேடே, மறந்தே போயிட்டேன், கல்யாண் பாபு...! முந்தாநாள் ராத்திரி நான் அலிப்பூர்லே என் சிநேகிதன் வீட்டிலே இருந்தேன். அங்கே ஒரு ஆண்டுவிழா கொண் டாடினோம்..."

"ஒங்க சிநேகிதரோட பிறந்தநாள் விழாவா?"

"இல்லேயில்லே, அதெல்லாம் ஒண்ணுமில்லே. பிறந்த நாள் கிறந்த நாள் கொண்டாடற வழக்கம் என்னிக்குமே இல்லே என் நண்பனுக்கு. அவன் தனிப்பட்ட முறையிலே பூஜை கீஜை பண்ணியும் பார்த்ததில்லே. சமூகச் சடங்குகளிலே கலந்து கொண்டும் பார்த்ததில்லே நான். சந்தியா வந்தனம், ஜபம் தபம் ஒண்ணுமில்லே அவனுக்கு. நானே அவன்கிட்டே ஒரு தடவை சொல்லியிருக்கேன். சைலேன், பிசாசுக்குக்கூடச் சில சடங்குகள் உண்டு. நீ பிசாசைவிடப் பெரியவனா...?' இப்போ கொஞ்சநாளா அவன் ஒரு சடங்கை அக்கறையா செஞ்சுகிட்டு வரான். வருஷத்திலே ஒருநாள் அதுக்கு அவன் ஒருத்தனை மட்டும்தான் அழைப்பான்..."

"அது நீங்கள்தானாக்கும்?"

பிரபாத் பாபு புன்சிரிப்புடன் ஒப்புக்கொண்டார்.

இதற்குள் டீ வந்துவிட்டது. அவர் அதில் ஓர் உறிஞ்சு உறிஞ்சிவிட்டுச் சட்டைப்பையிலிருந்து சிகரெட் பெட்டியை எடுத்து ஒரு சிகரெட் பற்றவைத்துக் கொண்டார். அவர் உபயோகிப்பது மலிவான சிகரெட்தான்.

நான் சிகரெட் பிடிப்பதில்லையென்று தெரிந்தும் அவர் என்னிடம் ஒரு சிகரெட் நீட்டினார். நான் தலையாட்டுவதைப் பார்த்துச் சிரித்தவாறு, "நீங்க தேவலை. நான் எப்ப சிகரெட் பிடிக்க ஆரம்பிச்சேன்னு எனக்கே ஞாபகமில்லே. பால்குடி மறந்ததுமே சிகரெட் பிடிக்கத் தொடங்கிட்டேன்னு நினைக்கறேன்." என்றார்.

"ஏதோ ஒரு விழாவைப் பத்திச் சொல்லிக்கிட்டிருந்தீங்களே!"

"பொறுங்க, பொறுங்க! நான் கதை எழுதறதில்லேன்னாலும் எப்படி எழுதணும்னு எனக்குத் தெரியும்; கல்யாணம் பண்ணிக்க லேன்னாலும் மாப்பிள்ளை வீட்டாரோட ஆயிரம் கல்யாணத் துக்குப் போயிருக்கேன். தொடக்கத்திலேயே கதையோட சஸ்பென்ஸைச் சொல்லிட நான் அவ்வளவு முட்டாள்னு நினைச்சுக்கிட்டிருக்கீங்களா? நான் முதல்லேயே சஸ்பென்ஸை வெளியிட்டா நீங்க அக்கறையாக் கதை கேப்பீங்களா...?

இது என் கதையில்லே, என் நண்பனோட கதை... ஒங்ககிட்டே எதுவும் சொல்லப் பயமாயிருக்கு. ஒங்கிட்டே ரகசியம் தங்காது. கேட்ட ரகசியத்தைப் பத்துப் பேருக்குச் சொல்லாட்டி ஒங்களுக்கு நிம்மதியிருக்காது... ஆனால் இந்தக் கதையை நீங்க எழுதிப் பிரயோசனமில்லே. ஏன்னா இந்த மாதிரிக் கதை ஒருத்தருக்கும் பிடிக்காது. இது பழைய காலத்துக் கதை. பழைய காலம், பழைய சூழ்நிலை மட்டுமில்லே, பழைய மதிப்பீடுகள் சம்பந்தப்பட்ட கதை...

பழைய காலந்தான். ஆனால் எனக்கு அப்போ புதுசுதான். அப்போ நான் இளைஞன். எவ்வளவு காலம் முன்னாலே? சுமார் அரை நூற்றாண்டு! ஆனால் சில சமயம் நேத்து நடந்த மாதிரி இருக்கும். சில சமயம் ரொம்ப, ரொம்பப் பழைய காலம் மாதிரி தோணும் - வரலாற்றுப் பழமை, வரலாற்றுக்கும் முந்தைய பழங்காலம்.

அந்தக் காலத்திலே கல்கத்தாவிலேருந்து மேற்கு இந்தியாவிலே ஒரு பட்டணத்துக்கு மாற்றலாச்சு எனக்கு. நான் வீட்டுக்குள்ளே முடங்கிக் கிடக்கறவனில்லே. கல்கத்தாவிலே எனக்கு நிறைய சிநேகிதங்க. ஆபீஸ் நேரம்போக மத்த நேர மெல்லாம் அவங்களோடே பேசிப் பொழுது போக்குவேன். பகல் இரவு பாராமே கும்மாளம் போடுவோம். எங்க பொழுது போக்கிலே இலக்கியம், சங்கீதம், நாடகம் எல்லாத்துக்கும் இடமுண்டு... ஆனால் நான் போகப்போற இடத்திலே ஆபிசைத்

தவிர என்ன இருக்கும்? அதுவும் எப்படிப்பட்ட ஆபீஸ் வேலை தெரியுமோ? ராணுவத்தோட உடை, சாப்பாட்டுச் செலவுக்கான கணக்கு வழக்குகளைப் பார்த்துக்கறது. இந்த மாதிரி வேலை எனக்குப் பிடிக்கவேயில்லே. ஆனால் ஆபீஸ் வேலையைச் செய்யத் தானே வேணும்! கணவனைப் பிடிக்காட்டியும் ஒரு பதிவிரதை அவனோட குடித்தனம் செய்யத்தானே வேணும்!

அந்தப் பட்டணத்திலே நான் ஒரு நடுத்தர உணவு விடுதியிலே போய்த் தங்கினேன். அங்கே எனக்கு நண்பர்களே கிடைக்க மாட்டாங்கன்னு நான் பயந்தமாதிரி இல்லே. அங்கே என் அறையிலேயே ஒரு சின்ன கோஷ்டி சேர்ந்துடுச்சி. கதை, பாட்டு, வேடிக்கைப் பேச்சு, சீட்டு விளையாட்டு எல்லாம் நடந்தது. வேறுவித ஆசைகள் உள்ளவங்களும் அதுக்கான ஏற்பாடுகள் செஞ்சுக்கிட்டாங்க. என்னோட சக ஊழியன் சைலேனும் இந்த கோஷ்டியிலே வந்து கலந்துக்கத் தொடங் கினான். நானும் சைலேனும் ஒரே பிரிவிலே வேலை பார்க்கறவங்க, ஆனால் அவன் என் மாதிரி இல்லே. நல்ல பையன். அக்கறையா வேலை செய்வான். ஆனால் எல்லாத்தையும்விட அவனோட அழகுதான் மத்தவங்கள முதல்லே ஈர்க்கும். என் மாதிரி கறுப்பா, அவலட்சணமா இருக்கமாட்டான் அவன். நான் நல்ல ஒசரம், ஏறக்குறைய ஆறடி, என்னைவிட ஒ்ரு அங்குலம் ஒண்ணரை அங்குலம் குட்டையாயிருப்பான்.

அவன்கிட்டே எந்தவிதமான குறையும் இல்லே. நல்ல சிவப்பு, நீளமான மூக்கு, தலை நிறையக் கருப்பு முடி, அழகான உடல்வாகு... அவன் ஒண்ணும் விளையாட்டு வீரன் இல்லே. இருந்தாலும் அவனோட தோற்றத்திலே ஆண்மை இருந்தது. என்னிலிருந்து வேறுபட்ட ஒருத்தனை நான் நண்பனாகப் பெற்றது அதுதான் முதல்தடவை. என்னிடமில்லாத ஏதோ ஒரு கவர்ச்சி அவன்கிட்டே இருந்தது. அதே மாதிரி அவனும் தன்கிட்டே இல்லாத ஏதோ ஒரு கவர்ச்சியை என்னிடம் உணர்ந்திருக்கலாம். எங்கள் வேறுபாடே எங்களைப் பரஸ்பரம் கவர்ந்தது.

சைலேன் எங்க கோஷ்டியிலே வந்து பேசாமே ஒக்காந் திருப்பான். சில சமயம் என் ஷெல்பிலிருந்து ஏதாவது புஸ்தகத்தை எடுத்துப் படிப்பான், சில சமயம் சும்மா எங்க கும்மாளத்தைப் பார்த்துக்கிட்டிருப்பான். மொதல்லே ரொம்பக் கூச்சப்படுவான். ஆனால் இப்போ அப்படியில்லே... எல்லாரும் போனப்பறம் நேரமிருந்தா ஏதாவது சாதாரணமாப் பேசிக்கிட்டு இருப்போம் நாங்க ரெண்டு பேரும்.

ஒருநாள் நாங்க தனியா இருந்தபோது அவன் எங்கிட்டே சொன்னான், “ஒங்ககிட்டே ஒரு விஷயம் சொல்லணும்—”

“என்ன விஷயம் சொல்லு?”

அவனிடமிருந்து பதிலில்லை.

"ஏதோ விஷயம்னியே... சொல்லேன்!"

"வேண்டாம் விடு !"

"ஏன் வேண்டாம்...? சரி, நீ என்ன சொல்ல வந்து சொல்ல முடியாம தவிக்கிறியோ, அதை நானே சொல்லிடறேன்..." நான் அவனோட குரலைக் காப்பியடித்துச் சொன்னேன், "பிரபாத், எனக்குக் காதல் ஏற்பட்டிருக்கு. காதல் பள்ளத்திலே அதல பாதாளத்திலே விழுந்துட்டேன். இப்போ நீதான் என்னைக் கரையேத்தணும்!"

"இதைத்தான் நான் சொல்ல வந்தேன்னு ஒனக்கு எப்படித் தெரிஞ்சுது?" சைலேன் கேட்டான்.

"புரிஞ்சுக்கிறதிலே என்ன கஷ்டம்? அன்னிக்கு ஒங்க வீட்டுக்கு வந்திருந்தபோதே நான் புரிஞ்சுக்கிட்டேன்."

சைலேன் பேசாமலிருந்தான்.

சைலேனின் அப்பா ஒரு அரசாங்க விடுதியில் குடியிருந்தார். பெரிய குடும்பம். சைலேனோட அப்பா, அம்மா, தம்பிகள், தங்கைகள்...

"ஆபீஸ் முடிஞ்சப்பறம் சிலநாள் சைலேன் என்னை அவன் வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுப் போவான். அவனோட அம்மா என்னைப் பிள்ளை மாதிரி நடத்தினாங்க. தானே சமைச்சுச் சாப்பாடு போடுவாங்க. அவனோட தம்பி தங்கைகளுக்கும் என்கிட்டே ரொம்பப் பிரியம். அந்த ஊரிலே இன்னும் சில வங்காளிக் குடும்பங்கள் இருந்தன. அவங்க வீடுகளுக்கும் நான் போறதுண்டு. ஆனால் சைலேனோட வீட்டுக்குப் போகத்தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும்.

"அவங்க வீட்டிலேதான் நான் மாதுரியைப் பார்த்தேன். அவளோட அழகைப் பார்த்து நான் மொதல்லே அவளும் சைலேனோட தங்கைன்னுதான் நினைச்சேன். அவன் மாதிரியே அவளும் நல்ல சிவப்பு. பெண்ணாயிருக்கறதாலே சிவப்பு நிறம் எடுப்பாத் தெரிஞ்சுது. எனக்கு எப்போதும் நீள முகந்தான் பிடிக்கும். ஆனால் மாதுரிக்கு உருண்டை முகம். உருண்டை முகம் ஒரு மலர்ந்த தாமரைப்பூ போல ரொம்ப அழகாயிருக்குங் கறது எனக்கு அவளைப் பார்த்த பிறகுதான் புரிஞ்சுது. அடர்த்தியான, நீளமான கருங்கூந்தல் அவளுக்கு, பட்டுபோல இவ்வளவு அழகான கூந்தலை நான் பார்த்ததேயில்லை. அவள் சைலேனோட தங்கையுமில்லே, சித்தியின் பொண்ணுமில்லேங் கறதைப் பின்னால தெரிஞ்சுக்கிட்டேன். ஆனால் அவ சைலேனோட அம்மாவைப் பெரியம்மான்னு கூப்பிட்டா. மாதுரி பிராமண சாதி-முகர்ஜி. சைலேனோட வீடும் மாதுரி வீடும் ஒரே தெருவிலே சில கஜ தூரத்திலே இருந்தது. ரெண்டு குடும்பங்களுக்கு

மிடையே ரொம்ப நெருக்கம், நட்பு, பரஸ்பரப் போக்குவரத்து, பேச்சு வார்த்தை, சாப்பாடு எல்லாம் உண்டு. சைலேனோட அம்மா மாதுரி வீட்டுக் குழந்தைகளுக்குப் பெரியம்மா. மாதுரியோட அம்மா சைலேன் வீட்டுக் குழந்தைகளுக்கு சித்தி...

"நீ எப்படிப் புரிஞ்சுக்கிட்டே?" சைலேன் கேட்டான்.

"நீங்க ஒருத்தரையொருத்தர் திருட்டுத்தனமாகப் பார்த்துக் கறதிலேருந்து... ஒன் மேஜை மேலே மாதுரியோட புஸ்தகங்களைப் பார்த்து... அவளோட பாட்டு நோட்டிலே ஒன் கையெழுத்தைப் பார்த்து..."

பிடிபட்ட சைலேன் சிரித்துவிட்டான். "இதுக்குள்ள இவ்வளவு கவனிச்சிட்டியா...? நீ துப்பறியும் இலாகாவிலே வேலைக்குப் போயிருக்கணும், பிரபு!"

சைலேன் சில சமயம் என்னைச் செல்லமாப் 'பிரபு'ன்னு கூப்பிடுவான். சில சமயம் 'குருதேவா'ன்னு அழைப்பான். நான் தான் அவனோட நண்பன், ஆசான், வழிகாட்டி.

அவன் என்கிட்டே எல்லா விஷயத்தையும் சொன்னான். சொல்லத்தானே வந்திருந்தான் அவன்–! சிறு வயசிலேருந்தே அவங்களோட பரஸ்பர அன்பு, பின்பு அது காதலாக மலர்ந்த கதை, அவங்க ஒருவருக்கும் தெரியாமல் சந்திக்கறது எல்லாம் ஒளிவு மறைவு இல்லாமல் சொன்னான். அவங்க முதல்லே வீட்டுக்காரங்ககிட்டேயிருந்து மட்டுமில்லாமே, தங்கைகளிடமே தங்கள் காதலை மறைச்சுக்கிட்டாங்களாம். அப்பறம் நிலைமை மாறினது. ரெண்டு வீட்டுக்காரங்களும் அவங்களோட காதலைப் புரிஞ்சுக்கிட்டு அவங்களைச் சேர்த்து வைக்கணும்னு ஆசைப் பட்டாங்க. மாதுரியைப் பெண் மாதிரி நடத்தின சைலேனோட அப்பா அம்மா அவளை மருமகளா ஏத்துக்கணும் சைலேனை மகன் மாதிரி நேசிச்ச மாதுரியோட அப்பா அம்மா அவனை மருமகனா ஏத்துக்கணும் - இதுதான் அவங்க ஆசை.

"இதிலே என்ன தடை?"ன்னு நான் சைலேனைக் கேட்டேன்.

"சாதி வித்தியாசந்தான்!"

"சாதி கிடக்கட்டும், விட்டுத் தள்ளு!" நான் சைலேன்கிட்டே சொன்னேன். "மாதுரியோடு அப்பா சம்மதிக்கல்லேன்னா, நீ 'சுபத்ரா ஹரணம்' பண்ணிப்பிடேன்! ஒங்க தேரை நான் ஓட்டத் தயார்! பாக்கி எல்லாத்தையும் விட்டுட்டு என்னைச் சரணடை!"

"அது நடக்காது!"

"ஏன்? மாதுரி பயப்படறாளா?"

"அவளுக்குப் பயம், தயக்கம் எல்லாந்தான். தவிர, அவளுக்குத் தன் அப்பா மேலே ரொம்பப் பாசம். அவரோட விருப்பத்துக்கு விரோதமா எதுவும் செய்யறதைப் பத்தி நினைக்கக் கூட மாட்டா."

"நீ கவலைப்படாதே! நான் போய் அந்த எஞ்சினியரை–

மாதுரி அப்பாவைப்-பார்த்துப் பேசறேன். அவரை சம்மதிக்க வைக்கறேன்."

"அடேயப்பா! நீ அவர்கிட்டே போனேன்னா அதுக்கப்பறம் அவங்க வீட்டுக்குள்ளே நாங்க நுழைய முடியாது. எங்க அப்பா மட்டும் இந்த அவமானத்தைப் பொறுத்துப்பாரா? மாதுரி வீட்டுக்காரங்களும் எங்க வீட்டுக்குள்ளே நுழைய முடியாது... எங்க காதல் விஷயம் எல்லாருக்கும் தெரியும். ஆனால் யாரும் இதைப் பத்தி வாயைத் திறந்து பேசறதில்லே. வெகுகாலத்து நட்பு முறிஞ்சு போயிடுமேன்னு—"

"ஏன் அம்மா அப்பா என்ன நினைக்கிறாங்க?"

"அவங்களுக்கும் இதிலே இஷ்டமில்லே. காதல் கலியாணம்னா அவங்களுக்கு ரொம்பப் பயம். நான் மாதுரியைக் கல்யாணம் பண்ணிக்கிட்டாத் தனிக் குடித்தனம் வச்சுடுவேன், அப்பறம் அப்பா அம்மா தம்பி தங்கைகளைக் கவனிக்க மாட்டேன்னு அவங்க பயப்படறாங்க."

சைலேன் கோழை. நான் அவனுக்காகத் துணிச்சலாக ஏதாவது செய்யவும் என்னை விடவில்லை அவன். அவனுக்கு இப்போது மாதுரியுடன் பேசிப் பழகக் கிடைக்கும் வாய்ப்பும் என் இடையீட்டால் கெட்டுப் போய்விடும் என்ற பயம் அவனுக்கு. இப்போது அவர்கள் தினமும் மாலை வேளையில் பார்த்துக் கொள்கிறார்கள், பேசிக் கொள்கிறார்கள், ரகசியமாக ஒருவரை யொருவர் கொஞ்சிக் கொள்கிறார்களே, அதுவும் நின்று போய் விடக் கூடாதே!

"சைலேன், அப்படீன்னா நீ இப்படியே இருந்துக்க! இதுக்கு மேலே எதுக்கும் ஆசைப்படாதே!" இதன்பின் இரண்டு வீடு களுக்கும் கல்யாணத் தரகர்கள் ஒளிவு மறைவாக வரத் தொடங் கினார்கள். மாதுரிக்கு வரன் பார்க்கப் பட்டது. சைலேனின் விருப்பத்துக்கு மாறாக அவனுக்கும் பெண் பார்த்தார்கள். நிறைய நகைகள், வரதட்சணையுடன் சைலேனுக்குப் பெண் கொடுக்கப் பலர் தயாராயிருந்தார்கள். ஆனால் சைலேன் இணங்கவில்லை. மாதுரியின் நிலையும் அதுவே. ஆகவே கல்யாணத் தரகர்கள் அலைந்ததுதான் மிச்சம். இரண்டு குடும்பங் களிலும் கல்யாணம் நடக்கவில்லை.

எனக்கு அப்போது சிம்லாவுக்கு மாற்றலாகி விட்டது. நான் அங்கிருந்து புறப்பட்டபோது மாதுரி எனக்கு ஒரு சிவப்பு ரோஜாக் கொத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள். கூடவே இரண்டு கண்ணீர் முத்துக்கள்.

நான் அவளுடைய கரிய, பெரிய, ஈர விழிகளைப் பார்த்த வாறு, "மாது, ஏன் அழறே?" என்று கேட்டேன்.

"பிரபாத் அண்ணா, எங்களுக்கு ஒங்களைத் தவிர வேறே நண்பர் இல்லே, எங்களை மறந்துடாதீங்க!"

நான் என் நண்பனோட நலம் விரும்பி, அவ்வளவுதான். நான் எப்போதுமே ஒரு துணைவினைச் சொல்தான். என்னிக்குமே முக்கிய வினைச் சொல்லா ஆகலே, எனக்காக ஒண்ணும் செஞ்சுக்கலே. இருந்தாலும் வாழ்க்கையிலே எனக்குக் கிடைச்சது ஒண்ணும் குறைவு இல்லே. சைலேனைச் சொல்லி என்ன பிரயோசனம்! நானே கப்பியும் குருணையுமா சேத்துத்தானே என் பிச்சைப் பையை ரொப்பிக்கிட்டிருக்கேன்...!

அடே, ரொம்ப நேரமாச்சே! இதோ சுருக்கமாச் சொல்லி முடிச்சிடறேன். இல்லேன்னா, ஒங்க வீட்டுக்காரம்மா ஒங்களைத் திட்டுவாங்க, எனக்கு அப்பப்ப ஒரு கப் டீ கிடைக்கறதும் நின்னு போயிடும்... நான் சிம்லாபோய்க் கொஞ்ச நாளுக்கெல்லாம் சைலேன் பாட்னாவுக்கு மாற்றலாகிப் போனான். எங்கள் விதியை இயக்குவது சர்க்கார். ஒவ்வொரு சமயம் நாங்க வெவ்வேறு ஊருக்கு மாற்றலாகி வெகுதூரத்திலே இருப்போம். சில சமயம் ஒரே ஊரிலே கொஞ்ச காலம் வேலை பார்ப்போம், தினம் சந்திப்போம், பேசுவோம். நாளாக ஆக எங்க தோற்றத்திலே மாற்றம் வந்தது, வயது ஏறிக்கிட்டு வந்தது. ஆனால் எங்க நட்பு மட்டும் மாறல்லே. நாங்க தொலைவிலே இருந்தபோதும் எங்க தொடர்பு விட்டுப் போகலே. நாங்க அடிக்கடி கடிதம் எழுதிக்குவோம், எப்போதாவது சந்திச்சுக்குவோம்...

மாதுரியின் அம்மா இறந்து போயிட்டாங்க. ரெண்டு தம்பிகளும் பெரியவங்களாயிட்டாங்க. அப்பா கிழவராயிட்டார். ஒரு காலத்திலே பெரிய கோபக்காரராயிருந்த அவர் இப்போ பொண்ணே கதின்னு ஆயிட்டார். அவருக்குத் தாய், மனைவி, பெண் எல்லாமே மாதுரிதான். சைலேனோட அப்பா அம்மாவும் இறந்து போயிட்டாங்க. அவனோட தம்பிகளுக்கு அவன்தான் அப்பா, அவன்தான் அம்மா. அவன் அவங்களுக்குக் கல்யாணம் பண்ணி வச்சான். அவங்க வெவ்வேறு ஊர்களிலே குடியும் குடித்தனமுமா இருக்காங்க. இருந்தாலும் பிரம்மச்சாரி அண்ணா சைலேன்தான் அவங்களுக்கு ஆசான், வழிகாட்டி எல்லாம்...

சைலேனோடேயும் மாதுரியோடேயும் என் கடிதப் போக்குவரத்து தொடர்ந்தது...

அப்பறம் நானும் சைலேனும் ஏறக்குறைய ஒரே சமயத்திலே ரிடையர் ஆனோம். சைலேனுக்கு ரெண்டு மூணு பதவி உயர்வு கிடைச்சுது, பதவி நீட்டிப்பும் கிடைச்சுது, எனக்கு ஒண்ணும் கிடைக்கலே. அதுக்குப் பதிலா நான் பலதடவை நாடு பூராச் சுத்தினேன். பொழுதுபோக்கு நாடகங்களிலே நடிச்சேன், கிழ

வயசிலேயும் அரிதாரம் பூசிக்கிட்டு, டோப்பா வச்சுக்கிட்டுக் கதாநாயகன் வேஷம் போட்டேன். பாதி இலக்கிய, பாதி அரசியல் மேடைகளிலே பேசினேன். இப்போ பஜனைக் கூட்டங் களுக்குப் போறேன். நீங்க என் நடத்தையைப் பார்த்து மனசுக் குள்ளே சிரிச்சுக்கிறீங்க...

இப்போ டல்ஹௌஸியிலே பென்ஷன் வாங்கப்போற இடத்திலே நானும் சைலேனும் சந்திச்சுக்கறோம். நாங்க ரெண்டு பேருமே இப்போ கல்கத்தாவாசிகள். அவன் தெற்குக் கல்கத்தாவிலே இருக்கான், நான் வடக்கே. நாங்க அடிக்கடி சந்திச்சுக்க முடியலே, கடிதமும் எழுதிக்கறதில்லே... ஒரு தடவை சைலேன், "ஒன் கையெழுத்து வரவர ரொம்ப மோசமாயிருச்சு. படிக்கவே முடியல்லே"ன்னு எனக்கு எழுதினான். அதிலே கோவிச்சுக்கிட்டு நான் அவனுக்குக் கடிதம் எழுதறதை விட்டுட்டேன். இப்போ போனிலே பேசிக்கறோம். சைலேன் அலிப்பூர்லே ஒரு அழகான ரெண்டடுக்கு வீடு கட்டியிருக்கான். அவனோட தம்பியோட பிள்ளை, பெண்கள், பேரன், பேத்திகள் கூட இருக்காங்க... எனக்கு வீடு கட்டிக்க அவசியமேற்படல்லே. முன்னோர்கள் விட்டுப்போன வீடு இருக்கு. எனக்கும் என் அண்ணாவுக்கும் பொது. ஆனால் அது பேருக்குத்தான். நான் மனத்தளவிலே நாடோடி, நான் வீட்டிலே தங்கற நேரம் குறைச்சல்தான்...

பன்னெண்டு வருஷத்துக்கு முன்னாலே ஒருநாள், நான் பென்ஷன் பணத்தை எண்ணிக்கிட்டிருந்தபோது யாரோ பின்னாலேருந்து என் கையைப் பிடிச்சுக்கிட்டு, "எல்லாம் துறந்தவனே! பணத்து மேலே மட்டும் ஆசை போகலியாக்கும்!" என்று சொன்னாங்க.

திரும்பிப் பார்த்தேன்—சைலேன்!

"கிழ வயசிலே பெண்ணாசையை விட்டுடலாம், பொன்னாசையை விட முடியாது... பழம் வாங்கித் திங்கறதுக்கும் காசு வேணும்" என்று சிரிச்சுக்கிட்டே சொன்னேன்.

சைலேன் என்னை ஒரு டீக்கடைக்குக் கூட்டிக்கிட்டுப் போய், "ஒங்கிட்டே ஒரு விஷயம் பேசணும்" என்றான்.

ஒரு காலிமேஜைக்கு முன்னாலேபோய் உக்காந்தோம்.

நாங்க ரெண்டு பேருமே காலத்தோட தாக்குதலுக்கு ஆளா யிருந்தோம். சைலேனோட தலைபூரா வழுக்கையாயிட்டுது, நான் முழுப் பல்செட் வச்சுக்கிட்டிருந்தேன்.

சைலேன் அதிகம் பேசவில்லை, தன் சட்டைப் பையிலேருந்து ஒரு கடிதத்தை எடுத்துக் கொடுத்து என்னைப் படிக்கச் சொன்னான்.

முத்து முத்தாகக் கையெழுத்து, எனக்குப் பழக்கமானதுதான்.

"இது ஒனக்கு வந்த கடிதம் இல்ல...?"

"சரிதான் படி! எனக்கு வந்த லெட்டரை நீ ஒரு நாளும் படிச்சதில்லையோ?" என்றுஅதட்டினான் சைலேன்.

உறையிலேருந்து கடிதத்தை எடுத்தேன். நீளக் காகிதம். ஆனால் அதிலே எழுதியிருந்தது ரெண்டே வரிதான்— 'உன்னோடு ஒரு விஷயம் பேசணும். அவசியம் வா! இப்படிக்கு, உன் மாதுரி."

நான் சிரிச்சுக்கிட்டே சொன்னேன், "நான் முன்னால சொன்னதை மாத்திக்கறேன். கிழ வயசிலேயும் பொண்ணாசை விடாது. இப்போ மாதுரி எங்கே இருக்கா?"

அப்பா இறந்த பிறகு மாதுரி லக்னோவிலேருந்து கல்கத்தா வந்துட்டாங்கறது தெரியும் எனக்கு. ஆனால் அவளோட விலாசம் தெரியாது.

"அவளோட தம்பிகள் இங்கே வேலை செய்யறாங்க. அவளும் டீச்சர் வேலை பார்த்தா. ஆனால் உடல்நிலை கெட்டுப் போனதாலே வேலையை விட்டுட்டா. அவளோட அப்பா நிறையப் பணம் வச்சுட்டுப் போகலே. பொண்ணு பேரிலே முப்பதாயிரம் ரூவா டிபாசிட் பண்ணியிருந்தார். பிள்ளைகளுக்கும் ஏதோ கொஞ்சம் கொடுத்தார்..."

இதெல்லாம் எனக்குத் தெரியாது. மாதுரியோட எனக்கு வெகுகாலமாக் கடிதப் போக்குவரத்து இல்லே.

"மாதுரி ரொம்பநாளா நோய் வந்து கஷ்டப்படுறா. வா, ஒரு தடவை பார்த்துட்டு வருவோம். என்ன விஷயம்னு கேக்கலாம்."

"நீ மட்டும் போயிட்டுவா. நான் வந்தா அவ ஒன்னோட மனம்விட்டுப் பேசமாட்டா."

"அதெல்லாமில்லே, நீயும் வரணும். வா, இப்பவே போகலாம்."

"இன்னொரு நாள் போயிக்கலாமே" என்று நான் தட்டிக் கழிக்கப் பார்த்தேன். ஆனால் அவன் விடலே.

நாங்க எங்க வீடுகளுக்குப் போன் பண்ணித் தகவல் சொல்லிவிட்டுப் பாரக்பூருக்குப் போனோம். டாக்சியில் போகலாம் என்றான் சைலேன். நான்தான் "பென்ஷன் பணத்தை இப்படிஅனாவசியமாகச் செலவு செய்யக் கூடாது. பஸ்ஸிலேயே போகலாம்"ன்னு சொன்னேன்.

வழியில் காலேஜ் தெரு மார்க்கெட்டிலே ஒரு பெரிய ரஜனிகாந்தாப் பூக்கொத்து வாங்கிக்கிட்டேன்.

"ஒனக்கு இன்னும் இந்த ஷோக்கெல்லாம் இருக்கே!" என்று என்னைக் கேலி பண்ணினான் சைலேன்.

பாரக்பூர் ஸ்டேஷன்கிட்டேதான் அவங்க வீடு. அவங்க மாடியிலே இருந்தாங்க. ஒரு பெண் எங்களை மேலே கூட்டிக் கிட்டுப் போனா.

ஒரு சின்னக் கட்டிலிலே படுத்துக்கிட்டிருந்தா மாதுரி. சுத்தமான படுக்கை விரிப்பு, அறையும் சுத்தமாயிருந்தது.

ஆனால் மாதுரி என்ன இப்படி ஆயிட்டா! படுக்கையோடே படுக்கையா கிடந்தா அவ. எழுந்து உக்காரக்கூட சக்தியிலே.

அப்படியும் எங்களைப் பார்த்ததும் அவளுக்குப் பலம் வந்தது. எழுந்து உக்காந்தா.

என்னைப் பார்த்துச் சிரிச்சுக்கிட்டு, "நீயும் வருவேன்னு எனக்குத் தெரியும்" என்று சொன்னா.

அதுக்கப்பறம் அவ செஞ்ச காரியத்தைக் கேளுங்க!

அவளோட ஒரு தம்பியின் மனைவியைக் கூப்பிட்டு, "லட்சுமி பீடத்துக்கிட்டே ஒரு குங்குமச் சிமிழ் இருக்கு, எடுத்துக்கிட்டு வா!" என்று சொன்னா.

குங்குமச் சிமிழ் வந்தது. மாதுரி அதை வாங்கி சைலேன் கிட்டே கொடுத்துச் சொன்னா, "இந்தக் குங்குமத்தை என் வகிட்டிலே இடு...! நான் குமரியாச் சாக விரும்பல்லே..."

முன்பு மாதுரிக்கு இருந்த-கருமேகம் மாதிரி அடர்த்தியான முடி இப்போ இல்லே. வயசானதாலே இல்லே, வியாதி யாலே முடியிலே பெரும்பகுதி உதிர்ந்து போயிருந்தது. மிச்சமிருந்த முடியில் நரையும் கண்டிருந்தது.

சைலேன் அவளோட வகிட்டிலே குங்குமம் இட்டான். அவளோட ரெண்டு தம்பிகளோட மனைவிகளும் அந்த சமயத்திலே சங்கு ஊத விரும்பினாங்க. மாதுரி ஜாடையாலே அவங்களைத் தடுத்துட்டா.

"மாது, நீ முடி நரைச்சப்பறந்தான் வகிட்டிலே குங்குமம் இட்டுக்கணும்னு இவ்வளவு நாள் காத்திருந்தியா?" நான் கேட்டேன்.

இதைக்கேட்டு மாதுரி முகத்திலே, வளர்பிறைப் பிரதமைச் சந்திரன் மாதிரி ஒரு மெல்லிய புன்னகை, "சரி, இப்போ நீ மந்திரம் சொல்லு!" என்றாள்.

நான் என்ன புரோகிதனா, மந்திரம் சொல்ல? தவிர, நானே அப்போ மந்திரத்தால் மயங்கினவன் மாதிரி இருந்தேன். இருந் தாலும் ஒரு மந்திரத்தைச் சொல்லி வச்சேன்—'யதிதம் ஹ்ருதயம் தவ, ததிதம் ஹ்ருதயம் மம' (உன்னிதயமே என்னிதயம்).

அவங்க மந்திரத்தைத் திருப்பிச் சொல்லலே, கவனமாக் கேட்டுக்கிட்டாங்க.

நான் எவ்வளவோ கல்யாணத்துக்கு மாப்பிள்ளை கோஷ்டியோட போயிருக்கேன் கல்யாண் பாபு. சுலபமாப்போக முடியாத, தொலைவான இடங்களுக்கெல்லாம் போயிருக்கேன். ஆனால் இந்த மாதிரி கல்யாணத்திலே மாப்பிள்ளைத் தோழனா

இருந்ததில்லே, இந்த மாதிரி புரோகிதத் தொழிலும் செஞ்சதில்லே.

அன்னிக்கு நான் ரஜனிகாந்தாப் பூக்கொத்து எடுத்துக்கிட்டுப் போனது பொருத்தமா அமைஞ்சுடுத்து, அந்தக் கொத்தை மாதுரியோட படுக்கையோரத்திலே வச்சேன். கொஞ்ச நேரத்துக்கு அது முதலிரவுப் படுக்கை மாதிரி அலங்காரமாயிருந்தது...

அதுக்கப்புறம் மாதுரி ரொம்ப நாள் பிழைச்சிருக்கலே அவளோட தம்பிகள் நல்லா செலவு செஞ்சு மருத்துவம் பார்த் தாங்க. சைலேனோட முயற்சியிலேயும் குறையில்லே. அவளைக் கல்கத்தாவுக்குக் கூட்டிவந்து மருத்துவமனையிலே வச்சிருந் தான். அவளோட வயத்திலே கட்டி ஏற்பட்டிருந்தது. அவளுக்கு அறுவை சிகிச்சை நடந்துக்கிட்டிருந்தபோதே அவ இறந்து போயிட்டா.

நான் இன்னொரு கொத்து ரஜனிகாந்தா எடுத்துப் போய் அவளோட சடலத்து மேலே வச்சேன்.

சைலேன்தான் அவளுக்கு ஈமக் கடன்கள் செஞ்சான். ஐயாயிர ரூவா செலவு பண்ணி சடங்குகள் செஞ்சான், சாப்பாடு போட்டான், பஜனைக்கு ஏற்பாடு பண்ணினான். எங்களுக்கு ஒரே ஆச்சரியம். ஏன்னா இதுக்கு முன்னாலே அவனுக்கு இந்த மாதிரி சடங்குகளிலே நம்பிக்கை கிடையாது. மாதுரியோட விருப்பப்படி இதெல்லாம் செஞ்சான்னு புரிஞ்சுக்கிட்டேன்.

முன்பெல்லாம் அவன் மாதுரியோட கடிதங்களைச் சட்டைப்பையிலே வச்சுக்கிட்டு அலைவான். சாகறதுக்கு முன்னாலே மாதுரி அவன்கிட்டே இன்னொரு உறையைக் கொடுத்து அவ இறந்தபிறகு அதைத் திறந்து பார்க்கச் சொல்லி யிருந்தா. அவ சாகறவரையிலே அவன் அந்த உறையைப் பையிலே வச்சுக்கிட்டிருந்தான்.

மாதுரி இறந்தபிறகு அதைத் திறந்து பார்த்தா, உள்ளே சைலேன் பேரிலே முப்பாதாயிர ரூவாய்க்கு செக்.

"இந்தப் பணம் எனக்கு எதுக்கு?" என்றான் சைலேன்.

"எடுத்துக்க, எடுத்துக்க! கலியாணம் பண்ணிக்க வரதட்சணை வாங்கலியே நீ! இதுதான் ஒனக்கு வரதட்சணை!" நான் சொன்னேன்.

சைலேன் அந்தப் பணத்திலே ஒரு பகுதியை மாதுரியோட தம்பிகளுக்குக் கொடுத்தான். ஆஸ்பத்திரியிலே ஏழைப்பெண் களுக்கு மருத்துவம் செய்ய இலவசப் படுக்கை ஒண்ணு ஏற்படுத்தச் சொல்லி மிச்சப் பணத்தைக் கொடுத்தான்.

அதிலேருந்து ஒவ்வொரு வருஷமும் மாதுரியோட நினைவு நாளைக் கொண்டாடுறான் சைலேன். அதற்கு அழைப்பு என் ஒருத்தனுக்குத்தான். அவனோட அறையிலே மாதுரியோட

போட்டோ ஒண்ணு இருக்கு— அவளோட இளமைக்கால போட்டோ.

இளம் மாதுரியோட அந்த போட்டோவுக்கு முன்னாலே நாங்க ரெண்டு கிழவங்களும் உக்காந்துக்கிட்டு டீ குடிப்போம், பேசிக் கிட்டிருப்போம்; சில சமயம் மௌனமா உக்காந்திருப்போம்.

சைலேன் ஒரு காதலைச் சாவிலேருந்து காப்பாத்திட்டான். நான் ஒரு நட்பைக் கிழத்தனத்திலேருந்து காப்பாத்திட்டேன்..."

பிரபாத் பாபு எழுந்து நின்று கொண்டார். அவருடைய குடை அவரது கண்முன்னே இருந்தும் அதை மறந்து விட்டார். இன்று நான் அதை எடுத்து அவரிடம் கொடுத்தேன். அவர் புன்சிரிப்புடன், "நன்றி!" என்று சொன்னார்.

*('தேஷ்' பூஜா மலர், அக்டோபர், 1972)*

# மதிப்புக்குரிய, விடைத்தாள் திருத்துபவர் அவர்களுக்கு

நாராயண் கங்கோபாத்தியாய்

*ஐயா,*

*நீங்கள் இந்த விடைத்தாளைக் கடைசிவரை படிப்பீர்களா என்று எனக்குத் தெரியாது. ஏனென்றால் நான் விடைத்தாளில் ஒரு கேள்விக்குக்கூட விடையெழுதவில்லை. இந்தக் கடிதத்தை மட்டுமே எழுதியிருக்கிறேன். நீங்கள் ஒரு சில வரிகள் படித்ததுமே புருவத்தைச் சுளிப்பீர்கள், விடைத்தாளில் சைபர் போடுவீர்கள், பிறகு நான் அசட்டுத்தனமாகக் கடிதம் எழுதியதற்காகப் பல்கலைக் கழகத்துக்குப் புகார் செய்வீர்கள். நீங்கள் சைபர் போட்டாலும் புகார் செய்தாலும் எனக்குக் கவலையில்லை. நீங்கள் ஒருவேளை என் கடிதம் முழுவதையும் படித்தாலும் படிக்கலாம் என்ற நம்பிக்கையில் இதை எழுதுகிறேன்.*

*ஓரிரண்டு கேள்விகளுக்கு என்னால் பதிலளிக்க முடியுந்தான். ஆனால் அதனால் கிடைக்கும் மார்க்குகளால் பாஸ் செய்வது கிடைக்கட்டும், இருபதைக்கூட எட்ட முடியாது. ஆகையால் நான் விடையளிக்க முயற்சி செய்யவில்லை. தவிர, இன்று சாயங் காலத்துக்குப் பிறகு நான் பாஸ், பெயில் இவற்றுக்கெல்லாம் அப்பால் போய்விடுவேன். கல்கத்தாவையடுத்து எவ்வளவோ ரயில்கள் போய் வந்து கொண்டிருக்கின்றன. அவற்றுள் ஒன்றின் சக்கரங்களுக்கடியில் என் கணக்கை முடித்துக் கொள்ளப் போகிறேன். ஓர் அடையாளம் தெரியாத இளைஞன் ரயிலில் அரைபட்டு மாண்டான் என்ற பத்திரிகைச் செய்தி நீங்கள் இந்தத் தாளைத் திருத்தும் சமயத்தில் பழைய செய்தியாகி உங்களுக்கு மறந்துகூடப் போயிருக்கும்.*

*இந்த இடத்தைப் படிக்கும்போது உங்கள் ஆசிரிய மனப்பாங்கு அதிர்ச்சியடையும். "சீ, சீ! பரீட்சையிலே தேறலேன்னு தற்கொலையா? இதைவிடக் கோழைத்தனத்தைக் கற்பனை பண்ண முடியுமா? வங்காளத்து இளைஞர்களிடம் இந்த*

மனோபலங்கூட இல்லேன்னா நாடு எப்படி உருப்படும்? சமூகத்துக்கு என்ன எதிர்காலம் இருக்கும்?" என்றெல்லாம் சொல்லிக் கொள்வீர்கள்.

என்னை நம்புங்கள் சார், எனக்கும் இதெல்லாம் தெரியும். நான் உயிர் வாழத்தான் விரும்பினேன் என்பதையும் நீங்கள் நம்ப வேண்டும். சாந்தால் பர்கனாவின் மலையாறுகளின் சீறிவரும் வெள்ளம் என் கை பட்டதும் ஒரு பெரிய நிலப்பரப்பில் சிறைப்பட்டு நிற்கும்; பீகார்— மேற்கு வங்காள எல்லையிலுள்ள சிறந்த தொழிற்சாலைப் பகுதியை ஆயிரமாயிரம் விளக்குகளால் பிரகாசிக்க வைக்கும் நீர் மின்சாரத் திட்டத்தை இயக்கும் பொத்தானை என் கை அமுக்கும்; நான் கொதியுலையின் சிவந்த ஒளியில் எஃகை உருக்கி எதிர்கால பாரதத்தைச் சமைக்கப் போகிறேன்—இவ்வாறெல்லாம் கனவு கண்டு கொண்டிருந்தேன் நான்.. சார், நான் தற்கொலை செய்து கொள்ள விரும்பவே யில்லை!

எனக்கு நாற்புறமும் மாணவர்கள் விடைகளை மும்முரமாக எழுதிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களில் பலர் என் போலவே கனவு காண்கிறார்கள். இன்னும் சில நாட்களுக்குப் பிறகு சிலரது பெயர்கள் தேறியவர்களின் பட்டியலிலிருந்து அடிக்கப் பட்டு அவர்களுடைய கனவுகளும் சுக்குநூறாகி விடும். சிலர் வாழ்க்கையில் வெற்றிபெற்று வருங்கால பாரதத்தின் நம்பிக்கை விளக்கைக் கைகளில் பிடித்துக் கொள்ளலாம். அவர்கள் அதிருஷ்ட சாலிகள்; அவர்கள் முன்னேறிச் செல்லட்டும்! என் போன்ற எண்ணற்றவர்கள் இப்படியே மறைந்து விடுவார்கள், அல்லது நடைப்பிணங்களாக உயிர் வாழ்வார்கள். ஐந்தாண்டுத் திட்டத்தின் சாதனைப் பட்டியலில் இடம்பெற மாட்டார்கள் அவர்கள்.

நான் உங்களைப் பார்த்ததில்லை, ஒருபோதும் பார்க்கப் போவதுமில்லை. எனக்கு உங்களைத் தெரியாது. ஆனால் நீங்கள் ஒரு ஆசிரியர் என்பது மட்டும் தெரியும். நீங்கள் மாணவர்களுடன் நெருக்கமாக வாழ்கிறீர்கள்; அவர்களது வாழ்க்கையின் அலை உங்களையும் தொடுகிறது. நீங்கள் அவர்களை நேசிக்கவும் செய்யலாம். ஆகையால் நான் எழுதுவதை நீங்கள் படித்தாலும் சரி, படிக்காவிட்டாலும் சரி, நான் உங்களிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்வேன்?

சார், நான் மேதினிபூர் மாவட்டத்துச் சின்னஞ்சிறு கிராமம் ஒன்றிலுள்ள ஓர் ஏழை விவசாயியின் மகன் என்பதை நான் கனவு காணும் சமயத்தில் மறந்து போயிருந்தேன். என் தந்தை ஒரு சாதாரணமான உழவர்தான் என்றாலும் இப்போது டில்லியில்

பிரகாசித்துக் கொண்டிருக்கும் தலைவர்களில் எவரையும்விடத் தேச பக்தியில் குறைந்தவரல்ல. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தி இரண்டாம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஒரு நள்ளிரவில் ஒரு காட்டில் நான் பிறந்தேன். ஏனென்றால் அப்போது ராணுவம் எங்கள் கிராமத்தை எரித்து விட்டது. நெஞ்சில் துப்பாக்கியால் சுடப்பட்ட என் தந்தை சுதந்திரக் கொடியை கையில் ஏந்தியவாறே ஒரு வயலில் விழுந்து கிடந்தார்.

தமக்குப் பிள்ளை பிறந்தால் அவனுக்கு 'ஸ்வாதீன்குமார்' என்று பெயர் வைக்க வேண்டுமென்று விரும்பினார் என் தந்தை. தீப்பிழம்புகள் ஒளிர்ந்த அந்தப் பிரளய இரவில் சுதந்திரமான வானத்தின் கீழே என் தந்தையின் இரத்தத்தையே ஆசியாகக் கொண்டு பிறந்தேன் நான். அந்தக் காலத்தில் ராணுவத்தின் கெடுபிடி கடுமையாகி இருந்தாலும் நாட்டில் எவரும் மனத்தளவில் அடிமையாக இருக்கவில்லை.

இந்தக் கதையெல்லாம் போகட்டும் சார். நீங்கள் இதுவரை படித்துக்கொண்டு வந்திருந்தீர்களென்றால் இப்போது பொறுமை யிழக்கலாம். என் குடும்ப வரலாற்றைப் பற்றி உங்களுக்கு என்ன அக்கறை! தவிர எனக்கும் எழுத மூன்று மணி நேரந்தான் அனுமதிக்கப்பட்டுள்ளது. மூன்று மணியானதும் என்னிடத் திலிருந்து விடைத்தாள் பறித்துக் கொள்ளப்படும். ஆகையால் நான் சொல்ல விரும்புவதைச் சுருக்கமாகவே சொல்லி விடுகிறேன்.

நான் விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவன். ஆகையால் விவசாயம் செய்து வாழ்க்கை நடத்தியிருக்கலாம். பஞ்சம் வந்தால் என் போன்ற மற்ற விவசாயிகளைப்போல் பட்டினி கிடந்தோ, உண்ணத் தாகாததை உண்டோ உயிரை விட்டிருக்கலாம். ஆனால் என் துரதிருஷ்டம், என் சித்தப்பா என்னைக் கிராமத்துப் பள்ளியில் சேர்த்து விட்டார். அப்புறம்—நீங்கள் நம்புவீர்களோ இல்லையோ, தெரியாது— எனக்கு உபகாரச் சம்பளமும் கிடைத்து விட்டது.

இந்த உபகாரச் சம்பளமே எனக்கு எமனாக வாய்த்தது—நான் கனவு காணத் தொடங்கினேன். என் தாய் என்னை நெஞ்சோடு தழுவிக் கொண்டு அழுது தீர்த்து விட்டாள். அப்பா வுக்காக அம்மா அழுது நான் பார்த்தது இதுதான் முதல் தடவை. பிறகு நான் கண்களில் நம்பிக்கையொளிர, என் சித்தப்பாவுடன் அங்கிருந்து எட்டு மைல் தூரத்திலிருந்த ஊரின் உயர்நிலைப் பள்ளியில் சேரப் போனேன்.

மாணவர் விடுதியில் தங்குவதற்கான பண வசதி எனக் கில்லை. மொத்த நெல் வியாபாரியான சாமந்தா என்பவரின் வீட்டில் எனக்கு இடம் கிடைத்தது. சாமந்தா எங்களுக்குத்

தூரத்து உறவினர். ஆனால் ஓர் ஏழைக் குடும்பத்துடன் சொந்தம் கொண்டாட அவர்களுக்கு இஷ்டமில்லை. உண்மையில் அவருடன் எங்களது உறவு ஒரு ஜமீந்தாருக்கும் அவருடைய குடிமகனுக்குமிடையே, ஒரு லேவாதேவிக்காரனுக்கும் அவனிடம் கடன் வாங்குபவனுக்குமிடையே உள்ள உறவுதான். என் சித்தப்பாதான் சாமந்தாவின் காலைப் பிடித்துக் கெஞ்சி அவர் வீட்டில் நான் தங்க அனுமதி பெற்றார். நான் பள்ளியில் சேர்ந்தேன். இலவசப் படிப்புச் சலுகையும் பெற்றேன்.

சாமந்தா குடும்பம் செல்வமும் செழிப்புமாக இருந்தது. அவர்களிடம் இரண்டு லாரிகள் இருந்தன. மூன்று சரக்குக் கிடங்குகள் இருந்தன. ஆனால் வியாபாரம் செய்பவர்கள் ஒரு பைசா கூட வீண் செலவு செய்ய மாட்டார்கள். ஐநூறு ரூபாய் தானம் செய்தால் அதற்குப் பதிலாக இருபத்தையாயிர ரூபாய் லாபம் சம்பாதித்து விடுவார்கள். ஆகவே அவர்கள் என்னைத் தங்க அனுமதித்துவிட்டு அதற்குரிய விலையை என்னிடமிருந்து வசூலித்துக் கொண்டார்கள்.

என் கையெழுத்து மோசமில்லை என்பது உங்களுக்கு இந்த விடைத்தாளிலிருந்தே தெரிந்திருக்கும். தவிர, கணக்கிலும் கெட்டிக் காரன் நான் நூற்றுக்கு நூறு மார்க் வாங்கிவிடுவேன். சாமந்தா இந்த வாய்ப்பை நழுவவிடவில்லை. அவர் முதலில் என்னைக் கடிதங்கள் எழுதச் செய்தார். பிறகு கணக்குகள் எழுதச் செய்தார்; கடைசியில் கணக்கு வழக்குகளைச் சரிபார்க்கும் வேலையையும் என்னிடம் ஒப்படைத்தார். தினம் சில மணிநேரம் இந்த வேலையைச் செய்ய வேண்டியிருந்தது. இரவு எட்டு மணிக்குப் பிறகுதான் எனக்குப் படிக்க நேரம் கிடைக்கும்.

அப்போதாவது சரியாகப் படிக்க முடிந்ததா?

நானும் சாமந்தாவின் குமாஸ்தா ஒருவரும் கடையையடுத்த ஒரு சிறிய அறையில் தங்கியிருந்தோம். குமாஸ்தாவுக்கு வயது நாற்பதைத் தாண்டிவிட்டது. வற்றிப்போன வௌவால் போலிருப்பார்; பெரிய பெரிய கண்கள் பளபளக்கும். நான் படிக்கத் தொடங்கியதும் அவர் ஹுக்காவைப் பற்றவைத்துக் கொண்டு பேச ஆரம்பித்து விடுவார்.

எனக்கு அப்போது வயது பன்னிரண்டுக்கு மேல் இருக்காது. புகையை இழுத்தவாறு, பளபளக்கும் கண்கள் மேலும் பளபளக்க, கரகரத்த நாராசக் குரலில் அவர் சொல்லிய கதைகளின் பொருளை நான் அப்போது புரிந்து கொள்ளவில்லை, பிறகுதான் புரிந்து கொண்டேன். எல்லாம் ஆபாசக் கதைகள் அவர் எவ்வளவு பெண்களை, எவ்வளவு விதமாகக் கெடுத்தார் என்று வர்ணிக்கும் கதைகள்.

அப்போது எனக்கு அந்தக் கதைகளின் நன்மை தீமை தெரியாது. ஆனால் எரிச்சல் வரும் எனக்கு.

"கொஞ்சம் சும்மா இருங்க! என்னைப் படிக்க விடுங்க!"

"சரிதாம்பா, நிறுத்து! குடியானவன் பிள்ளை வித்தியாசாகர் ஆகப் போறியாக்கும்...! அதைவிட ஹுக்கா பிடிக்கக் கத்துக்கறது மேல். அதைக் கத்துக்க!"

குமாஸ்தா கதை சொல்லிக் களைத்துப்போய்ப் படுத்துக் கொள்ளும் போது விளக்கும் அணைந்து போய்விடும். சாமந்தா கொடுக்கும் எண்ணெயில் விளக்கு இரவு ஒன்பதுக்குமேல் எரியாது. எனக்குக் கிடைத்த அற்ப உபகாரச் சம்பளத் தொகை முக்கியமான செலவுகளுக்குத்தான் சரியாயிருந்தது, எண்ணெய் வாங்கப் பணம் மிஞ்சவில்லை.

இந்த நிலையிலும் கஷ்டப்பட்டுப் படித்து ஒவ்வொரு வகுப்பிலும் முதல் அல்லது இரண்டாவது மாணவனாக எட்டாம் வகுப்புவரை வந்துவிட்டேன். அதன் பிறகு பாடப் புத்தகப் பிரச்சினை தோன்றியது. ஸ்கூல் ஃபைனல் தேர்வுக்கு எழுபது எண்பது ரூபாய் விலையுள்ள புத்தகங்கள் வாங்க வேண்டியிருந்தது. சித்தப்பா கொஞ்சம் நெல்லை விற்று என் சாப்பாட்டுச் செல வுக்குப் பணம் அனுப்பினார். சாமந்தா புத்தகம் வாங்கப் பத்து ரூபாய் கொடுத்தார். தலைமையாசிரியர் பள்ளிக்கூடத்துப் புத்தகங்கள் இரண்டு மூன்று கொடுத்தார். அப்படியும் தேவையான புத்தகங்களில் பாதிகூட வாங்க முடியவில்லை.

சாமந்தா கொடுத்த பத்து ரூபாய்க்காக இன்னும் அதிகமாகக் கணக்குகள் எழுத வேண்டியிருந்தது.

சார்! எனக்கு உபகாரச் சம்பளம் கிடைத்ததும் நான் ஒரு சாதாரண மாணவன் அல்ல என்று நினைத்துக் கொண்டேன். எனக்குத் திறமையிருக்கிறது, ஸ்வாதீன் குமாரர்கிய நான் என் திறமையின் பலத்தில் மதிப்புமிக்க சுதந்திர மனிதனாக உயருவேன் என்று நினைத்தேன். எந்த நாட்டுக்காக என் தந்தை தன் நெஞ்சின் இரத்தத்தைக் கொட்டினாரோ அந்த நாட்டில் நானும் எனக்குரிய இடத்தைக் கண்டுபிடிப்பேன் என்று மனப்பால் குடித்தேன். ஆனால் சரியாகப் படிக்க முடியவில்லை என்னால். தேர்வும் சரியாக எழுதவில்லை. தேர்வு முடிவுகள் வெளிவந்த போது நான் மூன்றாம் பிரிவில் தேறியிருந்தேன்.

தலைமை ஆசிரியரிடமிருந்து தொடங்கி எல்லாரும் என்னைக் கடிந்து கொண்டார்கள். சாமந்தாவின் ஒரு பிள்ளை பி.ஏ. தேறவில்லை. அவன் எப்போதும் ஹல்தி ஆற்றங்கரையில் கையில் துப்பாக்கியுடன் சுற்றுகிறான், காதா கோஞ்ச்சா பறவையை வேட்டையாடுகிறான். "இவன் பாஸ் பண்ணினதே

அதிருஷ்டந்தான்! எவ்வளவு கெட்டிக்காரப் பையங்களெல்லாம் ஸ்கூல் ஃபைனல்லே ஃபெயிலாயிடறாங்க!" என்றான் அவன்.

நான் இரண்டு நாட்கள் வீட்டுக்குள் அடைந்து கிடந்தேன். சாப்பிடவில்லை. இதற்குள் என் நெற்றியின் மேல் அம்மாவின் கண்ணீர் கொட்ட ஆரம்பித்து விட்டது.

"எழுந்திருப்பா, எழுந்திரு! நல்லாப்படி! நீ நிச்சயம் வாழ்க்கையிலே முன்னேறுவே! ஒன் மாதிரி எவ்வளவு பசங்க கஷ்டப்பட்டுப் படிச்சும் ஃபெயிலாயிட்டாங்கங்கறதை யோசிச்சுப் பாரு!

சார், நான் என்னைத் தேற்றிக் கொண்டேன். கல்கத்தாவுக்கு வந்தேன். சாமந்தாவின் உறவினரான சர்க்கார் என்பவரின் குடும்பம் கல்கத்தாவில் இருந்தது. அவர்கள் பரா பஜாரில் கடை வைத்துக்கொண்டு புகையிலை வியாபாரம் செய்து வந்தார்கள். சாமந்தா அவர்களுக்கு ஒரு கடிதமெழுதி என்னிடம் கொடுத்தார். சர்க்காரின் கடையில் எனக்கு இடங் கிடைத்தது.

இங்கும் எனக்கு வேலை செய்ய நேர்ந்தது. சர்க்காரின் கடையில் உதவிசெய்வது, தேவைப்பட்டால் வெளியேபோய் நிலுவை வசூல் செய்வது. இருந்தாலும் கல்கத்தா கல்கத்தாதான். விசாலமான வாழ்க்கை, எவ்வளவோ வாய்ப்புகள்! பெரிய பெரிய கல்லூரிகள், புகழ் பெற்ற ஆசிரியர்கள், அவர்களுடைய எல்லையற்ற அறிவின் ஒரு சிறு துளி கிடைத்தாலே என்னுள்ளே ஆயிரம் விளக்குகள் பிரகாசமாக எரியத் தொடங்கும். உலகத்தின் உயிர்த் துடிப்பு இந்தக் கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்திருக்கிறது. அந்த உயிர்த் துடிப்புடன் ஒரு தடவை என்னால் ஒன்றிவிட முடிந்தால் திறந்த வான வெளியில் தலையுயர்த்தி நிற்பேன் நான்! காய்ந்து கிடக்கும் புல்லின் மேல் முதல் மழையின் நீர்த் துளிகள் விழுந்ததும் புல் புத்துயிர் பெற்றுச் சிலிர்த்தெழுவது போல!

சித்தப்பா நெல் விற்றுக் கொடுத்த பணத்துடன் நான் ஒரு கல்லூரிக்குப் போனேன். நெல்லை விற்றதன் விளைவாக எங்கள் குடும்பம் பல நாட்கள் அரைப் பட்டினியோ, முழுப் பட்டினியோ கிடக்க வேண்டியிருக்கும் என்று எனக்குத் தெரியும். இருந்தாலும் நான் நன்றாகப் படித்து நல்லமுறையில் பரீட்சையில் தேறிவிட்டால்...

பிரம்மாண்டமான கல்லூரிக் கட்டிடம். அதில் தேர்த் திருவிழாக் கூட்டம். அதில் எப்படியோ முண்டியடித்துக்கொண்டு அலுவலகத்துக்குள் நுழைந்து விட்டேன்.

"மூன்றாம் பிரிவில் பாஸா...? ஐ.எஸ்.ஸி.யில் இடம் வேணுமா–? ஊஹூம், இடமில்லை!"

ஒன்று இரண்டு இல்லை, சார். ஆறு கல்லூரிகள் என்னைத் திருப்பியனுப்பிவிட்டன.

கடைசியில் ஒரு சாதாரணக் கல்லூரியில் இடம் கிடைத்தது. பிறகு ஏதாவது சம்பளச் சலுகை வேண்டி அந்தக் கல்லூரியின் உதவித் தலைவரை அணுகினேன்.

"சலுகையா?" வியப்புடன் கேட்டார் அவர். "மூணாம் பிரிவில் பாஸ் பண்ணினவனுக்குச் சலுகையா?"

"சார், நான் ஏழைப் பையன்–"

"வங்காளிப் பசங்க எல்லாருமே ஏழைங்கதான். அப்படிப் பார்த்தா எல்லாப் பையன்களுக்கும் சம்பளச் சலுகை தரணும்!"

"நான் விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவன், சார்!"

எரிச்சலடைந்தார் உதவித் தலைவர். "அப்படீன்னா எதுக்குக் காலேஜுக்குப் படிக்க வந்தே? கிராமத்திலே விவசாயம் பண்ணிக்கிட்டு இருந்திருக்கலாமே! மேல் படிப்பு ஒங்களுக்கெல்லாம் உபயோகப்படாது. போ போ.. என்னைத் தொந்தரவு செய்யாதே!"

சலுகை கிடைக்கவில்லை, வீடு திரும்பும்போது, சாமந்தாவின் குமாஸ்தா என்னிடம் சொல்லியது நினைவு வந்தது— "குடியானவன் பிள்ளை வித்யாசாகர் ஆகப் போறியாக்கும்!"

சார், அப்போதே நான் கிராமத்துக்குத் திரும்பிப் போயிருக்க வேண்டும். அனல் கக்கும் வயல்வெளி, அதில் உழைப்பவனின் நெற்றி வியர்வை நிலத்தில் விழுகிறது— அதுதான் எனக்குரிய இடம். நான் அங்கே திரும்பிப் போயிருந்தால் பட்டினத்தின் அவமானச் சவுக்கடி என் உடம்பில் பட்டிருக்காது. ஆனால் நான் நம்பிக்கையைக் கைவிடவில்லை, சார். இறுதிவரை முயன்று பார்க்க வேண்டும் என்ற பிடிவாதம் என்னைப் பிடித்துக் கொண்டது.

சர்க்காரின் புகையிலைக் கடையில் ஓர் ஓரத்தில் நான் தங்கியிருந்தேன். சாமந்தாவோடு நான் தங்கியிருந்ததற்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்! அங்கே நான் தங்கியிருந்த அறை சிறிதுதான் என்றாலும் அறைக்கு வெளியே விசாலமான வெட்டவெளி இருந்தது, வெளிச்சம் இருந்தது, குளிக்க ஒரு பெரிய குளம் இருந்தது. காற்றில் ஊமத்தை, சம்பக, மகிழ மலர்களின் மணம் வந்தது. இதுவோ பராபஜார் சந்து, நடுப்பகலில் கடைகளிலெல்லாம் மின்சார விளக்குகள் எரிகின்றன. மூன்று முழமே அகலமான சந்தின் இருபுறமும் வானளாவிய பெரிய பெரிய வீடுகள். அவற்றின் சுவர்கள் ஈர்த்திருக்கின்றன. காற்று இல்லை, இரவு ஒரு மணிவரை ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஒருவரோடு ஒருவர் இடித்துக்கொண்டு நடமாடுகிறார்கள். வரிசை வரிசையாக அமைந்துள்ள கடைளிலிருந்து புகையிலை, வெல்லம்

இவற்றின் கலவையான தீவிர நெடி, காதைத் துளைக்கும் இரைச்சல்...

இவற்றுக்கு நடுவில் நான் ஒரு மூலையில் தங்கியிருந்தேன். இரவில் எலிகள் நடமாடும். இரவும் பகலும் கரப்புகளின் தொந்தரவு. சர்க்கார் கல்லூரிச் சம்பளத்தைக் கொடுத்து, கைச் செலவுக்காக ஐந்து ரூபாய் கொடுப்பார். அதற்குப் பதிலாக நான் காலையிலும் மாலையிலும் வெளியே போய் நிலுவை வசூல் செய்ய வேண்டும். ஆகையால் எனக்கு ஒரு டியூசன் பிடித்துக் கொண்டு அதன்மூலம் கொஞ்சம் பணம் சம்பாதிக்கவும் வழி யில்லை. புத்தகமா? ஐ.எஸ்.ஸி.க்குத் தேவையான புத்தகங் களெல்லாம் வாங்க என்ன செலவாகும் என்பதே எனக்கு இன்னும் தெரியாது. உங்களுக்கும் தெரியாது என்று நினைக்கிறேன். நீங்கள் படித்த காலத்தில் ஐந்து ரூபாய்க்குக் கிடைத்த புத்தகத்தின் விலை இப்பேது பன்னிரண்டு ரூபாய்க்குக் குறையாது. நடை பாதைப் பழைய புத்தகக் கடைகளிலிருந்து ஒரு சில புத்தகங்கள் வாங்கினேன். ஆனால் தேவையான புத்தகங்களில் பாதிகூட வாங்க முடியவில்லை.

படிப்பா? சர்க்காரின் வீடு பௌபஜாரில் இருந்தது. அங்கே தான் சாப்பிடப் போகவேண்டும். சாப்பிட்டு விட்டுத் திரும்பும் போது இரவு மணி பத்தாகி விடும். பிறகு ஒரு மின்சார விளக்கின் மங்கலான மஞ்சள் வெளிச்சத்தில் படிக்க உட்கார்ந் தால் களைப்பில் கண்கள் அறுந்து விழுவது போலிருக்கும், நோட்டுகளில் எழுதப்பட்ட குறிப்புகள் புரியாத கிறுக்கல்களாகத் தோன்றும். என்னையறியாமலேயே தூங்கிப் போய்விடுவேன். இரவு முழுதும் எலிகளும் கரப்புகளும் என் உடம்பின்மேல் ஏறித் திரிந்து கொண்டிருக்கும்.

கல்லூரியில் ஒரே கூட்டம். ஐந்து பேர் உட்காரக் கூடிய பெஞ்சியில் ஏழெட்டு பேர் நெருக்கியடித்துக் கொண்டு உட்கார வேண்டும். குறிப்பு எடுத்துக் கொள்ளும்போது நோட்டுகளை வைத்துக்கொள்ள வசதியில்லை. ஆராய்ச்சிக் கூடத்தின் நிலை இன்னும் வேடிக்கை. பதினைந்துபேர் பயிற்சி பெறக்கூடிய இடத்தில் ஐம்பது பேர் பயிற்சிபெற வேண்டும்.

நாட்டின் எதிர்கால விஞ்ஞானிகளுக்கு கல்வி கற்பிக்கப்படும் அழகு இதுதான்!

சார், அப்படியும் நான் என் முயற்சியில் குறை வைக்க வில்லை. என் போன்ற சாதாரண மாணவர்கள் படிக்கத்தான் கல்லூரிக்கு வந்திருந்தார்கள். அவர்களால் ஏன் படிக்க முடிய வில்லை, அவர்கள் ஏன் பரீட்சையில் தேறுவதில்லை...?

ஒரு நிகழ்ச்சியைச் சொல்கிறேன். அதை நினைத்தால் இந்த

நிலையிலும் எனக்குச் சிரிப்பு வருகிறது.

கல்லூரி நிறுவன நாள் விழா. அதில் கூட்டம், கொடியேற்றம், பேச்சு எல்லாம் விமரிசையாக நடந்தன. துணைத்தலைவர் மிகவும் நன்றாகப் பேசினார். பேசும்போது அவருக்கு கண்களில் கண்ணீர் வந்து விட்டது.

"நாங்கள் சேகரித்துள்ள புள்ளி விவரங்களின்படி, நம் மாணவர்களில் சுமார் பத்து சதவிகிதத்தினர்தான் எல்லாப் புத்தகங்களையும் வாங்க முடிகிறது, இருபது சதவிகிதத்தினர் சில புத்தகங்கள் மட்டும் வாங்குகிறார்கள், எஞ்சியவர்களால் ஒரு புத்தகங்கூட வாங்க முடிவதில்லை. இந்த நிலையில் நாங்கள் அவர்களுக்குக் கல்வியளிப்பது எப்படி? இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு ஏற்பட்டால் நாடு எவ்வளவு முன்னேறும்...!"

தீர்வைத்தான் அவர் முன்னமே சொல்லியிருந்தாரே 'கல்லூரிப் படிப்பு ஏழை மாணவர்களுக்காக அல்ல!' என்று...

இரண்டு மணி நேரம் கடந்து விட்டதை அறிவிக்கும் மணி அடித்து விட்டது. இன்னும் அதிக நேரம் என்னால் எழுத இயலாது, நீங்கள் இதுவரை படித்திருந்தால் உங்கள் தாராள மனதுக்கு இன்னும் தொந்தரவு கொடுக்கக் கூடாது. ஆகையால் என் கதையை சுருக்கமாகவே சொல்லி முடித்து விடுகிறேன். என் தாய்க்கு எழுதப் படிக்கத் தெரியாது. அவர் சொல்லியபடி சித்தப்பாதான் எனக்குத் தாறுமாறான கையெழுத்தில் கடித மெழுதுவார்.

"நீ பெரியவனாகு அப்பா, பெரிய மனிதன் ஆகு! உன் அப்பாவின் பெயரைக் காப்பாத்து! சுதந்திர பாரத்தின் தொண்டனாக நீ உழைக்க வேண்டும் என்பதை மறக்காதே!"

நான் மறக்கவில்லை, ஒருநாள்கூட மறக்கவில்லை. ஆனால் சுதந்திர பாரதம் எனக்கு உதவவில்லை, என் கல்விக்கு வசதி செய்யவில்லை. புகையிலைக்கடையில் வேலை செய்து, வகுப்பு என்ற பெயரில் அர்த்தமற்ற இரைச்சலுக்கு நடுவில் உட்கார்ந்து, வெக்கையும் வியர்வையும் இரைச்சலும் நிறைந்த பராபஜார் சந்தில் மஞ்சள் விளக்கு வெளிச்சத்தில் எல்லாம் மங்கலாகத் தெரிய... மண்டைக்குள் நரம்புகள் வெடித்துவிடும் போலிருக்கும். அங்கிருந்து ஓடிப்போய்விடத் தோன்றும் எனக்கு. ஓர் ஆழமான ஏரியின் கறுப்புத் தண்ணீரில் குதிக்கத் தோன்றும். சம்பகப்பூ, நாங்குப் பூக்களின் மணத்தை முகர்ந்து, நெஞ்சை நிரப்பிக் கொள்ள மனது ஏங்கும். மழைக் காலத்துக் கார் மேகத்தை நோக்கிக் கையை நீட்டிப் பாடத் தோன்றும்.

"மழையே, ஓடி வா பாய்ந்து!
நெல் கொடுக்கிறேன் அளந்து!"

ஆனால் கல்கத்தாவில் ஏரியின் கறுப்பான, குளிர்ந்த நீருக்கு எங்கே போவது? நாங்கு, கோங்கின் மணம் ஏது? எங்கள் வீட்டில் வயிறு நிறையச் சாப்பிட நெல்லும் இல்லை, எங்கள் வீட்டு மக்களின் பசித் தீயை அணைக்க ஒரு பொட்டு மழையும் இல்லை.

எங்கே ஓடிப் போவேன் நான்?

எப்படியும் நம்பிக்கையிழக்க மாட்டேன் நான்! நான் பிழைத்துக் கொள்வேன், பெரியவனாவேன்! நானில்லாவிட்டால் கொதியுலை எரியாது, நீர் மின்சாரம் பிறக்காது, அணு ஆராய்ச்சிப் பணிநிறைவு பெறாது. எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையில் பெட்ரோல், நீல எண்ணெய், மெழுகு இவையெல்லாம் உருப் பெறாது! சிற்பி மயனின் இரகசிய மந்திரத்தை நான் அவனிட மிருந்து பிடுங்கிக் கொள்ள வேண்டும்! நான் சுதந்திர பாரதத்தின் விஞ்ஞானி.

சார், எல்லாம் கனவு! வங்காளத்தின் கல்லூரிகளில் என் போன்ற எண்ணற்ற மாணவர்கள் இது மாதிரி கனவுகளுடன் நடமாடுகிறார்கள். ஒரு நாள் அவர்களது கனவு தகர்ந்து போய்விடும்...

நான் சரியாகப் படிக்க முடியவில்லை, சார்! எப்போது படிப்பேன், எப்படிப் புத்தகம் கிடைக்கும் எனக்கு? புத்தகங்களை யாரிடமாவது கேட்டு வாங்கி, மஞ்சள் விளக்கின் மங்கிய வெளிச்சத்தில் படிக்க உட்கார்ந்தால் எழுத்துக்கள் கிறுக்கல்களாக, வரிசை வரிசையாக, நெளியும் புழுக்களாகக் கண்ணுக்குத் தெரிந்தன. பிறகு நரம்புகள் தளர்ச்சியடையும், உணர்வுகள் மயங்கும், புகையிலை, வெல்லக் கழிவு, எலி, கரப்பு, வெக்கை இவற்றின் கலவையான நெடியை முகர்ந்தவாறு நான் காலையில் விழிக்கும்போது என் தலைமேல் இருபது மணுச்சுமை ஒன்று அழுத்திக் கொண்டிருப்பது போலிருக்கும். அப்புறம் எட்டுமணி அடிப்பதற்குள் கடைக்கணக்கு வழக்கு வேலை!

முதலாண்டுப் பரீட்சையில் யாரும் ஃபெயிலாவதில்லை. கல்லூரிச் சம்பளம் கொடுத்திருந்தவர்கள் எல்லாருமே பாஸ்! இரண்டாம் ஆண்டில் இறுதித் தேர்வுக்கு முந்தைய நுழைவுத் தேர்வு வந்தது.

சார், இந்த இடத்தில் என் தவறு ஒன்றை ஒப்புக் கொள்கிறேன். நுழைவுத் தேர்வு நெருங்க நெருங்க என் மனதில் எப்போதும் அணையாத நெருப்பு ஒன்று எரியத் தொடங்கி விட்டது. எனக்கு ஒரு சில புத்தகங்கள் மட்டும் கிடைத்துவிட்டால் நான் இறுதிப் பரீட்சையில் முதல் பிரிவில் இல்லாவிட்டாலும் இரண்டாம் பிரிவிலாவது பாஸ் செய்து விடுவேன், கணக்கில்

சிறப்பு மதிப்பெண்ணும் பெற்று விடுவேன்!

சார், என் மேல் கோபித்துக் கொள்ளாதீர்கள். என் நிலையைப் புரிந்து கொள்ளுங்கள். எனக்கு வெறி பிடித்துவிட்டது.

அதன்பின்... அதன்பின் நான் என் சக மாணவர்களின் புத்தகங்களைத் திருடத் தொடங்கினேன்!

நீங்கள் என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டாலும் நினைத்துக் கொள்ளுங்கள். நான் திருடனாகி விட்டேன் என்பதை என்னாலேயே நம்ப முடியவில்லையே! என் தந்தை நாடு சுதந் திரம் பெறுவதற்காகத் தம் இரத்தத்தைக் கொடுத்தார். அவருடைய மகனான நான் திருடனாகி விட்டேன்!

மாணவர்கள் என் பாடப் புத்தகங்களைத் திருடுகிறார்கள், தேர்வில் காப்பியடிகிறார்கள். பிடிபட்டால் காட்டு மிராண்டித் தனமாக நடந்து கொண்டு தேர்வு அரங்கத்திலிருந்து வெளியேறுகிறார்கள்? இவையெல்லாம் தவறுகள்தான், மிகப் பெரிய தவறுகள்தான். யாரும் இவற்றை ஆதரிக்கவில்லை.. ஆனால் இவை ஏன் நிகழ்கின்றன? மாணவர்கள் ஏன் தவறான வழிகளில் செல்கிறார்கள்? இது எவ்வளவு முக்கியமான விஷயம் என்பதை யோசித்துப் பார்த்திருக்கிறீர்களா..?

திருடப்பட்ட புத்தகங்களைப் படித்து எப்படியோ நுழைவுத் தேர்வில் தேறிவிட்டேன், இனி இறுதித் தேர்வு.

அதற்குப் பணம் கட்டவேண்டும்— நிறையப் பணம்.

சித்தப்பாவின் கடிதத்திலிருந்து கிராமத்தில் எங்கள் குடும்ப நிலை மிகவும் மோசமாயிருப்பதாகத் தெரிந்தது. அறுவடையாகிச் சிறிது காலமே ஆகியிருந்தும் நெல் பற்றாக்குறை; உண்டியலை உடைத்து அதிலிருந்த காசையும் செலவு செய்தாகி விட்டது. இனி எனக்குப் பணம் அனுப்புவதானால் மாட்டை விற்க வேண்டியதுதான்.

“மாட்டை விற்கவேண்டாம். நான் எப்படியோ சமாளித்துக் கொள்கிறேன்” என்று சித்தப்பாவுக்குக் கடிதம் எழுதிவிட்டேன். ஆனால் பணத்துக்கு என்ன செய்வது? மாணவர் உதவி நிதியிலிருந்து பதினைந்து ரூபாய் கிடைத்தது. பாக்கிப் பணம்?

சர்க்கார் என்னைக் கூப்பிட்டனுப்பினார். “தேர்வுக்கு வேண்டிய பணம் ஐம்பது ரூபாயை நான் தருகிறேன், கவலைப் படாதே!” என்றார்.

எவ்வளவு இரக்கம் அவருக்கு!

பிறகு புரிந்தது, அது வெறும் இரக்கம் அல்ல என்று. அதற்குப் பின்னால் ஒரு பயங்கரக் கோரிக்கை இருந்தது. உலகத்தில் ஒவ்வோர் இரக்கச் செயலுக்கும் ஒரு பயங்கர விலை கொடுக்க வேண்டும்.

பணம் கிடைத்தது. அந்தக் கடனைத் தீர்க்க இரண்டு மாதங்கள் உழைக்க நேர்ந்தது.

நம்புவீங்களா, சார்? கணக்கு, இயற்பியல், வேதியியல், வங்காளி, ஆங்கிலம் படிக்க முடியவில்லை என்னால். ஐம்பது ரூபாய்க்காக நான் அயர்ந்து மயங்கும் கண்களுடன், தலைமேல் இருபது மணுச்சுமையுடன் இரவு கண் விழித்துக் கணக்கு வழக்குகள் தயார் செய்தேன். வருமான வரி அதிகாரிகளின் கண்ணில் மண் தூவுவதற்காகப் போலிக் கணக்குகள்!

இவ்வாறு என் ஒவ்வொரு நரம்பையும் ஒவ்வொரு துளி இரத்தத்தையும் செலவிட்டு நான் அந்த ஐம்பது ரூபாய்க் கடனைத் தீர்த்தேன்.

இதற்குப் பிறகு படிக்க முடியுமா? நான் மாமனிதன் அல்லவே!

அப்படியும் தேர்வு எழுத வந்து விட்டேன். இறுதிவரை நம்பிக்கையிழக்கவில்லை நான். கடைசி நேரத்தில் ஏதாவது அற்புதம் நிகழும் என்று நம்பினேன் நான். தேர்வில் காப்பியடிப் பதற்காகப் புத்தகங்களின் சில பக்கங்களைக் கிழித்துக் கொண்டு வந்திருந்தேன். ஆனால் நான் எதிர் பார்த்த அற்புதம் நிகழவில்லை. முதல் மூன்று நாள் தேர்வுகளில் அந்தக் கிழிந்த காகிதத் துண்டு களைச் சட்டைப் பையிலிருந்து வெளியே எடுக்க வாய்ப்புக் கிடைக்கவில்லை எனக்கு. சர்க்காரின் போலிக் கணக்குப் புத்த கங்கள் என் கண்முன் நடனமாடத் தொடங்கின. பக்கத்திலுள்ள மாணவர்களும் தேர்வு அரங்கிலிருந்த கண்காணிப்பளர்களும் அந்த புத்தகங்களின் பக்கங்களாகத் தோற்றமளித்தார்கள்—

இந்த வங்காளிப் பரீட்சைதான் கடைசிப் பரீட்சை.

சார், எச்சரிக்கை மணி அடித்து விட்டது. இன்னும் ஐந்து நிமிடங்களில் விடைத்தாளைப் பிடுங்கிக் கொண்டு விடுவார்கள். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி முடித்து விட்டேன். இன்று இருட்டியதுமே நான் ஏதாவதொரு ரயிலுக்கடியில் என் சுமை முழுவதையும் இறக்கி வைத்து விடுவேன்.

நான் பிழைத்திருந்து வாழ விரும்பினேன் சார்! ஸ்வாதீன் குமாரான நான் சுதந்திர பாரத நாட்டுக்காக வாழ விரும்பினேன். நான் ஏன் வாழ முடியவில்லை என்ற கேள்வியை என் போன்ற ஆயிரமாயிரம் மாணவர்களின் சார்பில் உங்கள் முன் வைத்து விட்டுப் போகிறேன். இதன் விடையை யோசித்துப் பாருங்கள்!

நான் கோழைபோல் தற்கொலை செய்து கொள்கிறேனா? இல்லை, சார்— இல்லவேயில்லை! இது என் தோல்வியல்ல, என் எதிர்ப்பு! ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்திரண்டாம் ஆண்டின் செப்டம்பரில் ஒரு பிரளய இரவில் என் தந்தை தன்

நெஞ்சின் இரத்தத்தை இந்த நாட்டு மண்ணில் கொட்டினார். அதுபோல் என் இரத்தமும் நாட்டின் இலட்சக்கணக்கான மாணவ மாணவியரின் சார்பாக ஒரு புதிய வரலாற்றைத் தொடக்கி வைக்கும். அந்த வரலாறு எப்போது முழுமை பெறும் என்று எனக்குத் தெரியாது. உங்களுக்குத் தெரியுமா, சார்! உங்களால் சொல்ல முடியுமா?

வணக்கம்!

*('எக்சிபிஷன்', 1968)*

# சிறியசொல்

சந்தோஷ்குமார் கோஷ்

அது என் முதுகுக்குப் பின்னால் குனிந்து கொண்டு நின்றது. அதன் மூச்சுக் காற்று என் காதுகளைத் தொட்டது. என் கை விரல்கள் செயலிழந்து விட்டன.

அது சொல்லியது—"ஏன் அனாவசியமாப் பழைய காகிதக் குப்பையைக் கிளறித் தூசியைக் கிளப்பறே? சரசிஜ், ஒனக்கு அந்தக் கதை கிடைக்காது!"

அதன் வாய் என் காதருகில். இயற்கைக்கு மாறான, கரகரப்புக் குரல்—பிசாசின் குரல்போல. தொண்டைக் குழாயில் ஓட்டையிருந்தால் குரல் இப்படித்தான் ஒலிக்கும்.

"எனக்கு அந்தக் கதை வேணுமே!" நான் சொன்னேன்.

"வேணுமா?" கேலியாகக் கேட்டது அது, "எதுக்கு?"

"ஒப்பிட்டுப் பார்க்கத்தான். அந்தக் கதை அசலா, அல்லது இப்போ ஒனக்குச் சொன்னேனே, பிஜு மாமியோட கதை, அது அசலான்னு— பார்ப்பேன்.."

"அந்தக் கதையில என்ன இருக்கு...?"

"எல்லாம் தெளிவா ஞாபகமில்ல.. மழை கொட்டற ராத்திரி, சோன்னு காத்தடிக்குது, எங்க வீட்டுத் திண்ணையிலே அந்தப் பிச்சைக்காரி குப்புறக் கவுந்துக்கிட்டுத் தன் குழந்தையைக் காத்து மழையிலேருந்து காப்பாத்தப் பார்த்தா. அப்படியும் குழந்தை குளிர்லே நடுங்குது, அதோட ஒடம்பு நீலம் பாரிச்சுப் போய்க்கிட்டிருக்கு. கடைசியிலே அவ இங்கேயும் அங்கேயும் திரும்பிப் பார்த்துட்டுத் தன் ஆடையை அவுத்து நாலா மடிச்சு அதிலே குழந்தையைச் சுத்தி வைக்கறா..இந்தக் காட்சி நல்லா ஞாபகமிருக்கு எனக்கு.."

இதைக் கேட்டுப் பெரிதாகச் சிரித்தது அது. அதன் கறுப்பு நிறத் தொள தொள அங்கியின் மடிப்புகள் இரவின் இருட்டோடு சேர்ந்து கரைந்தன.

அதன் பார்வையை நேரில் சந்திக்கத் தேவையில்லை எனக்கு. எரிச்சலுடன் கேட்டேன், "இந்த கதையில் சிரிக்கும் படி

என்ன இருக்கு?"

"இது ஹாஸ்யம்தான்னு ஒனக்கும் தெரியும்... இதை எழுதி எவ்வளவு காலமாச்சு?"

"எவ்வளவு வருசமாச்சுன்னு சொல்லத் தெரியாது எனக்கு. இதை எழுதின காலத்திலே காலணாவுக்குக் கடலை வாங்கினா அதை ஒரு மணி நேரம் கொறிச்சுத் தின்னுட்டிருக்கலாம். அரையணாவுக்கு டீ வாங்கிக்கிட்டு டீக்கடையிலே ரெண்டு மணி நேரம் ஒக்காந்திருக்கலாம். ரெண்டணா கொடுத்து டிக்கெட் வாங்கித் தரமதல்லாவிலேருந்து அலிப்பூர் வழியா பாலிகஞ்ஞ் போகலாம்... அப்போ..."

அது கையை உயர்த்திச் சொல்லியது, "போதும், போதும்! மேலே சொல்ல வேண்டாம்! சரசிஜ், அந்தக் கதையை இனி மேல் பேசாதே!"

"அது ஏன் தேடினாக் கிடைக்காது?"

"ஏன்னா, அது இல்லே..."

அது கனைத்தது- ஒரு மாதிரியாக, பிறகு புன்சிரிப்புடன் சொல்லிற்று, "அது என்கிட்டே இருக்கு- இதோ பாரு!" மடிப்புகள் அலையலையாக எழுந்து இரவின் இருளில் கரைந்தன. அது ஏதோ ஒன்றை வெளியே எடுத்து என் கண் முன்னே ஆட்டியது. மங்கலான வெளிச்சத்தில் அது என்ன என்று சரியாகத் தெரிய வில்லை. அதைப் பார்த்தால் ஒரு வற்றிப்போன பூனைக்குட்டி போல் தோன்றியது. மங்கலான பிதுங்கி வந்திருக்கும் கண்கள், ஒளியிழந்த கண்மணிகள்.

அதைப் பிடிக்கப் போனவன் சட்டென்று கையை இழுத்துக் கொண்டேன்.

அந்த உருவம் சிரித்தது. "பார்த்தியா, நீயே அதை எடுத்துக்க விரும்பலே. அதைத் தொடவே பயப்படற நீ அதை எப்படிக் காப்பாத்துவே?" அது அந்த பொருளை மறுபடி தன் அங்கிக்குள் நுழைத்துக் கொண்டுவிட்டது. "அது என்கிட்டயே இருக்கட்டும்."

நான் பயத்துடன், "நீ யாரு?" என்று கேட்டேன்.

அது பதில் சொல்லாமல் கொஞ்சங் கொஞ்சமாகப்பின் வாங்கியது. அதன் மேலங்கி அசைந்தது. ஆடியசைந்தவாறே அது பின்னால் போய்... போய்... இருளில் மறைந்து போய்விட்டது.

அப்போதுதான் நான் அது என்ன என்று புரிந்து கொண்டேன். அது காலம்...! அதாவது, எந்தக் காலத்திலே காலணாவுக்குக் கடலை வாங்கினா இத்தியாதி, இத்தியாதி... அந்தக் காலம் அது! அந்தக் காலத்திலே 'வேலை காலி', 'வாடகைக்கு வீடு கிடைக்கும்', 'டியூஷன் ஆசிரியர் தேவை' விளம்பரங்கள் காஸ் விளக்குக் கம்பங்களில் ஒட்டப்பட்டிருக்கும்.

காலம் அந்தக் காலத்து நிகழ்ச்சியை இந்தக் காலத்தின் வெளிச்சத்தில் காட்டியதால்தான் அந்த நிகழ்ச்சி ஒரு செத்த பூனைபோல் எனக்குத் தோன்றியிருக்கிறது. அதன் மேலங்கிக் குள்ளே தலையை நுழைத்துப் பார்க்க அது என்னை விட்டிருந்த தால், என்னுடைய அந்தக் காலத்துப் பார்வை, அந்த வயது, அந்தக் காலத்து மனம், வெளிச்சம், வாசனை, மோகம் எல்லா வற்றையும் திரும்பிக் கொடுத்திருந்தால் அந்த அழகான வெட் கத்தைத் துறந்த பிச்சைக்காரப் பெண் மறுபடி உயிரோடிருப்பதைக் கண்டிருப்பேன்.. மேலங்கிக்குள்ளே இருக்கும்வரை உயிர் துடிப்புடன் இருப்பதெல்லாம் அங்கிக்கு வெளியே வந்ததும் பிணமாகி விடுகின்றன..

* * *

அப்புறம் என்ன ஆச்சு, சரசிஜ்?

அப்புறம் பிஜு மாமி மிகவும் சாந்தமான குரலில் என்னை 'வா' என்று அழைத்தார். நான் டாக்சி சார்ஜைக் கொடுத்துவிட்டு இறங்கி வந்தேன். ஓரத்தில் சாக்கடை. ஒரு தாவுத் தாவி அதைத் தாண்டி வர வேண்டியிருந்தது. அப்படியும் என் ஷார்க்ஸ்கின் பாண்டில் கொஞ்சம் சேறு பட்டுவிட்டது.

டாக்சியின் அகலத்தை அளவெடுத்து அமைந்த மாதிரி இருந்தது அந்தச் சந்து. அதற்குள் நுழைந்ததும் அங்கே நான் முன்னமே வந்திருப்பதாகத் தோன்றியது. எப்படியும் அந்த நாற்றம் எனக்குப் பழக்கமானதுதான். பழைய காதலியின் வீட்டுக்குள் நுழையும் உணர்வு ஏற்பட்டது எனக்கு. நுழையக் கொஞ்சம் தயக்கம்.. ஆனால் பழகிய உணர்வு.. உடம்பு மடிப்புகள், சோம்பல் முறிக்கும்போது முடியின் மணம். முன்பு நடந்து கொண்ட மாதிரி இப்போது நடந்துகொள்ள முடியாது, சங்கடமாக இருக்கும். நேரில் போய் நிற்பேன், ஆனால் என் முகத்தை அவளுடைய முகத்துக்கு அருகில் கொண்டுபோகமாட்டேன்..

தடை என்ன இப்போது? என் வயதா, என் சட்டைப் பைக்குள் கத்தையாக மடித்து வைத்திருக்கும் கரன்சி நோட்டுக்களா..? என் புதுச் செருப்பு கிரீச் கிரீச்சுனு சத்தம் போடாமலாவது இருந்திருக்கலாம்.

பிஜு மாமி ஒரு விளக்கு எடுத்துக்கொண்டு வந்தார் "விளக்கு என்னத்துக்கு? எனக்கு வர்றதிலே ஒண்ணும் சிரம மில்லே"ன்னு சொன்னேன். "பரிமல் எப்படியிருக்கான், மாமி?"

மாமியின் இறுகிய முகத்தைப் பார்த்ததுமே என் கேள்வியைக் கேட்டிருக்க வேண்டாம் என்று புரிந்தது.

மாமி விரலால் உள்பக்கம் சுட்டிக் காட்டினார்.

அறைக்குள் நுழைந்து அங்கிருந்த ஒரு ஸ்டூலின்மேல் உட்கார்ந்தேன், என் வயிறு மடிப்பு அழுந்தியது. என் சட்டைப் பொத்தன்களை அவிழ்த்துவிட்டுக் கொள்ளலாமா என்று பார்த்தேன். நான் செருப்புடன் உள்ளே நுழைந்தது சரிதானா என்று தெரிந்து கொள்வதற்காக அந்த அறையில் வேறு செருப்புகள் இருக்கின்றனவா என்று தேடினேன்.

"டீ கொண்டு வரவா?"

தன்னினைவுக்கு வந்தேன், பிஜூ மாமிதான் கேட்கிறார்.

"கொண்டு வாங்க" என்று சொன்னேன்.

அறையின் ஒரு மூலையில் ஈக்கள் ஒரு கோப்பையில் ஒட்டிக் கொண்டிருந்த டீயை நக்கிக் கொண்டிருந்தன. இரண்டு கரப்புகள் கோப்பைக்குள் இருந்து தும்பிக்கைகளை நீட்டி வெளியே எட்டிப் பார்த்தன. பிஜூ மாமி அந்தக் கோப்பையை எடுத்துக் கொண்டு வெளியே போனார்.

("அப்புறம்? சரசிஜ், ஒண்ணையும் மறைக்காதே!")

"இல்லை, ஒன்றையும் மறைக்கவில்லை."

நீ யார் என்று எனக்குத் தெரியாது. நீ ஒருவேளை என் மனச்சாட்சியாக இருக்கலாம். எல்லாவற்றையும் சொல்வதற்காகத் தான் உன்னைக் கூப்பிட்டிருக்கிறேன். அந்த டீயை என்னால் குடிக்க முடியவில்லை என்பதை உன்னிடம் ஒப்புக் கொள்கிறேன். என்ன நடந்தது தெரியுமா? நான் கோப்பையை வாங்கிக் கொள்ளக் கையை நீட்டியபோது அது கையிலிருந்து வழுகிக் கீழே விழுந்து விட்டது. என் வெள்ளை வெளேர் ஷார்ஸ்கின் உடையில் சில டீத்துளிகள் பட்டுவிட்டன.

"அடடே!" என்று சங்கடத்தோடு சொல்லிவிட்டு ஒரு கந்தையை எடுத்த வர ஓடினார் பிஜூ மாமி. "த்சொத்சோ" என்றேன் நான்.

நீ சிரிக்கிறாயா? நீ என்ன நினைக்கிறாய் என்று எனக்குத் தெரியும். நான் வேண்டுமென்றோ, என் உள்மன உந்துதலால் நானறியாமலேயோ கோப்பையைத் தவறவிட்டதாக நீ நினைக்கிறாய். சற்று முன்தான் அந்தக் கோப்பையில் கரப்பு நடமாடுவதைப் பார்த்திருந்தேன் நான். அதைத்தவிர இந்த அழுக்குத் தரை-ஊசிப்போன பொருள்களின் நாற்றம்-இந்தச் சூழ்நியைில் எதுவும் என் தொண்டையில் இறங்காது.

பின்னர் இது குறித்து எனக்குப் பச்சாத்தாபம் ஏற்படாமலில்லை. நான் பண்பற்ற முறையில் நடந்து கொண்டு விட்டேன் அற்பன் மாதிரி. என் செய்கை பிஜூ மாமிக்குப் புரிந்துவிட்டதோ இல்லையோ எனக்குத் தெரியாது. என்ன செய்வது.

நாமெல்லாருமே நம் சுபாவத்துக்கு அடிமைகள். எனக்கு அந்த நிலையில் வாந்தி வரும் போலிருந்தால் அதற்கு நானா பொறுப்பு? ஏப்பமோ தும்மலோ வராமல் தடுத்து கொள்ள முடியுமா நம்மால்?

"பத்துப் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் கூட நீ இதை விட மோசமான நிலையில் இருந்தாய் என்பதை மறந்து விட்டாயா? அப்போது இந்த மாதிரி சந்தில், இந்த மாதிரி அறையில் வெகு சாதாரணமாக வசித்திருக்கிறாயே!"

"ஆமாம். ஆனால் அது வேறு காலம், இது வேறு காலம். இதோ பார், நாம் ஒரு பழக்கத்திலிருந்து இன்னொரு பழக்கத்துக்கு மாறுகிறோம்-ஒரு பிறப்பிலிருந்து இன்னொரு பிறப்புக்கு மாறுவது போல. நான் ஒரு காலத்தில் அந்தப் பாழடைந்த கிணற்று வாழ்க்கையில் ஒன்றியிருந்தேன் என்பது உண்மைதான். அதுபோல் நான் அந்த வாழ்க்கையை விட்டு வெளியேறி விட்டேன் என்பதும் உண்மையே. உண்மையை ஒப்புக் கொள்வதில் குற்ற மில்லை. ஒருவன் தன் பத்தாம் வயதில் அணிந்து கொண்ட சட்டை அவனுடைய இருபதாம் வயதில் அவனுக்குப் பொருந்தா விட்டால் அது அவன் குற்றமா? அது காலத்தின் குற்றம்...!"

பக்கத்து அறையிலிருந்து மூச்சிரைக்கும் அரவம் கேட்டது. நான் கேள்விக்குறியுடன் பிஜு மாமியைப் பார்த்தேன்.

"பரிமல்... அவன் நெஞ்சிலே சளி சேர்ந்திருக்கு. அதனால மூச்சுவிடக் கஷ்டப்படறான். இப்ப தூங்கிக்கிட்டிருக்கான். இப்பக் கூட மூச்சுத் திணறுது..."

ஈரித்த தரை... நெடுங்காலத்துப் பாசி படர்ந்தாற்போல். தரை தெரு மட்டத்தை விடத் தாழ்வானது. ஆகையால் ஒரு காய்ந்த தண்ணீர்த் தொட்டி போலிருந்து அது.

("சரசிஜ், மேலே பேசாதே! இதுக்கப்பறம் என்ன சொல்லுவேன்னு எனக்குத் தெரியும் உத்தரத்திலே கறையான், கிழிஞ்ச தலையணை, கதவோரத்திலே ஒட்டடை... இதெல்லாந் தானே? ஒன் வர்ணனை உண்மையாயிருக்கலாம், ஆனால் அதிலே உயிரிருக்காது. நீ விலகி வந்து விட்ட வாழ்க்கையை வர்ணிக்க முயலாதே!")

விளக்கு அணைந்து விடும்போல் பக்பக்கென்று எரிந்து. அதில் பார்வையைப் பதித்தவாறே மாமியைக் கேட்டேன், "பரிமலுக்கு எவ்வளவு நாளா ஒடம்பு சரியில்லே?"

"இன்னியோடே இருபத்திரெண்டு நாள்."

"டாக்டர் என்ன சொல்றார்?"

"டாக்டர்கிட்டே போனாத்தானே! அந்த அதிருஷ்டங் கெட்டவகிட்டே ஒண்ணுமில்லே. வெறுங்கை, வெறுங்

கழுத்து-அவளைக் கண்ணால பார்கக முடியலே, சரசிஜ்! அவ கல்யாணத்திலே நாலஞ்சு பவுன் நகை போட்டிருந்தேன். எல்லாத்தையும் வித்துச் சாப்பிட்டாச்சு"

"நீங்க எப்போ வந்தீங்க மாமி?"

"புதனோட புதன் எட்டு நாளாச்சு... என் வயித்தில் பொறந்தவ இல்லியா! செய்தி கேட்டப்பறம் வராமே இருக்க முடியல்லே. குக்கு என்னோட உசிருன்னு ஒனக்குத்தான் தெரியுமே!"

"தெரியும், மாமி."

"கையிலே இருந்ததை எடுத்துக்கிட்டு ஓடி வந்தேன். அங்கே என்ன நிலைமைன்னு ஒனக்குத் தெரியுமே! இந்த வருஷம் குக்கு பெரிய பரீட்சை எழுதணும். பரீட்சைக்கு இன்னும் பணம் கட்டியாகலே."

"புரியுது, மாமி.."

மாமி முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொள்ளும் போது அதிலிருந்த கிழிசல் என் கண்ணில் பட்டது.

"கொழந்தைகளோட சட்டை எல்லாம் கிழிஞ்சு போச்சு. ரெண்டு மாச வாடகை - அம்பத்திரண்டு ரூவா- பாக்கி. ஒரு வேளை சாதம், ஒரு வேளை சப்பாத்தி சாப்பிடறோம். அப்படியும் மாசத் தேவை பூராவையும் ரேஷன்லே வாங்க முடியலே. இருந்தாலும் விஷயத்தைக் கேட்டு உடனே வரவேண்டியதாப் போச்சு. பரிமலோட உசிரு மொதல்லே, மத்தெல்லாம் அப்பறம்."

தன் முந்தானை முடிச்சை அவிழ்த்து அதிலிருந்து பல மடிப்புகளாக மடித்து வைக்கப்பட்டிருந்த ஒரு பழைய நோட்டைக் கையிலெடுத்துக் கொண்டு என்னை நெருங்கினார் மாமி. ஏனென்று புரிந்தது எனக்கு.. நான் சற்றுப் பின் வாங்கினேன். மாமி என் கையில் ரூபாய் நோட்டைத் திணிக்கப் போகிறார்-அதையேதான் செய்தார் அவர். அவருடைய கை நடுங்கியது; குரலுந்தான்.

"சரசிஜ், என் கையிலே வேறே ஒண்ணுமில்லே, இதிலே பரிமலுக்கு இஞ்செக்ஷன் வாங்க முடியுமா பாரு.. நான் திரும்பிப் போறதுக்காக டிக்கெட் பணத்தை கஷ்டப்பட்டுச் சேர்த்து வைச்சிருந்தேன்..."

நான் பணத்தை வாங்கிக் கொள்ளவில்லை. வாங்கிக்கொள்ள முடியவில்லை என்னால். இது ஒன்றும் பெரிய விஷயமில்லை. என்னுடைய அந்தக் கதை ஞாபகம் வந்தது எனக்கு—பிச்சைக் காரப் பெண் தன் துணியை அவிழ்த்துக் குழந்தைக்குப் போர்த்தி விட்டாள்...

("குக்கு-அதாவது உஷாவை-அன்னிக்குப் பார்த்தியா, சரசிஜ்?")

பார்த்தேன், அவள்தான் விளக்கை எடுத்துக் கொண்டு சந்து முனை வரை என் பின்னால் வந்தாள்.

சந்து முனைக்கு வந்ததும் நான் திரும்பிப் பார்த்தேன் விளக்கிலிருந்து வந்த வெளிச்சமும் புகையும் அவளது உடலைத் துண்டு துண்டாக்கிக் காட்டின. "என்ன இப்படி ஆயிட்டே, உஷா?" என்று கேட்டேன். அவள் சிரித்தாள், பிறகு முகத்தைத் திருப்பிக் கொண்டு, "நான்தான் ஒடம்பு முடியாமே இருந்தேனே...! அதோடே இவரோட வியாதி வேறே... அநேகமாக எல்லா ராத்திரியும் தூக்காம முழிக்க வேண்டியிருக்கு..." என்று சொன்னாள்.

அவளுடைய தலையில் முக்காடு இல்லை. அவளுடைய முடி காற்றில் பறந்தது. விளக்குத் திரியின் வெளிச்சம் சீராக இல்லாததால் ஒளியும் நிழலும் அவளுடைய உடலில், முகத்தில், கன்னத்தில், கண்களில் மாறி மாறிப் படர்ந்தன.

உஷா மறுபடி சிரித்தாள். "என்ன பார்க்கறே, என்னைப் பார்த்தா பிசாசு போல இருக்கா...? இந்தச் சில வருஷங்களிலே நான் ஒரேடியாப் பிசாசாஆயிட்டேன். இல்லியா?"

"இல்லேயில்லே, நீ முன்னே மாதிரியேதான் இருக்கே" என்று நான் சொல்லியிருக்க வேண்டும், ஆனால் நான் மௌனமாயிருந்தேன்.

உஷா திடீரென்று மெல்லச் சிரித்தாள். "ஒனக்கு நல்ல களை வந்திருக்கு."

"நீ இன்னும் குண்டாயிட்டே" என்பதைத்தான் அவள் சுற்றி வளைத்துச் சொல்கிறாளோ என்று புரியாமல் நான் கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டேன். என் ஷார்க்ஸ்கின் பேண்டும் சட்டையும் எனக்கு உறுத்தின.

"எங்க சந்திலே ராத்திரி பூரா காத்துக்கிட்டு நின்னாலும் டாக்சி கிடைக்காது" என்றாள் அவள்.

அவளது பேச்சின் குறிப்பைப் புரிந்து கொண்ட நான் சங்கட உணர்வுடன் தெருவில் நடக்கத் தொடங்கினேன். அப்போது 'நான் மறுபடி வருவேன்' அல்லது 'மறுநாள் வருவேன்' என்று முணுமுணுத்திருக்கலாம்...

* * *

அது சொல்லியது, "சாப்பாடு மூடி வச்சிருக்கு சரசிஜ்! நீ அதைத் தொட்டுக்கூடப் பார்க்கல்லியே!"

"எனக்கு வேணாம்! என்னை இந்த வராந்தாவிலே உக்காந்து சிகரெட்டை முழுசாக் குடிக்க விடு!" நான் சொன்னேன்.

அது சிரித்து, பின்னாலிருந்து அசிங்கமான முறையில் என்னைக் கட்டிக் கொண்டது. அதன் இருட்டு நிறக் கை என் கழுத்தில்.

"என் குரல்வளையை அமுக்கிக் கொல்லப் போறியா?"

அதன் முகத்தை நான் பார்க்கவில்லை அப்போது. ஆனால் அது இருந்தது, என் கழுத்தைக் கட்டிக் கொண்டு இருந்தது. அது சொல்லியது, "கொன்னு என்ன பிரயோசனம்... கொஞ்சம் புகையாகி மேலே பறக்கும், கொஞ்சம் சாம்பலாகிக் கிடக்கும்... இந்த ரெண்டு மணி நேரத்தில் நீ எவ்வளவு சிகரெட் குடிச்சுட்டே! சாப்பாட்டைத் திற, வயித்துக்குக் கொஞ்சம் சாப்பிடு!"

"எனக்கு பசியில்லேன்னு சொன்னேனே!"

"ஏன் இல்லே?"

"ஏன்னு ஒனக்குத் தெரியும். என் மனசு சரியில்லே. இன்னிக்கு உஷாவைப் பார்த்துட்டு வந்திருக்கேன். அங்கே போய்ப் பார்த்தா அழுகை வருது. உஷாவோட புருஷன் பரிமல் படுத்த படுக்கையாகக் கிடக்கான். அவன் பொழைப்பாங்கற நம்பிக்கை இல்லை. உஷாகிட்டப் பணமில்லே. அவ கையிலே ஒரு வளையல்கூட இல்லே..."

"தெரிஞ்சுக்கிட்டேன். அதனாலேதான் ஒன் மனசு சரியா இல்லையா, சரசிஜ்?"

அது பேசிய முறையே சரியாக இல்லை.

மிகவும் வேதனையுடன் நான் சொன்னேன், "உஷா எனக்கு எவ்வளவு வேண்டியவள்னு ஒனக்குத் தெரிஞ்சிருந்தா இப்படியெல்லாம் பேசமாட்டே... என்னோட அவளுக்கு எப்படிப் பட்ட உறவு ஏற்பட்டிருக்க முடியும்! ஒரு சின்னப் பிசகு பண்ணிட்டு இப்ப அதுக்கான விலையைக் கொடுத்துக் கிட்டிருக்கா."

அது ஹாஹாவென்று சிரித்தது. அந்தச் சிரிப்பு உடைந்த கண்ணாடியின் எண்ணற்ற சில்லுகள் போல் என்னைக் குத்திக் கீறியது.

அது சிரிப்பதை நிறுத்திவிட்டுச் சொல்லியது, "நெஞ்சிலே கை வைத்துச் சொல்லு, சரசிஜ்! நிசமாவே ஒனக்கு வருத்தந்தானா? உஷா ஒன்னை உதறிட்டுப் பரிமலைக் கலியாணம் பண்ணிக் கிட்டா, அதனாலே அவளுக்கு சுகமில்லே, இன்னிக்கு அவ ஒரு இருட்டறையிலே உக்காந்துகிட்டுத் தவிக்கறா- இதையெல்லாம் பார்த்த ஒனக்குக் கொஞ்சங்கூட சந்தோஷம் ஏற்படல்லியா?"

நான் பதிலெதுவும் சொல்லவில்லை. சொல்லிப் பிரயோசனமில்லை. அது மகாமட்டமான பிராணி. நம்பிக்கை இல்லாதது.

அதுக்கு உஷாவைப் புரியலே. நான் அதுகிட்டே பிஜு மாமியைப் பத்திச் சொன்னால் மட்டும் புரிஞ்சுக்குமா?

பிஜு மாமிக்குத் தன்னோட பெண்மேலே பாசம். அவர் தன்கிட்டேருந்த கடைசிப் பத்து ரூபாய் நோட்டை முந்தானையிலேருந்து எடுத்துக் கொடுத்ததைக் கேட்டும் அது ஹாஹாவென்று சிரிக்கும்.

("சரசிஜ், மறுநாள் காலையிலே நீ மறுபடி அங்கே போனியா?")

ஆமாம் போனேன். அன்று டாக்சியைச் சந்துக்குள்ளே கொண்டு போகவில்லை. கையில் மருந்து, பையில் பழங்களுடன் வேஷ்டி நுனியைத் தூக்கிக்கொண்டு உஷா வீட்டு வாசலில் போய் நின்றேன். அப்போது நாற்புறமும் வீடுகளில் கரியடுப்பு மூட்டிக் கொண்டிருந்தார்கள்.

இன்றும் பிஜு மாமிதான் கதவைத் திறந்தார்.

"பரிமல் எப்படியிருக்கான், மாமி?"

"அதே மாதிரிதான்... வா."

பகலில் அந்த அறைக்குள் நுழைய முடிந்த சொற்ப வெளிச்சத்திலேயே அதன் உண்மை நிலை தெளிவாகத் தெரிந்தது. அதை நான் வர்ணிக்க விரும்பவில்லை. பழைய துண்டு, கிழிந்த லுங்கி, சுவரில் கறைகள், அழுக்குத் தலையணை, ஈ எல்லாமும் இருந்தன, அவை எப்போதும் இருக்கும். முதல் நாளிருந்த மோடாவைத் தேடிக் கண்டுபிடித்து அதன்மேல் உட்கார்ந்தேன். இன்று நான் வேஷ்டி அணிந்திருந்ததால் உட்காருவதில் அசௌகரியம் ஏற்படவில்லை.

மருந்தையும் பழப்பையையும் பிஜு மாமியிடம் கொடுத்தேன். அவருடைய முகம் மலர்ந்தது, அந்த மலர்ச்சியை மறைத்துக் கொள்ள அவர் முயற்சி செய்யவில்லை.

பக்கத்து அறையிலிருந்து மூச்சிரைக்கும் அரவம் கேட்டது. நான் அதை உற்றுக் கேட்பதைக் கவனித்து மாமி சொன்னார். "நேத்து ராத்திரி பூரா இப்படித்தான் மூச்சு விட முடியாம சிரமப்பட்டான். நானும் குக்குவும் முறை வச்சுக் கண் முழிச்சோம். பொண்ணைப் போய்த் தூங்கச் சொல்லிட்டு நான் உக்காந்திருக்கிற போதெல்லாம், "எப்படியாவது இந்த ராத்திரிப்போது ஆபத்தில்லாமே கழியும்படி செஞ்சுடு"ன்னு பகவானை வேண்டிக் கிட்டேயிருந்தேன். இந்த ரூமிலே குக்கு தலையிலே அடிச்சுக்கிட்டு அடிச்சுக்கிட்டு ரணமாக்கிக்கறா, அந்த ரூமிலே நோயாளியோட முனகல்- அந்த பயங்கரத்தை ஒனக்கு விளக்கிச் சொல்ல முடியாதுப்பா..." சிறிது நேரங்கழித்து மாமி மறுபடி தொடர்ந்தார், "நடு நடுவிலே குக்கு அந்த ரூமுக்கு வந்தா. அவ மூஞ்சியைப் பார்க்க

சகிக்கலே. அவளோட கண் ரெண்டும் நெருப்பா எரியுது; நேத்திக்குத்தான் பார்த்தியே! நெத்தியிலே எல்லாம் ஒரே ரத்தம். நான் பரிமலோட நெஞ்சைத் தடவிக் கொடுத்தேன், அவனுக்கு 'பெட்பான்' வச்சேன். குக்குவை ரொம்ப நேரம் அவன்கிட்டே ஒக்காந்திருக்க விடலே. அவளோட ஒடம்பிலே எலும்பைத் தவிர வேறே ஒண்ணுமில்லே, தலையிலே எழுதினதை யார் மாத்த முடியும்? இருந்தாலும் என் கண்முன்னே இருக்கற வரையிலே அவளுக்காக என்னாலே முடிஞ்சதைச் செய்யறேன்.. என்ன இருந்தாலும் நான் அவளோட அம்மா, சரசிஜ்!"

என் உடம்பு சிலிர்த்தது. மாமியின் கண்களுக்கடியில் கருமை படர்ந்திருந்தது. சுண்ணாம்பு நீரில் ஊறியது போலிருந்தது அவருடைய தலைமுடி.

"ஒங்க ஒடம்புந்தான் நல்லாயில்லே, மாமி. நீங்க இந்த மாதிரி ராத்திரி கண்முழிச்சா நீங்களும் ஒடம்பு முடியாம படுத்துடுவீங்க!"

மாமி சிரித்தார். வேதனை கலந்த சிரிப்பு, "என் விஷயத்தை விட்டுத் தள்ளு. நான் ஒரு கணக்கு இல்லே, சாவு என்னை இன்னிக்கு அழைக்கலாம், அல்லது நாளைக்கு அழைக்கலாம். அழைப்பு இன்னிக்கே வந்துட்டுப் போகட்டுமே! அதுக்கு முன்னாலே குக்குவை ஆபத்திலேருந்து காப்பாத்திட்டேன் என்கிற திருப்தி கிடைச்சாப் போதும் எனக்கு."

("சரசிஜ், அந்த ஒரு வாக்கியத்தைக் கேட்டு நீ பிஜு மாமியை ஒரு புது மனுஷியா உணர்ந்தியா?")

"ஆமா, அந்த நிமிஷத்திலே பிஜு மாமி ஒரு ஏழையாத் தோணல்லே எனக்கு. விதியோடே விளையாட்டாலே, வறுமை காரணமா எவ்வளவோ இழந்துட்டார் பிஜு மாமி. ஆனா இவ்வளவு கஷ்டத்திலேயும் அவர் பாதுகாத்து வச்சிருந்தாரே, அதோட மதிப்பும் கொஞ்சமில்லே, ஒரு உசிரைக் காப்பாத்த எல்லாத் தியாகமும் செய்யறது. ஒரு மனுஷர் இன்னொரு மனுஷரை சார்ந்து நிக்கறது-ரெண்டு சீட்டு ஒண்ணு மேலே ஒண்ணு சாஞ்சுக்கிட்டு நிக்கற மாதிரி. நோயாளிக்குப் பணிவிடை செய்யச் சம்பளங் கொடுத்து நர்ஸ் வச்சுக்க மாட்டாங்க. இந்த மாதிரி வாழ்க்கை எனக்கு ஒரு காலத்திலே ரொம்பப் பரிச்சயமா யிருந்தது- இப்போ மறுபடியும் அதை அடையாளங் கண்டுக் கிட்டேன்..."

"உஷா எங்கே மாமி?" என்று தணிந்த குரலில் கேட்டேன்.

"தூங்கறா. ராத்திரி பூரா இந்த ரூமுக்கும் அந்த ரூமுக்குமா அலைஞ்சுட்டு இப்பத்தான் கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே கண்ணசந்திருக்கா. நான் அதனால்தான் அவளை எழுப்பல்லே.

தூங்கட்டும். வாழ்க்கையிலே தூக்கத்தையே இழந்துடற நிலைமைக்கு வந்துட்டாளே!"

வெளியில்-சந்து முனையில்-ஒரு நாய் ராகத்துடன் ஓலமிட்டுக்கொண்டிருந்தது. மாமி அந்தத் திசையில் விரலால் சுட்டிக் காட்டிவிட்டுக் கிசுகிசுத்தாள், "கேளு! தினம் இந்த மாதிரி ஓலமிடுது. காலையிலே, மத்தியானம், சாயங்காலம், நடுராத்திரியிலே கூட. ராத்திரி வீட்டு வாசல்லே ஏறி வருது. இந்த ஓலம் ரொம்ப அச்சானியம். பரிமல் இனிமேல் பிழைக்க மாட்டான் போலிருக்குப்பா-"

அந்த ஒரு வாக்கியம் என்னை அற்பனாக, நாதியற்றவனாகச் செய்து விட்டது. நான் சிரமப்பட்டு எழுந்திருந்து என் குரலில் உறுதியை வரவழைத்துக்கொண்டு சொன்னேன், "நிச்சயம் பிழைச்சுடுவான், மாமி! நாம அவனைக் காப்பாத்திடுவோம்!"

என் பேச்சின் பொருள் புரியாமல் மாமி என்னைக் கண் இமைக்காமல் பார்த்தார்.

"நிச்சயம் காப்பாத்திடுவோம், மாமி! நம்மால முடிஞ்சதையெல்லாம் செய்வோம்!" ஒரு தடவை தொண்டையைக் கனைத்துக் கொண்டு தயக்கத்தைத் துடைத்தெறிந்துவிட்டுத் தொடர்ந்தேன். "ஒண்ணும் தப்பா நினைச்சுக்காதீங்க மாமி! என்கிட்டேயும் நிறையப் பணம் இல்லே. நான் இப்போ லக்னோவிலே இருக்கேன்னு ஒங்களுக்குத் தெரியும். இங்கே ஓட்டல்லே தங்கறதாலே ரொம்பச் செலவு. இருந்தாலும் மருந்து, பழம், சிகிச்சை இதுக்காகக் கொஞ்சம் பணம் கொடுத்துட்டுப்போக ஆசைப்படறேன்..."

என் சட்டைப் பையில் கையை விடப் போனேன். மாமி கையை உயர்த்தி என்னைத் தடுத்தார். அவர் உணர்ச்சிவசப் பட்டுவிட்டார் என்பது தெளிவாகத் தெரிந்தது. அவருடைய கண்களில் நீர் பளபளத்தது. அவர் கையை உயர்த்திச் சொன்னார், "கொஞ்சம் இருப்பா- என்கிட்டே கொடுக்க வேணாம். குக்குவைக் கூட்டிக்கிட்டு வாரேன். நீ கொடுக்கறதை அவ கையிலேயே கொடு. அப்போ அவ புரிஞ்சுக்குவா- அவ தனியா இல்லே, அவளுக்கு உதவ ஒரு நண்பன் இருக்கான்னு-"

பிஜூ மாமி உள்ளே வேகமாகப் போகத் தொடங்கியவர் திடீரென்று திரும்பி நின்றார். அவரது முகத்தில் சிந்தனைக் கோடுகள். ஒரு தடவை என் கண்களை உற்றுப் பார்த்தார். அந்தக் காட்சி இப்போதும் என் மனக் கண்ணில் தெளிவாகத் தெரிகிறது.

அவர் ஏதோ சொல்ல விரும்புகிறார். அவர் சொல்ல வந்தது உதடோரத்துக்கு வந்து காய்ந்துபோய் விடுகிறது.

அவர் என்னருகில் வந்தார்; தணிந்த குரலில் கேட்டார், "சரசிஜ், எவ்வளவு?"

முதலில் என்னால் அவருடைய கேள்வியின் பொருளைப் புரிந்துகொள்ள முடியவில்லை. மாமி மறுபடியும் அதே குரலில் "எவ்வளவு?" என்று கேட்டதும் புரிந்துவிட்டது எனக்கு.. நாய் இன்னும் ஓலமிட்டுக் கொண்டிருந்தது.. மஸ்லின் ஜிப்பாப் பையிலிருந்து ஒரு நோட்டை எடுத்தேன்—நூறு ரூபாய் நோட்டு.

"மாமி, இப்போதைக்கு இந்தப் பணத்தை.."

நான் சொல்லி முடிக்கவில்லை.

"நூ-று.. ரூவாயா!" ஒரு வினாடியில் மாறிப் போய்விட்டார் மாமி. அவரது குரல்கூட மாறியிருந்தது.

"நூ-று.. ரூவா..!" கரகரத்த குரலில் மறுபடி பேசினார் மாமி. "அவ்வளவு பணத்தையும் அவகிட்டே கொடுத்துடப் போறியா...? அதுக்குப் பதிலா.. சில்லறையா மாத்தி எனக்கும் கொஞ்சம் கொடேன்...!"

நெருப்பிலிட்ட காகிதத் துண்டுபோல் என் கண் முன்னே கொஞ்சங் கொஞ்சமாகச் சுருங்கிப் போய்க் கொண்டிருந்தார் பிஜு மாமி. 'நூ-று.. ரூபா' இந்த ஒரு சொற்றொடர் ஆற்றுத் தண்ணீரைக் கிழித்துக் கொண்டு செல்லும் நீராவிப் படகுபோல் தனக்கொரு வழியை உண்டாக்கிக் கொண்டு விரைந்தது. ஒரு பக்கம் உஷா, அவளுடைய அசுத்தமான சிறு அறை, உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கும் கணவன், நெருங்கி வந்து கொண்டிருக்கும் கைம்மை; இன்னொரு புறம் பிஜு மாமியின் குடும்பம்- வாடகை பாக்கி, குழந்தைகளுக்கு ஃபிராக் சட்டை வாங்கப் பணம், பையனுக்குப் பரீட்சைக்காகக் கட்ட வேண்டிய பணம், ரேஷன் வாங்கப் பணம்.. உஷாவைப் பற்றிய கவலையில் இந்தக் குடும்பத்தைச் சிறிது நாட்கள் மறந்திருந்தார் பிஜு மாமி. இப்போது உஷாவின் குடும்பமும் மாமியின் குடும்பமும் வெவ்வேறாகி விட்டன.

("அந்தப் பிச்சைக்காரப் பெண்ணோட கதையைத் தேடிக் கண்டு பிடிச்சிருந்தா நீ என்ன செஞ்சிருப்பே?")

"கிழிச்செறிஞ்சிருப்பேன்."

"உம்" என்று சொல்லிவிட்டு அது சற்று நேரம் மௌனமாக இருந்தது. அதன் முகத்திலிருந்த மர்மச் சிரிப்பு மறைந்து போய் விட்டது. கடைசியில் அது மெல்லச் சொல்லியது- "சரசிஜ், நீ பிஜு மாமியை மட்டுந்தான் பார்த்தே, அந்த அறைப் பக்கம் திரும்பிப் பார்க்கல்லியே! மாமியோட நடத்தைக்கான ரகசியம் அந்த அறையிலேதான் இருக்கு. ஒரு கட்டில் போடத்தான் இடமிருக்கு அந்த அறையிலே, அப்படிப்பட்ட அறையிலே

எவ்வளவு பெரிய மனசு இருக்க முடியும்-? சரசிஜ், இந்தக் கணக்குத் தெரியலேன்னா இந்த கதையை எழுத முயலாதே!"

('சாயாஹரின்', 1961)

# மரம்

ஜோதிரிந்திர நந்தி

ஒரு மரம். வெகுகாலத்து மரம். அது அழகாயிருக்கிறதா இல்லையா என்று யாருமே கேள்வி கேக்கவில்லை.

மனிதன் தலைக்கு மேலே வானத்தையும் மேகத்தையும் பார்ப்பதுபோல் அவர்கள் தங்கள் கண்ணெதிரில் அந்த மரம் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தார்கள்—மாலை நேரத்தில், நண்பகலில், காலையில் பார்த்தார்கள், வெறுங் கண்களால் பார்த்தார்கள். இதயத்தால், உணர்வுப் பூர்வமாகப் பார்க்கவில்லை, புரிந்து கொள்ளவில்லை.

அப்படிப் புரிந்து கொள்ள வேண்டும் என்று யாருக்கும் ஒரு நாளும் தோன்றவுமில்லை.

நாட்கள் கழிந்தன, பருவங்கள் கடந்தன, ஆண்டுகள் சென்றன. மரம் தன் இடத்தில் நின்று கொண்டிருந்தது.

மழைக்காலத்தில் அந்த மரத்தின் இலைகள் பெரிதாக, தளதளவென்று ஆகும்; சரத் காலத்தில் அவை தடிமனாகும், அவற்றின் பச்சை நிறம் இன்னும் அழுத்தம் பெற்று ஏறக்குறையக் கறுப்பாகிவிடும்; பின்பனிக் காலத்தின் நடுப்பகுதியில் இந்தப் பசுமை - கருமை மங்கிப் போய்விடும். பிறகு குளிர்காலத்தில் அந்த இலைகள் சோகை பிடித்த கர்ப்பிணியின் வெளிறிய முகம் போல் பழுத்துப்போய் உதிர்ந்துவிடும். மரத்துக்கு எரிச்சலா யிருக்கும்.

அப்போதும் மரம் மரந்தான். ஆனால் அது பார்ப்பதற்கு வெறும் கட்டை போலிருக்கும்—சிறிய கட்டை, பெரிய கட்டை, மெல்லிய கட்டை, மனித விரல்போல் சின்னஞ் சிறிய, எண்ணற்ற சுள்ளிகள், கட்டைகளாலான ஒரு சிக்கலான கட்டுமானம்...

ஆனால் அதற்காக யாரும் அதன்மேல் கோபித்துக் கொள்வார்களா? இல்லை. காரணம், அந்த மரம் மேகங்கள் கவிந்த ஆகாயத்துக்குக் கீழே தானே ஒரு காடு போல் அடர்த்தி யாக நின்றிருக்கும்போது மனிதர்கள் அதை எப்படிப் பார்த் தார்களோ, அதே மாதிரிதான் அது குளிர்கால வானத்துக்குக்

கீழே கட்டைகளையும் சுள்ளிகளையும் சுமந்துகொண்டு நிற்கும் போதும் பார்த்தார்கள். அதனால்தான் இது மேலெழுந்தவாரியான பார்வை, மனதால் புரிந்து கொள்வது அல்ல என்று சொன்னேன். ஜனங்கள் அதைப் புரிந்துகொண்டிருந்தால் மாசி மாதத்தில் அதன் சிவப்பும் இளம் பச்சையும் கலந்த கொழுந்துகளின் செழுமையைப் பார்த்து ஆடிக் குதித்திருப்பார்கள். சித்திரை பிறந்ததும் அது கொத்துக் கொத்தாய்ப் பூக்களைச் சுமந்து கொண்டு ரோஜா நிற ஒளியை வானமெங்கும் பரப்பும்போது அவர்கள் மகிழ்ச்சி மேலிடக் கத்துவார்கள்.

அவ்வாறு யாரும் செய்வதில்லை, இதுவரை செய்ததில்லை.

இரண்டு மூன்று வீடுகளுக்கு முன்னால் உள்ள நிலத்தில் ஒரு மரம் கப்புங் கிளையுமாக நின்று கொண்டிருப்பதால் ஒரு வசதி ஏற்பட்டிருக்கிறது என்று மட்டும் அவர்களுக்குத் தெரியும். அந்த வீடுகளில் இருப்பவர்களும் அவ்வப்போது இந்த வசதியை அனுபவிக்க வருவார்கள். காலை வேளைகளில் வயது முதிர்ந்த சிலர் செய்திப் பத்திரிகைகளை எடுத்துக் கொண்டுவந்து மரத் தடியில் அமர்ந்து அரசியல், சமூகம், பொருளாதாரம் பற்றி விவாதிப்பார்கள். பிற்பகலில் அந்தப் பக்கத்துக் கிழவிகளும் நடுத்தர வயதுப் பெண்களும் மரத்துக் கீழே மெல்லிய பச்சைக் கம்பளமாய் விரிந்திருக்கும் புல்லின்மேல் கால்களைப் பரப்பிக் கொண்டு சமையல், தையல், யார் வீட்டிலோ குழந்தை பிறந்தது, யாருக்கோ குழந்தை பிறக்காதது இவற்றைப் பற்றியெல்லாம் பேசிப் பொழுதைக் கழிப்பார்கள். மாலை நேரம் வந்ததும் சிறுவர் சிறுமியர் அங்கே விளையாட ஓடி வருவார்கள். மரத்தைச் சுற்றி ஓட்டம், மரத்தின் மேலேறி இலை பறிப்பது, கிளைகளை ஒடிப்பது, சில நாட்கள் மரக்கிளையில் கயிற்றைக் கட்டி ஊஞ்ச லாடுவது- இவ்வாறு ஒரே கூச்சலும் கும்மாளமுமாயிருக்கும்.

சிலர் குளிர்காலப் பகல் நேரத்தில் மர நிழலில் தலை வைத்துக்கொண்டு உடம்பு வெயிலில் படும்படி நீட்டிக்கொண்டு கதைப் புத்தகம் படிப்பார்கள், கோடைகால இரவுகளில் ஐந்தாறு பேர் மரத்திடியில் ஜமுக்காளத்தை விரித்துக் கொண்டு அதன் மேலமர்ந்து சீட்டாடுவார்கள்.

மனிதர்கள் நடமாட்டமில்லாத நேரத்தில் ஆடுமாடுகள் மரத்தடியில் ஆனந்தமாகப் புல் மேய்ந்து கொண்டிருப்பதைக் காணலாம்.

மேலே பறவைகளின் கீச்சு மூச்சு ஒலி, சிறகுகள் படபடக்கும் அரவம், அலகோடு அலகு உரசிக்கொள்ளும் ஒலி. இடையிடையே காற்றில் கிளைகள் ஆடும், இலைகள் அசையும்.

சில சமயம் பறவைகளே இருக்காது. காற்றில் சலனமும்

இருக்காது. மரம் அசைவற்று நிற்கும்-நிலத்தின்மேல் அடர்ந்த நிழலைப் பரப்பிக் கொண்டு— யுகயுகமாய்—எல்லையற்ற காலத்தின் சாட்சியாகத் தன்னந்தனியே நின்று கொண்டிருக்கும். அப்போது ஒரு தத்துவ ஞானி மௌனமாக, சலனமின்றி உலகத்தைப் பார்ப்பது போலிருக்கும். வாழ்க்கையின் ஏற்றத் தாழ்வுகள், பாவத்தின் வெற்றி, புண்ணியத்தின் தோல்வி, இவற்றை யெல்லாம் பார்த்துத் திகைத்து வியக்கும் தத்துவ ஞானியாகக் காட்சியளிக்கும் அது.

சிந்தனை வயப்பட்ட மனிதன்போல் அந்த மரமும் இருந்தது. சிந்தனை வயப்பட்ட மனிதன் மௌனமாயிருக்கிறான். சில சமயம் மரத்தையும் அப்படிப்பட்ட மனிதனாகக் கற்பனை செய்யத் தோன்றும். அப்போது அதன் நாற்புறமும் மனிதர்கள், விலங்குகள், பறவைகள், காற்று இவற்றின் நடமாட்டத்தைப் பார்த்தால் மனதுக்குக் கஷ்டமாக இருக்கும்.

யாரோ ஒருத்தி மரத்தை இந்த மாதிரி கற்பனை செய்திருக் கிறாள் போலும். அது இதுவரை யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. மரத்துக்கு ஞானப்பார்வை இருந்திருக்க வேண்டும். கிழக்குப் பக்கத்தில் ஒரு வீட்டின் பச்சை நிறச் சாளரத்தினருகில் உட்கார்ந்து கொண்டு ஒரு பெண் தன்னை உற்றுப் பார்ப்பது மரத்துக்குத் தெரிந்து விட்டது. முன்பெல்லாம் அவள் மரத்தில் தளிர்கள் அரும்புவதையும் பழுத்த இலைகள் உதிர்ந்து விழுவதையும் மற்ற மனிதர்கள் போலவே சாதாரணமாகப் பார்த்து வந்திருக்கலாம். இப்போது அவளுடைய கண்கள் வெளுப்பாக இல்லை, மை தீட்டப்பட்டு நல்ல கறுப்பாயிருந்தன. குட்டைப் பின்னலை ஆட்டிக்கொண்டு, சட்டை காற்றில் அசைந்தாட அவள் ஓடித் திரிந்த காலத்தில் அங்கு நின்று கொண்டிருப்பது மரந்தானா அல்லது மூங்கில் கம்பா என்றுகூடக் கவனித்திருக்க மாட்டாள் அவள். இப்போது அவளது அமைதியான, கம்பீரமான தலையில் இறுக்கமாகக் கட்டப்பட்டிருக்கும் கொண்டைபோல் அவளது மனமும் நிதானம் பெற்று எப்போதும் அந்த மரத்தை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொண்டிருக்கிறது. அவள் மரத்தைப் பற்றிச் சிந்திக்கிறாள். சிந்திக்கச் சிந்திக்க ஒருநாள் அவள் பார்வையில் பயம் தோன்றியது. இப்போது அவளுடைய கண் ணிமைகள் அசைவில்லை, கண்மணிகள் அப்படியே உறைந்து போய் விட்டன. ஏதோ ஒரு பயங்கரக் கவலை அவளைப் பீடித் திருக்கிறது, அந்தக் கரிய, இமைகள் சூழ்ந்த கண்களின் பார்வையில் பயத்தோடு வெறுப்பும் கலந்திருக்கிறது என்று மரத்துக்குப் புரிந்து விட்டது. பகல் வெளிச்சத்தில் மட்டுமல்ல. இரவின் இருளிலும் அந்தச் சாளரத்தருகில் இரு விழிகள்

தன்னை உறுத்துப் பார்த்துக் கொண்டிருக்கின்றன என்பதை யுணர்ந்ததும் மரத்துக்குப் பயம் ஏற்பட்டது. அது ஒரு தெளிவற்ற நிழலுருவமாகத் தன்னை இரவின் ஆழ்ந்த இருளில் மறைத்துக் கொண்டாலும் அந்தப் பார்வையிலிருந்து தப்ப இயலவில்லை. அந்தப் பெண் பயத்தை மட்டுமல்ல. பிடிபிடியாக வெறுப்பையும் அதன் மேல் வீசியெறிந்து கொண்டிருந்தாள்.

பிறகு இந்த விஷயம் எல்லாருக்கும் தெரிந்து போய் விட்டது. அந்தப் பெண்தான் இதை மற்றவர்களிடம் சொல்லி யிருக்க வேண்டும்.

'இந்த மரம் கெட்டது, இது ஒரு பிசாசு, இதை இங்கிருந்து அப்புறப்படுத்த வேண்டும்!'

அக்கம் பக்கத்து மனிதர்கள் உஷாரானார்கள். மனிதர்கள் போல் மரமும் பிசாசாகி மக்களிடையே உலவமுடியும் என்று அவர்கள் முதல் முறையாகக் கேள்விப்பட்டார்கள், தெரிந்து கொண்டார்கள்.

கிழவர்கள் மரத்தடியிலமர்ந்து அரசியல் பேசுகிறார்கள்; இளம் பெண்களும் கிழவிகளும் அங்கே உட்கார்ந்து கொண்டு குழந்தை பிறப்பது, பிறக்காதது பற்றியெல்லாம் விவாதிக்கிறார்கள்; மரம் பிசாசாக இருந்தால், அதற்குக் கெட்ட எண்ணமிருந்தால் மக்களுக்கு எவ்வளவு ஆபத்து!

"இதை வெட்டிவிடணும்! எரிச்சுடணும்! வேரோடு பிடுங்கினால் நல்லது! இல்லேன்னா இந்த மரத்தாலே என்ன ஆபத்து வருமோ தெரியாது!'' என்றாள் இறுக்கமான கொண்டையில் வெள்ளைப் பூக்களாலான மாலையை வைத்துக் கொண்டு சாளரத்தருகே அமர்ந்திருந்த பெண்.

எல்லாரும் அவள் சொன்னதைக் கேட்டார்கள்.

சிறுவர்கள் அந்த மரத்தடியில் விளையாடுகிறார்கள். மரக் கிளையொன்று முறிந்து அவர்கள் மேல் விழலாம். மரத்தின்மேல் இடி விழுந்தால் மரத்தடியில் அந்த நேரத்திலிருப்பவர்களெல் லாரும் உயிரிழப்பது திண்ணம். மரமே இடியை வரவழைக்கும். பிசாசு என்னதான் செய்யாது?

இதைக்கேட்டு மக்களின் கண்கள் பயத்தால் விரிந்தன.

அந்தப் பச்சைச் சாளரத்துப் பெண் சும்மா இருக்கவில்லை. மரத்தைப் பற்றி இதுவரை கவலைப்படாதிருந்தவர்களிடம் அவள் மரத்தைப் பற்றிச் சொல்லிப் பயமுறுத்தினாள்.

மரப் பிசாசு இடியை மட்டுமல்ல, மனிதனைக்கூட நள்ளிரவில் தன்னருகே இழுத்துக் கொண்டு வரலாம். மறுநாள் காலையில் அந்த மனிதன் ஒரு கிளையில் தூக்ககுப் போட்டுக் கொண்டு தொங்குவதை எல்லாரும் காண்பார்கள்.

தூக்குப் போட்டுக் கொண்டு தற்கொலை செய்துகொள்ள மரக்கிளை மிகவும் வசதியானது என்பது எல்லாருக்கும் இப்போது நினைவு வந்தது.

இந்த மரத்தை வேரோடு பிடுங்கியெறிய வேண்டும், சுட்டுப் பொசுக்க வேண்டும்!

மரத்துக்கு மேற்குப்புறத்தில் இன்னொரு வீட்டின் சிவப்பு நிறச் சாளரத்தருகே அமர்ந்துகொண்டு ஒருவன் தன்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதை அது வெகுகாலம் கவனிக்கவில்லை. அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்த மரம் திகைத்தது, பிறகு மகிழ்ந்தது. அந்த மனிதனின் கண்கள் அழகாயிருந்தன. அவற்றில் பயமோ வெறுப்போ பகைமையோ சிறிதுமில்லை; அன்பும் பாசமும் அனுதாபமுமே இருந்தன.

இது மரத்துக்கு வியப்பளித்தது. ஏனென்றால் சில நாட்களுக்கு முன்னால் கூட அந்த மனிதனின் பார்வையில் சஞ்சலம் நிறைந்திருந்தது. அவனது நடையுடை பாவனையில் அமைதியின்மை வெளிப்பட்டது. அரை நிஜார் அணிந்த சிறுவனாக இருந்த காலத்தில் அவன் நினைத்த போதெல்லாம் மரத்தடிக்கு ஓடி வருவான், மரத்தின் மேல் கல்லெறிவான், மரத்திலேறி இலைகளுக்குப் பின்னால் மறைந்திருக்கும் பறவைக் கூடுகளைத் தேடிப் பிடித்துச் சிதைப்பான், கிளைகளில் கயிறு கட்டி ஊஞ்சலாடுவான். இப்போது அவன் ஒரு கண்ணியமான மனிதன். இப்போதெல்லாம் அவன் தன் மஸ்லின் ஜிப்பாவின் கைகளை முழங்கைகளுக்கு மேல் மடித்து விட்டுக் கொண்டு, சாளரத்தையடுத்த மேஜைக்கு முன்னால் அமர்ந்து, மோவாயை உள்ளங்கைகளால் தாங்கியவாறு மரத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவன் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவாறு மேஜையிலுள்ள மலர்க் கிண்ணத்திலிருந்த ஒரு ரோஜாவை யெடுத்து முகர்கிறான். மரத்தைப் பார்க்கப் பார்க்க, எதையோ சிந்திக்கச் சிந்திக்க அவன் மகிழ்ச்சியடைகிறான், திருப்தியடைகிறான். மரத்தைப் பற்றிய அவனது சிந்தனைக்கும் ரோஜாவுக்குமிடையே ஏதோ ஓர் ஆச்சரியமான தொடர்பு இருக்கும் போலும்! அவனது பார்வையில் மரமும் ரோஜாவைப்போல் அழகாகத் தோன்றியிருக்கலாம்.

மரத்துக்கு நிம்மதி ஏற்பட்டது, அதன் பயம் தெளிந்தது.

இந்த மனிதன் மரத்தைப் பற்றி முற்றிலும் வேறு விதமாகப் பேசினான்.

“இந்த மரம் கடவுளின் ஆசியால் நம்மிடையே நிற்கிறது. இதைக் காப்பாற்றி வைத்துக்கொள்ள வேண்டும், நாள் முழுதும் இந்த மரத்திடியில் மனிதர்கள் கூடுகிறார்கள். ஒரு மனிதனை

வேறொரு மனிதனிடம் இணைக்கிறது இந்த மரம்—அதாவது மனிதனுக்கு சமூக உறவைக் கற்பிக்கிறது. இது இருப்பதால்தான் இதனடியில் சிறுவர்கள் கூடி விளையாடுகிறார்கள். இந்த மரம் ஒரு தாய்போல் குழந்தைகளுக்குப் பாசத்தையும் மகிழ்ச்சியையும் பகிர்ந்தளிக்கிறது.

உண்மையில் இந்த மரம் அழகானது. இதன் நிழலழகு மிக அழகு. ஆகையால்தான் கள்ளங் கபடற்ற அழகிய பறவைகள் இதில் அடைக்கலம் பெற்று கீச்சுக் கீச்சு ஒலி எழுப்புகின்றன, வண்ணத்துப் பூச்சிகள் நடனமாடுகின்றன..."

அக்கம் பக்கத்து மனிதர்கள் புதிய விதமாகச் சிந்திக்கத் தொடங்கினார்கள்.

மேற்குப் பக்கத்து சிவப்புச் சாளரத்து அழகிய மனிதன் அத்துடன் நிற்கவில்லை. அவன் சொன்னான்—

"இரும்பு, செங்கல், சிமெண்ட்டாலான கட்டிடங்களில் வசித்து வசித்து நமக்கு அலுப்பு ஏற்பட்டுவிட்டது. நம் கண்களுக்கு முன்னால் ஒரு பச்சைமரம் இருப்பதால்தான் நம்மால் இயற்கையை நினைவுறுத்திக்கொள்ள முடிகிறது. இந்த மரத்தின் தயவால்தான் நாம் இன்னும் முற்றிலும் செயற்கையாக ஆகாமல் இருக்கிறோம். இந்த மரம் இருக்கத்தான் வேண்டும். சோர்வும் அலுப்பும் மிக்க நமது வாழ்க்கையில் இந்த மரம் ஒரு கவிதை..."

சிவப்புச் சாளரத்து மனிதன் ஒரு கவியோ?—சிந்தித்துப் பார்த்தது மரம். அவன் இரவில் மேஜை முன் அமர்ந்து ஏதோ எழுதுகிறான், எழுதாத நேரத்தில் மௌனமாகச் சாளரத்துக்கு வெளியே மரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

மனிதன் கெடுதலான சொற்களைக் கேட்டுச் சஞ்சலமடைகிறான்; அதுபோல் நல்ல வார்த்தைகளைக் கேட்டு அமைதியடைகிறான், மகிழ்ச்சியுறுகிறான்.

ஆகவே ஒருத்தி மரத்தைத் தூற்றியபோது கேட்டுக் கொண்டிருந்தவர்கள் நிதானமிழந்தனர்; இப்போது அவர்கள் மரம் பாராட்டப் பெற்றது கேட்டு அமைதி பெற்றனர். மரத்தைப் பற்றிய அவர்களது கவலை தீர்ந்தது. மரம் நிலைத்து நின்றது.

ஆனால் கிழக்குச் சாளரத்துப் பெண் சும்மா இருக்கவில்லை. யாரும் தனக்கு உதவாவிட்டால் தானே கோடாரியெடுத்து அந்த மரத்தை வெட்டிவிடுவதாக அவள் பற்களைக் கடித்துக் கொண்டு சபதம் செய்தாள். தன் கண் முன் அந்த மரம் நிற்பதை அவளால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை, எப்படியாவது அந்தப் பிசாசை அகற்றிவிடப் போகிறாள் அவள்.

அவளுடைய சபதத்தைக் கேட்டு மரம் வருத்தப்பட்டது; அதே சமயம் அது தனக்குள் சிரித்துக் கொண்டது. அது கிழக்குச் சாளரத்துப் பெண்ணைக் கூப்பிட்டு அவளிடம் சொல்ல விரும்

பியது—"உன் கொண்டையிலணிந்த பூச்சரம் அழகாயிருக்கிறது. கண்களில் மையும், நெற்றியில் குங்குமமும் அழகு செய்கின்றன; உன் கை விரல்கள் சம்பக மொட்டுப்போல் அழகாயிருக்கின்றன. இந்த அழகான மிருதுவான கைகளில் கோடரி எடுத்துக் கொள்வாயா ?"

இந்த பேச்சு மேற்குச் சாளரத்து மனிதனின் காதுக்கெட்டியது. அவனுடைய அழகிய விரல்கள் இறுகிக் கொண்டன. தேவைப் பட்டால் அந்த விரல்களுக்கு எஃகு போல் இறுகத் தெரியும் என்பது மரத்துக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. இப்போது அவன் எந்தக் கையால் கவிதை எழுதுகிறானோ, ரோஜாப்பூவைத் தடவிக் கொடுக்கிறானோ அதே கையால் அவன் ஒரு காலத்தில் கல் விட்டெறிந்து பறவைக் கூடுகளைச் சிதைத்திருக்கிறான். கிளைகளை முறித்திருக்கிறான, இலைகளைக் கிழித்திருக்கிறான், ருத்திரன் போல் கயிற்றை அழுத்திப் பிடித்துக் கொண்டு ராட்சசத்தனமாக ஊஞ்சல் ஆடியிருக்கிறான். ஆகவே அவன் தன் முஷ்டியை மேலே உயர்த்தி எப்படியாவது மரத்தைக் காப்பாற்றுவதாக சபதம் செய்தான். மரத்தை அழிக்க முயல்பவர் யாராக இருந்தாலும் அவரை மன்னிக்க மாட்டான் அவன். வாழ்க்கையிலிருந்து கவிதையை விரட்டிவிடக் கூடாது. மரத்தை அழிக்க வருபவரை அவன் தன் கடைசி இரத்தத் துளி இருக்கும் வரை எதிர்ப்பான். மரத்துக்கு எவ்விதத் தீங்கும் ஏற்பட விட மாட்டான்.

மரத்துக்கு இப்போது ஒரு புதிய பயம் பிடித்துவிட்டது-தன்னை முன்னிட்டுக் கிழக்குச் சாளரக்காரிக்கும் மேற்குச் சாளரக்காரனுக்குமிடையே சண்டை வந்துவிடுமோ ?

அன்று பிற்பகல் கழிந்துவிட்டது. ஒரு வெள்ளாடு தன்னிரு குட்டிகளுடன் மரநிழலில் புல் மேய்ந்தது. மாலை நேரமானதும் குழந்தைகள் விளையாடத் தொடங்கின. எண்ணற்ற பறைவகளின் கீச் மூச் ஒலி தீவிரமாகி, சிறிது நேரத்துக்குப் பிறகு குறைந்து நின்றுபோய் விட்டது. இரவு வந்தது. மேகமற்ற கருத்த வானத்தில் எண்ணற்ற தாரகைகள் தோன்றின. மெல்லிய காற்றில் இலைகள் சலசலத்தன. அன்றாட நிகழ்ச்சிதான் இது. நாற்புறமும் இருந்த வீடுகளில் விளக்குகள் எரிந்தன, பலவகை ஒலிகள் எழுந்தன. பிறகு இரவு வளர வளர ஒவ்வொரு வீடாக அரவம் குறைந்தது, விளக்குகள் அணைந்தன. பிறகு நாற்புறமும் அடர்ந்த இருள் சூழ்ந்து கொண்டது. அடர்ந்த இருள், அளவிட முடியாத நிசப்தம். தலைக்குமேல் கோடிக்கணக்கான , நட்சத்திரங்கள் ஒளிர மௌனமாக நின்று கொண்டிருந்தது மரம். பிறகு காற்றும் நின்றுவிட்டது. மரத்தின் ஓரிலைகூட அசையவில்லை.

அந்த நேரத்தில்...

அந்த அடர்ந்த இருளிலும் பட்டப் பகல்போல் தெளிவாகப் பார்க்க முடிந்தது மரத்தால். கிழக்கிலிருந்து வந்து கொண்டிருக் கிறாள் அந்தப் பெண். அவள் தன் முந்தானையை இடுப்பில் இறுகச் செருகிக் கொண்டிருக்கிறாள். பூச்சரத்தைக் கொண்டை யிலிருந்து எடுத்தெறிந்து விட்டாள். போரிட வந்திருக்கிறாள் அவள். இப்போது அவளுக்குப் பூமாலை தேவையில்லை. அவள் கையில் கோடரி. மரம் நடுங்கியது.

அதே சமயம் மறுபுறத்திலும் மனிதனின் காலடியோசை கேட்டது. மரம் அந்தப் பக்கம் பார்த்தது. அதற்கு நிம்மதி ஏற்பட்டது. மேற்குச் சாளரத்து மனிதன் வந்துவிட்டான். இப்போது அவன் கையில் பேனா இல்லை, தடி. உடம்பில் ஜிப்பா இல்லை, முண்டா பனியன். அவனது தாடை இறுகியிருந்தது. பார்வையில் கடுமை. இந்தக் கணமே கர்ஜனை செய்யப்போகிறானென்று தோன்றியது

மரம் காது கொடுத்துக் கேட்டது.

சோகம் கலந்த நிசப்தம், முடிவு தெரியாத வேளை.

மரத்தின் உச்சியில் ஒரு பறவை கீச்சொலி எழுப்பியது. பெயர் தெரியாத மலரொன்றின் மணம் எங்கிருந்தோ மிதந்து வந்து வானத்து மூலையிலிருந்த ஒரு தாரகையை நோக்கி விரைந்தது. காற்று மெல்ல வீச, மெல்லிய சிறு கிளைகள் அசையத் தொடங்கின.

மரம் இதை எதிர்பார்த்திருந்தது போலும். அது அதிகம் ஆச்சரியமடையவில்லை. புடைவையணிந்த இளம் பெண்ணின் இதழ்களில் சிரிப்பு மலர்ந்தது.

மேற்குச் சாளர மனிதனின் இறுகிய தாடை மிருதுவாகியது. இடிக்குரல் எழுப்பவில்லை.

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நின்றார்கள். அந்த ஆழ்ந்த இருளிலும் அவர்கள் ஒருவர் முகத்தை மற்றவர் தெளிவாகப் பார்க்குமளவுக்கு அவ்வளவு அருகருகே நின்று கொண்டிருந்தார்கள். ஒருவர் விடும் மூச்சுக் காற்றை மற்றவர் கேட்கும்படி அவ்வளவு நெருக்கம்.

"கையில் கோடரி எதுக்கு?"

"மரத்தை வெட்டப் போறேன்."

"அதிலே என்ன லாபம்?"

"இந்த மரம் ஒரு பிசாசு!"

"இல்லே, இந்த மரம் ஒரு தேவதை!"

"பிசாசைத் தேவதைங்கறவன் ஒரு முட்டாள்!"

"தேவதையைப் பிசாசா நினைக்கறவன் ஒரு பாவி! அவன்

மனசில் குத்தம் இருக்கு, இதயத்திலே பொறாமை இருக்கு. அதனாலதான் அவன் வெள்ளையைக் கறுப்பாகப் பார்க்கிறான். வெளிச்சத்திலேகூட அவன் கண்ணுக்கு இருட்டுத்தான் தெரியுது."

"அப்படியானால் உலகத்திலே இருட்டே இல்லையா? கறுப்பே இல்லையா?"

"இல்லை"

"அதெப்படி?" பெண்ணின் கையிலிருந்த கோடரி நழுவி விழுந்தது. அவள் சிந்திக்கத் தொடங்கினாள். மரத்துக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. ஒருவர் கோடரியைக் கீழே எறிந்து விட்டதையும் மற்றவர் தடியை எறிந்து விட்டதையும் அது கவனித்தது.

"அதெப்படி சாத்தியம்?" என்று சிந்தித்தவாறே அந்தக் கிழக்குச் சாளரப் பெண் தலை நிமிர்ந்து மரத்தின் இலைகளுக் கிடையே ஒளி வீசும் நட்சத்திரங்களைப் பார்க்கத் தொடங்கினாள். பிறகு அவள் முணுமுணுத்தாள், "எல்லாம் வெளிச்சம், எல்லாம் அழகு; கறுப்பு இல்லை, இருட்டு இல்லை—இதெப்படி சாத்தியம்?"

"தனக்குள்ளேயே வெளிச்சம் பிறந்தால் இது சாத்தியந்தான்."

"அந்த வெளிச்சம் என்ன?"

"அன்பு."

பெண்ணின் கண்ணிமைகள் துடித்தன. அவள் நீண்ட பெருமூச்சு விட்டாள். அவளது குரலில் ஏக்கம் தொனித்தது.

"என்னுள்ளே அன்பு பிறக்காதா?"

"அதற்கு அன்பைப் பயில வேண்டும். அன்பு செய்யக் கற்க வேண்டும்" அழகாகச் சிரித்துக் கொண்டு சொன்னான் இளைஞன்.

"நீ எனக்கு அன்பைக் கற்றுக் கொடு."

மரம் கண்களை மூடிக்கொண்டது. அதற்குத் தூக்கம் வந்து விட்டது. மரங்களும் தூங்கும். அது பல நாட்களாகக் கவலையால் தூங்காமலிருந்தது.. அல்லது வேண்டுமென்றே பார்க்காமலிருந் திருக்கலாம். மனிதன் சில சமயம் மரத்தைப் பொருட்படுத்தாம லிருப்பதுபோல், சில சமயம் மரமும் மனிதனைக் கவனிக்காம லிருக்க வேண்டும் என்ற உண்மையை அனுபவம்மிக்க அந்த மரத்துக்கு யாரும் சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை..

('அம்ருத' புத்தாண்டு இதழ், மே 1970)

# உயிர்த்தாகம்

சமரேஷ் பாசு

மழை பெய்து கொண்டிருந்த ஒரு தேய்பிறை இரவு.

மழை என்றால் திடீரென்று வானத்தில் மேகங்கள் குவிந்து, இடி இடித்து, மின்னல் மின்னிக் கொட்டோ கொட்டென்று ஒன்றிரண்டு பாட்டம் கொட்டித் தீர்க்கும் பெருமழை அல்ல. கட்டிப்போன தொண்டையிலிருந்து அலுப்புத் தரும் வகையில் தொடர்ந்தாற்போல் ஒலிக்கும் அழுகைக் குரல் போல் சில நாட்களாகப் பெய்து கொண்டேயிருக்கிறது மழை. கூடவே கிழக்கிலிருந்து இடைவிடாமல் புயற்காற்று.. புறநகர்ப்பகுதியின் பெரிய ரஸ்தாவைத் தவிர மற்ற தெருக்களும் சந்துகளும் சேறும் சகதியும் நிறைந்த நீண்ட சாக்கடைகளாகி விட்டன. எங்கும் குப்பை, நாற்றம். எண்ணற்ற வீடுகள் ஒன்றையொன்று நெருக்கியவாறு நின்று கொண்டிருந்தன.

நான் இருப்புப் பாதையையொட்டிய ரஸ்தாவில் போய்க் கொண்டிருந்தேன். நனைந்து கொண்டேயிருந்ததால் என் உடம்பின் கதகதப்பைக் காப்பாற்றிக் கொள்ள முடியவில்லை. திறந்தவெளி வழியே அடித்துக் கொண்டிருந்த காற்று ஒரேயடியாகத் தாக்கி உடம்பை நடுக்கியது. பற்கள் உரசிக் கொண்டன. வேறு வழியின்றி நான் இடதுபக்கம் திரும்பி ஊருக்குள் நுழைந்தேன். அங்கு புயலின் தாக்குதலாவது குறைவாக இருக்குமே.

சணல் தொழிற்சாலைகள் மிகுந்த அந்த ஊர் அயர்ந்து மயங்கினாற் போலிருந்தது. அதன் இயற்கையான வேலைச் சுறுசுறுப்பும் நடமாட்டமும் அடைமழையில் நமுத்துப்போய் விட்டன போலும். வேறு நாளாகயிருந்தால் தெருநாய்கள் குரைத்துக்கொண்டே வந்து துரத்தும். இன்று அவை பெயருக்கு ஓரிரு முறை உறுமிவிட்டுத் தங்கள் உடலில் விழுந்திருந்த தண்ணீரை அகற்ற உடம்பைச் சிலிர்த்துக் கொண்டன. குடும்பஸ்தர்கள் இருக்குமிடம் தெரியவில்லை. வீட்டு வாசல்களிலோ ஜன்னல்களிலோ ஒரு பொட்டு வெளிச்சங்கூடக் கண்ணில் படவில்லை. தெருவிளக்குகள் ஒரு கண் பொட்டையான

மிருகங்கள் போல் பார்த்தன. அவற்றின் மங்கிய வெளிச்சம் இருளைச் சற்றும் குறைக்கவில்லை.

நான் செல்லும் வழி எனக்குச் சரியாகத் தெரியவில்லை. என்றாலும் வடக்குத் திசையிலேயே போய்க் கொண்டிருக்கிறேன் என்று தெரிகிறது. பாதையோரமாகப் போய்க் கொண்டிருக்கிறேன். தாழ்வான பாதை, தண்ணீர் தேங்கியிருக்கிறது. ஏதாவதொரு வீட்டுத் திண்ணையில் ஏறிக்கொண்டு இரவைக் கழிக்கலா மென்றால் அதற்கும் வழியில்லை. காரணம், சேரிபோல் காணப் பட்ட இந்தக் குடியிருப்பில் வீடுகளுக்குத் திண்ணை இல்லை. வீடுகளின் நிலையைப் பார்த்தால் அவற்றுக்குள்ளேயும் தரை காய்ந்திருக்காது என்று தோன்றியது. இங்கு எங்கேயாவது படுத்துக் கொண்டால் ஜனங்கள் பலவிதமாகப் பேசுவார்கள். அதோடு போலீசின் தொந்தரவு வேறு.

நான் நைஹாத்தி ரயில் குடியிருப்பில் ஒரு நண்பனின் வீட்டுக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். அங்கு போய்ச் சேர்ந்து விட்டால் இந்தச் சங்கடமான இரவின் மழை, குளிரிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும். உலர்ந்த உடையும் சில நாட்களுக்காவது உணவும் கிடைக்கும்...

எங்கள் குழுவைவிட்டு நான் வெளியே புறப்பட்டிருக்கக் கூடாது என்று இப்போது தோன்றுகிறது. சோற்றுக்குப் பறக்கும் நண்பர்களடங்கிய எங்கள் குழுவில் ஒருவன் சில நாட்களுக்குமுன் இறந்துபோய் விட்டான். அதிலிருந்தே நான் அங்கிருந்து வெளியேறிச் சற்று இளைப்பாற வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். நண்பன் இறந்தது நல்லதுதான். சாவைத்தவிர வேறென்ன முடிவு ஏற்பட்டிருக்க முடியும் என்று எனக்குத் தெரியவில்லை. பிழைத்திருக்க என்னென்ன தேவையோ அவை யெதுவும் அவனிடமில்லை. இருந்தாலும் நெஞ்சுக்குள்... அது கிடக்கட்டும்.. அது ஒன்றும் பெரிய விஷயமில்லை. ஆனால் அவன் சாவதற்கு முன் என்னிடம் ஒரு பொருளைக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறான். சிறிய பொருள்தான், ஆனால் அதன் சுமை மலைபோல் கனமாக, வருத்துவதாக இருக்கிறது. சுமை என்னவென்றால்....

அடேயப்பா, காற்று முதுகெலும்பின் வேரைப் பிடித்துக் குலுக்குகிறது. மழையும் வலுத்துவிட்டது திடீரென்று. இவ்வளவு நேரங்கழித்து இப்போது இடிக் குமுறலும் கேட்கிறது. இப்போது பற்கள் மட்டுமல்ல, எலும்புகளும் ஒன்றோடொன்று உரசிக் கொள்கின்றன. மரத்தின் முதிர்ந்த கிளைபோல் ஒரேயடியாக நனைந்து ஊறிப் போய்விட்டேன்...

இப்போது நான் ஒரு நாற்சந்திக்கு வந்திருந்தேன். பக்கத்தில்

சணல் தொழிற்சாலையின் சரக்குகளை ஏற்றியிறக்கப் பயன்படும் கிளை இருப்புப் பாதை. அந்த இடம் சற்றுத் திறந்தவெளி. அங்கே ஒரு எருமை மாட்டுக் கொட்டிலைப் பார்த்து அங்கு நுழைந்து விடலாமா என்று நினைத்து அந்தத் திசையில் நான் அடியெடுத்து வைத்தபோது யாரோ என்னைக் கூப்பிடுவது கேட்டது- "ஏய், இங்கே வா!"

எனக்கு அசரீரியில் நம்பிக்கையில்லாவிட்டாலும் நான் திடுக்கிட்டுத்தான் போய்விட்டேன். அழைக்கப்படுவது நான் தானா? மழைத்தாரையை ஊடுருவிப் பார்த்து அந்தக் குரலுக்குரிய வரைத் தேடினேன். வலது புறத்தில் ஒரு மங்கலான ஒளிக்கீற்று கண்ணுக்குத் தென்பட்டது. அங்கே அரைகுறையாகத் திறந்திருந்த கதவின் மேல் சாய்ந்து கொண்டு ஓர் உருவம், ஒரு பெண்... அப்படியானால் என்னைக் கூப்பிட்டிருக்க மாட்டாள். முன் னோக்கி அடியெடுத்து வைத்தேன்.

"வாய்யா இங்க!"

நின்றேன். "என்னய்யா கூப்பிட்டீங்க?" என்று கேட்டேன்.

"வேற யாரு இருக்காங்க இங்கே?" என்று பதில் வந்தது.

அவள் பேசிய விதத்தைக் கேட்டுத் திடுக்கிட்டேன். மோசமான இடத்துக்கு வந்துவிட்டேன் போலும்! அது வேசித் தெரு இல்லாவிட்டாலும் மட்டமான ஜனங்கள் வசிக்கும் சேரிப் பகுதியாயிருக்கலாம்.

நான் உள்ளூரச் சிரித்துக் கொண்டேன். சரியான ஆளாகப் பார்த்துத்தான் கூப்பிடுகிறாள் அந்தப் பெண்!

அந்தக் கதவருகில் சற்று நேரம் நின்றால் கூடத் தேவலை தான்.

நான் அசையாமலிருப்பதைக் கண்டு அந்தப் பெண் "இந்த ஆள் செவிடா என்ன?" என்று உரக்கச் சொல்லிக் கொண்டாள்.

"போய்த்தான் பார்க்கலாமே!" என்று நினைத்தேன். உண்மை தெரிந்ததும் அவளே என்னை விரட்டி விடுவாள். மழையின் தீவிரம் குறையும் வரையில் தலைக்குமேல் ஒரு கூரை கிடைத்தால் நல்லதுதானே! இப்போதிருக்கும் நிலையில் எருமைக் கொட்டிலைத் தாண்டிக்கூடப் போக முடியாது. நைஹாத்தி போய்ச் சேர்வது பற்றிப் பேச்சே இல்லை!

அந்தப் பெண்ணுக்கருகில் வந்தேன். இயற்கையாக எழுந்த தயக்கத்தை மீறிக்கொண்டு "ஏன் கூப்பிட்டே?" என்று கேட்டேன்.

சிரிப்பும் எரிச்சலும் கலந்த குரலில் அவள் சொன்னாள், "எந்த ஊர் ஆளுடா இது...! சரி சரி, உள்ளே வா!"

நான் உள்ளே நுழைந்ததும் அவள் கதவை மூடிவிட்டாள். மழையின் அரவம் சற்றுக் குறைந்தது. வெளியேயிருந்து சாரலடிக்க

வழியில்லை. இருந்தாலும் ஓட்டுக் கூரையின் ஓட்டைகள் வழியே தண்ணீர் ஒழுகித் தரை ஈரமாகியிருந்தது. கட்டிலிலிருந்த படுக்கை மட்டும் நனையவில்லை. அறைக்குள் ஒரு சில பாத்திரங்கள்-பானை, தட்டு, டம்ளர்...

"இந்த அடைமழையிலே எங்கே சாகறதுக்குப் போறே?" எனக்கு வெகு நாள் பழக்கமானவள்போல் அவள் பேசினாள்.

"ரொம்ப தூரம்... ஆனா..."

"புரிஞ்சுது..." குறும்பாகச் சிரித்தாள் அவள். "ஏம் பூராச் சேறாக்கிட்டே நீ... சரி, மொதல்லே இந்த ஈரத்துணியை அவுத்துப் போடு!"

குளிர் ஒரு புறம், திகைப்பு ஒரு புறம்; உறைந்து போய்விடும் நிலை எனக்கு... "ஆனா..."

"ஒனக்கு உடுத்திக்க என்ன தருவேன்? நனைஞ்ச சட்டையைக் கழட்டு மொதல்லே...!"

சட்டையைக் கழற்ற முடிந்தால் நிம்மதிதான் எனக்கு. ஆனால்... குரலில் சற்று வலுவை வரவழைத்துக்கொண்டு, "நீ கூப்பிட்டது வீண்தான், என் சட்டைப் பை காலி!" என்றேன்.

பெண் திகைத்து நின்றாள். நான் நினைத்தது சரிதான். அவள் வாயைத் திறந்தவாறு என்னைப் பார்த்துக்கொண்டு சிறிது நேரம் நின்றாள். அவளுக்கு என் பேச்சில் நம்பிக்கை ஏற்பட-வில்லை போலும்!

"ஒண்ணுமே இல்லியா?" நிராசையால் அவளது முகம் இருண்டுபோய் விட்டது.

"காசு இருந்தா இந்த மாதிரி மழையிலே அலைஞ்சுக் கிட்டிருப்பேனா?" அவள் சோர்ந்து போய் மௌனமாக நின்றாள். இப்படி நடக்குமென்று எனக்கு முன்பே தெரியும்.

ஆனால் அவள் தொழில் செய்பவள், பிச்சைக்காரி அல்ல.

நான் கதவைத் திறக்கப் போனேன்.

"இப்போ எங்கே போகப் போறே?" அவள் பின்னாலிருந்து கேட்டாள்.

"அந்த எருமைக் கொட்டிலுக்கு" என்று சொல்லிக் கொண்டே கதவைத் திறந்தேன். ஐயோ! குளிர்காற்று என்னை விழுங்க வருவது போல் தாக்கியது. நான் வெளியில் கால் வைத்தேன்.

அவள் திடீரென்று பின்னாலிருந்து கூப்பிட்டாள், "ஏய், இதைக் கேளு! எப்போ கூப்பிட்டுட்டேனோ, இங்கேயே ராத்திரி இருந்துட்டுப் போ... உம், என் அதிருஷ்டமே இப்படித்தான்!" ஒரு பெருமூச்சு விட்டாள் அவள்

"ஒன் அதிருஷ்டம் நல்லாவேயிருக்கட்டுமே! நான் கொட்டிலுக்கே போயிடறேன்."

"ஒன்னிஷ்டம்" என்று சொல்லிவிட்டு அவள் கட்டிலில் உட்கார்ந்தாள். "இன்னிக்கு இனிமே நம்பிக்கை இல்லே."

'இந்த அடைமழையிலே தங்க ஒரு இடம் கிடைச்சிருக்கற போது அதை விடுவானேன்?' என்று தோன்றியது எனக்கு. ஒரு பெண் பிள்ளையோடு இரவைக் கழிப்பது மிகவும் அசிங்கம் என்றும் தோன்றியது. ஏனென்றால் எனக்கு இது ஒரு புதுமாதிரி அனுபவம். எனக்குப் பெண்களிடம் ஆர்வமும் ஈர்ப்பும் மற்றவர்களைவிட அதிகமாகவே உண்டு என்பது உண்மைதான். ஆனால் இந்த மாதிரியா! சீச்சீ. இது என்னால் முடியாது...! ஆனால் அவளோடு படுத்துக் கொள்லாமலும் இரவைக் கழிக்கலாமே..! நான் அறைக்குள் மறுபடி நுழைந்து கதவை மூடினேன்.

அவள் நல்ல உயரம். மாநிறம். வற்றிய கன்னங்கள். எப்போதும் பசும்புல்லைத் தேடிக் கொண்டிருக்கும் மாட்டின் கண்கள் போன்ற பெரிய பெரிய கண்களில் மை, முகத்தில் சாயம். தடிமனான உதடுகளுக்கு மேல் மூக்கு நுனி மேலே திரும்பியிருக்கிறது.

அவள் சிரமப்பட்டுத் தேடி ஒரு பழைய உள் பாவாடையை எடுத்துக்கொண்டு வந்து கொடுத்தாள்— "இதையே கட்டிக்க. வேறே ஒண்ணுமில்லே."

எனக்கு சிரிப்பு வந்துவிட்டது. பரவாயில்லை, யாரும் பார்க்கவில்லையே! ஆனால்...

திடுக்கென்றது எனக்கு. சட்டைப் பையைத் தொட்டுப் பார்த்தேன். என் நண்பன் என்னிடம் கொடுத்துவிட்டுப்போன, மலைபோல் கனக்கும் சிறிய பொருள் இருக்கிறதா என்று பார்த்துக்கொண்டேன். பொருள் அல்ல அது; அது ஒரு இரத்தக் கட்டி, ஆம் இரத்தக் கட்டிதான்... எனக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. அந்தப் பெண் இருந்த பக்கம் திரும்பி உற்றுப் பார்த்தேன். அவள் பின்பக்கம் திரும்பிக்கொண்டு தன் உள் பாடியை அவிழ்த்துக் கொண்டிருந்தாள்.

"என்கிட்டே ஒண்ணும் இல்லே, சொல்லிட்டேன்!" என்று சொன்னேன்.

"எவ்வளவு தடவைதான் இதைத் திருப்பித் திருப்பிச் சொல்லுவே?" என்று அலுப்போடு கேட்டாள் அவள்.

"இருந்தாலும் முன்னாலேயே சொல்லிடறது நல்லது— எனக்கு ஒரு ஆசையுமில்லே... நான் ஒரு வழிப்போக்கன் மாதிரி ராவைக் கழிச்சிட்டுப் போயிடறேன்."

அவள் தன் மாட்டுக் கண்களையுயர்த்தி என்னை ஒரு பார்வை பார்த்தாள். பிறகு "யார் ஒன்னைக் கட்டாயப்

படுத்தறாங்க?" என்று கேட்டாள்.

அவள் சொன்னது சரிதான், நான் அந்த உள் பாவாடையை அணிந்து கெண்டேன். இருந்தாலும் திறந்த மேலுடம்பு குளிரில் வெடவெடத்தது. வெளியே மழையும் காற்றும் பட்டுக் கதவு அதிர்ந்தது.

அவள் என்னைப் பார்த்துவிட்டுச் சிரிப்புத் தாங்காமல் புடவையை வாயில் திணித்துக்கொண்டாள். பிறகு ஒரு பழைய புடைவையை எடுத்து என் பக்கம் எறிந்துவிட்டு, "இதை ஒடம்பிலே சுத்திக்கிட்டுப் படு" என்றாள்.

பிறகு அவள் என் ஈரத் துணிகளை ஒரு கொடியில் உலர்த்திவிட்டு, "இதெல்லாம் சீக்கிரம் காஞ்சுடும்" என்று சொன்னாள்.

சுக உணர்வு இருக்கிறதே, அது மிகவும் பயங்கரமானது. இந்த மாதிரி சங்கடமான நிலையில், நான் ஒரு வேசிப்பெண்ணின் வீட்டில் இருக்கிறேன் என்பதையே மறந்து போய்விட்டேன். "என் வயிறு அடியோடு காலி, அதனால்தான் இந்த மழையிலேயும் காத்திலேயும் ரொம்ப அசந்து போயிட்டேன்" என்று சொன்னேன்.

அவள் பதில் சொல்லாமல் முகத்தை முழங்கால்களுக்கு நடுவே புதைத்துக் கொண்டிருந்தாள்.

"சரி, படுத்துக்கறேன்" என்றேன்.

அவள் தலையைத் தூக்கினாள். அவளது முகத்தில் வேதனை. தெளிவாகத் தெரிந்த அவளது நெஞ்சின் எலும்புகள் அவள் மூச்சுவிடும்போது ஏறி இறங்குகின்றன.

"சாப்பிடறியா...? சோறும் கூட்டும் இருக்கு."

சோறும் கூட்டுமா? நிஜமாகவா? எதிர்பாராத அதிருஷ்டந் தான்! சோற்று மணத்திலேயே அரைவயிறு நிரம்பி விடும். சோறே கிடைத்துவிட்டால் சொல்ல வேண்டுமா?

என் நாக்கில் நீர் ஊறியது. என் வயிறோ என்னிலிருந்து வேறுபட்ட ஒரு தனிப் பிராணிபோல் 'சோறு' என்ற பெயரைக் கேட்டதுமே உற்சாகத்துடன் அசைந்து கொடுத்தது. ஆனால்...

இதற்குள் அவள் பீங்கான் தட்டில் சோற்றை வைத்து விட்டாள். அதைப் பார்த்ததும் என் மனதில் மறுபடி சந்தேகம் எழுந்தது. நான் அவசரம் அவசரமாகக் கொடியிலிருந்த என் சட்டையை எடுத்துக்கொண்டேன். நிலைமை மோசமாகத் தோன்றியது. நான் பயந்துகொண்டே சொன்னேன், "சோத்துக்குக் கொடுக்க என்கிட்டக் காசு இல்லே."

அவளுடைய மாட்டுக் கண்களில் எரிச்சல் தோன்றியது. "இதை எவ்வளவு தடவைதான் சொல்லுவே! எருமைக் கொட்டகைதான் ஒனக்குச் சரியான இடம்!"

சுகமாக இருப்பதைவிட நிம்மதியாக இருப்பது மேல். என் அதிருஷ்டங்கெட்ட நண்பன் சாவதற்கு முன்னால் ஒரு பெரிய சுமையை என்மேல் வைத்துவிட்டுப் போய்விட்டான். இப்போது அதைச் சுமந்துகொண்டு நடமாடுவதே கஷ்டமாயிருக்கிறது எனக்கு. அதை வைத்துக்கொள்வதும் கஷ்டம், உதறித் தள்ளுவதும் கஷ்டம். நான் வெளியே மழையிலும் புயலிலும் நின்று கொண் டிருந்ததால் இந்தச் சுமை பற்றிய நினைவே இருந்திருக்காது எனக்கு...

"நீ மனுசங்களோட ஒரு நாளும் இருந்ததில்லியா?" அவள் கேட்டாள்.

நல்ல கேள்வி! கேள்வியைக் கேட்பவள் யார்? ஒரு வேசிப்பெண்.

"இருந்திருக்கேன், ஆனா ஒன் மாதிரி மனுசங்களோடே இல்லே" என்று சொன்னேன்.

அவள் சற்றுநேரம் மௌனமாக என்னைப பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு "சோறு இருக்கே, சாப்பிட்டிடு! இல்லாட்டி வீணாத்தானே போகும்!"

யோசித்துப் பார்த்தேன், சாப்பிட்டால் என்ன! இலவசச் சாப்பாடு! தவிர, வேறு யாரும் பார்க்கவில்லையே!

சட்டையைக் கையில் சுருட்டி வைத்துக்கொண்டு சோற்றை அள்ளியள்ளிப் போட்டுக் கொண்டேன், பிறகு ஒரு செம்புத் தண்ணீர் குடித்தேன். இந்த மாதிரி பரிமாறப்பட்ட சாதத்தைச் சாப்பிடுவது என்னைப் பொருத்தவரையில் ஒரு சுகபோக நிகழ்ச்சி. அது காரணமாகவே என் மனதிலும் சந்தேகம் சூழ்ந்திருந்தது.

பிறகு படுக்கை. அது ஒரு சங்கடம். நான் கட்டிலில் படுத்துக் கொண்டு "நீ எங்கே படுத்துக்குவே?" என்று கேட்டேன்.

அவள் மௌனமாக என்னைப் பார்த்துவிட்டுத் தன் நழுவியிருந்த முக்காட்டை இழுத்துப் போர்த்திக் கொண்டாள்.

நான் எழுந்து உட்கார்ந்தேன்.

அவள் கட்டிலுக்கருகில் கீழே உட்கார்ந்து கொண்டு சொன்னாள், "நீயே தூங்கு, நான்தான் தினம் தூங்கறேனே! ஒரு ராத்திரிதானே! நான் ஒன்னைக் கூப்பிட்டதாலே..." பேசிக் கொண்டிருக்கும் போது அவள் நான் என் சட்டையைக் கையில் சுருட்டி வைத்துக் கொண்டிருப்பதைக் கவனித்தாள். பிறகு கொடியைப் பார்த்துவிட்டு என் பக்கம் திரும்பினாள். நானும் அவளைப் பார்த்தேன்.

"சட்டை ஈரமாயிருக்கே" என்றாள்.

"அதனாலே ஒனக்கென்ன?"

அவள் மௌனமாகி விட்டாள்.

சோர்ந்து போயிருந்த என் நரம்புகள் சற்று சுகங் கண்டதும் வெதுவெதுப்பாகி வழக்கமான வலுவைப் பெற்றுவிட்டன என்று தோன்றியது. இவ்வளவு நேரம் என்னைத் திண்டாடச் செய்த மழை, புயல் இவற்றின் ஒலி கதவுவழியே மங்கலாக வந்து தாலாட்டுப்போல் இனிமையாக ஒலித்தது, தூக்கம் கண்ணிமைகளை அழுத்தியது.

அவள் பக்கம் திரும்பிப் பார்த்தேன். அப்படியே உட்கார்ந் திருந்தாள் அவள். அவள் எந்தப் பக்கம் பார்த்துக் கொண்டிருக் கிறாளென்று சரியாகத் தெரியவில்லை. அவளுடைய தோற்றத்தில் சோர்வு, அமுக்கிவைக்கப்பட்ட வேதனை தெரிந்தது, யார் கண்டார்கள்! இவர்களிடம் பாசாங்குக்குப் பஞ்சமில்லை, நான் உறங்கியபின்… நான் நாளைக்கே இந்தத் துரதிருஷ்டம் பிடித்த பொருளுக்கு ஒரு ஏற்பாடு செய்துவிடப் போகிறேன்! சாகும் தருவாயில் அவன் ஏன் என்னிடம் இந்தப் பொருளைக் கொடுத்து விட்டுப் போகவேண்டும்? ஒரு இரத்தக் கட்டி! ஆம், இரத்தக் கட்டிதான்! வியர்வை நாற்றமடிக்கும் கந்தைத் துணிப் பொட்டலம். பெரும்பசியின் நாற்றமும் அதற்குள் அடங்கியிருந்தது. செத்துக் கொண்டிருந்த நண்பன் வாயிலிருந்து வழிந்து கொண்டிருந்த இரத்தத்தை நக்கியவாறு என்னிடம் சொல்லி யிருந்தான், "இதை நீ வச்சுக்க!"

அவன் சொல்லிய விதத்தை இப்போது நினைத்துக் கொண்டாலும் நெஞ்சுக்குள்ளே— அந்தப் பேச்சு இப்போது வேண்டாம்!

அப்போதும் அவள் அதே நிலையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து நான் திடீரென்று சொல்லிவிட்டேன், "நீயும் கட்டில்லயே கொஞ்சம் தள்ளிப் படுத்துக்க."

அவள் என்னைச் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, "சீ, என்ன தரங்கெட்ட மனுஷன்!" என்றாள். பிறகு படுத்துக் கொண்டாள்.

என் உடல் இளைப்பாறிய சுகத்தில் தாராளமாகக் கிடந்தது. அந்தப் பெண்ணின் உடம்பு என்னிடமிருந்து சற்றுத் தள்ளி யிருந்தாலும் அதன் கதகதப்பை என்னால் உணர முடிந்தது.

என்ன விசித்திர இரவு! எவ்வளவு விசித்திரமான சூழ்நிலை! மற்றவர்கள் பார்த்தால் என்ன சொல்வார்கள்! சீச்சி…! ஆனால் என் சோர்ந்து தளர்ந்த உடம்புக்கு இவ்வளவு சுகம் இதற்குமுன் எப்போதாவது கிடைத்திருக்கிறதா என்று எனக்கு ஞாபகமில்லை. தூக்கக் கலக்கத்தில் கண்கள் மூடுகின்றன…

ஆனால்…

அது கூடாது… என் நண்பனைப் பற்றித்தான் சொல்கிறேன்…

அதிருஷ்டங் கெட்டவன் சாகும் சமயத்தில் "என் இரத்தம்!" என்று சொல்லித் துணிப் பொட்டலத்தைக் கொடுத்தான்.

"என்ன இரத்தம்?" என்று கேட்டேன்.

அவன் கண்ணீரையும் வாயிலிருந்த ஒழுகிக் கொண்டிருந்த இரத்தத்தையும் துடைத்துக் கொண்டே, "என் நெஞ்சோட ரத்தம்... நான் தினம் சாப்பிடாமே..." என்று சொல்லித் தன் சோகைபிடித்த, நடுங்கும் விரல்களால் பொட்டலத்தைத் தடவினான்.

என்னால கோபத்தையடக்க முடியவில்லை. "எதுக்கடா?" என்று கேட்டேன்.

"குடும்பம் நடத்தறதுக்கா"

அவனைத் திட்ட முற்பட்ட என்னை அவன் பேசிய விதம் தடுத்துவிட்டது. என் தொண்டைக்குள் ஏதோ அடைத்துக் கொண்டது.

அது போகட்டும்...

அந்தப் பெண் வேதனையோடு முனகினாள்.

"என்ன ஆச்சு?" என்று கேட்டேன்.

அவள் என்னைப் பார்த்துவிட்டு, "ஒண்ணுமில்லே" என்று சொன்னாள். ஆனால் அவள் கண்களிரண்டும் வேதனையால் சிவந்திருந்தன. அவற்றில் அழுகையின் நிழல்.

அவளுடைய வெப்பமான மூச்சுக் காற்றும் என் உடம்புக்கு இதமாயிருந்தது. குளிரால் உறைந்து என் உடலுக்குச் சூடாக ஒத்தடம் கொடுப்பதுபோல. அவள் அப்படியொன்றும் அவலட்சணமில்லை என்று தோன்றியது. உதடுகளும் மூக்குந்தான் கொஞ்சம் மோசம். அவளுடைய மூடிய கண்ணிமைகள், நெஞ்சின் மேல் கோத்திருந்த கைகள், படிந்திருந்த மார்பு இவையெல்லாம் சேர்ந்து ஒரு விசித்திர பிரமையை உண்டாக்கின.

"ஒனக்குத் தூக்கம் வரலியா?" அவள் கேட்டாள்.

"நான் தூங்கப் போறதில்லே" என்று சொன்னேன். மனதுக்குள் நினைத்துக் கொண்டேன், 'நான் தூங்கிட்டா ஒனக்கு ரொம்ப வசதியாயிடும் இல்லியா? அது மட்டும் நடக்காது! நீ பேசினால் எனக்கு சந்தேகம் வலுக்கிறது. பேசாம இரேன்!'

வெளியே இன்னும் புயல், மழையின் ஆர்ப்பாட்டம் குறையவில்லை. ஓட்டிலிருந்து ஒழுகும் மழைத்துளிகள் தரையில் விழும் ஒலி கேட்கிறது. கூடவே மூஞ்சூறின் கீச்சு மூச்சு சத்தம்.

அவளிடமிருந்து மறுபடியும் விம்மல்.

"என்ன ஆச்சு?"

சிறிது மௌனத்துக்குப் பிறகு அவள் பதில் சொன்னாள், "சீக்கு"

"என்ன சீக்கு?"

பதிலில்லை.

"சொல்லேன்!"

இப்போதும் மௌனம்.

"என்ன சீக்குன்னு சொல்லித் தொலையேன்!"

நான் எரிந்து விழுந்தேன். "காசம், காலரா கீலராவாயிருந்தா நான் இப்பவே வெளியே போயிடறேன். வியாதியோட ஒரு சேர்க்கையும் வேண்டாம் எனக்கு!"

"யாரோட சேர்க்கை பிடிக்கும் ஒனக்கு?" அவள் திருப்பித் தாக்கினாள்.

உண்மைதான், சேர்க்கை பற்றிப் பேச்சு எதற்கு இங்கே "என்ன சீக்குன்னு சொல்லேன்!" என்றேன்.

"இந்த மாதிரி வாழ்க்கையிலே ஏற்படற சீக்குதான்..."

இந்த மாதிரி வாழ்க்கையிலே? ஐயோ...! நான் பயத்திலும் வெருப்பிலும் சுருங்கிப் போனேன். "இந்த வியாதியோடே..."

என் கேள்வியைப் புரிந்து கொண்டாள் அவள். "அஞ்சு பேர் ஒரு ராத்திரியிலே..."

"என்ன அக்கிரமம்! ஏன் வைத்தியம் பண்ணிக்கலே?"

"காசுக்கு எங்கே போவேன்?"

"பணந்தான் சம்பாதிக்கிறயே!"

"அது மொதலாளியோட பணம்னா!"

"மொதலாளியா? இதுவும் ஒரு வேலையா?"

"இல்லாமே என்ன? மொதலாளிக்கு இது ஒரு தொழில். இந்த ரூம், கட்டில், மத்த சாமான்கள் எல்லாம் மொதலாளிக்கு சொந்தம். நாங்க இங்கே கூலிக்கு ஒழைக்கறோம்."

இதைக்கேட்டு சோர்ந்து போய்விட்டேன் நான். அப்படியானால் இவர்கள் மகிழ்ச்சியாக இல்லையா? இவர்களும் கூலிக்கு வேலை செய்பவர்கள்தானா?

"அந்த ராஸ்கல் மொதலாளி ஏன் சிகிச்சைக்கு ஏற்பாடு பண்ணலே?"

"அது அவன் இஷ்டம். தொழிற்சாலையிலே எவ்வளவு தொழிலாளிகள் செத்துப் போறாங்க! தொழிற்சாலை முதலாளி அவங்களுக்கெல்லாம் வைத்தியம் பண்றானா?"

உண்மைதான். அவளுடைய வேதனை நிறைந்த, அமைதியான பார்வை என்னை நிலை குலையச் செய்தது. போர்க்களத்தில் சிப்பாய் உயிரிழக்கிறான்தான், ஆனால் அன்றாட வாழ்க்கையில் இந்த மாதிரி யுத்தம்!

"அப்படீன்னா..." என்று பேச ஆரம்பித்தேன்.

"அப்படீன்னா வேறே என்ன? மொதலாளி கண்ணிலே

மண்ணைத் தூவி நாங்க எடுத்து வச்சுக்கற காசிலே வைத்தியம் செஞ்சுக்குவோம்..."

"உசிரோடிருக்கவா?" சிரிக்க முயன்ற என் முகம் கோணிக் கொண்டது.

"ஆமா, எல்லாருக்கும் உசிர்லே ஆசைதானே!" வேதனை மிகுதியால் உதடுகளைக் கடித்துக்கொண்டு சொன்னாள் அவள்.

உண்மைதானே! நிலத்தில் புலி வாழ்கிறது என்று தெரிந் திருந்தும் மனிதன் அங்கு வீடு கட்டுகிறான், ஊரை அமைத்துக் கொள்கிறான். வெள்ளம், புயல், பசி என்னதான் இல்லை உலகத்தில்? அப்படியும் வாழ ஏங்குகிறான் மனிதன். என் அதிருஷ்டங்கெட்ட நண்பனும் வாழத்தான் ஆசைப்பட்டான். அந்தப் பொட்டலத்திலுள்ள ஒவ்வொரு காசும் இரத்தத்தின் ஒவ்வொரு துளி. அந்தப் பொட்டலமே ஒரு இரத்தக் கட்டி...!

"நீ தூங்கப் போறதில்லையா?" அவள் கேட்டாள். இல்லை, என் கண்களில் தூக்கமில்லை. என்மேல் அவளது மூச்சுக்காற்று படுகிறது-வேதனையால் சூடான மூச்சுக்காற்று. கணப்பு நெருப்பு போல் இதமாயிருந்தது அது. பொட்டலம் வைத்திருந்த சட்டையை இறுகப் பற்றிக்கொண்டு எழுந்து நின்றேன்.

வெளியே முன் போலவே மழை-புயலின் சீற்றம். இரவே அநேகமாகக் கழிந்துவிட்டது.

என் உடைகளை அணிந்து கொண்டேன்.

அவள் எழுந்தாள், "கிளம்பிட்டியா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

சட்டைப் பையிலிருந்த பொட்டலத்தை இறுகப் பிடித்துக் கொண்டு "ஆமா" என்றேன்...

அந்த அதிருஷ்டங் கெட்டவன் வாயிலிருந்து ஒழுகிய இரத்தத்தை நக்கியவாறு, செத்துக்கொண்டே "இதை நீ வச்சுக்க" என்றான்.

ஏன்? ஏன்?

அவள் தன் வேதனையை அடக்கிக்கொண்டு தணிந்த குரலில் "மறுபடி வா" என்று சொன்னாள்.

அந்தப் பெண்ணுக்குத்தான் எப்படிப்பட்ட கண்கள்! ஈன வாழ்க்கையின் சுவடுகள் பதிந்த முகம், மேலே வளைந்த மூக்கு நுனி, தடித்த உதடுகள்... இருந்தாலும் இத்தகைய முகத்தைப் பார்த்ததேயில்லை நான்!

வேகமாகத் திரும்பிப் பொட்டலத்தை அவள் கையில் திணித்தேன். அவள் மூச்சு என்மேல் பட்டது. உடனே பார்வையைத் தாழ்த்திக்கொண்டு, பின்பக்கம் திரும்பி, குமுறும் கோபத்தில் பற்களைக் கடித்துக் கொண்டேன். என் வாயிலிருந்து

கிளம்பிய வார்த்தையைக் காற்று அடித்துக் கொண்டு போய்விட்டது.

"என்னைப் பின்னாலிருந்து கூப்பிடாதே!" என்று சொல்லி விட்டுச் சுமை தீர்ந்தவனாக வடக்கு நோக்கி நடக்கத் தொடங் கினேன்.

வானப்பிரஸ்த ஆசிரமத்துக்கு அல்ல, நண்பனின் வீட்டை நோக்கி.

கிழக்குக் காற்று என்னை மேற்கே கங்கைக் கரைப் பக்கம் தள்ளிவிட முயன்றது. அதனால் இயலவில்லை...

('கிருஷ்ணா', 1957)

# நண்பனுக்காக முன்னுரை

பிமல் கர்

என் நண்பன் காலஞ்சென்ற வசுதா முகோபாத்தியாய் ஒரு பிரபலமாகாத எழுத்தாளன். வசுதா உயிரோடிருந்தபோது சுமார் இருபது இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்னால். நாங்கள் மூன்று நண்பர்கள் ஒன்று சேர்ந்து அவனுடைய புத்தகமொன்றை வெளியிட்டோம். அந்தப் புத்தகப் பிரதிகள் வெகுகாலம் கோயாபகானில் ஒரு அச்சகத்தில் முடங்கிக் கிடந்து வீணாகி விட்டன. நாங்கள் அதன் சில பிரதிகளை நடைபாதைப் புத்தகக் கடைகளுக்கு இரண்டணா நாலணா விலைக்கு விற்றோம். அந்தப் பிரதிகளை யாராவது வாங்கிப் படித்திருப்பார்கள் என்று எங்களுக்குத் தோன்றவில்லை.

வெகுகாலத்துக்குப் பிறகு அதே புத்தகம் இப்போது மறுபடி அச்சிடப்படுகிறது. அதை அச்சிடுபவன் எனக்கும் வசுதாவுக்கும் நண்பனான புவன். முதல்தடவை புத்தகத்தை வெளியிட்டவர்களில் புவனும் ஒருவன்.

புத்தகத்தின் பெயர் 'நரகத்திலிருந்து பிரயாணம்' இந்தத் தடவையும் அதே பெயர்தான் வைக்கப்பட்டிருக்கிறது. முதல் பதிப்பில் புத்தகத்தில் மூன்று கதைகள் இருந்தன. இந்தப் பதிப்பில் இன்னும் இரண்டு கதைகள் சேர்க்கப்பட்டுள்ளன. வசுதா ஒரு மருத்துவமனையில் இறந்து போனான். அங்கு போகவோ, அவன் கடைசிக் காலத்தில் ஏதாவது எழுதியிருந்தால் அதை சேகரிக்கவோ சாத்தியப்படவில்லை. எங்களுக்குக் கிடைத்துள்ள படைப்புகளையே இந்தப் புத்தகத்தில் சேர்த்திருக்கிறோம்.

நான் முதலிலேயே வாசகர்களிடம் மன்னிப்புக் கோர வேண்டும். நான் எழுத்தாளனில்லை; முன்னுரை எப்படி எழுதுவதென்று எனக்குத் தெரியாது, என் மொழிநடையும் ஒரு முன்னுரைக்கேற்றதல்ல. புவன்தான் எனக்கு இந்தப் பொறுப்பைக் கொடுத்திருக்கிறான். இளமைக் காலத்தில் நானும் வசுதாவோடு எழுத்து முயற்சிகளில் ஈடுபட்டிருந்ததால் நான்தான் முன்னுரை எழுதத் தகுந்தவன் என்று புவன் நினைக்கிறான். தவிர,

அவனைவிட எனக்கு வசுதாவைப்பற்றி அதிகம் தெரியும் என்பது அவன் கருத்து. இந்தக் கருத்து சரியில்லை.. புவன் எழுத முயலா விட்டாலும் வசுதாவிடம் அவனது நேசம் என்னுடையதைவிடக் குறைந்ததல்ல; வசுதாவுடன் அவனது நெருக்கமும் அப்படித்தான் இருந்தாலும் வசுதாவின் புத்தகத்துக்கு முன்னுரை எழுதும் பொறுப்பு என்மேல் விழுந்திருக்கிறது.

வசுதா போன்ற ஒரு பிரபலமாகாத எழுத்தாளனின், யாரும் படிக்காத, எல்லாராலும் மறக்கப்பட்ட ஒரு புத்தகத்தை இருபது இருபத்திரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு நாங்கள் மறுபடி பிரசுரிக்க முன் வந்ததற்கு ஒரு விளக்கம் தேவை. நட்புணர்வு ஒன்றைத்தவிர வேறு முக்கியமான காரணம் எதுவுமில்லை. இறந்துபோன நண்பனுக்காக இந்த முறையில் எங்கள் அன்பைத் தெரிவிப்பதில் எங்களுக்கு தனிப்பட்ட முறையில் சிறிது ஆறுதல் கிடைக்கிறது...

நான்கைந்து மாதங்கள் முன்னால் புவன் காசிக்குப் போயிருந்தான். அங்கு ராமாபுராவில் ஒருவரைச் சந்தித்தான். அவர் வயது முதிர்ந்தவர். ஒரு நாள் புவன் அவருடைய வீட்டில் உரையாடிக் கொண்டிருந்தபோது ஒரு பையன் அங்கு வந்து ஒரு போட்டோவைக் கொடுத்துவிட்டுப் போனான். சில நாட்களுக்கு முன் அந்த அறையில் ஒட்டடையடிக்கும்போது அந்த போட்டோ கீழே விழுந்து அதன் கண்ணாடி உடைந்து விட்டதாம். இப்போது மறுபடி கண்ணாடி போட்டு வந்திருக்கிறது அது. தற்செயலாக அதைப் பார்த்த புவன் அதில் வசுதா இருப்பதைக் கவனித்தான். நிறம் மங்கிய அந்த போட்டோவில் இடம் பெற்றிருந்த மூவரில் ஒருவன் வசுதா. மற்ற இருவர் அந்த முதியவரும் அவருடைய பெண்ணும்.

"இவன் என்னோட நண்பன் வசுதா" என்று புவன் சொன்னான். "இவன் ஒரு எழுத்தாளன்."

"என் பெண்ணும் அப்படித்தான் சொன்னா. ஆனா நான் ஒரு நாளும் அவன் எழுதிப் பார்க்கல்லே" கிழவர் சொன்னார். "ஒரு தடவை நான் ஹரித்வாருக்குப் போயிருந்தபோது இவன் அங்கே ஒரு காச நோயாளிக்குப் பணிவிடை செய்யறதைப் பார்த்தேன். இது ஹரித்வாரிலே எடுத்த போட்டோ. இந்தப் பையன் ஒரு துறவி மாதிரி இருந்தான்... இப்போ இவன் எங்கே யிருக்கான், தெரியுமா?"

புவன் ஏனோ அவரிடம் வசுதா இறந்த செய்தியைச் சொல்லவில்லை. "எனக்குத் தெரியாது" என்று சொல்லிவிட்டான்.

காசியிலிருந்து திரும்பி வந்தபிறகு வசுதாவின் புத்தகத்தை மறுபடி வெளியிட வேண்டுமென்று தோன்றிவிட்டது புவனுக்கு. இதற்கு என்ன காரணமென்று பல தடவைகள் அவனைக்

கேட்டுவிட்டேன். அவன் பதில் சொல்வான், "பிரசுரிக்கறது நம் கடமை. வசுதா உயிரோடிருந்தபோது நான் எவ்வளவோ தடவை 'என்கிட்டே காசு இருந்தா ஒன் புத்தகத்தை முன்னாலேயே பிரசுரித்திருப்பேன்'னு அவன்கிட்டே சொல்லியிருக்கேன். இப்போ என்கிட்டே பணம் இருக்கு. நான் அதை அவனோட புத்தகத்தை வெளியிடச் செலவு செய்ய விரும்பறேன்."

இந்த நாற்பத்தாறு நாற்பத்தேழு வயதிலும் புவன் முன்போலவே உணர்ச்சிவசப்படுவனாயிருக்கிறான். என்னால் அப்படி இருக்க முடியவில்லை. எனக்குள்ள ஒரே ஆறுதல் வசுதாவுக்காக இந்த முன்னுரையை எழுத முடிகிறது என்பதுதான். வாசகர்கள் பெருந்தன்மையோடு என் குறையை மன்னித்து விடுங்கள்.

முதல் உலகப் போர் முடிந்த ஆண்டில்—அதாவது 1918-ல் மேற்கு வங்காளத்தில் வசுதா பிறந்தான். அது கார்த்திகை மாதமாயிருக்கலாம். அவனுடைய தந்தை ஒரு போஸ்ட் மாஸ்டர். அவர்கள் குடும்பம் அடிக்கடி வெவ்வேறு ஊர்களுக்கு மாற்ற லாகிக் கொண்டிருந்தது. இந்த மாற்றல்கள் வங்காளத்திலும் பீகாரிலுந்தான். வசுதாவின் தாயார் அடக்கமும் அமைதியும் கடவுள் பக்தியும் மிக்கவர். வசுதா கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது அவனுடைய அக்கா புக்ககத்தில் இறந்து போய் விட்டாள். அவனுக்கு வேறு உறவினர் இருந்தார்களா என்பது எங்களுக்குத் தெரியாது.

வசுதா கல்லூரிப் படிப்புக்காகக் கல்கத்தா வந்தபோது எங்களுக்கு அவனுடன் அறிமுகம் ஏற்பட்டது. அவன் கெட்டிக் கார மாணவனல்ல, பார்ப்பதற்கும் அழகாயிருக்க மாட்டான். கரகரப்புத் தொண்டை அவனுக்கு. ஆனால் நண்பன் என்ற முறையில் அவன் விலைமதிப்பற்றவன். அவன் தான் படித்ததை விடப் பத்து மடங்கு சிந்தித்தான். அவன் எங்களுக்கு ஏதாவது சொல்லவோ தெளிவாக்கவோ முயலும்போது அவனது கரகரத்த குரல் உணர்ச்சி மிகுதியால் மிகவும் கவர்ச்சிகரமாகிவிடும். அவன் மிகவும் உணர்ச்சிவசப்படுபவன் என்பதை அவனுடைய கண்களே சொல்லும். அவனுக்கு நீள முகம், கூர்மையான மேவாய், நீளமான மெல்லிய மூக்கு, ஆனால் கண்கள் சற்றுச் சிறிதாக, பிரகாசமாயிருக்கும். அடர்த்தியான புருவங்கள், மாநிறம், சுருட்டை முடி, ஒரு சாதாரண வங்காளி இளைஞனிடமிருந்து அவனை வேறுபடுத்திக் காட்டும் தனித்தன்மை எதுவும் அவனிட மில்லை. ஆனால் அவனோடு நெருங்கிப் பழகிய எங்களுக்கு, அவன் எங்கள் மாதிரி அல்ல, அவனிடம் ஏதோ ஒரு தனிக் கவர்ச்சி இருக்கிறது என்று தெரிந்திருந்தது.

பி.ஏ. படித்துக் கொண்டிருந்தபோது வசுதா எழுதத் தொடங்கினான். அதற்கு முன்னாலேயே அவன் எழுதத் தொடங்கி விட்டானா என்று எங்களுக்குத் தெரியாது. அவனுடைய முதல் கதை எங்கள் நண்பர்கள் நடத்திவந்த ஒரு பத்திரிகையில் வெளி வந்தது. அந்தக் கதை இப்போது கிடைக்கவில்லை. கல்கத்தாவில் குண்டு விழுந்த காலம் அது. எங்கும் குழப்பம். மக்கள் பயத்தில் தப்பியோடிக் கொண்டிருந்தார்கள். இந்தக் குழப்பச் சூழ்நிலையில் மற்றவர்கள் கதை எழுதியது போல் வசுதாவும் எழுதினான். மிக சாதாரணக் கதை அது. அப்போது நாங்கள் அவனைப் புகழ்ந் தாலும் அந்தக் கதை மிகவும் சாதாரணந்தான். அந்த கதை சம்பந்தமாக எதுவும் எங்களுக்கு நினைவில்லை.

தன் உண்மையான எழுத்துப் படைப்பு 1943ஆம் ஆண்டில் தான் தொடங்கியதென்று வசுதாவே நினைத்ததாக எங்களுக்குத் தோன்றுகிறது. அப்போது நாங்களெல்லாரும் வேலையிலமர்ந்து விட்டோம். வசுதா சிவில் சப்ளை அலுவலகத்தில் வேலை பார்த்து வந்தான். நானும் புவனும் வேறு அலுவலகங்களில் பணி புரிந்தோம். வசுதா பௌபஜாரில் ஓர் உணவுவிடுதியில் தங்கியிருந்தான். தினம் மாலையில் நானும் புவனும் அவனைப் பார்க்கப் போவோம். முன்னிரவு வரை அவனோடிருப்போம். வசுதா தன் எழுத்தைப் பற்றிச் சொல்லுவான், தான் எழுதியது ஏதாவது இருந்தால் அதைப் படித்துக் காட்டுவான். அவனது மனம் அமைதியற்றிருந்தது. எந்தப் படைப்பையும் இறுதிவரை எழுதப் பொறுமையில்லை அவனுக்கு. ஏதோ எழுதப் போவதாகச் சொல்லுவான், ஆனால் எழுத மாட்டான். எதையாவது எழுதத் தொடங்குவான், அரைகுறையாக விட்டுவிடுவான். மாதக் கணக்கில் இதே மாதிரி நடக்கும். இது எழுதப் போகிறேன், அது எழுதப் போகிறேன் என்று சொல்வான், ஒன்றும் எழுதமாட்டான்.

இந்தத் தொகுப்பின் முதல் கதை 'விநோதினியின் துக்கம்' அந்தக் காலத்து மாதப் பத்திரிகையொன்றில் பிரசுரமாயிற்று. வசுதா சொல்ல விரும்பிய ஏதோ ஒரு விஷயம் முதல் தடவையாக இந்தக் கதையில் வெளிப்பட்டது.

பதின்மூன்றாம் வயதில் விநோதினிக்குக் கல்யாணம். அப்போது அவளுடைய கணவனின் வயது பதினெட்டு. கனமான சிவப்புக் கரைப் புடவை அவளுடைய சிறிய உடம்பில் நிற்க வில்லை. ஆகையால் அவள் பாதிப் புடைவையைப் பொட்டலம் போல் சுருட்டி முதுகில் வைத்துக்கொண்டு அலைவாள். அவளுடைய கணவன் கங்காபதா அவளுக்காகத் திருட்டுத் தனமாகப் படகுத் துறையிலிருந்து மண்பொம்மை, கண்ணாடி வளையல், ஜிகினாப் பொட்டு, குங்குமம், கொய்யாக்காய், நாவல்

பழம் எல்லாம் வாங்கி வருவான். விநோதினி இவற்றைக் கட்டிலுக்கடியில் ஒளித்து வைப்பாள், இரவில் அவற்றையெடுத்து விளையாடுவாள், கொய்யாக்காயைக் கடித்துத் தின்பாள். கங்கா பதாவுக்குப் படகுத்துறையில் வேலை கிடைத்ததும் அவன் அவளுக்குக் கண்ணாடியாலான சைதன்யரின் பொம்மை ஒன்று வாங்கித் தந்தான். அதிலிருந்து அவள் சைதன்ய பக்தை ஆகிவிட்டாள்.

இவ்வாறு விநோதினி யுவதியானாள், குழந்தைகளுக்குத் தாயானாள், வீட்டை நிர்வாகம் செய்தாள். பிறகு அவளது இளமை கழிந்தது, முதுமையில் காலெடுத்து வைத்தாள். இந்த சமயத்தில் கங்காபதா இறந்துவிட்டான். இதன்பிறகு விநோதினிக்கு வாழ்க்கையில் பிடிப்பு விட்டுப்போய் விட்டது. அவள் தன் கணவனுடன் நாற்பதைந்து வருடங்களுக்கு மேல் குடித்தனம் நடத்தியிருந்தாள். இந்த நீண்ட குடும்ப வாழ்க்கையின் கட்டமைப்பு அவளுக்குப் பழகிப் போயிருந்தது. கணவனின் மரணம் இந்தக் கட்டமைப்பைக் குலைத்துவிட்டது. அவளுக்கு இப்போது வாழ்க்கை சூன்யமாக, பொருளற்றதாகத் தோன்றியது. ஓடிக் கொண்டிருக்கும் ஆற்றுத் தண்ணீர் வழியில் எங்கோ மணல் மண்ணில் மறைந்துவிட்டாற்போல்... கடவுள் சில கோடு களையும் நிறங்களையும் வைத்துக்கொண்டு அவளது வாழ்க்கை யாகிய ஒரு சிறு சித்திரத்தை தீட்டியிருந்தார். அந்தச் சித்திரத்தின் பாதிக் கோடுகள் அழிந்து போய்விட்டன, நிறங்கள் வெளிறிப் போய் விட்டன. அவளது வாழ்க்கைச் சித்திரமும் அழிந்துபோய் விட்டது. இனி மறுபடியும் சித்திரம் உருப்பெற வாய்ப்பில்லை.

விநோதினி தன் வாழ்க்கையின் வெறுமையைத் தன் பிள்ளையின் மூலம் தீர்த்துக் கொள்ளப் பார்த்தாள். ஆனால் அவள் மனம் இதற்கு இடங்கொடுக்கவில்லை. சாமி, பூஜை இவற்றிலும் மனதைச் செலுத்த முடியவில்லை அவளால். கண்ணாடி சைதன்யர் அவளுடைய பக்திக்குரியவர். அவள் நாற்பத்தைந்து ஆண்டுகளாக அவருக்கு வழிபாடு செய்து வருகிறாள். ஆனால் கங்காபதாவின் மறைவுக்குப்பின் சைதன்யரும் வெறும் கண்ணாடியாகி விட்டார். ஒவ்வொரு பூஜைக்குப்பிறகும் அந்தக் கடவுளின் மண் பதுமை ஆற்றில் போடப்படுகிறது. அந்த மண்ணும் மற்ற அலங்காரங்களும் தண்ணீரில் கரைந்து போகின்றன அல்லது தண்ணீரால் அடித்துக்கொண்டு போகப்படு கின்றன, எதுவும் மிஞ்சுவதில்லை என்பது திடீரென்று பிறந்தது அவளுக்கு. மனித வாழ்விலும் இத்தகைய முடிவு ஒரு தவிர்க்க முடியாத உண்மை. கங்காபதாவையும் விநோதினியையும் ஆற்றில் போடுவதற்காக மேள்தாளத்தோடு அவர்களை ஆற்றங் கரைக்குக்

கொண்டு வந்தாகிவிட்டது. கங்காபதாவை ஆற்றில் போட்டு விட்டார்கள். விநோதினிதான் பாக்கி. அவளைப் போட்டதும் அவள் தன் கணவனோடு சேர்ந்து விடுவாள். இவ்வாறு நினைத்து விநோதினி கடவுளை வணங்கினாள் இன்று.

வசுதா தன் தாயின் நினைவில் இந்தக் கதையை எழுதினான். வசுதாவின் தாய்க்கும் விநோதினிக்குமிடையே வேற்றுமை இல்லை. வசுதாவின் தாய் கடவுள் பக்தியுடையவரானாலும் தன் கணவரின் மரணத்துக்குப் பிறகு அவருக்கு வசுதாவிடமோ கடவுளிடமோ உண்மையான ஆறுதல் கிடைக்கவில்லை.

"அம்மாவுக்கு மேலுலகத்திலும் நம்பிக்கையில்லை. சாவைத் தான் நம்புகிறாள். எனக்கு ஒன்றும் புரியவில்லை" என்று சொல்லுவான் வசுதா.

தாயின் மறைவுக்குப் பல நாட்களுக்குப் பிறகு வசுதா இன்னொரு கதை எழுதினான். அதன் தலைப்பு 'துக்கத்திலிருந்து விடுதலை' அந்தக் கதை இந்தத் தொகுப்பின் இரண்டாவது கதை. அதிகம் பிரபலமில்லாத பத்திரிகையொன்றில் அந்தக் கதை வெளியாகியது.

'விநோதியின் துக்கம்' இலக்கண மொழிநடையில் எழுதப் பட்டிருந்தது. தொடக்கத்தில் வசுதா இலக்கண மொழியில்தான் எழுதினான். 'துக்கத்திலிருந்து விடுதலை' பேச்சு மொழியில் எழுதப்பட்டது.

'விநோதியின் துக்கம்' கதையில் விநோதினியின் ஒரே ஆறுதல் சாவுதான். அவள் சாவையே தன் துக்கத்தின் முடிவுக்கு வழியாகக் கருதினாள். இப்படிச் சொல்வது அவ்வளவு சரியாகப் படவில்லை. அவள் சாவின் மூலம்தான் கணவனுடன் ஓர் ஆத்மீகமான மறுசந்திப்பை எதிர்பார்த்தாள். வசுதா 'துக்கத்தி லிருந்து விடுதலை' கதையில் இந்தச் சாவையே இன்னும் நன்றாக ஆராய முயன்றான்.

அவன் இந்தக் கதையைத் தன் தாயின் மரணத்துக்கு வெகு நாட்களுக்குப் பிறகு எழுதினான் என்பதை முன்பே சொல்லியிருக் கிறேன். வசுதாவின் தாய் நோய்வாய்ப்பட் டிருந்தபோது அவனுக்கு ஒரு பெண்ணுடன் அறிமுகம் ஏற்பட்டது. நான் அவளுடைய பெயரை இங்கு சொல்லவில்லை. வசதிக்காக அவள் பெயர் நிருபமா அல்லது நிரு என்று வைத்துக் கொள்வோம்.

வசுதா தன் தாய் நோய்வாய்ப்பட்டிருக்கும் செய்தி கேட்டுத் தன் கிராமத்துக்குப் போனான். தாய் இறந்தபின் அவருடைய ஈமச் சடங்குகள் நிறைவேறும் வரை அங்கேயே தங்கினான். நானும் புவனும் பத்தாம் நாள் சடங்குக்கு வசுதாவின் கிராமத் துக்குப் போனோம். அப்போது வசுதா எங்களிடம் ஒரு

விசித்திரமான செய்தியைச் சொன்னான். ஆற்றங்கரையில் மயானத்தில் அவனுடைய தாயின் சடலம் திகுதிகுவென்று எரிந்து கொண்டிருந்தபோது அவன் ஒரு நாவல் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு நிருவைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தானாம்! அதன் பிறகும் இந்தப் பத்து நாட்களும் தன் தாயைவிட அதிகமாக நிருவைப் பற்றியே நினைக்கிறானாம்.

இது ஏன்? இந்த மாதிரி எந்த விஷயத்தையும் 'ஏன்?' என்று ஆராய்வது வசுதாவின் சுபாவம். அவன் தன் தாயைப் பற்றி எவ்வளவு சிந்திக்கக் கடமைப்பட்டவனோ அவ்வளவு சிந்திக்க வில்லை. தாயின் மரணத்தால் ஏற்பட்டிருக்க வேண்டிய துக்கமும் வேதனையும் அவனுக்கு ஏற்படவில்லை. இதற்குப் பதிலாக அவன் நிருபமாவைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறான். இது அவனை ஒரு குற்ற உணர்வுக்கு உள்ளாக்கியது. தான் ஒரு பெருங்குற்றம் செய்துவிட்டோம் என்ற உணர்வு ஏற்பட்டது அவனுக்கு. அவன் தன்னை அனாவசியமாக வருத்திக் கொள்கிறான் என்று நாங்கள் அவனை எவ்வளவோ தேற்றியும் பயனில்லை.

அவன் சில நாட்கள் இவ்வாறு வருத்தமாகப் பொழுதைக் கழித்தான், நிருபமாவையும் வருத்தப்படச் செய்தான். பிறகு தன் கேள்விக்கு ஏதோ ஒரு விடை கண்டுபிடித்து இந்தத் 'துக்கத்தி லிருந்து விடுதலை' கதையை எழுதினான்.

'விநோதினியின் துக்கம்' கதையில் விநோதினி சாவில் தன் துக்கத்தின் தீர்வைக் காண்கிறாள். 'துக்கத்திலிருந்து விடுதலை' கதையில் சுகேந்து உணர்கிறான் 'சாவு என்பது வெறும் ஜடந்தான். வாழ்க்கைதான் எதிர்வினையைப் படைக்கிறது, சாவோ எதையும் படைப்பதில்லை.'

சுருக்கமாகச் சொல்வதென்றால், விநோதினி சாவின் மூலம் பெற விரும்பிய அமைதியை சுகேந்து வாழ்வின் மூலம், உயிர்த் துடிப்பின் மூலம் பெற முயல்கிறான்.

சுகேந்துதான் 'துக்கத்திலிருந்து விடுதலை' கதையின் நாயகன். அவனுடைய வயது கதையில் சற்று அதிகமாகக் காட்டப்பட்டிருக் கிறது. மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இது ஒரு காதல் கதை போலத் தோன்றும். ஆனால் வாழ்வுக்கும் சாவுக்குமிடையே ஏற்படும் முரண்பாடுதான் இந்தக் கதையின் கரு என்பது என் கருத்து. சுகேந்து ஒரு விசித்திரமான மனக்குழப்பத்தோடு சோகமாக வாழ்க்கை நடத்துவதை நாம் கதையின் தொடக்கத்தில் காணுகிறோம். அவன் ரேணு என்ற பெண்ணைக் காதலிக்கிறான். ஆனால் அவனுடைய தாயைப் பற்றிய நினைவின் தீவிரம் அவன் ரேணுவுடன் இயற்கையான உறவு கொள்வதைத் தடுக்கிறது.

எப்போதும் அவனுக்கு ஒரு குற்ற உணர்வு, மனச்சாட்சியின் உறுத்தல். தான் தன் தாயின் சாபத்தைச் சுமந்து கொண்டு வாழ்ந்து வருவதாகத் தோன்றுகிறது அவனுக்கு. இது எப்படி என்று அவனுக்குப் புரியவில்லைதான் தன் தாய்க்குச் செய்ய வேண்டிய கடமையை நிறைவேற்றவில்லை என்று மட்டும் அவனுக்குப் புரிகிறது.

சுகேந்து இந்தக் குழப்பத்திலிருந்து வெளியேறுவான் என்று நாம் எதிர்பாராத நிலையில் இந்தக் குழப்பத்துக்குத் தீர்வாக ஒரு நிகழ்ச்சி நிகழ்கிறது. கதையின் இறுதியில் நேரும் ஆச்சரிய நிகழ்ச்சியைத்தான் குறிப்பிடுகிறேன். அப்போது குளிர்காலத்தின் தொடக்கம். அந்த நேரத்தில் சுகேந்துவும் ரேணுவும் ரேணுவின் வீட்டு மொட்டைமாடியிலமர்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள். கல்கத்தாச் சந்துகளிலிருந்து எழும் அடுப்புக் கரிப்புகை, காஸ் விளக்கின் மங்கிய ஒளி, சிறிது நிலவு இவையெல்லாம் சேர்ந்து ஒரு மங்கலான வெளிச்சம் பரவியிருக்கிறது எங்கும். ரேணு பேசிக்கொண்டிருந்துவிட்டு எழுந்து போயிருந்தாள். சுகேந்து மட்டும் தனியாக உட்கார்ந்திருந்தான். அப்போது யாரோ தன்னருகில் வந்து உட்கார்ந்திருப்பதாக அவனுக்குத் தோன்றியது. வெள்ளை நிழல் போன்ற ஓர் உருவம். முதலில் அந்த மங்கலான வெளிச்சத்தில் அதை அடையாளங்கண்டு கொள்ள முடிய வில்லை அவனால். சற்றுக் கவனித்துப் பார்த்ததில் புரிந்தது அது அவனுடைய அம்மா!

முதிலில் அவனுக்கு வியப்பு ஏற்பட்டது. பின்னர் அவனுக்குப் புரிந்தது. அம்மா ஏன் அங்கு வந்திருக்கிறாரென்று. தாயிடம் பாசமும் தாய்க்காகத் துக்கமும் பொங்கி வந்தன அவனுக்குள். ஏதோ ஒரு வகை இனம்புரியாத மனநிலை அவனை ஆட்கொண்டது. அவன் தன் தாயிடம் ஏதோ சொல்ல முற்பட்டான். திடீரென்று இதென்ன மணம்? யாருடைய மணம்? ஏதோ நினைவில் அவன் தலை குனிந்தான். சட்டைப்பைக் குள்ளிருந்து ஒரு பூவின் மணம் வருவதை உணர்ந்தான். சிறிதுநேரம் முன்பு ரேணு தன் கொண்டையிலிருந்த ஒரு ரோஜா மலரை எடுத்து அவன் பைக்குள் வைத்தது அவனுக்கு நினைவு வந்தது. அந்த மலரின் மணம்தான் எவ்வளவு இனிமையாக, இதமாக, உயிர்த் துடிப்போடு இருக்கிறது. ரேணுவின் உடல், உள்ளம், அவளது காதல் இவையெல்லாம் அந்தக் கணத்தில் ஒரு பேரலை யாகக் கிளம்பி அவனை அடித்துச் செல்லத் தொடங்கியது. அந்த நிலையில் சுகேந்து தன் தாயிடம் "இனிமேல் நீ வராதே!" என்று சொன்னான்.

வசுதா தன்னுள்ளத்தில் அனுபவித்த பச்சாதாப உணர்வை

சுகேந்து கடந்து செல்வதாகக் கதையில் சித்திரிக்கிறான். தான் நிருவைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருந்தபடியால் தன் தாயின் மரணத்துக்காகப் போதிய அளவு வருந்தவில்லை என்ற குற்ற உணர்வால் அவனுக்கு ஏற்பட்டிருந்தது. சோகத்திலிருந்து இப்போது விடுதலை கிடைத்து விட்டது அவனுக்கு. நிருவிடம் அவனுக்கிருந்த ஈடுபாடு இயற்கையானதுதான் என்பதை அவன் உணர்ந்து கொண்டான். ஏனென்றால் நிரு உயிரோடிருக்கிறாள். வாழ்வும் அன்பும் ஒன்றோடொன்று இணைந்தவை.

'துக்கத்திலிருந்து விடுதலை' காதல் கதையல்ல, அது காதலைப் பற்றிச் சொல்லவில்லை. மனிதன் வாழ்க்கையில் ஈடுபாடு கொண்டவன், இந்த ஈடுபாடில்லாமல் யாரும் வாழ முடியாது என்ற கருத்தையே வசுதா இந்தக் கதையில் சொல்ல முயல்கிறான்.

இந்தக் கதை வசுதாவின் வாழ்க்கையில் நல்ல தாக்கத்தை ஏற்படுத்தியது என்று நான் நினைக்கிறேன். சுகேந்து இந்த விளைவுக்கு ஒரு சாதனமாக அமைந்தான்...

இத்தொகுப்பின் மூன்றாவது கதை 'நரகத்திலிருந்து பிரயாணம்'. தொகுப்பின் முதல் பதிப்புக்கு இந்தப் பெயர்தான் வைக்கப்பட்டிருந்தது. இந்தத் தொகுப்புக்கும் இதே தலைப்புதான் கொடுக்கப்பட்டுள்ளது.

'துக்கத்திலிருந்து விடுதலை' கதையெழுதிச் சுமார் ஓராண்டுக்குப் பிறகு வசுதா இந்தக் கதையை எழுதினான். இதைக் காதல் கதையென்று சொல்லலாம். ஒரு காதல் கதைக்கு 'நரகத்திலிருந்து பிரயாணம்' என்ற தலைப்பு விசித்திரமாகத் தோன்றலாம். இந்தக் கதையில் ஓர் இளைஞனின் காதல் வேட்கையும் காதல் தோல்வியும் சித்திரிக்கப்பட்டுள்ளன. வசுதா தன்னையே இந்தக் கதையில் கதாநாயகன் பரிமலாகச் சித்திரித்திருக்கிறான். கதாநாயகியின் பெயர் நிருபமாதான். கல்கத்தாவில் சதானந்த சௌத்திரி சந்தில் ஒரு வீட்டின் மாடியில் நிருபமா வசித்து வந்தாள். அந்த வீட்டின் கீழ்த்தளத்தில் பரிமலின் நண்பனொருவன் தங்கியிருந்தான். பரிமல் அவ்வப்போது நண்பனைப் பார்க்க வருவான். இவ்வாறுதான் அவனுக்கு நிருபமாவுடன் பரிச்சயம் ஏற்பட்டது... இந்தப் பரிச்சயம் நெருக்கமாக வளரச் சிறிது காலம் பிடித்தது என்றாலும் பரிமல் முதல் சந்திப்பிலேயே நிருபமாவால் ஈர்க்கப்பட்டான் என்பதை ஊகிக்க முடிகிறது. சிலர் காதல் ஒரு தெய்வீக உணர்வு என்று நினைக்கிறார்கள். காதல் மனித இதயத்துக்கு உயிரூட்டுவதாகக் கருதுகிறார்கள். இத்தகையவர்களில் பரிமலும் ஒருவன். மிகவும் சாதாரணப் பெண்ணான நிருபமாவுக்கு சங்கோச சுபாவமுள்ள பரிமலைப் பிடிக்காமற்போனது இயற்கையே.

எனினும் கதையின் முதற்பகுதியில் பரிமலும் நிருபமாவும் நெருங்கிப் பழகுகிறார்கள். இரண்டாம் பகுதியில் இருவரிடையே காதல் ஏற்படுகிறது. பரிமலின் காதல் ஆழமானது, உண்மையானது. இந்த காதல் தன் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக விலை யுயர்ந்ததாக ஆக்குவதாகப் பரிமல் நினைத்தான். நிருபமா அப்படி நினைக்கவில்லை. அப்படி நினைக்கக் காரணமும் இல்லை. அவளுக்குச் சிந்திக்கத் தெரியவில்லை. இருந்தாலும் இந்தக் காதலில் அவளுக்குக் கிளுகிளுப்பு ஏற்பட்டது.

இந்தக் காதல் இறுதியில் முறிந்து விட்டது. இதன் காரணத்தை ஊகிக்க முடியும். நிருபமா வீட்டுக் கீழ்த்தளத்தில் குடியிருந்த பரிமலின் நண்பன் மன்மதனின் சூழ்ச்சியாலும் நீசத்தன்மையாலும் இந்தக் காதல் முறிந்தது. இந்த முறிவுக்குக் காரணம் பரிமல்தான் என்று ஒவ்வொரு சமயம் தோன்றுகிறது. சில சமயங்களில் நிருபமாதான் இதற்குப் பொறுப்பு என்று தோன்றுகிறது. மன்மதன் நிருபமாவை அடைவதற்குப் பரிமலுடன் போட்டியிட்டான். ஆனால் அவன் மிகவும் தந்திரசாலியாக திருட்டுத்தனமாக, போக்கிரித்தனமாகச் செயல்பட்டான். அவன் நிருபமாவின் தாயையும் பிறகு நிருபமாவையும் வசப்படுத்திக் கொண்டான். நிருபமாவின் தாய்க்குக் காதலைப் பற்றி அக்கறை யில்லை. அவளுக்குத் தெரிந்ததெல்லாம் குடும்ப வாழ்க்கையும் பெண்ணின் சுகமுந்தான். அவள் பரிமலைத் தகுந்த வரனாகக் கருதவில்லை. நிருபமாவும் தவறு செய்துவிட்டாள்— மன்மதனின் புத்திசாலித்தனமும் திறமையும் அவளைக் கவர்ந்து விட்டன. தவிர அவள் பரிமலை ஏற்றுக் கொள்வதை அவளுடைய தாய் விரும்பவில்லை. சிறு வயதிலிருந்தே நிருபமாவுக்கு நோய் என்றால் பயம், அருவருப்பு. பரிமலை நோயாளியாகக் கருதினாள் அவள். வெகுநாட்களாகவே அவள் பரிமலைத் தன் காதலனாகக் கருத முயற்சி செய்து வந்தாள். ஆனால் கல்யாணத்துக்குப் பிறகு இந்தக் காதல் அன்றாட வாழ்க்கையின் ஒரு பகுதியாகி விட்டால் நிருபமாவுக்கு வாழ்க்கையில் இன்பம், அமைதி கிடைக்குமா? கிடைக்கும் என்று தோன்றவில்லை அவளுக்கு.

ஒருவகையில் பரிமலையும் குற்றவாளியாகக் கருதலாம். அவன் காதல் பாதையில் வெகுதூரம் அனாயாசமாகப் பயணித்து வந்த பிறகு திடீரென்று ஓரிடத்தில் நின்று விட்டான். இதற்கான காரணத்தை ஊகிக்க முடியும். இந்தக் காதல் மூலம் அவனுக்குக் கிடைக்கக்கூடியதெல்லாம் இதற்குள்ளேயே அவனுக்குக் கிடைத்திருக்கலாம். இப்போது அவன் காதலால் நேரும் துக்கம், அதன் நிறைவின்மை இவற்றைப் பற்றி யோசிக்கத் தொடங்கி யிருக்கலாம். காதலின் லாப நஷ்டங்களைச் சிந்தித்துப் பார்த்த

அவன் காதல் நிலையானதல்லல, அது எப்போதும் ஒரே மாதிரி இருப்பதில்லலை என்று புரிந்து கொண்டான். உயிர்த்துடிப்புள்ள அழகுக்குத் தேய்வு உண்டு, மாறுதல் உண்டு. அதுபோல் காதலிலும் நிறைவின்மை உண்டு, துக்கம் உண்டு, பரிமல் எதிர்பார்த்த நிலையான, தேய்வில்லாத அன்பு உண்மை வாழ்க்கையில் அடைய முடியாத ஒன்றாகும்.

நிருபமாவின் குற்றம் அவள் ஒரு சாதாரணப் பெண் என்பதுதான். அவள் வேண்டியது வாழ்க்கையில் சுகம், வசதி. பரிமலை ஏற்றுக்கொள்ள அவள் தயங்கினாள். அவளது தயக்கத்தினன் ஒரு பகுதி மன்மதனின் சூழ்ச்சியின் விளைவு, இன்னொரு பகுதி வாழ்க்கையில் அவளது எதிர்பார்ப்பின் விளைவு.

'நரகத்திலிருந்து பிரயாணம்' வசுதாவின் சொந்த வரலாறு தான்—இறுதியில் நிருவின் காதல் அவனுக்கு அமைதியளிக்க வில்லை. நிரு இறுதியில் வேறொருவனை மணந்துகொண்டு விட்டாள். காதலின் இந்தத் தோல்வி பற்றி நாங்கள் நினைத்தது போல் வசுதா நினைக்கவில்லை. அவன் சொல்வான், "காதல் பற்றி நமது கருத்து மிகவும் குறுகியது. காதல் என்பது ஒரு பெண் அல்லது ஓர் ஆணைச் சார்ந்திருப்பபதாக நாம் நினைக்கிறோம். அந்தப்பெண் அல்லது ஆண் விலகிப்போய்விட்டால் நாம் துன்பத்தால் துடித்துச் சாகிறோம். இது ஏன்?"

இந்த 'ஏன்?' என்ற கேள்வியிலிருந்து வசுதா ஒரு போதும் விடுதலை பெறவில்லை. நாம் வாழ்க்கையில் சாதாரணமாகச் சந்திக்கும் அற்ப எல்லைகளுக்குட்பட்ட அன்பு அவனுக்குப் பிடிக்கவில்லை. இந்த அன்பை அவன் இறுதியில் மறுத்து விட்டான். பொறாமை, பேராசை, நீசத்தனம் முதலிய உணர்வுகள் வலுப்பதன் காரணமாக நம் வாழ்க்கை உள்ளூர மாசுபட்டுப் போவதை அவன் கண்டான். நம் குறைகளே நம்மை நரகவாசி களாக ஆக்கி விட்டன என்பது அவன் கருத்து. இந்த நரகத் திலிருந்து மீட்சிபெறுவதைச் சித்திரிக்கும் முயற்சியே அவனது 'நரகத்திலிருந்து பிரயாணம்' கதை. தனிப்பட்ட காதலின்பமாகிய எல்லையைக் கடந்து செல்ல அவன் முயற்சி செய்தான் போலும்.

வசுதா கல்கத்தாவை விட்டுச் சென்ற அதே ஆண்டில் நான் திருமணம் செய்துகொண்டேன். என் மனைவிக்கு வசுதாவைத் தெரியும். அவள் வசுதாவின் எழுத்தை ரசித்தாளா என்று எனக்குத் தெரியாது. நான் வசுதாவை என் திருமணம்வரை கல்கத்தாவில் தங்கும்படி கேட்டுக் கொண்டேன். அவன் தங்க வில்லை. இதற்குச் சில மாதங்கள் முன்புதான் நாங்கள் அவனது சிறுகதைத் தொகுப்பை வெளியிட்டிருந்தோம்.

அதன் பிறகு நான் வசுதாவைச் சந்திக்கவில்லை. வருடத்தில் ஓரிரண்டு கடிதங்கள் அவனிடமிருந்து வரும். புவனுக்கும் அதேமாதிரி எப்போதாவது கடிதம் வரும். அவன் ஒரு நாடோடியாகி விட்டான் என்று அவனுடைய கடிதங்களிலிருந்து எங்களுக்குப் புரிந்தது. பிறகு ஒரு சமயம் அவன் தீவிர கடவுள் பக்தனானான். இறுதியில் அவன் கடவுளை விட்டுவிட்டுப் பொது நல சேவையில் ஈடுபட்டு விட்டான்.

வசுதாவின் கடைசி இரண்டு கதைகளைப் பற்றி நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை. நான் நகரத்தில் வசிக்கும் பிராணி. வசுதா நரகத்தைவிட்டு வெளியே பயணிக்கச் செய்த முயற்சிகள் பற்றி எனக்குத் தெரியாது. 'ஈசுவர்' என்ற அவனது நான்காவது கதையும், 'அடைக்கலம்' என்ற ஐந்தாவது கதையும் அவனது வாழ்க்கையின் இறுதிப் பகுதியின் வரலாற்றைத் தெரிவிக்கலாம். புவன் காசியிலிருந்து திரும்பி வரும்போது அந்தக் கிழவரின் பெண்ணிடமிருந்து இந்த இரண்டு கதைகளின் கையெழுத்துப் பிரதிகளையும் வாங்கி வந்திருந்தான். இரண்டுமே முற்றுப் பெறாத கதைகள். இவற்றைப் படிக்கும் வாசகர்களும் இதை உணர்வார்கள்.

'ஈசுவர்' சாதாரண நடையில் எழுதப்பட்டதல்ல. இதை ஒரு குறியீட்டுக் கதை எனலாம். படிக்கும்போது அது மிகவும் எளிமையாகத் தோன்றும். ஆனால் இறுதியில் ஏதோ ஒரு வெறுமை, குறை தென்படும். 'கதையின் இயற்கைக்கு மாறான தன்மை அதன் தொடக்கத்திலேயே தெரியவரும். ஒரு வழிப் போக்கன் மழையும் புயலுமான ஓர் இரவின் இருளில் ஒரு கோவிலில் அடைக்கலம் பெறுகிறான். அங்கே இருட்டிலேயே ஒரு துறவியைச் சந்திக்கிறான். அவனுடன் உரையாடும்போது துறவி சொல்கிறார், "என்னிடமிருக்கும் பையில் ஒரு விளக்கு இருக்கிறது. அதை ஏற்றிக்கொண்டால் எந்த மழையிலும் இருட்டிலும் வழி தெரியும்."

வழிப்போக்கன் கேட்கிறான், "அப்படியானால் நீங்கள் ஏன் இருட்டில் உட்கார்ந்திருக்கிறீர்கள்? விளக்கை ஏற்றிக்கொண்டு வழி நடக்கலாமே!"

"என் பையில் ஒரே மாதிரி மூன்று விளக்குகள் இருக் கின்றன—ஒன்று அசல், மற்ற இரண்டும் போலி. இந்த இருட்டில் என்னால் அசல் எது, போலி எது என்று கண்டுபிடிக்க முடிய வில்லை" என்கிறார் துறவி!

இதைக்கேட்டு, 'ஆகா, இந்த விளக்கு நம்மிடமிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!' என்று வழிப்போக்கனுக்குத் தோன்று கிறது. அவனுடைய ஆசையைப் புரிந்துகொண்டு விடுகிறார் துறவி. "உன்னால் முடிந்தால் நீ அசல் விளக்கைக் கண்டு

பிடித்துக்கொள்" என்று அவர் சொல்லி அவனிடம் விளக்குகளைக் கொடுக்கிறார். மூன்று விளக்குகளும் ஒரே மாதிரியாக இருக் கின்றன. இருட்டில் அவற்றில் அசல் எது நகல் எது என்று வழிப் போக்கனால் கண்டுபிடிக்க முடியவில்லை.

"முடியவில்லையா?" துறவி கேட்கிறார்.

"முடியவில்லை."

துறவி விளக்குகளைத் திரும்ப வாங்கிக் கொள்கிறார். "இவற்றில் ஒன்று அசல் விளக்கு. ஏற்றத் தெரிந்தவன் கையில் அது நிச்சயம் எரியும். அவன் தன் சொந்த சக்தியால் அதை ஏற்றுவான்" என்கிறார் அவர்.

கதை இத்துடன் நின்று விடுகிறது. ஆனால் வசுதா தொடர்ந்து ஏதோ எழுதப் பலமுறை முயன்றிருக்கிறான், அம்முயற்சிகளில் தோல்வியுற்றிருக்கிறான் என்று கையெழுத்துப் பிரதியிலிருந்து தெரிகிறது. அவன் துறவியின் புதிர் போன்ற பேச்சுக்குப் பொருள் காண முயன்று தோல்வியடைந்திருக்கலாம்.

"அடைக்கலம்" கதை காசியில் எழுதப்பட்டது. அதன் தொடக்கம் இருக்கிறது, முடிவு இல்லை. ஒவ்வோராண்டும் குளிர்காலத்தில் காசியையடுத்த கிராமப் பகுதியில் தொற்றுநோய் பரவுவதுண்டு. ஒரு தடவை அங்கு கடுமையான தொற்றுநோய் பரவியது. அரசாங்க ஊழியர்கள் கூட அங்கே போகத் துணிய வில்லை. கங்கைக் கரையில் சிதைகள் இடைவிடாது எரிந்தன. காசியில் வசித்துவந்த கதாநாயகன் ஒருநாள் காலையில் கங்கையில் நீராடிவிட்டு திரும்பும்போது யாரோ தன்னைப் பின்னாலிருந்து கூப்பிடுவதாக உணர்ந்தான். பக்கத்து கிராமத்திலிருந்து ஒரு நண்பன் வந்து அவனுக்குக் கபீரின் பாடல்களை ராகத்தோடு பாடிக் காட்டுவானே, அவன்தானோ?

அதே ராகத்தில் அதே குரல் கேட்டது - "நாங்கள் துன்புறு கிறோம், நாங்கள் அமைதியிழந்து விட்டோம், மரத்துக்கு வேர் உண்டு, எங்களுக்கு வேர் இல்லை. ஒரே இடத்தில் நிலைத்திருக்க முடியவில்லை எங்களால்..."

அன்று வசுதா வீடு திரும்பவில்லை. தொற்றுநோய் பரவி யிருந்த கிராமப்புறத்துக்குப் போய்ச் சேர்ந்து விட்டான் அவன்.

இவ்வளவுதான் எழுதியிருந்தது கதையில். இந்தக் கதையை எழுதிய மறுநாள் வசுதா அங்கிருந்து போய்விட்டதாகக் கிழவரும் அவருடைய மகளும் அவனிடம் சொன்னார்கள். அவன் எங்கே போனான் என்று அவர்களுக்குத் தெரியாது...

சோட்டா நாக்பூர்ப் பகுதியில் ஓரிடத்தில் ஒரு மிஷன் மருத்துவமனையில் வசுதா இறந்து போனான். அவன் இறந்து பல நாட்களுக்குப் பிறகுதான் எங்களுக்கு அவனுடைய

மரணச்செய்தி கிடைத்தது.

அவன் மருந்துவமனையில் எதுவும் எழுதியதாகத் தெரிய வில்லை. எழுத வேண்டிய தேவை அவனுக்குத் தீர்ந்து போயிருக்க வேண்டும்.

வசுதாவின் படைப்புகளைப் பற்றி நான் அவனுடைய நண்பன் என்ற முறையில் எழுதியிருக்கிறேன். இதுதான் இயற்கை. என் கருத்துக்களில் தவறு இருக்கலாம். தவறு இருந்தால் வாசகர்கள் என்னை மன்னிக்கட்டும்.

இந்தத் தொகுப்பின் முகப்பில் ஒரு 'சமர்ப்பணம்' இருக்கிறது. அது முதல் பதிப்பிலும் இருந்தது. அந்த சமர்ப்பணத்தில் குறிப் பிடப்பட்டுள்ள நிருபமாராய் வசுதாவின் அந்த நிருபமாதான்...

('ஆம்ரா தீன் பிரேமிக் ஓ புவன்,' ஜூலை 1968)

# பாரதநாடு

## ராமபத சௌதுரி

ராணுவக் குறியீட்டுப்படி அந்த இடத்தின் பெயர் BF332. அது ஒரு ரயில்வே ஸ்டேஷன் அல்ல. அங்கே பிளாட்பாரமும் இல்லை, டிக்கெட் கௌண்டரும் இல்லை. திடீரென்று ஒருநாள் அங்கே ரயில் தண்டவாளத்தையொட்டிப் பளபளக்கும் முள்வேலி போடப்பட்டது. அவ்வளவுதான். இரு திசைகளிலும் போகும் ரயில்களில் எதுவுமே நிற்பதில்லை. ஒரேயொரு ஸ்பெஷல் ரயில் மட்டும் என்றாவது ஒரு நாள் காலையில் அங்கு வந்து நிற்கும். என்றைக்கு நிற்கும் என்பது எங்களுக்கு மட்டும்தான் முன்னதாகத் தெரியும். நாங்கள் என்றால் பிகாரி சமையல்காரனைச் சேர்த்து நாங்கள் ஐந்து பேர்.

ரயில் நிற்பதில்லை, ஸ்டேஷன் இல்லை. அப்படியும் அந்த இடத்துக்கு ஒரு பெயர் கிடைத்து விட்டது—'அண்டா ஹால்ட்'. அண்டா என்றால் முட்டை. நாங்களும் அந்தப் பெயரைப் பயன்படுத்தத் துவங்கி விட்டோம்.

அருகிலிருந்த இரண்டு குன்றுகளுக்கு நடுவில் மகதோ இனத்தவர் வாழ்ந்து வந்த கிராமம் ஒன்று இருந்தது. அந்தக் கிராமத்தில் நிறையக் கோழிகள் வளர்க்கப்பட்டன. மகதோக்கள் அங்கிருந்து வெகு தொலைவிலிருந்த புர்க்குண்டாவில் சனிக் கிழமை தோறும் கூடும் சந்தையில் கோழிகளையும் முட்டை களையும் விற்கப் போவார்கள். சில சமயம் சந்தையில் கோழிச் சண்டையும் நடக்கும்.

ஆனால் BF332க்கு 'அண்டா ஹால்ட்' என்று பெயர் வர இது காரணமல்ல. எங்களுக்கு அந்தக் கிராமத்து முட்டைகள் மேல் எவ்வித ஆசையும் இல்லை.

ரயில்வே இலாகா ஒரு காண்டிராக்டருடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தது. அவனிடம் ஒரு டிராலி வண்டி இருந்தது. அவன் சிவப்புக் கொடி கட்டப்பட்ட அந்த டிராலியைத் தண்டவாளங்களின்மேல் தள்ளிக் கொண்டு வந்து அங்கே கூடை கூடையாக முட்டைகளை இறக்குவான். பிகாரி சமையல்

காரன் பகோதிலால் அவற்றை இரவில் வேக வைப்பான். பிறகு வெந்த முட்டைகள் தோலுரிக்கப்படும். உரிக்கப்பட்ட முட்டைத் தோல் நாளடைவில் மலைபோல் குவிந்து விட்டது. இதனால்தான் அந்த இடத்துக்கு 'அண்டா ஹால்ட்' என்று பெயர் வந்தது.

ராணுவ மொழியில் வழங்கப்பட்ட BF332-ல் உள்ள BF என்ற எழுத்துக்கள் Breakfast (காலையுணவு) என்ற ஆங்கிலச் சொல்லின் சுருக்கம் என்று நினைக்கிறேன்.

அப்போது ராம்கட் என்ற ஊரில் போர்க் கைதிகளின் முகாம் ஒன்றிருந்தது. அங்கு இத்தாலியப் போர்க் கைதிகள் துப்பாக்கிகளாலும் முள்வேலியாலும் சிறைப்படுத்தப்பட்டிருந் தார்கள். சில சமயம் அவர்கள் ஒரு ரயிலில் ஏற்றப்பட்டு வேறோரிடத்துக் கொண்டு செல்லப் படுவார்கள். அவர்கள் ஏன், எங்கே கொண்டு போகப் படுகிறார்களென்று எங்களுக்குத் தெரியாது.

மறுநாள் காலையில் ரயில் வந்து நிற்கும் என்று எனக்குச் செய்தி வரும். முட்டைகளும் கூடவே வரும். நான் பகோதிலா லிடம் முட்டைகளைக் காட்டி "முன்னூத்தி முப்பது காலைச் சாப்பாடு" என்று சொல்வேன்.

பகோதிலால் எண்ணி அறுநூற்று அறுபது முட்டைகளுடன் உபரியாக இருபத்தைந்து முட்டைகள் எடுத்துக்கொள்வான். முட்டைகளில் சில அழுகிப் போயிருக்கலாம் என்பதற்காக உபரி முட்டைகள். பிறகு அவற்றை நன்றாக வேக வைப்பான். வெந்த முட்டைகளை மூன்று கூலிகளின் உதவியோடு தோலுரிப்பான்.

இந்த முட்டைத் தோல்கள்தான் முள்வேலிக்கு வெளியே மலையாகக் குவியும்.

காலையில் ரயில் வந்து நிற்கும். அதன் இரு திசைகளி லிருந்தும் ராணுவச் சிப்பாய்கள் கீழே குதிப்பார்கள் காவலுக்காக.

பிறகு கோடுபோட்ட சிறையுடையணிந்த போர்க் கைதிகள் ரயிலிலிருந்து இறங்குவார்கள். ஒவ்வொருவர் கையிலும் ஒரு பெரிய குவளை, ஒரு பீங்கான் தட்டு.

மூன்று கூலிகளும் இரண்டு பெரிய பெரிய டிரம்களைக் கவிழ்த்து அவற்றை மேஜை போலப் பயன்படுத்துவார்கள். போர்க்கைதிகள் வரிசையாக அந்த டிரம்களைக் கடந்து போவார்கள். ஒரு கூலி ஒவ்வொரு கைதியின் குவளையிலும் சுடச் சுடக் காப்பியை ஊற்றுவான், இன்னொரு கூலி ஒவ்வொரு கைதிக்கும் இரண்டு துண்டு ரொட்டி கொடுப்பான், மூன்றாவது கூலி இரண்டிரண்டு முட்டைகள் கொடுப்பான். பிறகு கைதிகள் ரயிலில் ஏறிக்கொள்வார்கள். தோளில் அடையாளப் பட்டையும் காக்கிச் சீருடையும் அணிந்த கார்டு விசில் ஊதுவான், கொடி அசையும், ரயில் புறப்பட்டுவிடும்.

மகதோக்கள் யாரும் அங்கு நெருங்குவதில்லை. அவர்கள் தூரத்திலுள்ள வயல்களில் மக்காச் சோளம் விதைத்தவாறே நிமிர்ந்து நின்று இந்தக் காட்சியைப் பார்ப்பார்கள்.

சில சமயம் ரயில் சென்ற பிறகு நாங்கள் முகாமைப் பகோதிலாலின் பொறுப்பில் விட்டுவிட்டு மகதோக்களின் கிராமத் துக்குக் காய்கறிகள் வாங்கப் போவோம். மகதோக்கள் குன்றுச் சரிவில் கடுகு, கத்தரிக்காய், பீர்க்கங்காய் பயிரிடுவார்கள்.

திடீரென்று ஒரு நாள் அண்டா ஹால்ட் எல்லா ரயில்களும் நிற்குமிடமாகி விட்டது. முள்வேலிக்கும் தண்டவாளத்துக்கும் இடையிலுள்ள நிலம் செப்பனிடப்பட்டு பிளாட்பாரம்போல் மேடாக்கப்பட்டது.

போர்க்கைதிகளை ஏற்றிவந்த ரயில்கள் மட்டுமின்றி ராணுவத்தை ஏற்றி வந்த விசேஷ ரயில்களும் அங்கே நிற்கத் தொடங்கின. அவற்றில் காபர்டின் பேண்ட் அணிந்து கொண்டு அதன் பின்பக்கப் பையில் பணப்பை வைத்திருந்த அமெரிக்க சிப்பாய்கள் வந்தார்கள். ராணுவப் போலீசார் கீழே இறங்கி இங்குமங்கும் நடப்பார்கள், வேடிக்கையாகப் பேசுவார்கள். போர்க்கைதிகளைப் போலவே ராணுவ சிப்பாய்களும் வரிசையாக நின்று ரொட்டி, காப்பி, முட்டை வாங்கிக்கொண்டு ரயில் ஏறிக் கொள்வார்கள். காக்கியுடையணிந்த ரயில்கார்டு கொடியை அசைத்தவாறு விசில் ஊதுவான். நான் ராணுவ மேஜரிடம் ஓடிப்போய் சப்ளை பாரத்தில் கையெழுத்து வாங்குவேன்.

ரயில் போய்விடும். எங்கு என்று எங்களுக்குத் தெரியாது.

அன்றும் அமெரிக்க சிப்பாய்களை ஏற்றிக்கொண்டு ரயில் வந்து நின்றது. மூன்று கூலிகளும் சிப்பாய்களுக்கு உணவு கொடுக்கத் தொடங்கினார்கள். சிப்பாய்கள் “முட்டை அழுகல், ரொட்டித் துண்டு காய்ஞ்சு போச்சு” என்று சொல்லி அவற்றை எறிந்து விடாமலிருக்கிறார்களா என்று கவனித்துக் கொண்டிருந் தான் பகோதிலால்.

அப்போது தற்செயலாக முள்வேலிப் பக்கம் திரும்பிப் பார்த்தேன்.

முள்வேலிக்குச் சற்று தூரத்தில் ஒரு மகதோச் சிறுவன் கண்களை அகல விரித்துக்கொண்டு இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் கோவணம் மட்டுமே அணிந்திருந்தான். அவனுடைய அரைஞாணில் ஒரு உலோகத்துண்டு கட்டப் பட்டிருந்தது. ஒரு நாள் அவன் எருமைக்கன்று ஒன்றின்மேல் சவாரி செய்வதை நான் பார்த்திருக்கிறேன்.

அந்தப் பையன் ஆச்சரியத்தோடு ரயிலையும் சிவந்த முகமுடைய அமெரிக்க சிப்பாய்களையும் பார்த்துக் கொண்

டிருந்தான்.

ஒரு சிப்பாய் அவனைப் பார்த்து 'ஏய்!' என்று பயமுறுத்தவும் அந்தப் பையன் அலறியடித்துக்கொண்டு கிராமத்தை நோக்கி ஓடினான், சில சிப்பாய்கள் இதைப் பார்த்து 'ஹோ ஹோ'வென்று சிரித்தார்கள்.

பையன் மறுபடி ஒருநாளும் வரமாட்டான் என்று நான் நினைத்தேன்.

ஆனால் மறுதடவை ரயில் வந்து நின்றபோது அந்தப் பையன் முள்வேலிக்கு வெளியே வந்து நின்று கொண்டிருப்பதைக் கவனித்தேன். அவனோடு கூட அவனைவிடச் சற்று பெரிய இன்னொரு பையன். பெரிய பையனின் கழுத்தில் நூலில் கட்டப்பட்ட துத்தநாகத் தாயத்து ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. புர்க்குண்டாச் சந்தையில் இத்தகைய தாயத்துகள் குவியல் குவியலாக விற்கப்படுவதைப் பார்த்திருக்கிறேன். இவை தவிர குங்குமம், மூங்கில் கழியில் தொங்கவிடப்பட்ட பல நிற நூல்கள், கண்ணாடி மணி, பாசி மணி மாலைகள் இன்னும் பல பொருள்களும் விற்கப்படும். சில சமயம் ஒரு நாடோடி வியாபாரி கழுத்தில் நிறையப் பாசிமணி மாலைகளைப் போட்டுக் கொண்டு, முழங்கால்வரை தூசியுடன் மகதோக்களின் கிராமத் துக்குப் போவதைப் பார்த்திருக்கிறேன்.

இரு சிறுவர்களும் முள்வேலிக்கு மறுபுறம் நின்று கொண்டு வியப்போடு அமெரிக்க சிப்பாய்களைப் பார்த்துக் கொண்டிருந் தார்கள். முன்பு வந்திருந்த பையனின் கண்களில் பயம். சிப்பாய் யாராவது பயமுறுத்தினால் ஓடிப் போகத் தயாராயிருந்தான் அவன்.

நான் சப்ளை பாரத்தைக் கையில் வைத்துக்கொண்டு அலைந்து கொண்டிருந்தேன். வாய்ப்புக் கிடைக்கும்போது மேஜரைப் புகழ்ந்து காக்காய் பிடித்தேன். ஒரு சிப்பாய் ரயில் பெட்டியின் கதவருகில் நின்று கொண்டு காப்பியைக் குடித்தவாறே அந்தச் சிறுவர்களைத் தன் பக்கத்திலிருந்து இன்னொரு சிப்பாய்க்குச் சுட்டிக்காட்டி "அசிங்கம்!" என்று சொன்னான்.

மகதோக்கள் அசிங்கம் என்று எனக்கு அதுவரை தோன்றிய தில்லை. அவர்கள் விவசாயம் செய்கிறார்கள். கவண் அல்லது அம்பெறிந்து புனுகு பூனை வேட்டையாடுகிறார்கள். பாட்டுப் பாடுகிறார்கள், மது தயாரித்துக் குடிக்கிறார்கள், சில சமயம் வில்லின் நாண் போல நிமிர்ந்து கொண்டு எதிர்த்து நிற்கிறார்கள். கோவணமணிந்த, குச்சி போன்ற உடல்வாகு, கறுப்பு, சொர சொரப்பு—

அந்தச் சிப்பாய் 'அசிங்கம்' என்று சொல்லியது என்னை உறுத்தியது. அந்தப் பையன்கள் மேல் எனக்குக் கோபம் வந்தது.

சிப்பாய்களில் ஒருவன் ஒரு பாட்டின் வரியொன்றை உரக்கப் பாடினான். சிலர் 'ஹா ஹா'வென்று சிரித்தார்கள். ஒருவன் குவளையிலிருந்த காப்பியை ஒரே மடக்கில் குடித்து விட்டுக் கூலியைப் பார்த்துக் கண்ணடித்தான், குவளையை மறுபடி நிரப்பச் சொல்லி. இன்னும் எவ்வளவு நேரம் ரயில் நிற்க வேண்டுமென்று பார்க்க வந்த பஞ்சாபி ரயில் கார்டு மேஜருடன் மூக்கால் பேசினான்.

பிறகு விசில் ஊதியது, கொடியசைந்தது, எல்லாரும் — சிவப்புப் பட்டையணிந்த ராணுவப் போலீஸ் உட்பட—அவசர அவசரமாக ரயிலில் ஏறினார்கள்.

ரயில் சென்ற பிறகு மறுபடியும் பழையபடி வெறுமை, மணல் வெளியில் கள்ளிச்செடி வரிசைபோல் முள்வேலி.

சில நாட்களுக்குப் பிறகு இன்னொரு ரயில் வந்தது. இந்தத் தடவை அதில் வந்தவர்கள் போர்க்கைதிகள். அவர்கள் ராம்கட்டிலிருந்து வேறெங்கோ போய்க் கொண்டிருந்தார்கள். எங்கே என்று எங்களுக்குத் தெரியாது, தெரிந்து கொள்ள விருப்பமுமில்லை.

அவர்கள் கோடுபோட்ட சிறையுடையை அணிந்திருந் தார்கள். அவர்கள் முகத்தில் சிரிப்பு இல்லை, அவர்களைச் சுற்றிலும் ரைஃபிள் ஏந்திய சிப்பாய்கள். எங்களுக்கும் கொஞ்சம் பயமாயிருக்கும். ஒரு போர்க்கைதி வேஷ்டி ஜிப்பா அணிந்து கொண்டு தப்ப முயன்றதாக நாங்கள் பூர்க்குண்டாவில் கேள்விப் பட்டோம். நாங்கள் வங்காளிகளாதலால் மிகவும் பயப்பட்டோம்.

ரயில் சென்ற பிறகு நான் கவனித்தேன். முள்வேலிக்கு வெளியே அந்த இரண்டு பையன்களோடு, குட்டையான துணி யணிந்து ஒரு பதினைந்து வயதுப்பெண்ணும் இரண்டு ஆண்களும் வயல் வேலையை விட்டுவிட்டு வந்து நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்களுக்குள் ஏதோ பேசிக்கொண்டு சிரித்தார்கள்; பிறகு அருவி நீரோடுவது போல் கலகலவென்று பேசிக்கொண்டே கிராமத்தை நோக்கி நடந்தார்கள்.

ஒருநாள் அமெரிக்க சிப்பாய்கள் பிரயாணம் செய்த ரயில் ஒன்று வருவதைப் பார்த்தும் வயலில் வேலை செய்து கொண்டிருந்த மகதோக்கள் சுமார் பத்துப் பேர் ஓடிவந்தார்கள். ரயில் ஜன்னல் வழியே காக்கியுடையைப் பார்த்துமே அவர்கள் ரயில் அங்கே நிற்கும் என்று புரிந்து கொண்டிருக்க வேண்டும். அந்த வழியே தினம் ஓரிரு பிரயாணி ரயில்களும் சரக்கு ரயில் களும் போவது வழக்கம். அவை அந்த இடத்தில் நிற்பதுமில்லை, அவற்றைப் பார்த்து மகதோக்கள் ஓடி வருவதுமில்லை. எங்கள் முகாமில் காய்கறிகளும் மீனும் கொண்டு வந்து விற்க

ஆளனுப்பும்படி மகேதோ கிராமத்துத் தலைவனிடம் ஒரு நாள் சொன்னேன்.

"வயல் வேலையை விட்டு வரமுடியாது" என்று சிரித்துக் கொண்டே சொன்னான் அவன்.

ஆனால் இப்போது மகதோக்கள் ஓடி வந்து நிற்பதைப் பார்த்து ஆச்சரியமாயிருந்தது எனக்கு.

கருப்பு உடலில் கோவணம் மட்டும் அணிந்த ஆண்கள், அகலக் கட்டையான துணியுடுத்திய பெண்கள்; கிராமத்துச் சக்கிலியன் தைத்த முரட்டுச் செருப்புகள் காலில், அவர்கள் முள்வேலிக்கு வெளியே வரிசையாக நின்றார்கள்.

ரயில் வந்து நின்றது. அமெரிக்க சிப்பாய்கள் கைகளில் குவளைகளை எடுத்துக்கொண்டு திடுதிடுவென்று இறங்கினார்கள்.

அன்று அங்கே இருநூற்றுப் பதினெட்டுப் பேருக்குக் காலை யுணவு தயாராயிருந்தது.

அப்போது குளிர ஆரம்பித்துவிட்டது. தொலைவில் குன்றின்மேல் பனிப்போர்வை. மரங்களும் செடிகொடிகளும் பனியால் கழுவப்பட்டுப் பச்சைப் பசேலென்று இருந்தன.

ஒரு சிப்பாய் தன் அமெரிக்கக் குரலில் இந்த இயற்கையழகை ரசித்தான்.

இன்னொருவன் ரயிலுக்கு வெளியே நின்றுகொண்டு முள் வேலிக்கு அப்பாலிருந்த வெட்டவெளியைச் சற்றுநேரம் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு திடீரென்று அவன் குவளையை ரயில் பெட்டியின் படியின்மேல் வைத்துவிட்டுத் தன் பேன்ட் பைக்குள் கையை விட்டான். பையிலிருந்து ஒரு பளபளப்பான எட்டணா நாணயத்தை எடுத்து அதை மகதோக்கள் இருந்த திசையில் எறிந்தான்.

அந்தக் காசு முள்வேலிக்கு உட்புறத்தில் தார் போடப் பட்டிருந்த தரையில் விழுந்தது. மகதோக்கள் வியப்போடு அந்தச் சிப்பாயைப் பார்த்தார்கள், கீழே கிடக்கும் நாணயத்தைப் பார்த் தார்கள், பிறகு ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

ரயில் சென்ற பிறகு அவர்களும் போகத் தொடங்கினார்கள். நான் அவர்களிடம், "தொரை ஒங்களுக்கு பக்ஷீஸ் கொடுத் திருக்கார். எடுத்துக்கிட்டுப் போங்க" என்றேன். அவர்கள் என் முகத்தைப் பார்த்துக் கொண்டு நின்றார்கள். யாரும் வந்து காசைப் பொறுக்கிக்கொள்ள முன்வரவில்லை.

நானே காசை எடுத்து மகதோக் கிழவனிடம் கொடுத்தேன். அவன் ஒன்றும் புரியாமல் என் முகத்தைப் பார்த்தான். பிறகு எல்லாரும் மௌனமாக அங்கிருந்து போய்விட்டார்கள்.

முட்டைகள் சப்ளை செய்த காண்டிராக்டரிடம் வேலை

பார்ப்பவன் நான். எனக்கு இந்த வேலை சற்றும் பிடிக்கவில்லை. ஜனநடமாட்டமில்லாத இடம். பிரயாணி ரயில் எதுவும் நிற்ப தில்லை. முகாமில் நானும் பகோதிலாலும் மூன்று கூலிகளுந்தான். வெறும் பொட்டல் வெளி, பகலில் சூனியமான வானம், என் மனதிலும் சலிப்பு. மகதோக்களும் எங்களை நெருங்குவதில்லை. நானே போய் அவர்களிடமிருந்து காய்கறிகள், மீன் வாங்கி வருவேன். அவற்கள் விற்க வருவதில்லை. ஆறு மைல் தூரம் நடந்து புர்க்குண்டாச் சந்தையில் விற்கச் செல்கிறார்கள்.

பிறகு சில நாட்கள் சிப்பாய் ரயிலோ கைதி ரயிலோ வரவில்லை.

திடீரென்று ஒருநாள் அரைஞாணில் இரும்புத்துண்டு கட்டிக் கொண்டிருந்த அந்தச் சிறுவன் என்னிடம் வந்து கேட்டான், "ரயில் வராதா, பாபு?"

"வரும், வரும்" என்று சிரித்துக்கொண்டே சொன்னேன்.

பையனைச் சொல்லிக் குற்றமில்லை. எங்கும் குட்டையான குன்றுகள், வறண்ட நிலம். கிராமவாசிகள் நெருக்கியடித்துக் கொண்டு பிரயாணம் செய்யும் பஸ் ஒன்றைப் பார்ப்பதற்குக்கூட வேலமரக் காட்டைக் கடந்து நான்கு மைல் போக வேண்டும். காலைவேளையில் ஒரு பக்கமும் மாலையில் எதிர்ப்பக்கமும் போகும். பிரயாணிகள் ரயில் தன் வேகத்தைக்கூடச் சற்றும் குறைத்துக் கொள்ளாமல் அந்த இடத்தைக் கடந்துவிடும். அப்படியும் நாங்கள் ரயில் பெட்டிகளின் ஜன்னல்கள் வழியே மங்கலாகத் தெரியும் மனித முகங்களைப் பார்க்கக் கூடாரத் திலிருந்து வெளியே ஓடி வருவோம். மனிதர்களைப் பார்க்காமல் எங்களுக்குச் சலிப்பாயிருக்கும்.

ஆகவே அமெரிக்க சிப்பாய்கள் வருகிறார்களென்ற செய்தி கேட்டால் கொஞ்சம் எரிச்சல் ஏற்பட்டாலும் கூடவே ஓர் ஆறுதலும் தோன்றும் எங்களுக்கு.

சில நாட்களுக்குப்பிறகு சிப்பாய் ரயில் வருவதாகச் செய்தி வந்தது. மறுநாள் ரயில் வந்தது. வழக்கம்போல் சிப்பாய்கள் ரயிலிலிருந்து இறங்கி முட்டை, ரொட்டி, காப்பி எடுத்துக் கொண்டார்கள்.

திடீரென்று முள்வேலிக்கு வெளியே மகதோக்களின் கூட்டம். அவர்கள் இருபது பேர் இருக்கலாம், முப்பது பேர் இருக்கலாம். முழங்கால் உயரமுள்ள குழந்தைகளைச் சேர்த்தால் மொத்தம் எவ்வளவு பேர் என்று சொல்ல முடியாது. குட்டைத் துணி யுடுத்திய பெண்களும் மலங்க மலங்க விழித்துக்கொண்டு நின்றார்கள் அங்கே.

அவர்களைப் பார்த்து எனக்கு ஓர் இனம்புரியாத பயம்

ஏற்பட்டது. பகோதிலாலோ கூலிகளோ மகதோ கிராமத்துக்குப்போக விரும்பினால் எனக்குப் பயமாயிருக்கும்.

அங்கே பிளாட்பாரம் இல்லை. ரயிலில் ஏறி இறங்க வசதிக்காகப் பாதையோரம் தார் போட்டுச் சற்று மேடாக்கப்பட்டிருந்தது. அமெரிக்கச் சிப்பாய்கள் காப்பியை உறிஞ்சிக் குடித்தவாறு இங்குமங்கும் நடந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் சிலர் மகதோக்களை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று ஒரு சிப்பாய் பகோதிலாலை நெருங்கித் தன் பேண்ட் பையிலிருந்தது பணப் பையை எடுத்தான். பிறகு அதிலிருந்து ஓர் இரண்டு ரூபாய் நோட்டை எடுத்துப் பகோதிலாலிடம் "சில்லறை இருக்கா?" என்று கேட்டான்.

சிப்பாய்கள் பொதுவாகச் சில்லறை வைத்துக் கொள்வதில்லை. கடைக்காரனிடம் ஏதாவது சாமான் வாங்கினால் அல்லது டாக்சியோட்டிக்குப் பணம் கொடுப்பதானால் கரன்சி நோட்டைக் கொடுத்து விடுவார்கள் "பாக்கியை நீயே வச்சுக்க" என்று சொல்லி விடுவார்கள். நான் இதை ராஞ்சியில் பலமுறை பார்த்திருக்கிறேன்.

பகோதிலால் சிப்பாய்க்கு, ஓரணா, இரண்டனா, நாலணா சில்லறை கொடுத்துக் கொண்டிருந்தான். அப்போது மகதோக்களின் கூட்டத்தில் இரும்புத் துண்டை அரைஞாணில் அணிந்திருந்த சிறுவன் சிரித்துக்கொண்டே கையை நீட்டி ஏதோ கேட்டான்.

பகோதிலாலிடமிருந்து சில்லறைகளை வாங்கிக்கொண்ட சிப்பாய் அவற்றை மகதோக்களிருந்த பக்கம் எறிந்தான். இதற்குள் நான் சப்ளை பாரத்தில் கையெழுத்து வாங்கிக்கொண்டு வந்து விட்டேன். கார்டு விசில் ஊதிவிட்டான். ரயில் ஓடத் தொடங்கியது.

நான் மகதோக்கள் பக்கம் திரும்பிப் பார்த்தேன்.

அவர்கள் சற்று நேரம் மௌனமாகக் கீழே கிடந்த சில்லறைகளைப் பார்த்துக்கொண்டு நின்றார்கள். பிறகு திடீரென்று அரைஞாணில் இரும்புத்துண்டு கட்டியிருந்த சிறுவனும் துத்தநாகத் தாயத்து அணிந்த சிறுவனும் முள்வேலிக்குள் நுழைந்து வந்தார்கள்.

அப்போது முரட்டுச் செருப்பு அணிந்த மகதோக் கிழவன், "ஜாக்கிரதை!" என்று கத்தினான். அந்தச் சத்தத்தில் நான்கூடத் திடுக்கிட்டுப் போய்விட்டேன்.

ஆனால் இரு சிறுவர்களும் அவனுடைய எச்சரிக்கையைப் பொருட்படுத்தவில்லை. அவர்கள் எல்லாச் சில்லறைகளையும் பொறுக்கிக்கொண்டு தோலுரித்த பிஞ்சுச் சோளக் கொண்டை

போல் சிரித்தார்கள். மகதோ ஆண்களும் பெண்களும் கூடவே சிரித்தார்கள்.

மகதோக் கிழவன் கோபத்துடன் ஏதேதோ முணுமுணுத்துக் கொண்டே கிராமத்துக்குப் போனான். மற்ற மகதோக்களும் தங்களுக்குள் கலகலவென்று பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் கிராமத்துக்குத் திரும்பினார்கள்.

அவர்கள் சென்றபின் அந்த இடத்தில் மறுபடி வெறுமை, நிசப்தம். சில சமயங்களில் எனக்கு மிகவும் அலுப்பு ஏற்படும். தூரத்தில் குன்றுகள், இலுப்பைக் காடு, வேல மரங்களுக்கப்பால் கொஞ்சமாகத் தண்ணீரோடும் அருவி, பசுமையான வயல்கள். அவற்றில் அங்கங்கே கோவணமணிந்த கறுப்பு மனிதர்கள், கண் களுக்குக் குளிர்ச்சியான, காட்சி.

அவ்வப்போது சிப்பாய் ரயில் வந்து நிற்கும். சிப்பாய்கள் காலையுணவு உண்டுவிட்டுப் போவார்கள். மகதோக்கள் முள்வேலிக்கு வெளியே கூட்டமாக வந்து நிற்பார்கள்.

“தொரை, பக்ஷீஸ்! தொரை, பக்ஷீஸ்!”

ஒரே சமயத்தில் பல குரல்கள்.

மேஜரிடம் பாரத்தில் கையெழுத்து வாங்க வந்த நான் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன்.

அந்த இரு சிறுவர்கள் மட்டுமல்ல, சில இளைஞர்களும் கைகளை நீட்டி பக்ஷீஸ் கேட்கிறார்கள். குட்டைத் துணியணிந்த வளர்ந்த பெண்ணும் கேட்கிறாள்.

முன்பொருநாள் நான் காய்கறி வாங்கக் கிராமத்துக்குப் போயிருந்தபோது அவள்தான் “ரயில் எப்போ வரும்?” என்று என்னைக் கேட்டவள்.

தோளில் பட்டையணிந்த மூன்று நான்கு சிப்பாய்கள் பேண்ட் பையிலிருந்து கை நிறையச் சில்லறையை எடுத்து அவர்கள் பக்கம் எறிந்தார்கள். மகதோக்கள் ரயில் புறப்படும்வரை காத்திருக்காமல் ஒருவர் மேலொருவர் விழுந்து காசுகளைப் பொறுக்கத் தொடங்கினார்கள். அவர்கள் அவசர அவசரமாக முள்வேலிக்குள் நுழைந்து வரும்போது சிலருக்கு உடம்பில் கீறல், காயம் ஏற்பட்டது. சிலருடைய கோவணங்கள் வேலியில் சிக்கிக் கொண்டன.

ரயில் சென்றபிறகு அவர்களை நன்றாகக் கவனித்துப் பார்த்தேன். மகதோ கிராமத்தினரில் பாதிப் பேர் அங்கு வந்து விட்டதாகத் தோன்றியது. எல்லாருக்கும் கொஞ்சம் காசு கிடைத்து விட்டது. ஆகையால் அவர்கள் முகத்தில் சிரிப்பு. ஆனால் எவ்வளவு தேடியும் முரட்டுச் செருப்பணிந்த அந்த மகதோக் கிழவனை மட்டும் பார்க்க முடியவில்லை. அவன் வரவில்லை.

முதல் தடவை அவன் அதட்டியும் சிறுவர்கள் பொறுக்கியெடுத்த காசுகளை எறியவில்லை என்று அவனுக்குக் கோபமாயிருக்கலாம்.

கிழவன் மட்டும் இப்போது தனியே வயலில் மண்ணை வெட்டிக் கொண்டிருக்கிறான் என்ற நினைப்பு எனக்கு இதமாயிருந்தது.

முகாமில் இருந்த எங்கள் ஐந்துபேருக்கு எப்படியோ பொழுது கழிந்தது. இடையிடையே சிப்பாய் ரயில் வரும், நிற்கும், போகும். மகதோக்கள் முள்வேலிக்கு வெளியே கூட்டமாகக்கூடி 'தொரை, பக்ஷீஸ்! தொரை பக்ஷீஸ்!' என்று கத்துவார்கள்.

அப்போது சில நாட்கள் மகதோக் கிழவன் வயல்வேலையை விட்டுவிட்டுக் கைகளிலிருந்து மண்ணைத் தட்டிவிட்டுக் கொண்டு அங்கே வேகமாக வந்து எல்லாரையும் அதட்டுவான். ஆனால் யாரும் அவனைப் பொருட்படுத்துவதில்லை. அவன் பரிதாபமாக அவர்களைப் பார்த்துக்கொண்டு நிற்பான். ஆனால் யாரும் அவன் பக்கம் திரும்பிப் பார்ப்பதில்லை.

சிப்பாய்கள் பேண்ட் பையிலிருந்து சில்லறையை எடுத்து எறிவார்கள். மகதோக்கள் ஒருவர் மேலொருவர் குப்புற விழுந்து காசுகளைப் பொறுக்குவார்கள். காசு 'எனக்கு, ஒனக்கு' என்று சண்டை போட்டுக் கொள்வார்கள். இதைப் பார்த்துச் சிப்பாய்கள் 'ஹா ஹா'வென்று சிரிப்பார்கள்.

இதன்பிறகு மகதோக் கிழவன் வருவதில்லை. மகதோக்களின் 'பிச்சைக்காரத்தனம் அவனுக்குப் பிடிக்கவில்லை, அதனால் அவன் அங்கு வருவதில்லை என்பதற்காக நான் கர்வப்பட்டேன். மகதோக்களின் நடத்தை எங்களுக்குப் பிடிக்கவில்லை. அவர்களது இந்த நடத்தைக்காக நான் வெட்கப்பட்டேன். அவர்களுடைய வறுமைமிக்க தோற்றத்தைப் பார்த்துச் சிப்பாய்கள் அவர்கள் பிச்சைக்காரர்கள் என்று நினைப்பது எனக்கு மிகவும் வருத்தமளித்தது.

ஒருநாள் அவர்கள் 'பக்ஷீஸ்! பக்ஷீஸ்!' என்று கத்திக் கொண்டிருந்தார்கள். நர்ன் ரயில் கார்டு ஜானகிநாத்துடன் ஏதோ பேசிக் கொண்டிருந்தேன். 'கிறீச், கிறீச்' என்று ஒலியெழுப்பிய பூட்ஸ் அணிந்து என் பக்கமாகப் போய்க் கொண்டிருந்த ஒரு ராணுவ அதிகாரி தொண்டையைக் காரிக் கொண்டு 'பிச்சைக் காரப் பசங்க' என்று சொன்னான்.

நானும் ஜானகிநாத்தும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம். என் முகம் அவமானத்தில் கறுத்தது. என்னால் தலை நிமிர முடியவில்லை. உள்ளூர எரிச்சல் பட்டேன்– கையாலாகாத எரிச்சல்.

"பிச்சைக்காரப் பசங்க! பிச்சைக்காரப் பசங்க!"

என் கோபமெல்லாம் மகதோக்கள் மேல் திரும்பியது. ரயில் போனதும் நான் பகோதிலாலைக் கூட்டிக்கொண்டு போய் அவர்களை விரட்டினேன். அவர்கள் பொறுக்கிக் கொண்ட காசுகளை மடியில் செருகிக்கொண்டு சிரித்தவாறே ஓடிப்போய் விட்டார்கள்.

எனினும் மகதோக்களால் எனக்கு ஏற்பட்ட அவமான உணர்வை ஓரளவு தணித்தது ஒரு கர்வம். மகதோக் கிழவனின் உருவத்தில் அந்த கர்வம் ஒரு குன்றுபோல் என் கண் முன்னால் உயர்ந்து நின்றது.

ஒரு செய்திகேட்டு எனக்கு ஆறுதல் ஏற்பட்டது. காண்டிராக்டரைச் சந்திக்கப் புர்க்குண்டா போனபோது நான் கேட்ட செய்தி அது. அண்டாஹால்டை மூடிவிடப் போகிறார்களாம்.

கூலிகளில் இருவர் இவ்வளவு காலம் மேஜையாகப் பயன் பட்ட இரண்டு டிரம்களையும் முள்வேலிக்கு வெளியே தள்ளிக் கொண்டிருந்தார்கள். மூன்றாவது கூலி எங்கள் கூடாரத்துக் கயிற்றை அவிழ்த்துக் கொண்டிருந்தான். பகோதிலால் "ஆட்டம் க்ளோஸ், ஆட்டம் க்ளோஸ்!" என்று சொல்லியவாறு டிரம் களைக் காலால் உதைத்துக்கொண்டிருந்தான்.

திடீரென்று இங்கு எழுந்த அரவத்தைக் கேட்டு மகதோக்கள் ஓடி வந்தார்கள்.

நாங்கள் அவர்களை ஆச்சரியத்தோடு பார்த்தோம். ஏனோ பகோதிலால் சிரித்தான்.

இதற்குள் முள்வேலிக்கு வெளியே கூட்டம் கூடிவிட்டது.

திடீரென்று விசில் ஒலி. ரயில் வரும் அரவம், ஜன்னல்களில் காக்கியுடை.

எங்களுக்கு ஒருபுறம் எரிச்சல், ஒருபுறம் வியப்பு. ரயில் வரப்போகும் செய்தியை எங்களுக்கு அனுப்பப் புர்க்குண்டா ஆபீஸ் மறந்துவிட்டதா? இந்த முகாமையே எடுத்துவிடப் போவதாக நாங்கள் கேள்விப்பட்டது தவறா? ரயில் நெருங்க நெருங்க ஒரு விசித்திரமான சத்தம் பலமாகக் கேட்டது. சத்தம் அல்ல, பாட்டு. ரயில் மிக அருகில் வந்தபோது சிப்பாய் களெல்லாரும் ஒன்று சேர்ந்து உரக்கப் பாடுவது கேட்டது.

நான் ஒன்றும் புரியாமல் ஒரு புறம் ரயிலைப் பார்தேதன், இன்னொரு புறம் திரும்பி முள்வேலிப் பக்கம் பார்த்தேன். அந்த நிமிஷம் மகதோக் கிழவன் மேல் என் பார்வை விழுந்தது. கூட்டத்தோடு கூட்டமாக நின்றுகொண்டு அவனும் "தொரை, பக்ஷீஸ்! தொரை, பக்ஷீஸ்" என்று கத்திக் கொண்டிருந்தான்.

மகதோக் கிழவனும் மற்றவர்களும் பிச்சைக்காரர்கள் போல், பைத்தியம் பிடித்தவர்கள் போல் கத்திக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் இன்று அந்த ரயில் இங்கே நிற்கவில்லை. மற்ற பிரயாணி ரயில்களைப்போல் அதுவும் அண்டாஹால்ட்டைப் புறக்கணித்துவிட்டுப் போய்விட்டது. ரயில் இனி நிற்காது என்று எங்களுக்குப் புரிந்தது.

ரயில் போய்விட்டது. ஆனால் இவ்வளவு காலமாக வயல் களில் விவசாயம் செய்து கொண்டிருந்த மகதோக்கள் எல்லாரும் பிச்சைக்காரர்களாகி விட்டார்கள்.

*('பாரத்வர்ஷ ஏபங் அன்யான்ய கல்ப', 1969)*

# சீட்டுக்களாலான வீடுபோல

## சையது முஸ்தபா சிராஜ்

## I

*தீப்க் மித்ரா*

நான் இதுவரை ஓடிய தூரத்தில் ஒரு வீட்டுக் கதவுகூடத் திறந்திருக்கவில்லை. ஒரு ஜன்னல் கூடத் திறந்திருக்கவில்லை. மையிருட்டு—ஊரில் பிளாக் அவுட் அமலிலிருந்தாற்போல. தெரு நனைந்திருந்தது. இந்த அமைதியும் வழக்கத்துக்கு மாறு பட்டது. இரவு பத்து மணியாகிவிட்டது. பின்பக்கத்தில் இப்போதுதான் ஏதோ ஒரு விபத்து நேர்ந்திருக்கிறது. இருந்தாலும் நகரம் முழுவதையும் பயமுறுத்திவிட அல்லது பேச்சில்லாமல் செய்துவிட இவை போதுமான காரணங்கள்அல்ல. வரவர மனிதர்களின் இரத்தத்தின் சூடு தணிந்துகொண்டு வருகிறது. அவர்கள் எளிதில் உணர்ச்சிவசப்படாமலிருக்கக் கற்றுக்கொண்டு விட்டார்கள். ராம்பாபு, சியாம்பாபு, ஜது பாபு எல்லோரும் பேரம் பேசிக் காய்கறிகள் .வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய செருப்புக்குக் கீழே தரையில் அப்போதுதான் சிந்திய இரத்தம்... இரத்தத்துக்கு மொழியேதும் இல்லை...

பின்னால் சற்றுத் தொலைவில் காலடிச் சத்தம் கேட்டு இன்னும் வேகமாக ஓடினேன். நான் இப்போது உரக்கக் கத்தி மண்டையை உடைத்துக்கொண்டாலும் எந்த வீட்டுக் கதவும் திறக்காது, யாரும் ஜன்னலைத் திறந்துகூட வெளியே எட்டிப் பார்க்க மாட்டார்கள் என்று எனக்குத் தெரியும். எல்லாரும் இந்த அகாலத்தில் ஓட்டுக்குள் நுழைந்து கொள்ளும் ஆமை மாதிரி போர்வைகளுக்குள் சுருண்டு படுத்துக்கொண்டு விட்டார்கள். ஆமைக்குக் குரல் இல்லை என்று நான் உயிரியல் நூலில் படித்திருக்கிறேன்.

நகரத்தின் இந்தப் பகுதி எனக்கு முற்றிலும் பரிச்சய மில்லாதது. ஓடிக்கொண்டிருந்தபோது எனக்கு ஒரு வேடிக்கை யான எண்ணம் தோன்றியது. உலகத்தின் எந்தப் பகுதியிலும்

நீர்-நிலம்-வான வெளியில் மனிதன் போகாத இடமில்லை என்று பெருமையாகச் சொல்லப்படுகிறது. ஆனால் என்ன ஆச்சரியம்! உலகம் கிடக்கட்டும், இந்த நகரத்திலேயே இன்றுவரை என் கால் படாத இடங்கள், எனக்குத் தெரியாத இடங்கள் எவ்வளவோ இருக்கின்றன! சும்மா பீற்றிக் கொண்டு என்ன லாபம்? இருபத்தேழு வயதான, துணிச்சல் மிக்க இளைஞனான தீபக் மித்ரா என்ற பெயருள்ள நான் எவ்வளவோ இடங்களுக்குப் போனதில்லை, எத்தனையோ இடங்களைப் பார்த்ததில்லை. எவ்வளவோ விஷயங்கள் எனக்குத் தெரியமலே இருந்துவிடப் போகின்றன. எதற்கும் அடங்காத, உணர்ச்சிமயமான, ஆபத்தான இந்த வாழ்க்கை எந்த நிமிடமும் நீர்க்குமிழிபோல் மறைந்து போய்விடலாம். ஒரு சிறிய இரும்புத்துண்டு போதும் என் இருபத்தேழு வருடங்களை வீணாக்கிவிட. உலகம், வாழ்க்கை இவற்றின் பெரும்பகுதி என் பார்வைக்குத் தெரிவதற்கு முன் நான் எரித்துவிடப்படுவேன் அல்லது தண்ணீரில் எறியப்படுவேன் அல்லது பருந்து, காக்கை, நாய்களின் உணவாகத் தேர்ந்தெடுக்கப் படுவேன். ஐயோ, அழகிய இனிய பழத்தின் சுளை போன்ற என் உடல், உள்ளம். இளமை...!

அதனால்தான் நான் ஓடிக்கொண்டிருந்தேன். என் உடலும் உள்ளமும் இளமையும் தங்கள் தங்கள் மொழியில் “தப்பியோடிப் பிழைத்துக் கொள்! தப்பியோடிப் பிழைத்துக் கொள்!” என்று அலறின.

என்னைப் பிடித்துவிட முடியும் என்ற நம்பிக்கையை அவர்கள் இன்னும் கைவிடவில்லை என்று எனக்குப் புரிந்தது. என்னைக் கொல்லும்வரை அவர்களுக்கு நிம்மதியில்லை. அவர்கள் என்னைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறார்கள். இந்த ஆபத்தான இரவில் நகரமும் எதிர்பாராத முறையில் மாறிப்போய் விட்டது. அணிகள் நிறைந்த நாகரீகப் பூங்கா வரலாற்றுக் காலத்துக்கு முந்தைய அடர்ந்த காடாகிவிட்டது. பல மாடிக் கட்டிடங்களெல்லாம் பயத்தில் தங்கள் நீண்ட அங்கியை களைந்து கொண்டு பெரிய பெரிய மரங்களாக நிற்கின்றன. இந்த ராம்பாபு, சியாம்பாபு, ஜதுபாபு எல்லாரும் இருட்டில் தவழ்ந்து கொண்டு போய், மனித குலத்தின் கஷ்டங் களுக்கெல்லாம் காரணமான பழம் பழுக்கும் அந்த பழைய மரத்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய கைகளில் மூன்று சின்னஞ்சிறு கோடரிகள் அடங்கிய பொட்டலம். ஒவ்வொரு கோடரியின் விலை ஐந்து காசு.

மூன்று தெருக்கள் சந்திக்கும் இடம் வந்தது. வலது பக்கம் போவதா, இடது பக்கம் போவதா என்று யோசித்துத் தயங்கு

வதற்குள் - துப்பாக்கி சுடும் பயங்கர ஒலி! துப்பாக்கி சுடும்போது மின்மினி போல் சிதறும் நெருப்புப் பொறிகள் தெரிக்கின்றனவா என்று திரும்பிப் பார்த்தேன். வேடிக்கை தான், ஆபத்துக் காலத்தில்கூட நம்முள் இருக்கும் அசட்டுக் குழந்தைத்தன்மை செயற்படுகிறது.

மறுகணமே ஒரே தாவில் இடதுபக்கம் திரும்பி ஓடினேன், உயரத்தில் ஒரு வெளிச்சம் தெரிந்தது. துணிச்சல் மிக்க கொரில்லா ஒன்று ஜன்னலைத் திறந்து அதன் கம்பியில் மூக்கைத் தேய்த்துக் கொண்டு வெளியே பார்க்கிறது. அழகான வீடு. அதன்மேல் கொடிகள் அடர்த்தியாக வளர்ந்திருந்தன. ஏதோ ஒரு மலரின் மணம் என் விருப்பத்துக்கு மாறாக என் உணர்வில் புகுந்தது. நான் நெஞ்சுயரமிருந்த கேட்டின் கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும் பத்திரமாக இருக்கும் உணர்வு ஏற்பட்டது. இந்த மாதிரி வீடுகளில் சாதாரணமாக ஒரு நாய் இருக்கும், வாசலில் 'நாய் ஜாக்கிரதை!' என்று அறிவிப்பு இருக்கும் என்பது நினைவு வந்தது. ஆனால் நான் உள்ளே நுழைந்த பிறகும் நாயின் குரைப் பொலி கேட்கவில்லை. நல்ல வேளை, இந்த வீட்டில் நாய் இல்லை. அல்லது, இருந்தாலும் அதைக் கட்டி வைத்திருக்கிறார்கள் வீட்டுக்குள்.

சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்டேன். வெளியே எந்த அரவமுமில்லை. அவர்கள் வேறு சந்துகளில் என்னைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்போலும். இன்னும் கொஞ்ச நேரத்துக்கு எனக்கு ஆபத்தில்லை. மேலே திறந்திருந்த ஜன்னலிலிருந்து வந்த மங்கிய வெளிச்சத்தில் நாற்புறமும் பார்த்துக்கொண்டேன். ஒரு சிறிய புல்வெளி. இருபுறமும் மலர்ச் செடிகள். இந்த இருட்டில், இந்த ஆபத்தான இடத்தில் ஹாஸ்னுஹானாப் பூவுக்குத்தான் எவ்வளவு துணிச்சல்! கோபமும் எரிச்சலும் ஏற்பட்டது எனக்கு. இது உசிதமில்லை! பூச்செடிகளை ஒரு அறை அறைந்து "வாயை மூடு!" என்று சொல்லிவிட வேண்டும். "இங்கு வராதீரர்கள்!" என்று பறவைகளை அதட்ட வேண்டும். காதல் ஜோடிகளைக் கண்டிக்க வேண்டும்! கணவனும் மனைவியும் அருகருகே படுத்துக் கொள்வதைத் தடைசெய்ய வேண்டும். தொழிலாளர்கள் அழிந்து போகட்டும்! இஞ்சினியர்கள் வேலை செய்ய வேண்டாம்! விஞ்ஞானிகள் ஓய்வெடுத்துக் கொள்ளட்டும்!

அந்த சமயத்தில் மறுபடியும் துப்பாக்கி சுடும் ஒலி கேட்டது. வீடுகள் அதிர்ந்தன. வண்டிகளின் கடகட ஓசை. பிரகாசமான வெளிச்சக் கற்றையொன்று கண நேரம் தோன்றிப் பிறகு இருளில் மறைந்துவிட்டது. போலீஸ் வந்துவிட்டது!

வீட்டுப்பக்கம் பின் வாங்கினேன். எதிரில் பெரிய கம்பிக்கதவு

திறந்திருந்தது—வாரிசு இல்லாத சொத்துமாதிரி. அப்படியானால் இது பல ஃபிளாட்டுகள் கொண்ட வீடு. சியாம்பாபு கதவை மூடுவார் என்று ராம்பாபு நினைத்துக் கொண்டிருப்பார். ராம்பாபு அல்லது ஜது பாபு மூடுவார் என்று நினைத்துக் கொண்டிருப்பார் சியாம்பாபு. வீட்டுக் காவல்காரன் ஒருவன் இருந்தாலும் அவன் கஞ்சா குடித்துவிட்டு எங்கேயே மயங்கிக் கிடக்கிறான் போலும். ஆமாம், இருக்கிறான். மாடிப்படிக்குக் கீழேயுள்ள சின்னஞ்சிறு அங்கணத்தில் ஒரு கட்டிலில் அசைவின்றிக் கிடப்பவன்தான் காவல்காரன்.

அகலமான மாடிப்படிகளின்மேல்அரவம் செய்யாமல் ஏறினேன். படிகளுக்கு மேல் முதல் மாடியில் ஒரு மின்சார விளக்கு எரிந்து கொண்டிருந்தது. விளக்கைச் சுற்றிலும் ஒட்டடை, தூசி. கீழே புல் தரையையும் பூச்செடிகளையும் பார்த்து நான் அந்த வீடு அழகாக, தூய்மையாக இருக்கும் என்று நினைத் திருந்தேன். ஆனால் அதன் கிழட்டுத் தனமும் பராமரிப்புக் குறைவும் இப்போது கண்ணில் படத் தொடங்கின. நான் மேலே ஏற ஏற அருவருப்பளிக்கும் பாழடைந்த இடமொன்றில் நுழையும் உணர்வு ஏற்பட்டது எனக்கு. மாடியில் நான்கு கதவுகளில் பூட்டுகள் தொங்கிக் கொண்டிருந்தான. இங்கு வசித்துக் கொண்டிருந்தவர் களெல்லாரும் ஒரே கூட்டமாக எங்கே போய் விட்டார்கள். இரண்டாம் மாடியில் மூன்று கதவுகள். இங்கும் ஒட்டடை படிந்த விளக்கு. மூன்று கதவுகளில் இரண்டில் பூட்டுக்கள் தொங்கின. மூன்றாவது கதவுக்குரிய ஃபிளாட்டின் ஜன்னலில்தான் நான் அந்தக் கொரில்லாவைப் பார்த்திருக்க வேண்டும். அந்த ஆள் தனியாக இருக்கிறானா, அல்லது குடும் பத்தோடு இருக்கிறானா...?

ஒரு ஃப்ளாட்டில் கதவிலும் பெயர்ப்பலகை இல்லை, அழைப்பு மணி இல்லை. சுவர்களில் சிவப்பு, கறுப்பு எழுத்துக் களில் எழுதப்பட்டிருந்த வாக்கியங்கள் எனக்கும் எல்லாருக்கும் மனப்பாடமானவை. பயத்தில் என் உடல் சிலிர்த்தது. இந்த இடம் எனக்குப் பாதுகாப்பானதில்லை. நானே தற்செயலாக 'அவர்களுடைய' கோட்டைக்குள் வந்து அகப்பட்டுக்கொண்டு விட்டேனோ?

வேறு வழியில்லை. துணிவை வரவழைத்துக்கொண்டு பேண்ட் பைக்குள் கையைவிட்டு அதிலிருந்த .38 குறுக்களவுள்ள ரிவால்வரை இறுகப்பிடித்துக் கொண்டேன். அதில் ஒரு குண்டு தான் பாக்கி இருக்கிறது, அது போதும். பின்னால் பல மணிகள், நாட்கள், மாதங்கள், வருடங்கள் பிழைத்திருப்பதற்காக இப்போதைக்கு ஒரு சில மணிநேரம் பிழைத்திருக்க வேண்டும்.

இது எனக்கு மிகவும் அவசியம். ஐயோ, என் இருபத்தேழு வீணான வருடங்களே! என் இளமை மந்திரத்தால் கட்டுண்ட பூனைக்குட்டி போல் என்னுள்ளே மௌனமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறது.

கதவு வளையத்தை மெதுவாக ஆட்டினேன்-இரண்டு தடவை. பிறகு மெதுவாகக் கதவைத் தட்டினேன்.

# II

*ஹிரண்மய் தத்தராய்*

...என்ன ஆச்சு? மறுபடியும் பவர்கட்டா? மழைக்காலம் முழுவதும் இந்தத் தொந்தரவு தொடரும். மெழுகுவர்த்தி வாங்கி வாங்கிப் போண்டியாகி விட்டேன்! கார்ப்பரேஷன்...

இந்த சமயம் மருமகள் ஓடிவந்தாள்.

"...கேட்டீங்களா...? இந்த ராத்திரி மறுபடி ஆரம்பிச்சுட்டது."

குதித்தெழுந்தேன். "என்னம்மா ஆரம்பிச்சுட்டது?"

ராணுவுக்கு என்மேல் எரிச்சல் ஏற்பட்டிருக்குமோ? வயதாக ஆக என் கண்களைப்போல் காதுகளும் வலுவிழந்து கொண்டிருக் கின்றன என்பது அவளுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அப்படியும் அவள் எரிச்சல் படுகிறாள். அவளுக்கு நாளுக்குநாள் என்மேல் எரிச்சல் வளர்வது எனக்குத் தெரியும். நான் திடீரென்று "யாரோ கூப்பிடறாங்க போலிருக்கு" என்று சொல்லிக்கொண்டு வாசலுக்கு ஓடுவது- இவையெல்லாம் எரிச்சலூட்டுகின்றன. நான் இதை உணர்கிறேன். குறிப்பாக , நான் முன்னறையில் சௌமேனின் போட்டோவை வைத்திருப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை. அவனது சமீப காலத்துப் போட்டோ இது ஒன்றுதான் பெரிய அளவு போட்டோ. இதில் அவன் மட்டும் இருக்கிறான். அவனுடைய மற்ற போட்டோக்களெல்லாம் வெகு காலம் முன்பு எடுக்கப்பட்டவை. அவற்றுள் பலவற்றில் ராணுவும் கூட இருக்கிறாள். அவையெல்லாம் போட்டோ ஆல்பத்தில் இருக் கின்றன. நான் அந்த ஆல்பத்தைச் சில சமயம் என்னிடமே வைத்திருப்பேன், சில சமயம் ராணுவிடம் கொடுப்பேன், சில சமயம் அவளே என்னிடம் கேட்டு வாங்கிக்கொண்டு போவாள். ஆனால் அவற்றில் இப்போதைய சௌமேனைப் பார்க்க முடிய வில்லை. இப்போது அவனுடைய நெற்றியில் சுருக்கம் விழுந்திருக் கிறது, தாடையெழும்பு துருத்தி நிற்கிறது, அவனுடைய உடலின் மென்மை தேய்ந்துகொண்டு வருகிறது, கண்களில் ஓர் அசாதாரண

ஒளி. அவனுடைய இந்த மாற்றங்களெல்லாம் இந்த போட்டோவில் இடம் பெற்றிருக்கின்றன.

சௌமேன், என் ஒரே பிள்ளை, என் செல்லப் பிள்ளை. "அவன் அனுபவிக்கும் துன்பங்களையெல்லாம், வேதனைகளையெல்லாம் எனக்குக் கொடுத்துவிடு!" என்று நான் கடவுளை வேண்டிக் கொண்டேன். ஏனென்றால் உலகத்தில் பல எதிரிகளுடன் போரிட்ட அனுபவம் இந்தக் கிழவனுக்கு உண்டு. பல பயங்கர நிகழ்ச்சிகளைப் பார்த்திருக்கிறேன் நான். பயங்கரச் சூடு, எல்லாவற்றையும் சுட்டெரிக்கும் நெருப்பு, புயல், மழையின் தாக்குதல்கள், இன்னும் பல எதிர்பாராத எதிரிகளை எதிர் கொண்டிருக்கிறேன் நான். எவ்வளவு வகை ஆபத்துகள் நேர்ந்திருக்கின்றன! நான் அவற்றையெல்லாம் பொறுத்துக்கொண்டோ வெற்றிகொண்டோ இன்னும் நிலைத்திருக்கிறேன். ஆகையால் எந்தவித நோய், கஷ்டம், வேதனையைத் தாங்கிக் கொள்வதும் எனக்குச் சிரமமாயிருக்காது. ஆனால் சௌமேன்! அவனது வாழ்க்கை இளமையானது, அவனது உயிர் ஒரு பிஞ்சு, அவனது ஆத்மா மென்மையானது. அவன் வாழ்க்கையிலிருந்து எவ்வளவோ எதிர்பார்க்கிறான். வாழ்க்கையின் மோகனக் கவர்ச்சியில் அவன் கனவுகள் பல கண்டு கொண்டிருக்கிறான். ஆகையால் நான் கடவுளை வேண்டிக்கொள்வேன், "சௌமேனின் கஷ்டங்களை என்னிடம் கொடு, அவனுடைய இன்பங்கள் அவனிடமே இருக்கட்டும்" என்று ஆனால்...

போட்டோவைப் பற்றியல்லவா பேசிக்கொண்டிருந்தேன்! அவன் திடீரென்று ஏன் இந்த போட்டோ எடுத்துக் கொண்டான் என்று எனக்கு முன்னால் புரியவில்லை, பிறகு புரிந்தது. இந்த போட்டோ அவன் வெளியேறுவதற்கு முன் எனக்கும் அவன் மனைவிக்கும் ஆறுதலளிப்பதற்காகக் கொடுத்த நினைவுச் சின்னம், "இதை வைத்துக்கொண்டு ஆறுதல் பெறுங்கள்!" என்று சொல்லாமல் சொல்லிவிட்டுப் போய்விட்டான் அவன்!

ஆம், நான் எழுபத்திரண்டு வயதுக் கிழவன். வெறும் நினைவுகளுடன் காலந் தள்ள முடியும் என்னால். என் போன்ற கிழவர்கள் அப்படித்தான் வாழ்கிறார்கள். ஆனால் என் மருமகள் ராணு? அவளால் முடியுமா? அவளுடைய இரத்தமும் தசையும் உள்ளமும் இன்னும் ஓய்ந்துவிடவில்லையே! அவளுக்கு சௌமேனின் உடம்பு வேண்டும். அவள் சௌமேனை நேரடியாகப் பெற வேண்டும், வெறும் நினைவாகவோ குறியீடாகவோ அல்ல. ஆகையால் அவளுடைய கஷ்டத்தை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அவள் கையாலாகாத கோபத்தில் துடிதுடிக்கிறாள். கணவனைச் சபிக்கிறாள், தலையைச் சுவரில் மோதிக்கொண்டு

திட்டுகிறாள். அவள் தன் கணவன் ஒரு கோழை என்று நினைக்கிறாள். நான் அவளைக் குற்றஞ் சொல்லவில்லை. சௌமேன் இப்படிச் செய்யலாமா? அவனே தேர்ந்தெடுத்துக் காதலித்த பெண் ராணு. முதலில் எனக்கு அவர்களுடைய காதலைப்பற்றி ஒன்றும் தெரியாது. பிற்பாடு தெரிந்துகொண்டபோது நான் மகிழ்ச்சியடைந்தேன். ராணுவை அன்போடு ஏற்றுக் கொண்டேன்..

ராணு சௌமேன் மேல் ஏற்பட்ட கோபத்தில் வேறு யாரோடாவது...

இல்லை, அப்படி நடந்துவிடாது!

இந்தக் காலத்தில் பெண்கள் உடல்பசிக்கு அடிமையாவதைக் கவனித்து வருகிறேன். அவர்கள் தெரிந்தோ தெரியாமலோ இந்தத் தசை வெறிக்கு ஆளாகிறார்கள். பதுமை என்றாலே கூட்டையுடைத்துக்கொண்டு வெளியே வருவதுதான் என்று அவர்கள் நினைக்கிறார்கள். சமூக நெறிமுறைகளை மீறிப் பாலுணர்வுக்குப் பூரண சுதந்திரம் கொடுத்தால்தான் மனிதனுக்கு முழுமையான விடுதலை கிடைக்கும் என்று நவ நாகரீகம் அவர்களுக்குக் கற்பிக்கிறது...

இந்த மனப்போக்கு ராணுவைத் தொற்றிக் கொள்ளவில்லை என்று நான் நினைக்கிறேன். அவளது குடும்பப் பாரம்பரியம், கல்வி, ஆளுமை இவையெல்லாம் அவளிடம் நான் நம்பிக்கைக் கொள்ளப் போதுமானவை. இருந்தாலும் சௌமேனின் மறைவால் அவளிடம் ஓர் எதிர்விளைவு ஏற்படுவது இயற்கைதான். விதவைத் திருமணத்தை ஆதரித்ததற்காக ஈசுவரசந்தர வித்யாசாகரைத் தூற்றுமளவுக்கு நான் ஒரு மட்டமான பழமையவாதியல்ல. சௌமேன் உண்மையிலேயே இறந்து போயிருந்தால் நான் ராணுவின் அப்பா என்ன சொன்னாலும் அதைப் பொருட்படுத்தாமல் அவளுக்கு மறுமணம் செய்துவைப்பேன்- ராணு அதற்கு இசைந்தால்.

இதென்ன நினைப்பு? எனக்குத் திக்கென்றது. என் கால்கள் பாறையாய்க் கனத்தன. என் உடம்பு நடுங்கியது. சௌமேன் என் ஒரே பிள்ளை. அப்படியானால் நான் என்னையறியாமல் அவனுடைய சாவை விரும்புகிறேனா? இல்லையில்லை, அவன் எங்கிருந்தாலும் பிழைத்திருக்கட்டும்! அவன் என்ன செய்தாலும் சரி, எனக்கு ஆட்சேபமில்லை. நான் வேண்டுவது அவன் பிழைத்திருக்கட்டும் என்பதுதான். இதுவரை சௌமேனின் போட்டோவுடன் பத்திரிகைளில் பல விளம்பரங்கள் கொடுத்தாகிவிட்டது. போலீஸ் ஸ்டேஷன்களுக்குத் தகவல் கொடுத்துவிட்டேன். ஊர் பேர் தெரியாத சவங்களின் படங்களைப் பார்ப்பதோடு நில்லாமல் நேரே சவக்கிடங்குகளுக்கும் போய் வந்திருக்கிறேன். சவங்களை

சௌமேனின் சவந்தானோ என்று சந்தேகப்பட்டிருக்கிறேன். இப்படித்தான் ஒருதடவை நான் ஒன்பது அநாமதேயச் சவங்களில் ஒன்றை சௌமேனின் சவந்தான் என்று நம்பியபோது இன்னொருவன் வந்து அந்தச் சவம் மிருகாங்கன் என்பவனுடையது என்றான். பல சோதனைகளுக்குப்பிறகு அது மிருகாங்கனின் சடலந்தான் என்று தெரிந்தது.

ஆகையால் அவன் போலீசுக்குப் பயந்தோ வேறு என்ன காரணமாகவோ ஒளிவு மறைவாயிருக்கிறான் என்று தோன்றுகிறது. அவன் விரைவில் ஒருநாள் தன்னுடைய தந்தைக்கும் மனைவிக்கும் முன்னால் நிச்சயம் தோன்றுவான். காரணம் அவன் நிச்சயம் தன் செய்கைக்கு ஒரு விளக்கம் தருவான். அவனுக்குக் கடிதமெழுத வாய்ப்பில்லாமலிருக்கலாம். மேலும் கடிதத்தில் எல்லா விஷயங்களையும் விளக்க முடியாது. கடிதமெழுதுவது ஆபத்தாகவுமிருக்கலாம். ஆகையால் அவன் நிச்சயம் நேரில் வந்து விளக்கம் தருவான். இந்த மாதிரி மின்சாரமில்லாத இரவு வேளையில், இருட்டில், நள்ளிரவில் தெருவில் ஜனநடமாட்டமில்லாதபோது, மழையும் புயலும் பலமாயிருக்கும்போது அவன் அரவமில்லாமல் நனைந்த உடையில் மேலேறி வந்து கதவைத் தட்டுவான். இந்தக் கட்டிடத்தில் மற்ற ஃபிளாட்டுகளிலெல்லாம் பூட்டு தொங்குவதைப் பார்த்து அங்கிருந்தவர்களெல்லாரும் ஓடிப்போய் விட்டார்கள், யாரும் நான் வந்திருப்பதைக் கவனிக்க மாட்டார்கள் என்று நிம்மதியடைவான்...

ஆகையால்தான் வாசல்கதவை எப்போதும் திறந்து வைத்திருக்கும்படி காவல்காரனிடம் சொல்லி வைத்திருக்கிறேன். காவல்காரன் பயங்கொள்ளி, ஆனால் இரக்கமுள்ளவன். இரக்கம் காரணமாக அவன் மாடிப்படியின் கதவைத் திறந்து வைத்திருக்கிறான், கோழைத்தனம் காரணமாக வாசல் கேட்டைமூடி வைத்திருக்கிறான். நான் ஒரேயொரு ஜன்னலைத் திறந்து வைத்துக்கொண்டு இரவு முழுதும்—ஆம், இரவு முழுதும்—தெருவை எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு இரவில் தூக்கம் வருவதில்லை. நான் உறங்கிவிட்டால், அப்போது அவன் வந்தால், என் முன்னால் வந்து நிற்கக் கூச்சப்படுவான். சிறுவயதில் என்னிடம் அனாவசியமாகப் பயப்படுவான் அவன். ராணு வந்து கதவைத் திறப்பாள். அவன் அவளுடைய அறைக்குள் போய்விடுவான்...

ராணு எப்போது போனாள்? ஏதோ ரகளை, குழப்பம் என்று சொன்னாளே! இந்தப் பேட்டைக்கு மின்சாரம் சப்ளை செய்யும் இயந்திரத்தை யாரோ சேதப்படுத்திவிட்டு இருட்டில் நாசக்காரி வேலைகள் செய்கிறார்களோ? வெடிச் சத்தம் கேட்டுக்

கொண்டேயிருந்தது. யாருக்கும் யாருக்கும் சண்டை நடக்கிறது? எனக்கு ஒன்றும் தெரியவில்லை. ஒன்றும் தெரியாமலிருந்ததுதான் எனக்கு எமனாகி விட்டது. என் பிள்ளையைப் பற்றித் தெரிந்து கொள்ளாமலிருந்ததால்தான் இந்த வேதனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்.

நான் மறுபடியும் ஜன்னலருகே போகவேண்டும். ராணு வந்ததால் நான் அங்கிருந்து நகர்ந்து வந்திருந்தேன். அடே, மின்சாரம் வந்துவிட்டதே! இந்த நேரத்தில் சௌமேன் தெருவில் வந்திருந்தால் நான் அவனைக் கவனித்திருக்க முடியாது. அவன் அரவமின்றி மாடிப்படிகளில் ஏறிக் கொண்டிருப்பான், இதோ கதவு வளையத்தை ஆட்டப் போகிறான், ராணுவைப் பெயர் சொல்லிக் கூப்பிடப் போகிறான். கூப்பிடட்டும். எனக்குத் தெரிந்து போய்விடும்...

# III

*ராணு தத்தராய்*

ஒரு ராத்திரிகூட இவர்களிடமிருந்து தப்புவதில்லை, இதோ மறுபடி ஆரம்பித்துவிட்டார்கள். இரவு பூராவும் நடக்கும் இந்த ஆர்ப்பாட்டம். நடு நடுவே தூக்கம் கலையும். அப்போது கோபம் வரும். கோபத்தால் களைப்பு, சோர்வு ஏற்படும். அழுகை வரும். ஆனால் இன்று அழுகை என்பதே அவமானம், என்னையே சிறுமைப்படுத்திக் கொள்வதாகும். மனிதன் தன் நாதியற்ற நிலையை முழுதும் உணர்ந்து விட்டால் சூடு தணிந்து போகிறான். நானும் ஆறிப்போயிருக்க வேண்டும். ஆனால் முடியவில்லை என்னால், அவர்கள் யாரென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் புரிகிறது-அவர்களை ஏதோ ஒரு நெருப்பு உள்ளூர எரிக்கிறது. அந்த நெருப்பின் சூடு தீவிரமாகி யார் மேலாவது வெடித்து அவனை விழுங்கி விடுகிறது. என் கணவரும் இப்படித்தான் விழுங்கப்பட்டிருக்கிறார். இது பற்றி எனக்கு ஆறுதல் ஒரு புறம், கோபம் ஒரு புறம். என் போன்ற இன்னும் பல பெண்களின் கணவர்கள், தந்தையர், குழந்தைகளுக்கும் இந்த முடிவு நேர்ந்திருக்கிறது என்பது ஆறுதல். எங்களால்- என் போன்ற பெண்களால்-ஒன்றும் செய்ய முடியவில்லையே என்று கோபம்.

சில மாதங்களுக்கு முன்னால் என் கணவர் வேலைசெய்து வந்த பெரிய தொழிற்சாலை மூடப்பட்டு அவருக்கு வேலை

போய்விட்டது. வீட்டு வாடகை பாக்கி. குடும்பத்தில் வறுமை. என் மாமனார் செலவாளி. அவரால் அதிகம் சேமித்து வைக்க முடியவில்லை. அவருடைய பென்ஷன் தொகையில் காலந் தள்ளுகிறோம். ஆனால் இதுவும் ஒரு பிழைப்பா? எனக்குக் கஷ்டமாயிருக்கிறது, உள்ளம் துடிக்கிறது; வெளியே கிளம்பி ஏதாவது வேலை தேடிக் கொள்ளத் தோன்றுகிறது. ஆனால் என் மாமனார் பழங்கால மனப்போக்குள்ளவர், கோழையுங்கூட. அலைந்து திரிந்து என் கணவரைத் தேடிக் கண்டு பிடிக்க நினைத்தேன் நான். ஆனால் என் மாமனார் என்னைத் தனியாக எங்கும் போகவிடவில்லை. இது ஒரு அடிமை வாழ்வு என்று எனக்குச் சில சமயம் தோன்றுகிறது. நான் எனக்குத் தெரியாமலேயே ஒரு கூண்டில் அடைபட்டு விட்டேன். அந்த சுயநலம் பிடித்த கிழவனார் என்னைத் தம் காலியான பணப் பெட்டியைக் காவல் காக்கும் பூதமாக இங்கே வைத்துக் கொண்டிருக்கிறார்.

ஊஹூம், இனிமேல் தாங்க முடியாது என்னால். நான் ஓடிப்போய் விடப்போகிறேன். நான் ஏன் இங்கே இருக்க வேண்டும்? இந்த வெறுமை, வீணாகக் காத்திருத்தல், சலிப்பூட்டும் பகல்கள், இரவுகள்... இந்தக் கட்டிடத்தில் குடியிருந்த குடும்பங் களெல்லாம் இங்கிருந்து ஓடிப்போய் விட்டன. இந்தப் பேட்டையே காலியாகிக் கொண்டிருக்கிறது. சில கிழடுகளும் குழந்தைகளுந்தான் எஞ்சியிருக்கிறார்கள். எப்போதாவது கேட்கும் வெடிகுண்டு அல்லது துப்பாக்கி வெடிக்கும் ஒலியைத் தவிர வேறெந்த அரவமுன்றி ஒரு நிரந்தர அமைதி குடிகொண்டிருக்கிறது இங்கே. எப்போதாவது யாரோ தெருவில் நடக்கும் காலடியோசை கேட்கிறது. இந்தச் சூனியமான ஆவியுலகத்தில் சிறைபட்டுத் தேய்ந்து போகிறது என் இருபத்திரண்டு வயது இளமை. நான் இங்கே இருக்க மாட்டேன், நான் ஓடிப்போகப் போகிறேன்!

எங்கே ஓடிப்போவது? அம்மா அப்பாவுக்கு என்மேல் உள்ளூரக் கோபம்—நான் அவர்கள் தேர்ந்தெடுத்திருந்த வரனை உதறித் தள்ளிவிட்டேனென்று. நான் அவர்களுடைய விருப்பத் துக்கு மாறாக, அவர்களுக்குத் தெரியாமல் இவரை பதிவு திருமணம் செய்துகொண்டேன். பிறகுதான் நாங்கள் இருதரப் பாருக்கும் செய்தி தெரிவித்தோம். இதற்குப் பின் வெகு நாட்கள் வரை என் பிறந்த வீட்டில் பூகம்பம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. எரிமலை வெடித்துக் கொண்டிருந்தது. புக்ககத்தில் அப்படி யொன்றும் நேரவில்லை. என் மாமியார் உயிரோடிருந்தால் அங்கும் இவை நேர்ந்திருக்கும். காரணம், பெண்கள்தான் பெண்களின் எதிரிகள். என் தாய் என் எதிரி. ஆகையால் நான்

தாய்வீடு திரும்ப வழியில்லை. திரும்பிச் சென்றால் எதிரி இளப்பம் செய்வாள்.

அப்படியானால் எங்கே போவேன்? இரவும் பகலும் சிந்தித்துப் பார்க்கிறேன். ஒரு வழியும் தெரியவில்லை. எப்படியும் நான் ஓடிப்போகத்தான் போகிறேன்! நாளுக்கு நாள் உள்ளூரக் காய்ந்து கொண்டிருக்கிறேன் நான்! இன்னும் சில நாட்கள் இப்படி இருந்தால் நான் செத்துப்போய் விடுவேன். வேண்டாம். நான் பிழைத்திருக்க ஆசைப்படுகிறேன்!

அவர் போவதற்கு முன் ஒன்றும் சொல்லவில்லை. மாலையில் டீ குடித்துவிட்டு வெளியே போனார். நாள் முழுதும் 'உம்'மென்று பேசாமல் உட்கார்ந்திருந்தார். இப்போதெல்லாம் எடுத்ததற்கெல்லாம் எரிந்து விழுகிறாரென்று நானும் அவரை எதுவும் கேட்பதில்லை. வரவர நிதானமிழந்துவிட்டார், முன் கோபியாகிவிட்டார். வேலை விஷயமாகக் கவலைப்படுகிறா ரென்று நான் நினைத்தேன். அவர் அதிகம் பேசுவதில்லை. எதுவும் சொல்லாமல் வெளியே போய்விடுவார். எப்போது வீடு திரும்புவார் என்று நிச்சயமில்லை. மாமனார் கவலைப்பட்டுக் கொண்டிருப்பார் என் கணவர் வீடு திரும்பியதும் என் மாமனா ருக்கு ஏதோ சமாதானம் சொல்வார். என்னிடம் ஒன்றும் சொல்வதில்லை. சொல்வது அவசியம் என்று அவர் நினைக்க வில்லை. இரவில் அவருடைய ஸ்பரிசத்துக்காகத் தவிப்பேன். பழக்கம் காரணமாக என் இரத்தமும் தசையும் பரபரக்கும். அவரோ என்னை மெல்லத் தள்ளிவிட்டு "ரொம்ப சூடாயிருக்கு. கொஞ்சம் தள்ளிப் படுத்துக்கோ, ராணு" என்று சொல்லித் திரும்பிப் படுத்துக் கொள்வார்.

எனக்கு அழுகை வரும். அவருக்கு என்மேல் ஏதாவது கோபமா? என்மேல் சந்தேகப்படுகிறாரா? யாராவது அவரிடம் என்னைப்பற்றிக் கோள் மூட்டியிருக்கிறார்களா? கடவுளுக்குத் தெரியும்-நான் மனத்தால் எப்படியிருந்தாலும் உடலால் குற்ற மெதுவும் செய்யவில்லை. நான் மௌனமாக அழுவேன்.

ஆச்சரியமென்னவென்றால், நான் அழுவது அவருக்குத் தெரிந்துவிடும். அவர் என்னை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு, "இல்லே ராணு, எனக்கு ஓம்மேலே கோவமில்லே, யார்மேலேயும் இல்லே. என் கோவமெல்லாம் என்மேலேதான். என்னையே என்னாலே தாங்கிக்க முடியலே. என்னை நம்பு, ராணு! எனக்குப் பொறுக்க முடியாத துக்கம்–" என்று சொல்வார்.

நான் பெண்ணாகையால் அவருக்கு ஆறுதலாகச் சொல்வேன், "ஒங்க துக்கத்தை என்கிட்டே கொடுங்க!"

"சீ, பைத்தியம்!" என்று சொல்லிவிட்டு அவர் மௌனமாகி

விடுவார். என்னை அணைத்திருக்கும் கைகள் தளரும். பிறகுஅவர் மல்லாந்து படுத்திருப்பார்.

அவர் ஏதோ சிந்தித்துக் கொண்டிருக்கிறார் என்று புரியும் எனக்கு, "என்ன ஆச்சு ஒங்களுக்கு? சொல்லுங்களேன்! ஒங்க கால்லே விழறேன்" என்று கெஞ்சுவேன்.

அவர் பதிலே சொல்லமாட்டார். அல்லது "ஒண்ணுமில்லே" என்று சொல்வார்.

அவருடைய கவலையெல்லாம் பணங்காசு பற்றித்தான் என்று நான் நினைப்பேன். வேலையில்லாமலிருப்பவர்களுக்கு இது இயற்கைதான். "கவலைப்படாதீங்க. ஏதாவதொரு வேலை நிச்சயம் கிடைச்சிடும்" என்று அவரைத் தேற்றுவேன்.

அவர் வெளியேறுவதற்கு முதல் நாளிரவு தூக்க மயக்கத்தில் ஒரு சொல்லைத் திரும்பத் திரும்பச் சொன்னார். அப்போது நான் விழித்துக் கொண்டுதானிருந்தேன். அந்தச் சொல்லைக் கேட்டு நான் திடுக்கிட்டேன், என் நெஞ்சு படபடத்தது.

என்ன சொல்கிறார் இவர்?

"துரோகி...! நான் துரோகி...! நான் துரோகி...!"

ஏதோ புரிந்தது... இல்லை... புரியவில்லை. மர்மத்தின் கறுப்புத்திரை சற்று விலகியது. அல்லது நான் கேட்டது பிரமையாக இருக்கலாம். என் ஊகம் தவறாயிருக்கலாம். ஆனால் என் இரத்தம் பனியாகக் குளிர்ந்துவிட்டது, தொடை கனத்தது, மண்டை பனியாய் உறைந்தது. ஜீவனில்லாமல் படுத்துக் கிடந்தேன்.

இந்த விஷயத்தை மாமனாரிம் சொல்லவில்லை நான். சொல்வது அவசியமென்று நினைக்கவில்லை. என்ன நடந்ததென்று எனக்குத் தெரியும். என் சங்கு வளையலும் குங்குமமும் இந்த சுமங்கலித் தோற்றமும் வெறும் வேஷம். நான் ஒரு குடும்பத்தின் மருமகளாக நடமாடுவது வெறும் பாசாங்கு. எனக்குத் தெரியும் அவர் திரும்பி வரப் போவதில்லை!

அப்படியும் என் இரத்தத்தில் எதிர்பார்ப்பு முள்ளாய்க் குத்துகிறது. மாடிப்படிகளின் சுரங்க வெளியில் காற்று சுழல்கிறது. அதனால் ஏற்படும் ஓசை கதவு வளையத்தை ஆட்டும் ஒலி போலிருக்கும். நான் திடுக்கிட்டு எழுந்து உட்காருகிறேன். கதவுப்பக்கம் ஓடுகிறேன். கதவைத் திறப்பதற்கு முன்பே அவரிடம் என்ன சொல்வது என்று யோசித்துப் பார்த்துக் கொள்கிறேன். பிறகு கதவைத் திறக்கிறேன். மங்கிய ஒளியில் மஞ்சளாக ஏதோ கோடுகள் அசைந்து மறைகின்றன. வெறும் சூனியம்! பின்னாலேயே ஓடி வருகிறார் மாமனார். "வந்துவிட்டானா...? சமு வந்துட்டானா...? சமு இல்லையா...? ஏம்மா பதில் சொல்லாமே நிக்கறே?" என்று படபடக்கிறார்.

என்ன சொல்வேன் நான்? "ஒருத்தரும் இல்லே, வெறுங் காத்துதான்" என்று சொல்லிவிட்டுத் திரும்பி வருகிறேன், திரும்பியதும் அந்த போட்டோ பார்வையில் படுகிறது. கோபத்தில், எரிச்சலில், வேதனையில் அதைக் கீழே போட்டு உடைக்கத் தோன்றுகிறது. இல்லாத அந்த மனிதரின் நிழலைப் பார்த்து "துரோகி! நம்பிக்கைத் துரோகி!" என்று கத்தத் தோன்றுகிறது...

# IV

*தீபக் மித்ரா*

கதவைத் திறந்தவளை எனக்குத் தெரியாது. ஆனால் அவளுக்குப் பின்னால் ஓர் உயரமான ஸ்டூலின் மேல் வைத்திருக்கும் போட்டோ யாருடையது என்று எனக்குத் தெரியும். மறுகணம் என் மண்டைக்குள் நெருப்பு பற்றியெறிந்தது. காதுகளிலிருந்து சூட்டுக் காற்று வெளிறியது. கண்களிரண்டும் வீங்கிக் கொண்டன. சௌமேன்! இது அவனுயை வீடா? கடைசியில் இங்கேயா வந்து சேர்ந்துவிட்டேன்.?

என் திகைப்பை அந்தப் பெண் கவனித்தாளா இல்லையா என்று எனக்குத் தெரியாது. ஆனால் என்னைப் பார்த்து அவளும் திடுக்கிட்டாள். ஓரடி பின்வாங்கி, நடுங்கும் குரலில், "யாரு... யாரைப் பார்க்கணும்?" என்று கேட்டாள்.

நான் என்னைச் சமாளித்துக் கொண்டேன். நிதானமான குரலில் சொன்னேன், "இன்னி ராத்திரி மட்டும் இங்கே தங்கப் போறேன். சத்தம் போடாதீங்க! சத்தம் போட்டுப் பிரயோசனமில்லே. நான் ஒங்களுக்கு எந்தக் கெடுதலும் செய்யமாட்டேன். இந்த ராத்திரி மட்டும்..." அவள் பின்வாங்கினாள். நான் உள்ளே நுழைந்து கதவைத் தாளிட்டேன். உட்கார்ந்து கொண்டு "ஒரு டம்ளர் தண்ணி கொடுங்க, தண்ணி மட்டுந்தான். இந்த அகாலத்திலே சாப்பாடு போடச் சொல்லித் தொந்தரவு செய்ய மாட்டேன். ஒரு ஜமுக்காளம் கொடுங்க. இங்கேயே படுத்துக்கறேன்..." என்றேன்.

அவள் பதிலேதும் சொல்லவில்லை. அவள்தான சௌமேனின் மனைவியோ? அப்படியானால் ஏனின்னும் சுமங்கலி வேஷம்? இவர்களுக்கு இன்னும் செய்தி தெரியாதோ? பைக்குள் கையைவிட்டேன். ஏதாவது தகராறு செய்தால் உள்ளேயிருக்கும் பொருளை எடுத்துக் காட்டிப் பயமுறுத்த வேணடும். அதற்கு அவசியமேற்படாது என்று தோன்றியது. கையை வெளியே

எடுத்தேன். வீட்டுக்குள்ளே கவனித்துப் பார்த்தேன். இரு பக்கங் களில் இரண்டு அறைகள். கதவுக்கருகில் கிழிந்த அழுக்குத் திரை. இந்த அறையில் சாமான்கள் அதிகமில்லை. ஒரு ஷெல்ஃபில் சில புத்தகங்கள். ஒரு மேஜை, இரண்டு நாற்காலிகள். ஒரு ஸ்டூலின்மேல் போட்டோ. அந்த போட்டோவைப் பார்க்கக் கூச்சமாக இருந்தது எனக்கு. "ஒன்னைப் பார்த்தாக் கொலைகாரன் மாதிரி இல்லே. ஒங்கிட்டே எனக்குப் பயமில்லே தீபு" என்று அவன் இப்போதும் சொல்வது போலிருந்தது.

உடனேயே தண்ணீர் வந்தது. போட்டோ பக்கம் திரும்பாமல் தண்ணீரை வாங்கி மடக்கு மடக்கென்று குடித்தேன். பிறகு டம்ளரைக் கீழே வைக்கப் போனேன். அதற்குள் அவள் அதைக் கையில் வாங்கிக்கொண்டு திரும்பிப் போக முற்பட்டாள்.

நான் அவளைக் கூப்பிட்டேன், "இதைக் கேளுங்க!"

அவள் மௌனமாக என் பக்கம் திரும்பினாள்.

"ஒங்க வீட்டிலே இன்னும் யார் யார் இருக்காங்க?"

"நானும் அப்பாவுந்தான்."

"இந்த போட்டோவிலே இருக்கிறவர் எங்கே?"

"தெரியாது"

"நீங்க யாரு?"

"இந்த வீட்டு மாற்றுப்பெண்"

"அப்படீன்னா அந்த போட்டோவிலே இருக்கற ஒங்க புருஷன்..."

"ஆமா"

நான் மௌனமானேன்.

"இன்னும் ஏதாவது தெரிஞ்சுக்கணுமா?" அவள் கேட்டாள்.

"ஆமா... நீங்க அப்பான்னு சொன்னது ஒங்க மாமனாரைத் தானே?"

"ஆமா"

"ஒங்க புருஷன் ஏன் இங்கே இல்லே?"

"தெரியாது... நான் ஒங்களுக்குப் படுக்கை கொண்டுவந்து போடறேன்."

அவள் உள்ளே போகத் திரும்பினாள். அந்த சமயத்தில் பக்கத்து அறையின் திரையை விலக்கிக்கொண்டு அந்தக் கிழட்டுக் கொரில்லா வந்துவிட்டது... "யாரு வந்திருக்காங்க... சமுவா... யாரு... யாரு...? நீங்க ஏன் பதில் சொல்ல மாட்டேங்கறீங்க... அம்மா, இது யாரு?"

சௌமேனின் மனைவி சொன்னாள், "சும்மா இருங்கப்பா. இவர் ஒங்க பிள்ளையோட சிநேகிதர். அவரைப் பத்தி ஏதோ செய்தி கொண்டு வந்திருக்கார்."

நான் திடுக்கிட்டேன். என் நெஞ்சு படபடத்தது. அவள் எல்லாம் தெரிந்து கொண்டு சொல்கிறாளா, அல்லது மாமனாரைச் சமாதானப்படுத்துவதற்காகத் தனக்குத் தோன்றியதைச் சொல்கிறாளா? அவள் பக்கம் திரும்பிப் பார்த்தேன். வெறித்த பார்வை, அதில்தான் எவ்வளவு பளபளப்பு! அவளுடைய உதட்டோரத்தில் தென்படும் மௌனப் புன்னகைக் கீற்று ஏன்?

என் பைக்குள் ரிவால்வர் துருப்பிடித்துப் போயிருக்கக்கூடும். அதன் குதிரை பழுதாகியிருக்கும். அதிலுள்ள குண்டு நனைந்து போயிருக்கும். கிழவர் சற்றுக் குனிந்துகொண்டு தணிந்த குரலில் என்னைக் கேட்டார், "சமு எப்படியிருக்கான்? எங்கேயிருக்கான்? என்ன பண்றான் இப்போ...? அவன் ரொம்பச் சிறுபிள்ளைத் தனமா இருக்கான். இவ்வளவு பயப்படும் படியா என்ன இருக்கு... நான் போலீஸ் சூப்பரிண்டெண்டெண்ட்கிட்டே போய்ச் சொல்லியிருக்கேன்... நான் சர்க்கார் உத்தியோகத்திலே இருந்தவன்...

நான் அவரை இடைமறித்துச் சொன்னேன், "ஒங்க பையன் போலீசுக்குப் பயப்படலே... அவன் ஒரு துரோகி. அதனாலே..."

"நிறுத்து!" கிழவர் கர்ஜித்தார்.

"ஒங்க மாற்றுப் பெண்ணையே கேளுங்க!" நான் சிரித்துக் கொண்டு சொன்னேன்.

அந்தப் பெண் சொல்லியது என்னைத் திகைக்க வைத்தது, "ஆமாம்பா. இவர் சொல்றது சரிதான்?"

"இருக்கவேயிருக்காது! இவன் பொய் சொல்கிறான்!" கிழவர் கத்தினார். "இவன் புளுகன், மோசக்காரன்! நான் யாரையும் நம்பல்ல! எல்லாரும் துரோகிகள்!"

அந்தப் பெண் சற்று முன்னால் வந்து, "சும்மா இருங்கப்பா!" என்றாள்.

கிழவர் விரலால் வாசலைச் சுட்டிக்காட்டி, "இப்பவே போயிடு இங்கேயிருந்து! என் சமு துரோகியா...? பொய்யும் புளுகும் சொல்ல வந்திருக்கியாக்கும்!"

நான் இப்போது பையிலிருந்த ரிவால்வரை எடுத்தேன். "ரொம்பக் கத்தாதீங்க...! உள்ள போயிடுங்க நீங்க! நான் இந்த ராத்திரி இங்கேதான் இருக்கப்போறேன். தொந்தரவு பண்ணினீங் கன்னா செத்துப் போயிடுவீங்க... இந்தாம்மா, இவரைக் கூட்டிக் கிட்டு அந்த ரூமுக்குப் போயிடுங்க...! என் மூளை குழம்பிக் கிடக்கு... முட்டாள் கிழம்! வாயை மூடு!"

கிழவர் சற்றுநேரம் என் ரிவால்வரைப் பார்த்தவாறு நின்றார். பிறகு கீழே உட்கார்ந்து, தன் கைகளால் முகத்தை மூடிக்கொண்டு அழத் தொடங்கினார். அழுகை நடுவே திக்கித் திக்கித் சொன்னார், "என்னைக்கொன்னுடு! கொன்னுடு...! சமுவுக்கு என்ன ஆச்சுன்னு

இப்போ புரியுது எனக்கு..! நான் பிழைச்சிருந்து என்ன லாபம்?"

மாமனாரைத் தேற்றிக் கொண்டிருந்த அந்தப்பெண் ஒரு விசித்திரப் புன்னகையுடன் என்னிடம் சொன்னாள், "என்ன ஆச்சு ஒங்களுக்கு? ஒங்களாலே சுட முடியலியா? ரிவால்வரிலே குண்டு இல்லியா? அல்லது அது விளையாட்டுத் துப்பாக்கியா? ஒங்களை அடைச்சிருக்கற கூண்டிலேருந்து வெளியே வர முடியலே ஒங்களாலே! தப்பியோடி வந்ததிலே ரொம்பக் களைச்சுப் போயிட்டீங்க, இல்லியா?"

கோபத்தில் எனக்குத் தலைகால் புரியவில்லை. நான் சொன்னேன், "சௌமேன் மாதிரி ஒரு பிள்ளையைப் பெத்தவனை நான் வெறுக்கிறேன்..! ஆனா இப்போ நான் களைச்சிருக்கேன். கொஞ்சம் தங்கித் தூங்கறதுக்கு எனக்கு ஒரு இடம் வேணும் இப்போ."

அவள் கிழவரை அவருடைய அறையில் கொண்டுபோய் விட்டுவிட்டுத் தன் அறையிலிருந்து படுக்கையை எடுத்து வந்து அதைத் தரையில் நன்றாக விரித்துவிட்டு, "சரி படுங்க. எனக்கும் ரொம்பத் தூக்கம் வருது இன்னிக்கு.. அதைத்தவிர.."

நான் படுக்கையில் படுத்துக்கொண்டு, "அதைத்தவிர என்ன?" என்று கேட்டேன்.

"ஒங்களுக்கு நன்றி!" என்று சொல்லிவிட்டுத் தன் அறைக்குப் போய்விட்டாள் அவள்.

எனக்குத் தூக்கம் வரவில்லை.. அந்தப் போட்டோ..! நான் தான் வாய்க்கால் கரையில் சௌமேனின் கழுத்து நரம்பை அறுத்து அவனுடைய சவத்தை எரித்தவன்..

அடுத்த அறையிலிருந்து வரும் ஒலிகளிலிருந்து அங்கே என்ன நடக்கிறது என்பதை ஊகிக்க முடிந்தது. நடக்க வேண்டிய காரியங்கள் அங்கே நடந்து கொண்டிருக்கின்றன. சௌமேனின் மனைவி தன் சங்கு வளையலை உடைக்கிறாள்; நெற்றிக் குங்குமத்தை அழித்துக் கொள்கிறாள்; பெட்டியிலிருந்தது சௌமேனின் வேஷ்டியை எடுத்து உடுத்திக் கொள்கிறாள்; பிறகு தேம்பித் தேம்பியழுகிறாள். அவளது அழுகையொலி வலுக்கிறது. சாம்பிராணிப் புகைபோல், மூடுபனிபோல் எங்கும் பரவுகிற, எல்லாவற்றையும் விழுங்குகிற அந்த அழுகை அவளுடைய அறைக்கதவின் இடுக்கு வழியே முன்னேறி வந்து கொண்டிருக் கிறது..

நான் காதுகளை இறுகப் பொத்திக் கொண்டு கிடந்தேன். அப்படியும் அழுகை சூழ்ந்த இந்த உலகத்திலிருந்து தப்பியோடி விட முடியாது என்று தோன்றியது. பிரும்மாண்டமான மலைப்பாம்பு போன்ற அந்த அழுகை என்னைச் சுற்றி சுருண்டு

வந்து என் மூச்சுக் குழாயை நசுக்குகிறது... எனக்குக் காற்று வேண்டும், மூச்சுவிடக் கொஞ்சம் காற்று வேண்டும்.

விடிவதற்கு முன்னால் எனக்குச் சிறிது உறக்கம் வந்தது. ஒரு கனவு கண்டேன்... எனக்கு நாற்புறமும் வந்து விழுகின்றன. ஆயிரமாயிரம் சௌமேன்களின் படங்கள். அவை உலகத்தையே மூடி மறைந்து விடுகின்றன. தாறு மாறாகக் கலைந்து விழுந்து கிடக்கும் சீட்டுக்கள்போல் எண்ணற்ற சௌமேன்களுக்கிடையே நான் என் வழியைத் தேடிக் கண்டுபிடிக்க வாய்ப்பே இல்லை...

*('தேஷ்', 1971)*

# அந்திமாலையின் இருமுகங்கள்

மதி நந்தி

ஹௌரா ஸ்டேஷனின் பிரும்மாண்டமான தகரக் கொட்டகையின் கீழே நின்றுகொண்டு இரு சகோதரிகளும் நாற்புறமும் திரும்பித் திரும்பிப் பார்த்தார்கள். அங்கே நடமாடும் ஒவ்வொருவரின் முகத்தையும் உற்றுப் பார்த்தார்கள். யாரும் அவர்களைப் பொருட்படுத்தவில்லை, எல்லாருக்கும் அவரவர் வேலையிருந்தது.

அவர்கள் விசாலமான கொட்டகைக்குக் கீழே மக்களின் நடமாட்டத்துக்கும் இரைச்சலுக்கும் நடுவே விக்கித்துப்போய் நின்றார்கள். ஸ்டேஷன் முழுவதுக்கும் கேட்கும்படியாக ஏதோ ஒரு உரத்த குரல் கேட்டது. சகோதரிகள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். பிறகு அந்தக் குரல் கேட்டது. சட்டென்று ஓய்ந்துவிட்டது. சிறியவள் விரலால் சுட்டிக் காட்டினாள். "அதோ பாரு!" அது ஓர் ஒலி பெருக்கிக் கருவி.

சிறியவள் தொண்டையைக் கனைத்துக்கொண்டு, "இப்போ என்ன செய்யறது?" என்று கேட்டாள்.

பெரியவள் ஒரு பக்கம் திரும்பிப் பார்த்துக் கொண்டாள். அங்கே அவர்களுடைய அண்ணன் சுவரின் மேல் சாய்ந்து கொண்டு விரல்களால் தலைமுடியைக் கோதிக் கொண்டிருக்கிறான். இப்போது கையை எடுத்து விரல்களில் ஒட்டிக் கொண்டிருக்கும் மயிரை ஊதித் தள்ளி விடுவான்.

"வா, அந்த பக்கம் போகலாம்" பெரியவள் சொன்னாள்.

இருவரும் கூட்டத்தைப் பிளந்துகொண்டு முன்னேறினார்கள். டிக்கெட் கௌண்டர்களுக்கு முன்னால் மனித வரிசைகளைக் கடந்துகொண்டு, அங்குமிங்கும் தரையில் படுத்துக்கிடந்த ஜனங்களைத் தாண்டிக்கொண்டு, அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருப்பவர்களுக்கு வழிவிட்டுக் கொண்டு அவர்கள் கடைசியில் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள் தங்குமிடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். இருவரும் ஒரு பெஞ்சின் ஓரத்தில் உட்கார்ந்தார்கள். ஜன்னல் வழியே சாலை தெரிந்தது. அங்கு வரிசை வரிசையாக பஸ்கள் நின்றுகொண்டிருந்தன.

பிரயாணிகள் தங்குமிடத்தில் மங்கலான வெளிச்சம், இறுக்க மான ஒருவகை நெடி, சற்றுத் தொலைவில் தண்ணீர்க் குழாய், டிக்கெட்டுக்காக நின்று கொண்டிருக்கும் பெண்களின் வரிசை, வெளியூர்ப் பயணிகள்...

"அக்கா, தண்ணி குடிக்கணும்"

"குடிச்சுட்டு வா"

தங்கை தண்ணீர் குடிப்பதைப் பெரியவள் தூரத்திலிருந்தே பார்த்துக் கொண்டிருந்தாள். தங்கை தண்ணீர் குடிக்கும்போது அவளுடைய ரவிக்கை மார்புப்பக்கம் சற்றுத் தூக்கிக்கொண்டது. அவளுக்கருகில் தண்ணீரெடுக்கக் குடத்துடன் நின்ற ஒருவன் அந்த இடத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறான், சங்கடமா யிருந்தது பெரியவளுக்கு.

"தூபான் எக்ஸ்பிரஸ் இன்னிக்கு லேட்."

பெரியவள் திரும்பிப் பார்த்தாள். பேசியது அவளுக்கருகில் உட்கார்ந்திருந்த பெண்தான்-"இன்னும் எவ்வளவு நேரம் காத்துக் கிட்டு இருக்கணுமோ?"

"யாராவது வராங்களா?" பெரியவள் கேட்டாள்.

அந்தப் பெண் சிரித்தாள். சிரித்தவாறே ஒரு தடவை அந்த அறை முழுவதையும் பார்த்துக் கொண்டாள். "நேத்திக்கே அவர் வர்றதாகக் கடுதாசி வந்தது. ஸ்டேஷனுக்கு வந்தேன், அவர் வரலே, இன்னிக்கு வரலாம்."

இப்போது இங்கிருந்து தங்கையைப் பார்க்க முடியவில்லை. பெரியவள் எழுந்து நின்றாள்.

"நீங்க எங்கேயாவது போகப் போறீங்களா, இல்லை யாரை யாவது வரவேற்க வந்தீங்களா?"

"இல்லே, நாங்க போறதுக்காகத்தான் வந்திருக்கோம்" என்று சொல்லி நிறுத்திக் கொண்டாள் பெரியவள். அவள் கொட்ட கைக்குக் கீழே கூட்டத்துக்கும் கூச்சலுக்கும் நடுவில் நின்று கொண்டு தங்கையைத் தேடினாள். அடிமேலடி வைத்து முன்னேறி ஸ்டேஷனின் முக்கிய வாயில்களில் ஒன்றையடைந்தாள். அங்கிருந்து ஹௌரா பாலம் தெரிந்தது. பாலத்தைக் கடந்தால் கல்கத்தா. கல்கத்தாவில் சந்து ஒன்றில் அவர்கள் ஒரு வீட்டின் கீழ்த்தளத்தில் குடியிருக்கிறார்கள் — அவள், அவளுடைய அம்மா, அண்ணன், தம்பி, தங்கை. அவர்கள் தங்கியிருந்த அறை குளிர் காலத்தில் நடுக்கும், கோடைகாலத்தில் பொசுக்கும். தென்றல் அவர்கள் வீட்டு மேல்மாடியில் வீசிவிட்டுப் போய்விடும். காற்று, மேகம், வெயில் எல்லாம் போகும், மாலை நேரம் வந்து போகும். உடம்பைக் கழுவிக்கொண்டு மொட்டை மாடிக்குப் போவதற்குள் அந்தி கழிந்துவிடும்...

அவள் மூக்கையுறிஞ்சி முகர்ந்தாள். ஏதோ ஒரு மணம்.

அப்பாவை மயானத்துக் கொண்டு செல்லும்போது அண்ணன் ஒரு சின்ன பாட்டில் கொண்டு வந்தானே, அதிலிருந்த திரவமும் இந்த மாதிரிதான் மணத்தது. காலி பாட்டிலைத் தங்கை எடுத்து வைத்துக் கொண்டாள்.. இப்போது அவள் எங்கே.

* * *

"டில்லி பாரு! ஆக்ரா பாரு!" என்று சொல்லிக் கொண்டே கைப்பிடியைச் சுற்றுவான் அந்த ஆள். குதுப்மினாரின் படம், தாஜ்மகாலின் படம் இவையெல்லாம் ஒவ்வொன்றாக வந்து விட்டுப் போகும். அந்த ஆள் ஒரே மாதிரிக் குரலில் கத்திக் கொண்டேயிருப்பான். கைப்பிடியைச் சற்று மெதுவாகச் சுற்றும்படி அவனிடம் சொன்னாள். அவன் சளியை உறிஞ்சுவது போல் முகத்தை வைத்துக்கொண்டு சிரிப்பான்.

ஸ்டேஷனில் அங்கங்கே தொங்கவிடப்பட்டிருந்த படங் களைப் பார்த்த தங்கைக்கு அந்த ஆளின் நினைவு வந்தது. அவன் டில்லி ஆக்ராவுக்கெல்லாம் போயிருக்கிறானா என்று அவள் அவனைக் கேட்டாள். அவன் அவளுடைய கேள்விக்குப் பதில் சொல்லாமல், பயாஸ்கோப் பெட்டியின் துவாரங்களில் கண்களைப் பொருத்திக்கொண்டு நின்றிருந்தவர்களை ஈ விரட்டுவதுபோல கையால் விரட்டத் தொடங்கினான். அந்த ஆளை இப்போது நினைவுக்கு வந்தது தங்கைக்கு.

வெகு நாட்களுக்குப்பிறகு அந்தப் பேட்டைக்கு ஒரு புதிய பயாஸ்கோப்காரன் வந்தான். பழைய ஆள் ஏன் வரவில்லை யென்று பல நாட்கள் யோசித்திருக்கிறாள் தங்கை. அவள் அவனைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் அவள் மனக்கண் முன்னால் குதுப்மினார், தாஜ்மகால், ஆகாயவிமானம், ஜடாயு சண்டை எல்லாம் வரிசையாக வந்து போகும்..

படங்களைப் பார்த்துக்கொண்டே வந்தவள் இன்னொரு பெண்ணுடன் உரசிக் கொண்டாள். திரும்பிப் பார்த்தாள். அவள் இவளையே பார்த்துக் கொண்டிருந்தாள். படத்தின் கீழே ஏதோ ஆங்கிலத்தில் எழுதியிருந்தது, அவள் அதை எழுத்துக் கூட்டிப் படித்துவிட்டு அந்தப் பெண்ணை ஓரக்கண்ணால் பார்த்தாள். அந்தப் பெண்ணின் உடையிலிருந்து ஒரு நல்ல வாசனை வந்தது. தங்கை மெதுவாக அந்த வாசனையை உறிஞ்சினாள். சாக்லேட் சுற்றியிருக்கும் ஜிகினாக் காகிதத் திலிருந்தும் இந்த மாதிரி வாசனைதான் வரும்.

"அது ஒண்ணும் இவ்வளவு அழகாயில்லே" அந்தப் பெண் சொன்னாள்.

தங்கை அவளைத் திரும்பிப் பார்த்தாள்.

"நாங்க போன பூஜை லீவிலே போயிருந்தோம். போகவர எவ்வளவு கஷ்டம்! ஓட்டல் வாடகையும் ரொம்ப ஜாஸ்தி!" இன்னும் நிறைய நேரம் அந்த பெண்ணின் அருகிலேயே நின்று அந்த வாசனையை முகர்ந்து நெஞ்சுக்குள் சேர்த்து வைத்துக் கொள்ள ஆசை தங்கைக்கு. "அழகாயில்லையா அங்கே? ஏன்?" என்று கேட்டாள்.

"அப்படியொண்ணும் அழகாயில்லே, அதெல்லாம் ஒரே காடு, புதர். அங்கே யாரு போவாங்க...! இதோ இருக்கு கொனார்க்கோட படம். இந்த கொனார்க்கிலே பார்க்கக் கூடியது நெறைய இருக்கு-"

"நீங்க போயிருக்கீங்களா?"

"என் நாத்தியோட புருசன் போயிருக்கார்."

"இப்போ எங்கே போறீங்க?"

"ராணி கஞ்ச்."

"யார்கிட்டேப் போறீங்க?"

அந்தப் பெண் சிரித்தாள். படங்களில் பெண்கள் சிரிப் பார்களே அந்த மாதிரி. பிறகு ஏதோ சொல்ல வந்தவள், சொல்லாமல் மறுபடி சிரித்தாள். இதைப் பார்த்துத் தங்கையும் சிரித்தாள்.

"அடுத்த வருடம் அவருக்கு லீவு கிடைச்சா, நாங்க காஷ்மீர் போகப்போறோம்."

"அக்கா, ஏழாம் நம்பர் பிளாட்பாரத்திலேருந்து ரயில் கிளம்பப் போகுது. சீக்கிரம் வா!" என்று சொல்லிக்கொண்டு வந்த, அரை டிராயர் அணிந்த ஒரு பையன் சூட்கேசைக் கையிலெடுத்துக் கொண்டான். அந்தப்பெண் பிரம்புக் கூடையைக் கையில் தொங்கவிட்டுக்கொண்டு, "நான் வரேன்" என்றாள்.

அவர்கள் போனார்கள். தங்கையும் சற்று முன்னேறி இரும்புக் கிராதியில் கையை வைத்துக்கொண்டு ஏழாம் நம்பர் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருக்கும் ரயிலைப் பார்த்தவாறு நின்றாள்.

* * *

இவ்வளவு சத்தம் இருந்தாலும் ஒன்றும் காதில் நுழையவில்லை அக்காவுக்கு. அவள் இரும்புத்தடி போல் தூணில் சாய்ந்து கொண்டு நின்றாள். காக்கியுடையும் தலையில் சிவப்புத் தொப்பியும் அணிந்த ஒருவன் அவள் பக்கம் வந்தான். தமக்கைக்கு ஒன்றும் காதில் விழவில்லை. அவன் அவளைக் கடந்து போனான்,

கடக்கும்போது ஒரு தடவை அவள் பக்கம் பார்த்தான்.

பிரயாணிகள் தங்குமிடத்துக்கே போய், அங்கே காத்திருப்பது நலல்து என்று அவளுக்குத் தோன்றியது. ஒருவேளை தங்கை அங்கே போயிருக்கலாம்.

அங்கே பெஞ்சுகளில் காலியிடமில்லை. தமக்கை சுவரில் சாய்ந்து கொண்டு நின்றாள். முன்பு அங்கிருந்து போன பெண் மறுபடி அங்கே வந்தாள். உட்கார இடமில்லாதது கண்டு, தமக்கைக்கருகில் வந்து நின்றுகொண்டு, "இன்னும் வரலே" என்று சொன்னாள்.

"யாரு வராங்க?" என்று ஒப்புக்குக் கேட்டாள் தமக்கை. ஏதாவது பேசவேண்டுமே!

அந்தப் பெண்ணுக்குப் பெரிய பெரிய கண்கள். இரண்டு கண்கள் முகங்களுக்குப் பொருத்தமாயிருக்கும். அப்படிப்பட்ட கண்கள் இப்போது அவளுக்குப் பொருத்தமாக மாறிவிட்டது. அவளுடைய மோவாய்க்குக் கீழே வயதால் ஏற்பட்ட மடிப்பு சற்று அசைந்தது.

"யாரா? ஒருத்தருமில்லே..."

இதே வார்த்தைகளை வேறொரு குரலில் கேட்டிருக்கிறாள் தமக்கை... சின்னச் சித்தி அவள் கையில் இரண்டு ரூபாயைக் கொடுத்துவிட்டு, "நீ இப்படி அடிக்கடி வந்தா நான் என்ன பண்ணுவேன்?" என்றது ஞாபகம் வந்தது. அப்போது சித்தியின் அறையில் அவளுடைய அடுத்த வீட்டுக்காரி ஒருத்தி இருந்தாள் அவளுடைய கேள்விக்குச் சித்தி சொல்லிய பதில் வெளியே போய்க் கொண்டிருந்த தமக்கையின் காதில் விழுந்தது "யாரா? ஒருத்தருமில்லே..."

"முப்பது ரூவாக் கூடச் சம்பளம்னு நூத்தம்பது மைல் தூரத்திலே வேலைக்குப் போயிட்டாரு. இதுக்கு என்ன தேவை? எனக்கு பள்ளியிலே கிடைக்கறதையும், இவர் இங்கேயே ஏதாவது சம்பாதிச்சா அதையும் வச்சிக்கிட்டு ஏழு பேருள்ள குடும்பத்தை நல்லா நடத்தலாமே!"

இதை ஆமோதிப்பது போல் தலையாட்டினாள் தமக்கை.

"நான் சொல்றதைக் கேக்கறதில்லே அவர். எட்டு வருசமாப் பார்த்துக்கிட்டு வரேன், ஆனா எங்க கலியாணதுக்கு முன்னாலே என் காசைத் தொடக்கூட மாட்டார்..."

"ஒங்க புருசன் எங்கே வேலை செய்யறார்?"

"டி.வி.சி.யிலே."

"எங்க அண்ணன் அங்கே வேலைக்கு முயற்சி பண்ணினார். கிடைக்கல்லே."

"அப்படியா? என் புருசனே ரொம்பப் பேருக்கு வேலை

வாங்கிக் கொடுத்திருக்காரே...! நான் அவரைக் கேட்டுப் பாக்கறேன்... நீங்க இங்கேதானே இருப்பீங்க...? இல்லே, ரயிலுக்கு நேரமாயிடுச்சா?"

"இல்லே, நேரமாகலே... நான் இங்கேயே இருப்பேன்", தான் சொன்ன வார்த்தைகளே தமக்கையின் நெஞ்சிலிருந்து கிளம்பி அவளுடைய காதுகளை நிறைந்தன "நான் இங்கேயே இருப்பேன்."

"நான் இன்னொரு தடவை போய்ப் பார்த்துட்டு வரேன்."

அந்தப் பெண் போனாள். தமக்கையும் அவளுக்குப் பின்னால் சிறிது தூரம் போனாள். அந்தப் பெண் கூட்டத்தில் மறைந்ததும் தமக்கை திரும்பி வந்து ஸ்டேஷன் வாயிலில் நின்றாள். மாலை மங்கி வரும் நேரம். பஸ் ஸ்டாண்டில் பிரயாணிகள் பஸ்களின் ஜன்னல் வழியே பார்த்துக் கொண்டிருக் கிறார்கள். அவர்களுடைய முகங்கள் துருப்பிடித்த டப்பா மாதிரி தெரிகின்றன. மஞ்சள் வெயில் ஹௌரா பாலத்தின்மேல் விழுகிறது. ஹூக்ளியில் நின்று கொண்டிருக்கும் கப்பலிலிருந்து ஊதல் ஒலி. தள்ளு வண்டியிழுக்கும் கூனன் தள்ளாடியவாறே வண்டியை பாலத்து மேட்டின் மேல் இழுத்துக்கொண்டு போகிறான். பஸ் டிரைவர் பஸ்ஸிலிருந்து இறங்கிப் பீடிப்புகையை ஊதித் தள்ளுகிறான்...

விலுவாவில் பெண்கள் விடுதி ஒன்று இருக்கிறது. வீட்டிலிருந்து ஓடிப்போக முயன்று பிடிபட்டவர்களைப் போலீஸ் முதலில் அங்கே வைத்திருக்கும்.

"நாங்க இங்கேயே இருப்போம்...! எங்களுக்கு வீடு வாசல் எதுவுமில்லே!— அப்படீன்னு போலீஸ்கிட்டே சொல்லணும், சொல்லுவீங்களா?" அவர்களுடைய அண்ணன் அவர்களைக் கேட்டான். அப்போது அண்ணனின் முகமும் இந்த அந்தி மாலைபோலத்தானிருந்தது...

தமக்கை மறுபடி ஸ்டேஷனுக்குள் வந்தாள்...

* * *

இரும்புக் கிராதியைப் பிடித்துக் கொண்டு, ரயில் போவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள் தங்கை. ரயிலின் ஜன்னல்களுக்குப் பின்னால் தெரிந்த முகங்கள் பிளாட்பாரத்தைப் பார்த்துச் சிரிக்கின்றன. இதே மாதிரி சிரித்துக்கொண்டே தானும் பிரயாணம் செய்ய ஆசையாயிருக்கிறது அவளுக்கு.

ரயில் லைன்களுக்குக் குறுக்காக ஒரு பெரிய பாலம். பிளாட்பாரத்திலிருந்து போகும் சாலை உயர்ந்துகொண்டேபோய் அந்தப் பாலத்தோடு இணைகிறது. மூன்று மனிதர்கள் கைகளில்

பைகளுடன் அதில் நடந்து போகிறார்கள். அவர்கள் ஒரு மலை மேல் ஏறிக்கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது...

தமக்கை தனக்காகக் காத்துக் கொண்டிருப்பாள் என்பது அப்போதுதான் நினைவு வந்தது அவளுக்கு.

தங்கை பிராயணிகள் தங்குமிடத்தில் தமக்கையைக் காணாமல் மறுபடி பெரிய கொட்டகைக்குக் கீழே வந்தாள். அங்கே ஒரு கிழவன் எடை பார்க்கும் இயந்திரத்தில் தன் எடையைப் பார்த்துக் கொண்டான். தன் எடை அச்சிடப்பட்ட சீட்டைப் பார்த்துவிட்டு அங்கிருந்து நடந்துபோய்விட்டான்.

"ரயில் புறப்பட இன்னும் மூணு நிமிஷந்தான் இருக்கு. இன்னும் வந்து சேரலே! கொஞ்சக்கூடப் பொறுப்பே இல்லே!"

தங்கை திரும்பிப் பார்த்தாள்.

ஆறேழு ஆண்களும் பெண்களுமடங்கிய ஒரு குழு.

"அவங்களுக்காகக் காத்துக்கிட்டிருந்தா ரயில் போயிடும்."

"பின்னே என்ன செய்யறது?"

அவர்கள் தங்களுக்குள் ஏதோ விவாதித்துவிட்டு அவசர அவசரமாக அங்கிருந்து போய்விட்டார்கள்.

சற்று நேரத்துக்குப்பின் மூக்குக் கண்ணாடியணிந்த பெண்ணொருத்தி அங்கே ஓட்டமும் நடையுமாக வந்தாள். ஒல்லியாக இருந்தாள். ஏழாம் வகுப்பு மாணவிபோல் தோன்றினாள்.

அந்தக் குழுவிலிருந்தவர்கள் இவளைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தார்களென்று தங்கைக்குப் புரிந்தது.

"அவங்க இப்பத்தான் போனாங்க" என்று சொன்னாள்.

"போயிட்டாங்களா?" அந்தப் பெண் தன் கையிலிருந்த தோல் பையை இன்னும் இருகப் பிடித்துக் கொண்டாள். மூக்குக் கண்ணாடியை நன்றாக மூக்கின்மேல் பொருத்திக் கொண்டாள். பிறகு 'இப்போது என்ன செய்வேன்?' என்பதுபோல் பார்த்தாள்.

"நீங்க தனியாப் போக முடியாதா?"

"ஏன் போக முடியாது? ஆனா அவங்களோட போனா வீட்டைச் சுலபமாக கண்டுபிடிக்கலாம்... அடே நீங்களா?"

கடைசிக் கேள்வி அப்போதுதான் அங்கு வந்த ஒரு இளைஞனிடம் கேட்கப்பட்டது.

அவன் பரபரப்போடு நெருங்கினான்.

"நீங்க இப்பத்தான் வரீங்களா?"

"ஆமா, நீங்க?"

"நானுந்தான்"

"பின்னே என்ன செய்யறது? ரயில் போயிடுச்சு... ஒரு ஊர்வலத்திலே டிராம் ஆப்பிட்டுக்கிட்டது–"

"இந்த ஊர்வமெல்லாம் எப்பத்தான் ஓயுமோ...? சரி, இப்ப என்ன பண்ணப் போறீங்க? ரயில் போயிடுச்சே!"

"கல்யாணத்துக்குப் போறோம். வீடு திரும்ப ராத்திரி பத்து, பதினோரு மணி ஆகும்னு வீட்டிலே சொல்லிட்டு வந்திருக்கேன். இப்போ திரும்பிப் போனா எல்லாரும் கேலி பண்ணுவாங்க."

"சரி வாங்க, ரயில்லே பாண்டெல் வரைக்கும் போயிட்டு வரலாம்."

"அதுக்கு முன்னாலே ஏதாவது கொஞ்சம் சாப்பிடணும்."

அவர்களிருவரும் போய்விட்டார்கள்..

இப்போது ஸ்டேஷன் விளக்குள் எல்லாம் எரிந்தன. ஒரு ரயில் வந்து நின்றது. ஜனங்கள் கூட்டங்கூட்டமாக ஸ்டேஷனுக்குள் நுழைந்தார்கள். இவ்வளவு கூட்டத்தைப் பார்க்கப் பிடிக்கவில்லை தங்கைக்கு. அவள் பிரயாணிகள் தங்குமிடத்துக்கு மறுபடி திரும்பி வந்தாள்.

* * *

"நாசமாப் போறவனே! கொஞ்சம் முன்னாலே போயிருக்கக் கூடாது?" என்று சொல்லித் தம்பியின் கன்னத்தில் அறைந்து விட்டாள் அம்மா. அவன் அழைப்பில்லாமல் ஒரு கல்யாண விருந்துக்குப்போய் அங்கே அடிவாங்கிக்கொண்டு வந்திருந்தான். தமக்கைகளைப் பார்த்துவிட்டுக் குய்யோ முறையோ என்று அழுதான் அவன். அப்போது அவன் முகமும் இது மாதிரிதான் சப்பட்டையாயிருந்தது.

தான் பார்த்துக்கொண்டிருந்த படங்களுக்கு இன்னும் அருகில் வந்தாள். தமக்கை. ரயில் விபத்துக்குள்ளாகி இறந்தவர்களின் படங்கள் அவை. கண்ணாடி போட்ட ஒரு சட்டத்துக்குள் அவை ஒட்டப்பட்டிருந்தன. அவளுடைய முகத்தின் நிழல் கண்ணாடியில் விழுந்தது. அதில் தன் முகத்தை நன்றாகப் பார்ப்பதற்காகச் சற்று ஓரமாக நகர்ந்தாள். அப்போது படங்களிலிருந்த முகங்கள், அவலட்சணமாக, பயங்கரமாகத் தெரிந்தன..

அண்ணன் ஒருநாள் கத்தினான், "நான் என்ன செய்யறது? முயற்சி பண்ணிக்கிட்டுத்தானே இருக்கேன்!"

தமக்கை அந்தக் கண்ணாடிக்குக் கீழே தன் அண்ணனின் முகத்தையே கண்டாள். அவளுக்குத் தன் அண்ணன்மேல் இரக்கம் ஏற்பட்டது. ரயிலில் அரைபட்டு இறந்தவர்களுக்காக வேதனைப்பட்டாள் அவள்.

புருஷனின் வரவுக்காகக் காத்திருந்த பெண் இப்போது தமக்கையின் பார்வையில் பட்டாள். அவள் தன் கணவனோடு போய்க்கொண்டிருந்தாள். கணவனின் கைகளில் ஒரு சூட்கேஸ், ஒரு படுக்கை.

தமக்கை ஓடிப்போய் அந்தப் பெண்ணின் கையைப் பிடித்துக் கொண்டு, "இவரோட விலாசத்தைக் கொடுங்க. என் அண்ணனை வந்து பார்க்கச் சொல்றேன்" என்று சொன்னாள். சொல்லிவிட்டு அந்தப் பெண்ணின் பெரிய பெரிய கண்களை, கீழே தொங்கும் மோவாயை, உடைந்துபோன, மண் அடுப்பு போன்ற உதடுகளைப் பார்த்தாள்.

"அங்கே வேலைக்குறைப்பு நோட்டீஸ் போட்டுட்டாங்களாம்."

அந்தப் பெண் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள் தமக்கை. யாரோ அவளுடைய தோளில் சூட்கேசையும் படுக்கையையும் சுமத்தினாற் போலிருந்தது அவளுக்கு. மயக்கம் வந்தது. கண்ணிமைகள் கனத்தன. சிரமப்பட்டுக் கண்ணைத் திறந்து பார்த்தாள். தங்கை இதற்குள் திரும்பி வந்திருக்கலாம்.

பிரயாணிகள் தங்குமிடத்துக்கு வந்த தமக்கை அங்கு தங்கை வந்திருப்பதைக் கண்டாள்.

இருவரும் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தார்கள். பிறகு பெரியவள், "இங்கே உக்காந்திருந்து என்ன பிரயோசனம்? அந்தப் பக்கம் போகலாம், வா" என்று சொன்னாள்.

அவர்கள் எழுந்து ஸ்டேசனின் மறுகோடிக்கு வந்தார்கள்.

"இப்போ நாம என்ன செய்யறது?" சிறியவள் கேட்டாள்.

பெரியவள் சற்று யோசித்துவிட்டு, "இங்கே கொஞ்ச நேரம் நிக்கலாம்" என்றாள்.

அப்போது அந்த ஆண்-பெண் ஜோடி உணவு விடுதியிலிருந்து வெளியே வந்தது. "இப்போ இவங்க சுத்தப் போவாங்க" என்று தங்கை நினைத்தாள்.

தங்கை எச்சில் துப்பினாள், இருமினாள், முதுகைக் குனிந்து கொண்டு வாந்தியெடுக்க முயன்றாள். தமக்கை அவளுடைய முதுகைத் தடவிக் கொடுத்தாள், அவளைத் தன் மார்போடு கட்டிக் கொண்டாள், பிறகு கேட்டாள், "ஏதாவது சொன்னியா?"

"இல்லியே"

"ஒனக்குப் பசிக்குதா?"

"இல்லே."

மறுபடி உணவு விடுதியின் கதவு திறந்தது. கப்பலின் சங்கு ஒலித்தது.

"சங்குச் சத்தம் மாதிரி இருக்கு, இல்லே?" தங்கை சொன்னாள்.

"ஆமா."

"அக்கா, ஒனக்கு ஞாபகம் இருக்கா? ஒரு தடவை அப்பாவோடே ஆத்தங்கரைக்குப் போனபோது ஒரு ரயில் இஞ்சின் மேலே ஏறினமே!"

"ஆமா."

"டிரைவர் என்னைத் தூக்கி வச்சுக்கிட்டான். அவனுக்கு ஒரு தங்கப் பல் இருந்தது."

"இஞ்சின் விசில் ஊதினபோது நீ பயந்துபோய் அவன் நெஞ்சிலே ஒளிஞ்சுக்கிட்டே."

தங்கை சிரித்தாள்.

"இதோ பாரு!" தமக்கை சொன்னாள்.

மணமகன் மணமகளை வீட்டுக்குக் கூட்டி வருகிறான். புதிய பெட்டி, புதுப் படுக்கை, புது உடைகள், நகைகள். மணமகள் இயந்திரம் மாதிரி நடக்கிறாள். மணமகன் சிகரெட் புகையை இழுக்கிறான்.

"பார்த்தியா அக்கா, அவன் முன்மண்டை வழுக்கை!"

"ஆமா."

"ரொம்ப வயசாயிடுச்சு மாப்பிள்ளைக்கு."

"ஆமா."

"அண்ணனோட அந்த சிநேகிதன் ஏன் அப்பறம் வரல்லே?"

"எனக்கென்ன தெரியும்?"

"ரொம்ப நல்லாப் பேசுவான் அவன்."

தமக்கை ஒன்றும் பேசவில்லை.

"அவன் ஒருநாள் சாக்லேட் வாங்கிக்கிட்டு வந்தான், ஞாபகமிருக்கா?" தமக்கையிடமிருந்து பதில் இல்லாவிட்டாலும் தொடர்ந்து பேசினாள் தங்கை, "அவனுக்கு ஒன்னைப் பிடிச்சிருக்குன்னு அம்மா சொன்னா."

"பேசாமே இரு இப்போ!"

தங்கையின் கண்களில் நீர் நிறைந்தது. அவள் தனக்கு வந்த இருமலை அடக்குவதற்காகக் குனிந்து கொண்டாள். மெல்லிய குரலில் "தண்ணி வேணும்" என்றாள்.

"குடிச்சுட்டு வா."

தங்கை போகவில்லை. தமக்கைக்கு மயக்கம் வரும் போலிருந்தது. அவள் கண்கொட்டாமல் முன் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"இப்போ என்ன செய்யறது?" தங்கை கேட்டாள்.

"தெரியாது."

"அண்ணன் என்ன சொன்னான்?"

தமக்கை ஞாபகப்படுத்திக்கொள்ள முயன்றாள்.

"இப்போ அவங்க வருவாங்களா?"

"ஏன்?"

"இல்லேன்னா நாம எதுக்காக இங்கே வந்திருக்கோம்?" தமக்கை நாற்புறமும் திரும்பிப் பார்த்தாள். மனிதர்கள், வெளிச்சம்,

ஒலிகள் எல்லாவற்றையும் பார்த்துவிட்டு, கேட்டுவிட்டு மறுபடியும் வெறிச்சென்று நேரே பார்த்தாள். பிறகு சோர்ந்த குரலில் சொன்னாள், "அவங்க வருவாங்க. வந்து 'நீங்க யாரு, எங்கே போகணும், ஏன் போகணும்?' இப்படியெல்லாம் கேப்பாங்க. நாம என்ன சொல்லணும், தெரியுமா? 'நாங்க அக்கா-தங்கை. எங்களுக்கு சொந்தக்காரங்க ஒருத்தருமில்லே. நாங்க பம்பாய் போய் அங்கே சினிமாவிலே சேரப் போறோம்'னு சொல்லணும், அவங்க நம்ம விலாசத்தைக் கேப்பாங்க. நாம சொல்லக்கூடாது. அவங்க நம்மைப் பிடிச்சுக்கிட்டுப் போய்ப் பெண்கள் விடுதிக்குஅனுப்பிடுவாங்க..."

"அங்கே என்ன பண்ணுவாங்க?"

"எனக்குத் தெரியாது."

"அக்கா, வா. நாம ஓடிப் போயிடுவோம்..."

கொஞ்சங் கொஞ்சமாகப் பெரியவளின் சோர்வு கலைந்தது. அவள் நிதானமாகக் கேட்டாள், "எங்கே போறது?"

"எங்கே வேணும்னாலும் போகலாம்."

"அப்பறம்?"

தமக்கை கைகளை நீட்டித் தங்கையைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள். தலை குனிந்து "பயந்துட்டியா?" என்று கேட்டாள்.

தங்கை தமக்கையின் நெஞ்சில் முகத்தைப் பதித்துக்கொண்டு வெடவெடவென்று நடுங்கத் தொடங்கினாள். தமக்கை அவளுடைய முதுகில் கையை வைத்துக்கொண்டு தானும் நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

ஒருத்தி நினைத்தாள் - மனிதனின் முகம் துருப்பிடித்த டப்பா மாதிரி.

இன்னொருத்தி பார்த்தாள் - ரயிலின் முகம் சிரித்தவாறு போய்க்கொண்டிருந்தது.

(தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள், 1971)

# பஞ்சம்

## சுநீல் கங்கோபாத்தியாய்

சிப்தாவிலிருந்து டால்டன்கஞ்ச் செல்லும் வழியில் வண்டி நின்றுபோய் விட்டது. புத்தம் புதிய, பளபளப்பான ஸ்டேஷன் வாகன், அது திடீரென்று பழுதாகிவிடும் என்று யாரும் நினைக்க வில்லை. அது பாலத்தைக் கடந்து மேட்டின்மேல் ஏறும்போதும், பலவீனமாக இரண்டு மூன்றுமுறை முனகிவிட்டு நின்றபோதும் ஒருவரும் அதைப் பெரிதாக நினைக்கவில்லை. 'ஏதோ நின்னிருக்கு, இதோ கிளம்பிவிடும்' என்ற நினைப்பில் பிரயாணிகள் வண்டியின் ஜன்னல் வழியே இயற்கையை ரசிக்கத் தொடங்கினார்கள். மிஸ்டர் கேம்கா தன் சிகரெட் பெட்டியைத் திறந்து எல்லாரிடமும் நீட்டி அவரவருக்கு ஏற்றவாறு ஆங்கிலம், இந்தி, வங்காளியில் பேசி அவர்களை சிகரெட் எடுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். பெட்டியில் எட்டு சிகரெட்டுகள் இருந்தன. ஒரே சுற்றில் பெட்டி காலி.

பத்து நிமிடங்களாகியும் வண்டி நகரவில்லை. பின்னால் வந்த லாரி ஒன்று வழிகேட்டு ஒலிப்பானை ஒலிக்கத் தொடங்கியது. இப்போது கேம்கா தாமே கீழே இறங்கி வந்தார்.

குறுகிய பாலத்தைக் கடந்ததும் சாலை ஆற்றங் கரை யிலிருந்தே செங்குத்தாக மேலே போகிறது. ஆறு இல்லை, ஆற்றின் எலும்புக்கூடுதான், இரத்தம் தசை எதுவுமில்லை. அருணும் இறங்கி வந்தார். வண்டிக்குள் ஒரே வெக்கை. அவர் கைகளைப் பின்பக்கம் நீட்டி நெஞ்சை விரித்துச் சோம்பல் முறித்துக் கொண்டார். உடம்பு அசத்துகிறது; குளித்தால்தான் ஒரு நிலைக்கு வரும். ஆற்றில் தண்ணீர் இருந்தால் உடனே இறங்கிக் குளித் திருக்கலாம். இப்போது மணி பதினொன்றரை தான். ஆனால் இதற்குள் எரிச்சலூட்டும் வெயில்–அசட்டுப் பரிகாசம் போல. இந்த இடத்தில் வண்டிகள் அடிக்கடி பழுதாகும் போலும்; அல்லது இந்தப் பக்கம் வருபவர்கள் வேண்டுமென்றே இங்கு வண்டிகளை நிறுத்துவார்கள் என்று தோன்றுகிறது. ஏனென்றால் சாலை ஓரத்தில் பாறையின்மேல் கரியாலும்

சாக்குக் கட்டியாலும் நன்றாகப் படித்தவர்களின் கையெழுத்தில் எழுதப்பட்ட வாசகங்கள் காணப்பட்டன. இவர்களுக்குச் சாக்குக் கட்டி எப்படிக் கிடைத்தது? இவர்கள் வீட்டைவிட்டுக் கிளம்பும் போது சாக்குக் கட்டியையும் எடுத்துக்கொண்டு புறப்படு வார்களா...?

எழுதப்பட்டிருந்த வாசகங்களில் மிகவும் அழுத்தமாகத் தெரிந்த வாசகம் 'மந்திரா + லால் கலம் = சுவர்க்கம்!'

அருண் முணுமுணுத்தார் - "அடக் கடவுளே!"

ஓட்டுநர் வண்டியின் முன்பக்க மூடியைத் திறந்தார். கேம்கா அங்கு வந்து எட்டிப் பார்த்தார். வண்டிக்குள் இருந்த 'ஹெரால்டு ட்ரிப்யூன்' பத்திரிகையின் நிருபர் லாகிரி எரிச்சலடைந்து "கேம்கா என்ன ஆச்சு?" என்று கத்தினார்.

கேம்கா எந்த நிலையிலும் கலங்காதவர். அவர் சொன்னார், "வண்டி தகராறு செய்யுது... அப்ப ஒண்ணு பண்ணலாம். பக்கத்திலேதான் ரூபா டுங்ரி விடுதி. நாம அங்க போய்ப் பகல் சாப்பாட்டை முடிச்சுக்கலாம்..."

இதற்குள் மூன்று நான்கு பேர் வண்டியிலிருந்து இறங்கி விட்டார்கள்.

எப்போதும் காலை வேளையில் நல்ல மூடில் இருக்க மாட்டார் லாகிரி. அவர் காலை வேளைகளில் 'ஹெல்' என்ற வார்த்தையை அடிக்கடி பயன்படுத்துவதைக் கவனித்திருக்கிறார் அருண். லாகிரி முகத்தைச் சுளித்துக் கொண்டு கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டார் - நேரத்தைத் தெரிந்துகொள்ள அல்ல, தேதி தெரிந்துகொள்ள. பிறகு சொன்னார், "ஐயோ! இன்னிக்கு எட்டாந்தேதி, இன்னிக்கே எனக்குப் பாட்னா போய்ச் சேரணும். ஒங்க டாடா கம்பெனி இந்த ஓட்டை வண்டியைக் கொடுத் திருக்கு..."

ஹாஹாவென்று சிரித்தார் கேம்கா. "இது புத்தம் புது வண்டியாக்கும், அதனால்தான் கொஞ்சம் தொல்லை கொடுக்குது... வாங்க, வாங்க...! இது ரொம்ப நல்ல, சின்ன பங்களா. ஒங்க ளுக்குப் பிடிக்கும்... மிஸ்டர் ரங்காச்சாரி, நீங்க என்ன சொல்றீங்க?" ரங்காச்சாரிக்கு ஆட்சேபமில்லை. மற்றவர்களும் இந்த யோசனையை எதிர்க்கவில்லை.

ஆனால் மற்ற பத்திரிகைகளை விடப் பெரிய ஆங்கிலப் பத்திரிகையின் நிருபர் என்ற முறையில் லாகிரிதான் அதிக ஆர்ப் பாட்டம் செய்தார். அவர் முணுமுணுக்க ஆரம்பித்தார், "இன்னிக்கு மூணு மணிக்கு நான் டால்டன் கஞ்ச் ஜில்லா மாஜிஸ்டிரேட்டைச் சந்திக்கணும்... நல்ல சங்கடம்...! பங்களா எவ்வளவு தூரம்? இந்த வெயில்லே எங்களை நடக்க வைக்கப்போறீங்களா?"

"கொஞ்ச தூரந்தான்... இதோ இங்கேயிருந்தே தெரியுதே!"

"அங்கே ஏதாவது சாப்பிடக் கிடைக்குமா? இந்தப் பகுதியிலே சாப்பாட்டு விடுதி எதையும் காணோமே!"

"அதையெல்லாம் நான் கவனிச்சுக்கறேன். என்கிட்டேயும் உணவுச் சாமான்கள் இருக்கு. ஒரு அசௌகரியமும் இருக்காது."

எதற்கும் கலங்குபவரல்ல கேம்கா. இப்போதுதான் லாகிரி யோடு மலர்ந்த முகத்துடன் பேசிக்கொண்டிருந்த அவர் திடீரென்று முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு ஓட்டுநரை ஏதோ திட்டினார். மறு நிமிடமே மறுபடியும் மலர்ந்த முகத்துடன் லாகிரியிடம் சொன்னார், "எதிர்பாராம இந்த மாதிரி ஏதாவது நேர்துட்டா எனக்கு ரொம்ப குஷியா இருக்கும்... வாங்க, போகலாம்"

வண்டியின் பணியாள் சாமான்களைத் தூக்கிக்கொண்டு அவர்களுக்குப் பின்னால் நடந்தான். இன்னும் ஒரு பெட்டி பீர், மூன்று போத்தல் ஸ்காட்ச் பானம், கொஞ்சம் இறைச்சி இவை மிச்சமிருப்பதை ஓரக்கண்ணால் கவனித்த லாகிரியின் முகத் திலிருந்த கடுப்பு சற்றுக் குறைந்தது.

பயணிகள் விடுதியில் இரண்டு அறைகள், சுத்தமான பாத்ரூம், மூன்று பணியாட்கள். மத்திய அரசின் மந்திரியொருவர் அங்கு தங்கிவிட்டு அப்போதுதான் அங்கிருந்து புறப்பட்டுப் போயிருந்தார். ஆகையால் பணியாட்கள் இன்னும் சீருடையைக் கழற்றவில்லை. கேம்கா ஒரு தேர்ந்த கிரிக்கெட் ஆட்டக்காரர் போல் அனாயாசமாக எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டார். "கோழி மட்டும் மூணுக்கு மேல கிடைக்கல்ல!" என்று வருத்தப் பட்டுக் கொண்டே அவர் பீர்போத்தலைத் திறக்கத் தொடங் கினார். லாகிரியின் புருவச் சுருக்கங்கள் சற்றுக் குறைந்திருந்தன. அவர் மேஜையின் மேல் கால்களைப் போட்டுக்கொண்டு கேட்டார், "கேம்கா, இங்கே பக்கத்திலே ஒங்க டாட்டா கம்பெனி யோட உணவு உதவி முகாம் ஏதாவது இருக்கா?"

"இந்தப் பக்கம் இல்லே. நாங்க நாலு இடத்தில் உணவு விடுதி திறந்திருக்கோம். ஒண்ணுதான் நேத்திக்கு நீங்க பார்த்தது..."

"நல்லவேளை பிழைச்சேன்! இந்த மூணு நாளா நீங்க எங்களை இழுத்தடிச்சே...!"

இழுத்தடிச்சேனா...? மிஸ்டர் லாகிரி, நீங்க வாழ்க்கைய எதிர் கொள்ளணும், நீங்க பத்திரிகைக்காரங்க..."

"காலை வேளையிலே என் வாயிலேருந்து திட்டை வர வழைக்காதே! வாழ்க்கையாம்! (எழுத முடியாத வசவு). சரி, ஊத்து!"

"நாட்டு நிலைமை என்னன்னு நீங்க நேரடியாப் பார்க்க

வேணாமா? வெளிநாட்டு நிருபர்கள்கூட...”

“நாட்டு நிலைமையைக் காண்பிக்க ஒங்களுக்கு ஏன் இவ்வளவு அக்கறை...? சும்மா வளவளன்னு பேசிக்கிட்டிருக்காதே! நாசூக்குத் தெரியாதவன்! அருண், ஒங்கிட்டே சார்மினார் இருந்தால் ஒண்ணு கொடு!”

கேம்கா இதற்குள் தன் சிகரெட் பெட்டியை நிரப்பிக் கொண்டு வந்து அதை லாகிரிக்கு முன்னால் நீட்டினார். லாகிரி சொன்னார், “ஒன்னோட அந்த கோல்டு ஃப்ளேக் குடிச்சுக் குடிச்சு வாய் சப்புனு போயிடுச்சு! சீ! அருண், ஒரு சார்மினார் கொடு!”

அருண் தூரத்திலிருந்தே தன் சிகரெட் பெட்டியை லாகிரியிடம் எறிந்துவிட்டு, “லாகிரி அண்ணா, இன்னிக்கு இங்கேயே தங்கிடலாமே! இந்த இடம் ரொம்ப அமைதியா இருக்கு” என்றார்.

“ஒனக்கென்ன! நினைச்சா ஒரு வாரம் ரெஸ்ட் எடுக்கலாம். எனக்கு நாளன்னிக்குக் கல்கத்தாவிலே பிளேனைப் பிடிக்கணும். ஒருநாள் வேஸ்டா... என் மூடு அவுட்டாயிடுச்சு, ஒண்ணும் பிடிக்கலே...”

“வாஸ்தவம், பொறுத்துக்க முடியாதுதான்! எவ்வளவு பரிதாபமான காட்சிகள்...”

“என்ன பரிதாபம்? என்ன?”

லாகிரி கால்களைத் தொங்கவிட்டுக்கொண்டு நேராக உட்கார்ந்து கொண்டார். அவருக்குப் பெரிய உடம்பு, அகலமான முகம். சோடாபுட்டி மூக்குக் கண்ணாடி. இருந்தாலும் முகத்தில் ஒருவகைக் குழந்தைத்தனம் இருந்தது. கோபம், வியப்பு, எரிச்சல், சோர்வு ஆகிய உணர்ச்சிகள் அதில் தெளிவாகப் பிரதிபலித்தன. அவர் கலப்படமில்லாத ஆச்சரியத்தோடு “எது பரிதாபம்?” என்று கேட்டார்.

‘பம்பாய் ட்ரிப்யூன்’ பத்திரிகை நிருபர் தேஷ்பாண்டே சொன்னார், “மிஸ்டர் லாகிரி, நீங்க பார்த்தீங்களா? நான் அதை போட்டோ எடுத்து வச்சிருக்கேன்... பேத்லா உதவி முகாமிலே உணவுக்காக வரிசையா உக்காந்திருந்தவங்களிலே ஒரு கிழவன் ஒரு கிழவியோட மடியிலே தலையை வச்சுக்கிட்டு அப்படியே செத்துப்போயிட்டான்...! இதையெல்லாம் மனுசன் கண்ணால பார்க்க முடியுமா? ஜெயப்பிரகாஷ் இதைப் பார்த்துட்டு வேர்வையைத் தொடைச்சுக்கறார். நான் கவனிச்சேன். நானும் கண்ணை மூடிக்கிட்டேன்.”

ரங்காச்சாரி சிரித்துக்கொண்டே சொன்னார், “ஆனா கண்ணை மூடிக்கறதுக்கு முன்னாலே போட்டோ எடுத்துட்டி

யோல்லியோ? இப்ப அந்தப் படத்தை டைம்ஸ் பத்திரிகைக்கோ, கார்டியன் பத்திரிகைக்கோ வித்து..."

"மாட்டேன், மாட்டவே மாட்டேன்! நம் நாடு பத்தின இந்த வெட்ககரமான விஷயத்தை வெளிநாட்டுக்காரங்களுக்கு விற்க மாட்டேன்!" அழுத்தமாகக் கூறினார் தேஷ்பாண்டே.

அவர்களுடைய உரையாடலைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த லாகிரி சொன்னார், "இதுதான் பரிதாபக் காட்சியா? நம்ம நிலைமை அதைவிடப் பரிதாபமில்லையா? இந்த ராஸ்கல் கேம்கா..."

கேம்கா உதட்டில் சிரிப்புடன் மிகவும் பயந்தவன்போல் நடித்தவாறு "ஐயா, நான் என்ன குத்தம் பண்ணினேன்?" என்று கத்தினான்.

"நீதான் எல்லா அனர்த்தத்துக்கும் காரணம்!"

"ஏன்? நாட்டிலே என்ன நடக்குதுன்னு நீங்க..."

"நாட்டிலே என்ன நடக்குதுன்னு நாங்களாகவே பார்த்துக்குவோம், அல்லது எங்க பத்திரிகைகள் எங்களைப் பார்க்க அனுப்பும். நீ ஏன் எங்களை அழைச்சுக்கிட்டு வந்து இதையெல்லாம் காமிக்கறே? நீங்க எவ்வளவு தான தருமம் பண்றீங்கன்னு தம்பட்டம் அடிச்சுக்கணும்! மனுசங்க செத்துப்போயிக்கிட்டு இருக்கறதைப் பார்க்க யாராவது ஜனங்களை அழைச்சுக்கிட்டு வருவாங்களா? ராவும் பகலும் எங்களுக்கு ஸ்காட்ச் குடிக்கக் கொடுக்கிறே. எங்களை வசதியா வச்சுக்கறே, நடுநடுவிலே கூட்டிக்கிட்டுப்போய் மனுசங்க சாகறதைக் காமிக்றே... அசிங்கம், பயங்கரம்...! ராஸ்கல், நீங்க கொடுக்கறதையெல்லாம் சாப்பிடறேங்கறதுக்காக நான் ஒங்களை நேசிக்கறேன்னு நினைச்சுக்காதே...! நான் குடியன், நல்ல சரக்கைப் பார்த்தாக் குடிக்காமே இருக்க முடியாது... ஆனா அதுக்காக இந்த மாதிரியா...?"

கேம்காவின் பாவனை இப்போது முற்றிலும் மாறிவிட்டது. அவர் மெல்லக் கைகளைத் தட்டிக்கொண்டு சொன்னார், "நீங்க சொல்றது ரொம்பச் சரி! ஒங்க கருத்தை அப்டியே ஒப்புத்துக்கறேன் நான். ஆனா இது என்னோட வேலை..."

லாகிரி நாற்காலியிலிருந்து எழுந்துபோய் வராந்தாவுக்கு வெளியே எச்சில் துப்பினார். பையிலிருந்து கைக்குட்டையை எடுத்து மூக்கைத் துடைத்துக் கொண்டார். அவர் மூக்குக் கண்ணாடியை எடுத்ததும் அவருடைய முகம் ஒரு குழந்தையின் முகம்போல் ஆகிவிட்டது. பரிதாபகரமாகச் சொன்னார், "நிசமாவே ஒண்ணும் பிடிக்கலே எனக்கு... சரி, சமையல் ஆயிருச்சான்னு பார்த்துட்டுவா. எனக்குப் பசிக்குது. இன்னுங் குடிச்சா அப்புறம் சாப்பாடே இறங்காது."

பயணிகள் விடுதியின் வாசலில் ஒரு பெரிய கிணறு. ஜனங்கள் கூட்டம் கூட்டமாக அங்கு தண்ணீரெடுக்க வந்தார்கள். விடுதியின் பணியாள் ஒருவன் அங்கே காவலிருந்து கொண்டு அவர்களில் யாரும் ஒரு குடத்துக்கு மேல் தண்ணீர் எடுக்காதபடி பார்த்துக் கொண்டான். அருண் அந்தப் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தார்.

லாகிரி அருணுக்கு அருகில் வந்து சொன்னார். "என்ன பார்க்கறே? பொம்பிளைகளையா? ஏழு வருஷம் முன்னாலே இதே பாலாமாவுக்கு வந்திருந்தேன்... அப்போ எனக்கு ஒன் வயசு இருக்கும். அப்போ கவனிச்சேன், இந்த ஓராவ் சாதிப் பெண்களுக்கெல்லாம் என்ன கட்டுமஸ்தான உடம்பு, ஆகா! இப்போப் பாரு, ஒருத்திக்கும் புட்டமே இல்லே, மாரே இல்லே!"

அருண் பதில் சொல்லாமல் லாகிரியைப் பார்த்துச் சிரித்தார்.

லாகிரி தொடர்ந்து பேசினார், "எப்படி இந்தக் காட்சியை வர்ணிக்கறதுன்னு நிச்சயம் பண்ணிட்டியா? ஒங்க வங்காளிப் பத்திரிகையிலே எல்லாம் கவிதை மாதிரி ஆர்ப்பாட்டமா எழுதணுமே! சரி, நான் சொல்றேன், எழுதிக்க, 'எண்ணற்ற மக்களின் முகங்களில் சோகத்தின் சித்திரம்...?' இல்லே, 'சித்திரம்' என்ற வார்த்தை ரொம்பப் பழசாயிடுச்சு, 'வியர்வை' ஆமா, அதுதான் சரியான வார்த்தை 'வேதனையின் வியர்வை...' 'வெய்யில்', 'செவிட்டு வெய்யில்...' ஆகா, ஒனக்குச் செய்தியோட தலைப்புகூடச் சொல்லிக் குடுத்துடறேன்— 'வானத்தில் செவிட்டு வெய்யில், கீழே வேதனையின் வியர்வை!' ஆகா, கவிதைதான் போ!"

அருண் பதில் சொல்லாமல் மறுபடி சிரித்தார். ஆனால் இந்தச் சிரிப்பு சற்று வேறு விதமாயிருந்தது. லாகிரி இதைக் கவனித்துவிட்டுச் சொன்னார், "நான் கொஞ்சம் அதிகமாப் பேசறேன், இல்லியா? ஒளர்றேன்... நினைச்சுப் பாரு, ஆயிரக் கணக்கான ஜனங்க சோத்துக்கில்லாமே துடிக்கறாங்க, நாம என்ன செய்யறோம்? அவங்க நிலைய எந்த மொழியிலே வர்ணிக்கறதுன்னு யோசிச்சுக் கிட்டிருக்கோம்! சே, ஒண்ணும் பிடிக்கலே எனக்கு!"

"லாகிரி அண்ணா, இந்த பக்கத்துக்கு எங்கேயிருந்தோ ஒரு சன்னியாசி வந்திருக்காராம். மக்களுக்குச் சேவை செய்யறாராம்.

"அது யாரு சன்னியாசி?"

"பம்பாய் பக்கத்திலேருந்து வந்திருக்காராம். தினம் ஆயிரம் பேருக்குச் சாப்பாடு போடறாராம். அவரோட பக்தர்கள் அவருக்குப் பணமும் அரிசியும் அனுப்பறாங்களாம்... ரொம்ப சுவாரஸ்யமா இருக்கு இல்லே? வாங்களேன், எப்ப இங்கே

தங்கறோமோ, அப்ப அவரையும் போய்ப் பார்த்துட்டு வந்திடலாமே!"

"சன்னியாசி சாப்பாடு போடறார்னா அதிலே ஒனக்கென்ன வந்தது?"

"அது ஒரு பெரிய நிகழ்ச்சி இல்லயா? ஒங்க ஆங்கிலப் பத்திரிகைக்குச் சுவையான செய்தியாயிருக்குமே!"

"அட, சும்மாயிருப்பா-! இந்த பீர் ஒரே கசப்பு-! வயித்துப் போக்குக்குக் கஷாயம் குடிக்கற மாதிரி இருக்கு- கலப்படம் பண்ணியிருக்காங்க போலேயிருக்கு-"

"பீர் கொஞ்சம் கசக்கத்தான் செய்யும்-"

"சும்மா ஒளறாதே! நீ பால் குடிக்கற குழந்தை-! பீர் கசக்கும்னு எனக்குச் சொல்லித் தர்றயாக்கும்!"

முகத்தைச் சுளித்துக் கொண்டார் லாகிரி - மூக்குக் கண்ணாடி இல்லாமல் பரிதாபமாகத் தோற்றமளிக்கும் முகம்...

லாகிரி முதலில் ஒருவரிடமும், பிறகு இன்னொருவரிடமும் போய் வளவளவென்று ஏதோ உளறிக் கொண்டேயிருக்கிறார். மற்றவர்கள் கத்துகிறார்கள். அவர் திடீரென்று கேம்காவைப் பார்த்துக் கத்தினார், "கேம்கா ராஸ்கல்! இரு, இரு- நான் ருஸ்தம்ஜீகிட்டே ஒன்னைப் பத்திப் புகார் பண்றேன்! ஒன்னை ராஞ்சிக்கு மாத்தச் சொல்றேன், பாரு!"

கேம்கா வராந்தாவின் ஓரத்தில் உட்கார்ந்திருந்தார். வெயில் அவர் முகத்தில் விழுந்து கொண்டிருந்ததால் முகம் பளபளத்தது. அவர் இனிய குரலில் சொன்னார். "அப்படி நீங்க செஞ்சீங்கன்னா என்னோட நல்லதுக்குத்தான் செய்வீங்க. நீங்க எப்போதும் என் நண்பர்தான்!"

"நண்பர்! வெங்காயம்?"

"எப்போதும் என் நண்பர்தான்-! அது சரி, இப்போ நான் என்ன குத்தம் பண்ணினேன்?"

லாகிரி இடுப்பில் கையை வைத்துக் கொண்டு நின்றார். கேம்காவின் குற்றம் என்னவென்று யோசித்தார். இங்குமங்கும் பார்த்தார். தன் கையிலிருந்த காலி டம்ளர் அவரது பார்வையில் பட்டது. "இவ்வளவு நேரமா உள்ளூர் பீரையே குடுச்சுக்கிட்டிருக்கியே- ஸ்காட்சை ஒன் வப்பாட்டிக்குக் குடுக்கப் போறியா?"

கேம்கா உடனே எழுந்து மேஜைக்கடியிலிருந்து ஸ்காட்சை எடுத்துக்கொண்டே சொன்னார், "ஒங்களுக்கு மனசு சரியில்லாத போதெல்லாம் விஸ்கி சாப்பிடறதுக்குப் பதிலா பீரானே சாப்பிடுவீங்கன்னு..."

"எனக்கு மனசு சரியில்லேன்னு ஒனக்கு யாரு சொன்னாங்க, முட்டாள்! எனக்குப் பசிக்குது... சாப்பாட்டுக்கு [illegible]

செய்யுன்னு நான் அப்பவே பிடிச்சுச் சொல்லிக்கிட்டிருக்கேன்–"

சாப்பாடு தயார். வெள்ளை வெளேரென்று சிறுமணி அரிசித் சாதம், டப்பா வெண்ணெய், உருளைக்கிழங்கு பொரியல், கோழிக் குழம்பு.

ரங்காச்சாரி அருணிடம் கிசுகிசுத்தார், "இவ்வளவு நாளிலே இன்னிக்குத்தான்அரிசி ரொம்ப நல்லாயிருக்கு– கடுமையான பஞ்சப் பகுதியிலேதான் நமக்கு ரொம்ப நல்ல அரிசி கிடைச் சிருக்கு– இல்லியா?"

"குழம்பும் பிரமாதம்! ரொம்ப நல்லா சமைச்சிருக்கான்."

"ஆனா, காரம் கொஞ்சம் சாஸ்தி."

அப்போது பிற்பகல் மணி ஒன்றுதான். ஆனால் இதற்குள் நல்ல போதை லாகிரிக்கு. அவர் விரல்களால் சோற்றை அளைந்தாரேயொழியச் சாப்பிடுவதாகக் காணோம். அவருடைய கண்கள் குழம்பிக் கிடந்தன. இன்று முழுவதும் இப்படித் தானிருக்கும். ஆனால் இதே ஆள் தன் ரிப்போர்ட்டை டைப் செய்ய உட்காரும்போது முற்றிலும் மாறிப்போய் விடுவதை அருண் கவனித்திருக்கிறார். அபார ஞாபக சக்தி அவருக்கு; ஆங்கிலம் எழுதுவதில் திறமையும் அவ்வாறே. அப்போது காரியத்தில் கண்ணாயிருப்பார் லாகிரி.

"லாகிரி அண்ணா, நீங்க ஒண்ணும் சாப்பிடலியே!" அருண் கேட்டார்.

"தூ! என்ன சாப்பாடு இது! ஒண்ணுமே பிடிக்கலே! கோழி இறைச்சி கெட்டுப்போயிடுச்சு!"

கேம்கா முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக்கொண்டு, "என்ன சொல்றீங்க நீங்க! கோழி உசிரோடே இருக்கு, அதைப்போய் இறைச்சி கெட்டுப் போச்சுங்கறீங்களே!"

இதைக்கேட்டு எல்லாரும் ஹோஹோவென்று சிரித்தார்கள்.

"இதிலே சிரிக்கறதுக்கு என்ன இருக்கு?" லாகிரி கோபமாகக் கேட்டார். "நிச்சயம் இது கெட்டுப்போன இறைச்சிதான், தூ!"

லாகிரி சோற்றையும் இறைச்சியையும் மேஜையின் மேல் இறைக்கத் தொடங்கியதைக்கண்டு தேஷ்பாண்டே சொன்னார், "அண்ணா, நீங்க சாப்பிடலேன்னா விடுங்க. சாப்பாட்டை வீணாக்காதீங்க!"

"நான் வீணாக்குவேன்! ஒனக்கென்ன?"

"இது அக்கிரமம்! ஜனங்க சோறில்லாம செத்துக் கிட்டிருக் காங்க. இப்போ நாம வயிறு நிறையச் சாப்பிடறதே அநியாயம். அதுக்கும் மேலே அநியாயம் சோத்தை வீணாக்கறது–"

"வாயை மூடு! நான் வீணாக்கத்தான் செய்வேன்!"

"இதுக்கு அர்த்தமேயில்லே– இந்த விடுதியோட வேலைக்

காரங்க சாப்பிடலாம். இல்லாட்டிப் பிச்சைக்காரங்களுக்குக் கொடுக்கலாம்...”

“பேசாதே! நான் ஒண்ணும் கேக்கத் தயாரில்லே. பிச்சைக் காரங்களுக்குச் சோறு கிடைக்கலியாம்! ஒண்ணும் பிடிக்கலே எனக்கு... பொறுத்துக்க முடியலே என்னாலே! இது என்ன புதுசா? சோறில்லாமே சாகறங்க... அவங்களைக் காட்டறதுக்கு ஆளுங்களைக் கூட்டிக்கிட்டு வர்றது... எனக்குப் புரியலே இது...! கேம்கா, இப்பவே ஒனக்கு எச்சரிக்கை குடுக்கிறேன்! இன்னிக்குப் பூரா ஒருத்தரும் சோத்துக்கில்லாமே சாகறதைப் பத்திப் பேசக் கூடாது, ஆமா! அது போதும்! இன்னிக்கு நாள்பூரா விடுமுறை, புரிஞ்சுதா? இன்னிக்குப் பஞ்சத்திலேருந்து விடுதலை, புரிஞ்சுக் கிட்டீங்களா எல்லாரும்? இன்னிக்குப்பூரா நாம குடிக்க வேண்டியது, பொம்பளைகளைப் பத்திப் பேச வேண்டியது...! இந்தப் பஞ்சப்பாட்டை யாராவது ஆரம்பிச்சீங்களோ, தெரியும் சேதி...”

“அதுக்குத் தேவை இருக்காது, மிஸ்டர் லாகிரி! வண்டி சரியாயிடுச்சு. சாப்பாடு முடிஞ்சதும் நாம புறப்படலாம்.”

“வேற வினை வேண்டாம்! சாப்பிட்டு எழுந்திருந்ததும் அந்த ஓட்டை வண்டியிலே ஏறணுமாக்கும்! அதெல்லாம் முடியாது! நாம இன்னிக்கு இங்கேதான் இருக்கப்போறோம்!”

“ஓங்களுக்கு நாளன்னிக்குக் கல்கத்தாவிலே பிளேனைப் பிடிக்கணும்னு சொன்னீங்களே!”

“எனக்குப் பிளேனைப் பிடிக்கணும்னா அதைப்பத்தி ஒனக் கென்ன கவலை? நான்தான் சொல்றேனே, இன்னிக்கு விடுமுறைன்னு!”

டில்லி நிருபர்களிருவரும் அப்போதே புறப்பட விரும் பினார்கள், தேஷ்பாண்டேக்கும் தங்க இஷ்டமில்லை. அவர் எடுத்த போட்டோக்களை உடனே விற்காவிட்டால் அவற்றுக்குக் கிராக்கி போய்விடும்.

கடைசியில் நான்கு பேர் போய்விட்டார்கள். பாக்கி நான்கு பேர் தங்கினார்கள். அவர்களைக் கூட்டிச்செல்ல வண்டி மறுபடி வரும்.

அவர்கள் வராந்தாவில் சாய்வு நாற்காலிகளில் உட்கார்ந் தார்கள். லாகிரி மறுபடியும் தன் டம்ளரில் விஸ்கி ஊற்றிக் கொண்டு மற்றவர்களின் டம்ளர்களிலும் ஊற்றினார். ஆல்கஹால் இப்போது அவருடைய இரத்தத்தில் கலந்துவிட்டது. அது இரத்தக் குழாய்களில் இரத்தத்தோடு கூடவே ஓடுகிறது. லாகிரி படபடக் கிறார். நாற்காலியிலிருந்து எழுந்திருக்கிறார், சிறிது நேரம் உலவுகிறார், பிறகு மறுபடி உட்காருகிறார். பதைபதைக்கும்

வெயில். இந்த வெயில் காற்று வீசும்போது ஒரு விசித்திரமான ஒலி உண்டாகிறது. அத்தகைய காற்று காட்டுப் பக்கத்திலிருந்து வீசுகிறது.

கிணற்றிலிருந்து தண்ணீரெடுத்துப்போக இன்னும் நிறையப் பேர்-ஆண்களும் பெண்களும்-வந்து கொண்டிருக்கிறார்கள். ராட்டினத்தின் 'கடகட' ஒலி, கூடவே புரியாத மொழியில் அவர் களுடைய மொழியில் சண்டை...

லாகிரி தன் தோழர்களிடம் சொன்னார், "ஏன் பேசாம உக்காந்திருக்கீங்க? ஏதாவது பேசுங்களேன்! ஏ ரங்காச்சாரி! ரஷியாவுக்குப் போயிட்டு வந்தியே, அங்கே பொம்பளைங்க கிடைப்பாங்களா? எப்படி இருப்பாங்க?"

"எனக்குத் தேடிக் கண்டுபிடிக்க நேரம் கிடைக்கலே. ரொம்ப டைட் புரோகிராம்" என்று ரங்காச்சாரி சோம்பல் முறித்துக் கொண்டு சொன்னார்.

"நீ பொம்பளை தேடலைன்னு சொன்னா நான் நம்பிடுவேனா? நீ ஜெர்மனிக்குப் போயிருந்தபோது என்ன நடந்தது? அந்தக் கதையைத்தான் சொல்லேன்!"

"நீங்களே சொல்லுங்க?"

"நான் என்ன சொல்றது...? கிருதாவெல்லாம் நரைச்சுப்போச்சு, இனிமேல்... ஏ அருண்! நீதான் இளவட்டம். கலியாணமும் பண்ணிக்கல்லே, ஒன் காதல் கதை ஒண்ணு ரெண்டு சொல்லேன்!"

"லாகிரி அண்ணா, ஒங்க ஸ்பெயின் காதல் கதையைச் சொல்லுங்களேன்!"

ராம் யஷ்சிங் மிகவும் சீரியஸ் தன்மையுள்ளவர். யாரையாவது பேட்டி காணும்போது தவிர வேறு சமயங்களில் வாயைத் திறக்க மாட்டார். மது அருந்தும்போது கூடப் பேச மாட்டார். ரங்காச்சாரி அவரிடம் கிசுகிசுத்தார், "பீகார் ஜனத்தொகையிலே எவ்வளவு சதவிகிதம் பஞ்சத்துக்கு உள்ளாயிருக்காங்க?"

'இதுவரையில் அம்பத்தி நாலு சதவிகிதம்" என்று சுருக்க மாகப் பதிலளித்தார் சிங்.

"பட்டினிச் சாவு எவ்வளவு?"

"அதிகார பூர்வமா செய்தியெதுவுமில்லே. அதிகாரப்பூர்வ மில்லாத செய்திகள் படி..."

லாகிரி அதட்டினார், "மறுபடியும் அந்தப் பேச்சா! நீங்க என்னைப் பைத்தியமாக்கிடுவீங்க போலேருக்கே! இன்னிக்கு விடுமுறைன்னு நான் சொல்லலே...? ஒருநாள் கூட வேலைய மறந்துட்டு இருக்க முடியாதா ஒங்களாலே?"

"மிஸ்டர் லாகிரி! இது வேலை சம்பந்தப்பட்ட விஷயம்..."

"வாயை மூடு! ஒரு விளக்கமும் கேக்கத் தயாரில்லே நான்!"

"போதையிலே இருக்கறவரோடு வாதம் பண்ணிப் பிரயோசனமில்லே..."

"நான் ஒண்ணும் போதையிலே இல்லை...! பொறத்தியான் காசிலே கோழியை அடிச்சுத் தின்னுட்டு இப்போ மனிதன் மேலேஅக்கறையாம்! ஹம்பக்! இப்போ பொம்பளைகளைப் பத்திப் பேசலாம். மது, இறைச்சிக்கப்பறம் பொம்பளைகளைப் பத்திப் பேசறதுதான் பொருத்தம்."

"நீங்க சொல்லுங்களேன்! நாங்கள் கேக்கத் தயார்."

"போன வருஷம் ஜனவரி மாசம். நான்அப்போ மாட்ரிட்லே இருந்தேன். ஓட்டல்லே ராத்திரி திரும்பிக் கதவைத் தட்டினேன். உள்ளே ஒரு பொம்பளை தொட்டியிலே குளிச்சுக்கிட்டிருந்திருக்கா. நான் கதவைத் தட்டினதும் உடம்பிலே ஒரு டவலைச் சுத்திக்கிட்டு... அப்போ எனக்கு நல்ல போதை... பாரு, ரங்காச்சாரி தூங்கிக் கிட்டிருக்கான்...! ஏ ரங்காச்சாரி...!"

ரங்காச்சாரி குறட்டை விடும் ஒலி கேட்டது. லாகிரி உரக்கக் கூப்பிட்டு அவரை எழுப்பப் பார்த்தார். ரங்காச்சாரி அசையவில்லை. லாகிரி எழுந்து தள்ளாடிக்கொண்டு ரங்காச் சாரியின் தலைமுடியைப் பிடித்து, "ஏ ரங்காச்சாரி!" என்று சொல்லி எழுப்பினார்.

ரங்காச்சாரி திடுக்கிட்டு எழுந்து கொண்டு, "தூக்கம் வந்திடுச்சு... பாருங்க, கேம்காவும் தூங்கறார்!" என்றார்.

"இந்த ராஸ்கல் கேம்காவைப்பத்தி ருஸ்தம்ஜீகிட்டே புகார் பண்ணப்போறேன்! (எழுத முடியாத வசவு) கேம்கா!"

கேம்கா கண்களைத் திறந்து சொன்னார், "நான் தூங்கலே. கண்ணை மூடிக்கிட்டு கேட்டிட்டு இருக்கேன். நீங்க சொல்லுங்க... அப்பறம் அந்தப் பொம்பளை உடம்பிலே டவலைச் சுத்திகிட்டு..."

"நான் ஒரே இழுப்பிலே அந்த டவலைப் பிடிச்சு இழுத் துட்டேன், ஆகா, என்ன அழகு, சாட்சாத் தேவதைதான் போங்க...! நான் பந்தயம் வைக்கத் தயார்– அந்த மாதிரி அழகி கோடிப் பேரிலே ஒருத்தி இருக்க மாட்டா! கத்தி மாதிரி பளபளக்குது உடம்பெல்லாம். மார்பு ரெண்டும் காரோட ஹெட்லைட் மாதிரி! அவ தொடை ஆகா...! முதல்ல அவ என்ன சொன்னா தெரியுமா?"

யார் பதில் சொல்வது? மூவர் தூங்கிவிட்டார்கள் அவர் களிடமிருந்தது புஸ்புஸ் என்று மூச்சு வந்து கொண்டிருந்தது. அவர்களுடைய தலைகள் சாய்ந்திருந்தன.

விழித்திருந்தது அருண் மட்டுந்தான். அவர் மெல்லச் சிரித்தார்.

லாகிரியின் முகத்தில் வேதனை தெளிவாகத் தெரிந்தது.

அவர் கண்களை அகல விரித்துக்கொண்டு சொன்னார், "தூங்கிப் போயிட்டாங்களா? சீ, இவங்களெல்லாம் ஆம்பளைகளா? பொம்பளைக் கதை கேட்டுக்கிட்டே தூங்கிட்டாங்களே! மனிதன் மேலேஅக்கறையாம், அக்கறை...! ராஸ்கல்கள்...!

"என்கிட்டே சொல்லுங்க, லாகிரி அண்ணா! அந்தப் பொம்பளை என்ன சொன்னா?"

"நீ கேக்கறியா...? என் கையிலே டவல். அவ கடகடன்னு சிரிச்சுட்டுச் சொன்னா, 'என் முதுகு ஈரமாயிருக்கு. தொடைச்சு விடு...!' அப்போ நான்... தூ... எனக்கு ஒண்ணும் பிடிக்கலே மூணு பேர் குறட்டை விட்டுக்கிட்டிருக்காங்க. இதுக்கு நடுவிலே இந்த மாதிரிக் கதையெல்லாம் சொல்ல முடியாது! வா எழுந்திரு! கொஞ்சம் வெளியே சுத்திட்டு வரலாம்..."

"இந்த வெயில்லே எங்கே போறது? உக்காருங்க சும்மா! லாகிரி அண்ணா, நீங்க பொறந்தது எங்கே?"

"அலகாபாத்திலே, என்னோட அப்பா அங்கே பேரா சிரியராய் இருந்தார்... ஏன், ஒனக்கெதுக்குத் தெரியணும்?"

"சும்மாதான் கேட்டேன்..."

"அந்த விஸ்கி பாட்டிலை இங்கே கொண்டு வா! வேண்டாம். இப்போ குடிக்கப் பிடிக்கல்லே. இப்போ என்ன செய்யலாம் சொல்லு!"

"நீங்களும் ஒரு தூக்கம் போடுங்களேன்!"

"நடுப்பகல்லே தூங்கிக்கிட்டு இருக்கறதா? தூ...! அதைவிடப் புறப்பட்டுப் போயிருக்கலாம்... ஹூம், இந்தக் குறட்டைவிடற எருமை மாடுகளோட இருக்கறதைவிட... நீ இப்போ என்ன செய்யப்போறே?"

"ஒண்ணுமில்லே சும்மா உக்காந்திருக்கப் போறேன்... இங்கே வந்ததிலே எனக்கு ரொம்ப விஷயம் ஞாபகம் வருது..."

"என்ன விஷயம் காதலா?"

"அதெல்லாமில்லே, நான் பிறந்தது கிழக்கு வங்காளத்திலே, 1943-லே அதாவது வங்காளப் பஞ்ச சமயத்திலே அங்கேதான் இருந்தேன். அந்தக் காலத்து ஞாபகமெல்லாம் வருது..."

"அப்போ நீ சின்னப்பையனா இருந்திருப்பே இல்ல!"

"ஆமா... அப்போ எனக்கு எப்போதும் பசிக்கும். நாள் பூராப் பசிபசின்னு அழுதுக்கிட்டிருப்பேன். வீட்டிலே உள்ளவங் களுக்கு ரொம்பத் தொந்தரவு கொடுத்திருக்கேன்..."

"நாசமாப் போச்சு! இங்கே வந்து அதெல்லாம் ஏன் ஞாபகம் வருது ஒனக்கு?"

"நாங்க கிழக்கு வங்காளத்திலே இருந்தோம். அப்பா கல்கத்தாவிலே வாத்தியார் வேலை பார்த்துக்கிட்டிருந்தார். அந்தக்

காலத்துச் சமாசாரந்தான் ஒங்களுக்குத் தெரியுமே! அப்பா மாசம் இருவது ரூவாஅனுப்புவார். அப்போ எங்கள ஊரிலே ஒரு மணு அரிசி அம்பத்தாறு ரூவா! வீட்டிலே அஞ்சு பேர் கஞ்சியும் சோறுமாக் கலந்து ஒரு நாளைக்கு ஒரு வேளைதான் சாப்பாடு. தொட்டுக்க வேகவச்ச உருளைக்கிழங்கு, நான் பள்ளிக் கூடம் போகும்போது சட்டைப்பையிலே வேகவச்ச உருளைக் கிழங்கை எடுத்துக்கிட்டுப் போவேன். அங்கே போய் அதைச் சாப்பிடுவேன். அப்போ நான் நாலாங்கிளாசிலே படிச்சுக்கிட் டிருந்தேன். பசங்களும் வேகவச்ச உருளைக் கிழங்கு கொண்டு வருவாங்க. நாங்க பெஞ்சிமேல் உப்பை வச்சிக்கிட்டு அதிலே உருளைக் கிழங்கைத் தொட்டுக்கிட்டுச் சாப்பிடுவோம். இது என் வயித்துக்கு ஒத்துக்காது, கஞ்சியும் சோறும் வயித்துக்கு ஒத்துக்காது, இருந்தாலும் பசி... அம்மாவைத் தொந்தரவு பண்ணுவேன் அம்மா சாப்பிட உக்காந்தா அவளோட சோத்தையும் பிடுங்கித் தின்னுடுவேன்..."

லாகிரி காரணமில்லாமலேயே தலையை ஆட்டிக்கொண்டு, "புரியுது, புரியுது" என்று சொன்னார். பிறகு எழுந்து வராந்தாவின் மறுமூலைக்குப்போய் வேறுபக்கம் பார்த்தவாறே சொன்னார், "புரியுது– ஒன்னோட அம்மா இறந்து போயிட்டாங்க, இல்லையா?"

"அம்மா அந்த வருஷமே டி.பி.யிலே இறந்து போயிட்டாங்க... ராட்சசப் பசி எனக்கு. திங்கற சோறு வயித்துக்கு ஒத்துக்காட்டியும் அம்மா சோத்தையும் பிடுங்கிச் சாப்பிட்டுடுவேன். அம்மா யார் கிட்டேயும் ஒண்ணும் சொல்லாமே பட்டினி கிடப்பாங்க. அதிலருந்து அவங்களுக்கு டி.பி. வந்துடுச்சு. அப்போ எனக்கு ஒண்ணும் தெரியல்லே. இப்போ எல்லாம் ஞாபகத்துக்கு வருது. நேத்திக்கு அந்த உதவி முகாமிலே ஜனங்க சோத்துக்காக வரிசையா நிக்கறதைப் பார்த்து மனசுக்கு என்னவோ மாதிரி ஆயிட்டது. ஒரு விதத்திலே வேடிக்கையாக்கூட இருந்தது எனக்கு. இந்த மாதிரியான ஒரு நிலைமையிலேருந்து நான் எப்படியோ தப்பிப் பொழைச்சிட்டேன்னு ஆச்சரியப்பட்டேன்..."

"வேடிக்கையா? என்ன வேடிக்கை? இதென்ன வேடிக்கை யான விஷயமா?" லாகிரி அதட்டினார்.

அதே மர்மப் புன்சிரிப்போடு அருண் சொன்னார், "ஆமா, வேடிக்கைதான்! அந்தப் பஞ்சத்திலே நானும் செத்துப் போயிருக்க லாமே! ஆனால் நான் சாகலே. என் அம்மாவைச் சாகடிச்சுட்டு நான் பொழைச்சுக்கிட்டேன்... உசிரோட இருக்கிறதே ஒரு வேடிக்கையான விஷயமில்லையா?"

லாகிரி சிகரெட்டின் கடைசித் துண்டைத் தன் விரலில் வைத்து ஒரு சொடுக்கில் அதை விட்டெறிந்தார். பிறகு பையில்

கையைவிட்டு அதிலிருந்த சில்லறைகளைக் குலுக்கினார். ஒரு கையைத் தன் தலைமுடியில் வைத்தார். பிறகு திடீரென்று வராந்தாவிலிருந்து கீழே குதித்து ஒரு பூவைப் பறித்தார். உரத்த குரலில் சொன்னார், "அருண், நீ உள்ளே போய்க் கதவையெல்லாம் சாத்திக்கிட்டு இருட்டிலே கொஞ்சநேரம் படுத்துக்க. மனசுக்கு இதமாயிருக்கும்..."

அருண் லாகிரியின் செய்கைகளைப் பார்த்துக்கொண்டு, "இல்லையில்ல, இங்கேயே நல்லாத்தான் இருக்கு எனக்கு–" என்று சொன்னார்.

லாகிரி கிணற்றுப் பக்கம் போய், அங்கே குடத்தை நிரப்பிவிட்டுப் புறப்பட்டுக் கொண்டிருந்த ஒரு பெண்ணிடம், "கொஞ்சம் தண்ணி கொடும்மா, மூஞ்சி கழுவிக்கறேன்" என்றார்.

அந்தப் பெண் லாகிரியின் போதையேறிய சிவந்த கண்களைப் பார்த்துச் சற்றுத் தயங்கி நின்றாள். பிறகு தன் இடுப்பிலிருந்து குடத்தைச் சாய்த்துக் கொஞ்சம் தண்ணீர் ஊற்றினாள். லாகிரி தன் கைகளில் தண்ணீரை ஏந்தி முகத்தில் இறைத்து முகத்தைக் கழுவிக் கொண்டார். பிறகு இன்னுங் கொஞ்சம் தண்ணீர் கேட்டு வாங்கிக் குடித்தார். பிறகு அந்தப் பெண்ணிடம், "இரு, நான் குடத்தை ரொப்பிக் கொடுக்கறேன்" என்று சொன்னார்.

பிறகு அவர் விடுதியின் பணியாளிடம் சொன்னார், "நீ போ. நானே இவங்க எல்லாருக்கும் தண்ணி இறைச்சுக் கொடுக்கறேன்."

கிணற்றுக்குள்ளே எட்டிப் பார்த்தார் லாகிரி. தண்ணீர் மிகவும் கீழேதானிருந்தது. அதனால் பரவாயில்லை. எவ்வளவு இறைத்தாலும் தண்ணீர் தீர்ந்துபோய்விடாது–

*(தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள், 1972)*

# பிழைத்திருப்பதற்காக

## பிரபுல்ல ராய்

தை மாதம் முடியப் போகிறது. அப்படியும் குளிர் போகும் வழியாயில்லை. தவிர இன்று காலையிலிருந்தே வானத்தில் இங்குமங்கும் பாறைக்குவியல்கள் போல் கருமேகங்கள் தொங்கிக் கொண்டிருக்கின்றன. இடையிடையே கொஞ்சம் வெயில் வருகிறது, மேகங்கவிந்த வானத்தில் திடீரென்று வெளிச்சம் பளிச்சிடுகிறது. மறு நிமிடமே அந்த வெளிச்சம் அணைந்து போய் விடுகிறது.

விஷ்டுபதா வடக்குப்புறக் காட்டுக்கு வந்து சேர்ந்தபோது பொழுது சாயத் தொடங்கிவிட்டது, மரங்களின் நிழல்கள் நீள ஆரம்பித்து விட்டன.

விஷ்டுபதாவுக்கு வயது சுமார் நாற்பது இருக்கும். மேடு போன்ற தடித்த மூக்குக்கு மேல் குழம்பிய கண்கள். புருவங்கள் இல்லையென்றே சொல்லவேண்டும். தடிப்பான கருத்த உதடு கீழ்ப்பக்கம் தொங்குகிறது. உடைந்த குரல். அளவுக்கு மீறிய உயரம். வறண்டுபோன கருப்புத்தோல். ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் இடி விழுந்து எரிந்துபோன பனைமரம் மாதிரி இருப்பான். அவனுடைய உடம்பில் எஞ்சியிருப்பது அகலமான, தடித்த எலும்புதான். இந்த எலும்பில் போதிய தசை சேர்ந் திருந்ததால் விஷ்டுபதா ஒரு மலைபோல் பருத்த பயில்வானாக இருந்திருப்பான்.

ஒரு சிக்குப் பிடித்த அழுக்குக் கோவணமும் ஆயிரம் ஒட்டுப் போட்ட விசித்திரமான சட்டையுந்தான் அவனுடைய உடம்பை மறைத்திருந்தன. தலையில் ஒரு துண்டை முண்டாசு கட்டியிருந்தான். அவனுடைய தோளில் ஒரு சிறு கோடரி; இடுப்பில் ஒரு கூர்மையான கத்தியைச் செருகிக் கொண்டிருந்தான்.

மூன்று நாட்களாக அவனுக்கு வேலையில்லை, வேலை யில்லாததால் வரும்படியும் இல்லை. அவனிடம் நிலமில்லை. அவன் அன்றாடக் கூலி வேலை செய்வான். ஆகையால் உட்கார்ந்து சாப்பிட அவன் வீட்டில் தங்கமும் நெல்லும்

கொட்டிக்கிடக்கவில்லை. மிஞ்சியிருந்த கொஞ்ச நஞ்ச அரிசியில் நேற்றுவரை கடத்தியாகிவிட்டது. இன்று அவன் ஏதாவது சம்பாதித்தால்தான் அவனுடைய பெண்டாட்டியும் குழந்தைகளும் சாப்பிடமுடியும். இல்லாவிட்டால் பட்டினிதான்.

காலையில் தூங்கியெழுந்ததுமே வேலை தேடிக்கொண்டு புறப்பட்டான் விஷ்டுபதா. ஆனால் வேலை எங்கே கிடைக்கிறது? அவன் அலைந்து களைத்துப்போய் நம்பிக்கையிழந்தபோது அவனுக்கு இந்த வடக்குப்புறக் காட்டின் நினைவு வந்தது.

எத்தனையோ தடவை விஷ்டுபதாவைக் காப்பாற்றியிருக் கிறது இந்தக் காடு. அவன் எத்தனையோ நாட்கள் இந்தக் காட்டி லிருந்து பழங்கள், காய்கள், கீரை, பறவைகள், ஆமை, முயல் போன்றவற்றை எடுத்துக்கொண்டு போய்த் தன் குடும்பத்தின் உயிரைக் காப்பாற்றியிருக்கிறான். இன்றும் அதே ஆசையில்தான் வந்திருக்கிறான் அவன்.

விஷ்டுபதா காட்டில் நுழைந்து சற்றுநேரம் நின்றான். மனித நடமாட்டமில்லாத இடம். இடப்புறமும் வலப்புறமும் கண்ணுக் கெட்டிய தூரம் புல்வெளி, செடி கொடிகள். இது குளிர் காலமாதலால் புல்லில் பசுமையின் பளபளப்பு இல்லை, பழுப்பு நிறந்தான். நடுநடுவே புதர்கள், மரங்கள் செடிகள். அங்கு ஒரு கால்வாயும் உண்டு.

நாற்புறமும் பார்த்துக்கொண்டே நடக்கத் தொடங்கினான் விஷ்டுபதா. இந்த அந்தி வேளையில் அவன் தலைக்கு மேல் பறவைகள் கூட்டங்கூட்டமாகப் பறந்து கொண்டிருக்கின்றன. அவன் கவண் எடுத்து வந்திருந்தால் ஓரிரண்டு பறவைகளை அடித்துக் கொன்றிருக்கலாம். கவண் எடுத்து வராதது பெரிய பிசகு!

அவன் போய்க் கொண்டிருக்கும்போதே வழியில் தென் பட்ட புதர்களையும் மரங்களையும் கூர்ந்து பார்த்துக்கொண்டு போனான். ஊஹுூம், ஒன்றும் கிடைக்கவில்லை. புல்தரையிலும் அவனுக்குத் தேவைப்பட்ட எதுவும் கண்ணில் படவில்லை.

வெகுநேரம் நடந்து காட்டுக்கு நடுவிலிருந்த கால்வாய் கரைக்கு வந்ததும் திடுக்கிட்டு நின்றான் விஷ்டுபதா.

கால்வாய்க் கரையில் ஒரு பெண்பிள்ளை நின்றுகொண்டு அவனையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறாள். விஷ்டுபதாவுக்குப் பத்தடி தூரத்தில் அவள், இவ்வளவு அருகில் இருந்ததால் அவளை நன்றாகப் பார்க்க முடிந்தது. அவளுடைய கண்களில் பயம், சந்தேகம்...

இந்த ஜன நடமாட்டமற்ற காட்டில் குளிர் நடுக்கும் காலத்தில் இந்தப் பெண்பிள்ளை எப்படி வந்து சேர்ந்தாள்

என்று புரியவில்லை அவனுக்கு. அவனும் அவளைப் பார்த்துக் கொண்டே நின்றான். அவள் மாநிறம்; கட்டை குட்டையாக இருந்தாள். சப்பை மூக்கு, கொழுத்த மார்பு, அவள் அணிந்திருந்த அகலக் கட்டைச் சேலையால் அவளுடைய இளமையின் மதர்ப்பை மறைக்க முடியவில்லை. அவளுடைய கையில் ஒரு பெரிய கோடரி.

வெகுநேரங் கழித்து விஷ்டுபதா கேட்டான், "ஏ பொம்பளை, நீ யாரு?"

சூடாகப் பதில் வந்தது அவளிடமிருந்து "நான் யாராயிருந்தா ஒனக்கென்ன? நீ இங்கேயிருந்து போயிடு!"

"போயிடுன்னு சொல்லிட்டாப் போயிட முடியுமா? எனக்கு இங்கே வேலை இருக்கு."

"என்ன வேலை?"

"இருக்கு" என்று சொல்லிச் சற்று நிறுத்தினான் விஷ்டுபதா. பிறகு தொடர்ந்து சொன்னான், "ஜனமேயில்லாத இந்தக் காட்டுக்கு நீ ஏன் வந்தே?"

"எனக்கும் வேலையிருக்கு."

விஷ்டுபதா தானறியாமலேயே முன்புறம் காலடி எடுத்து வைக்க முற்பட்டான். உடனே அந்தப் பெண் உரக்கக் கத்தினாள், "கபர்தார்! ஒரு அடிகூட முன்னாலே வராதே! வந்தால் கோடாலி யாலே வெட்டிடுவேன்!"

விஷ்டுபதா திடுக்கிட்டான். இப்போது அந்தப் பெண்ணிடம் கொஞ்சங்கூடப் பய உணர்வு இல்லை என்பதை அவன் கவனித்தான். அவளுடைய கண்களில் கோபம் தீயாக எரிந்தது.

அவன் பயந்துகொண்டே சொன்னான், "ஒனக்குப் பிடிக்க லேன்னா நான் முன்னாலே வரலே. ஆனா நீ எந்த ஊரு, ஏன் இங்கே வந்தேங்கறதைச் சொன்னா என்ன குத்தம்?"

ஏதோ நினைத்துச் சற்றுச் சமாதானமானாள் அவள். "நான் இருக்கறது தால்டாங்காவிலே– அதோ வடக்கிலே–"

"அது ரொம்ப தூரம் இல்லே! நாலு மைல் இருக்குமே!"

"ஆமா..."

"அவ்வளவு தூரத்திலேருந்தா வந்தே?"

"அவசியமானா வரத்தானே வேணும்?"

"அப்படி என்ன அவசியம்னு சொல்லேன்!"

"தெரிஞ்சுக்கணும்னா சொல்றேன்– நான் கீரை, காய், பழம் பொறுக்கிக்கிட்டுப் போக வந்தேன்."

விஷ்டுபதாவுக்கு ஒரே ஆச்சரியம். "அப்படியா? நானும் அதுக்காகத்தான் வந்திருக்கேன்!"

பெண்ணின் கண்களில் மறுபடியும் கோபம் பளிச்சிட்டது. "இல்லே, நீ பொய் சொல்றே!"

"சாமி சத்தியமாச் சொல்றேன், பொய் இல்லே!" விஷ்டுபதா சொன்னான். "காலையிலேருந்து பிள்ளை குட்டிக பட்டினி. எனக்கு மூணு நாளா வேலை கிடைக்கல்லே. இங்கேயிருந்து ஏதாவது எடுத்துக்கிட்டுப் போகலேன்னா குழந்தைங்க செத்துப் போயிடும்."

அவனுடைய குரலிலிருந்த வேதனை அந்தப் பெண்ணுக்கு நம்பிக்கையூட்டியது "கெட்ட எண்ணம் எதுவுமில்லையே ஒனக்கு?" என்று அவள் கேட்டாள்.

"நான்தான் சாமி சத்தியம் பண்ணினேனே..! நீ கிட்டேவா, நான் ஒன்னைத் தொட்டு சத்தியம் பண்றேன்."

"என்னைத் தொட வேண்டாம்.. நீ எந்த ஊரு?"

"தெற்கே பயார்பூர்–" தென்பக்கம் சுட்டிக் காட்டினான் விஷ்டுபதா.

"ஒன் வீடும் ரொம்ப தூரந்தான்! அவ்வளவு தூரத் திலேருந்தா...?"

தன் தாறுமாறான மஞ்சள் பற்களைக் காட்டிக்கொண்டு சிரித்தான் விஷ்டுபதா. "நீதான் சொன்னியே— தேவைப்பட்டா தூரத்திலேருந்தும் வரத்தான் வேணுமின்னு–"

"நெசந்தான்"

"இவ்வளவு பேசினோம். ஆனா பேருகூடத் தெரிஞ்சுக்கல்லே– என் பேரு விஷ்டுபதா. ஒன் பேரு?"

"நிசி.. நிசிபாலா."

இருவரும் சிறிதுநேரம் மௌனம். பிறகு விஷ்டுபதா சொன்னான், "நான் ஒண்ணு சொல்லட்டுமா?"

"என்ன?"

"நீயும் நானும் ஒரே காரியத்துக்குத்தான் வந்திருக்கோம், நாம ரெண்டுபேரும் சேர்ந்து கீரை, காய் எல்லாம் தேடினா என்ன? குளிர்காலம்– சீக்கிரமே இருட்டிப் போயிடும்.. நீ வயசுப் பொண்ணு, தனியாக் காட்டிலே சுத்தறது சரியில்லே–"

நிசி சற்றுத் தயங்கிவிட்டு ஒப்புக்கொண்டாள். தானாகவே அவனருகில் வந்தாள்.

அங்கே அலைந்து திரியும்போது அவர்கள் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அவர்களுக்கு என்ன கிடைத்தாலும் அதைச் சரிபாதியாக பிரித்துக் கொள்வது என்று.

அவர்களிருவரும் ஒரு புதரையும் ஒரு பள்ளத்தையும் விட்டு வைக்காமல் எல்லா இடங்களிலும் தேடினார்கள். ஆனால் நாலைந்து சிறு ஆமைகளைத் தவிர ஒன்றும் கிடைக்கவில்லை அவர்களுக்கு, ஆமைகளின் ஓடுகளை எடுத்தபிறகு என்ன மிஞ்சப் போகிறது?

உணவு வேட்டையாடும்போது அவர்கள் மௌனமாயிருக்க

வில்லை. ஒருவரைப் பற்றி ஒருவா விசாரித்துத் தெரிந்து கொண்டார்கள். இதற்குள் நிசியின் பயமும் அவநம்பிக்கையும் மறைந்து விட்டன. விஷ்டுபதாவிடம் நம்பிக்கை ஏற்பட்டு விட்டது அவளுக்கு. "ஒன் வீட்டிலே யார் யார் இருக்காங்க?" அவள் கேட்டாள்.

"பொண்டாட்டியும் கொளந்தைகளும்"

"எத்தனை கொளந்தைங்க?"

"மூணு... ரெண்டு புள்ளே, ஒரு பொண்ணு..."

"அப்போ ஒன் குடும்பத்திலே அஞ்சு பேரு!"

"ஆமா..."

"என்ன வேலை செய்யறே?"

"நான் கூலி"

"அதிலே காலங்கடத்த முடியுதா?"

"எங்கே முடியுது? சில நாள் அரைப்பட்டினி, சில நாள் முழுப்பட்டினி..."

"நெலம் ஏதாவது இருக்கா?"

"நெலத்துக்கு எங்கே போவேன்?"

"அப்போ ஒளப்பை நம்பித்தான் பொளைப்பு..."

"ஆமா"

"ரொம்பக் கஸ்டம் இல்ல?"

"என்ன செய்யறது...? இந்த மாதிரி எவ்வளவு நாள் பிளைச்சிருக்க முடியுமோ இருக்க வேண்டியதுதான்... அதுசரி, நீ என் கதையையே கேட்டுக்கிட்டிருக்கியே... ஒன் கதையைச் சொல்லு

"என் கதையும் இதேதான்... நானும் ஒளைச்சுத்தான் பொளைக்கணும்..."

"அது எனக்குப் புரிஞ்சுடுச்சு... நான் அதைக் கேக்கலே..."

"பின்னே என்ன... எதைக் கேக்கறே?"

விஷ்டுபதா திரும்பி அவளை ஒரு நிமிடம் பார்த்து விட்டுச் சொன்னான், "சங்கு வளை, குங்குமம் ஒண்ணையும் காணமே... இன்னும் கலியாணம் ஆகலியா ஒனக்கு?"

ஏதோ நினைவில் ஆழ்ந்தவள்போல் பதில் சொன்னாள் நிசி, "கல்யாணம் ஆயிட்டது."

"அப்படீன்னா?"

விஷ்டுபதா என்ன கேட்க விரும்புகிறானென்று அவளுக்குப் புரிந்தது. கலியாணமானவள் ஏன் சங்கு வளையல் போட்டுக் கொள்ளவில்லை, குங்குமம் இட்டுக் கொள்ளவில்லை என்று கேட்கிறான் அவன்.

அவள் வருத்தமாகச் சொன்னாள், "என் புருசன் இல்லே."

விஷ்டுபதா அனுதாபமாக, "த்சொ, த்சொ... இந்த வயசிலிலேயா புருசன் போயிட்டான்?" என்றான்.

நிசி பதில் சொல்லவில்லை.

"என்ன ஆச்சு அவனுக்கு? சீக்கு வந்து செத்துப் போயிட்டானா?"

"இல்லை... மிராசுதாரோடே சண்டை போட்டு உயிரை விட்டான். மிராசுதாரோட ஆளுங்க ஈட்டியாலே அவன் வயித்துலே குத்திட்டாங்க, சதை நரம்பு எல்லாம் வெளியிலே வந்துடுச்சு. கண்ணாலே பார்க்க முடியலே அந்தக் காட்சியை..." என்று சொல்லிக்கொண்டே வந்தவள் திடீரென்று அந்தக் காடே எதிரொலிக்கும்படி உரக்க ஓலமிடத் தொடங்கினாள், "ஐயோ, என் புருசனை-காளை மாதிரி இருந்தவனை கொன்னு போட்டுட்டாங்களே."

விஷ்டுபதா சற்றுத் தயங்கிவிட்டுப்பிறகு அவளுடைய தலையை மெதுவாகத் தடவிக் கொடுத்தவாறு அவளுக்கு ஆறுதல் சொன்னான், "அழாதேம்மா, அழாதே! நடந்தது நடந்துடுச்சு..."

அவள் சற்று அமைதியானதும் "ஒனக்கு எவ்வளவு கொளந்தைக?" என்று விஷ்டுபதா அவளைக் கேட்டான்.

"ஒண்ணுமில்லே.

"அது ஒரு விதத்தில் நல்லதுதான்."

நிசி பேசாமலிருந்தாள்.

"குடும்பத்திலே வேறு யாரு இருக்காங்க?"

"கிழட்டு மாமியார் இருக்கா. ராவும் பகலும் 'ஆ ஆ'ன்னு வாயைத் திறந்துக்கிட்டு இருக்கா. பெருந்தீனிக்காரி. மலை மாதிரி பெரிய புள்ளெயெ முழுங்கியும் பசி தீரலே அவளுக்கு. அவளுக்குத் தீனி போட்டே நான் நாசமாயிடுவேன்."

"நெலம் கிலம் இருக்கா?"

"அது இருந்தா இந்த மாதிரி காட்டிலேயும் மேட்டிலேயும் அலைஞ்சு திரிவேனா?"

இரண்டு பேரும் தங்கள் தேடலைத் தொடர்ந்தார்கள். ஆனால் தாய் போன்ற இந்தக் காடு இன்று ஏனோ கருமிபோல, ஈவிரக்கமில்லாமல் இருந்தது. நாலைந்து ஆமைகளுக்குபிறகு நாலைந்து வில்வப் பழங்கள் கிடைத்தன, அவ்வளவுதான். ஆளுக்குப் பாதி எடுத்துக் கொண்டால் எவ்வளவு இருக்கும்? பொழுது சாய்ந்துவிட்டது. வெயில் இல்லை. சூரியன் மேற்குப் பக்கத்து மரஞ்செடிகளுக்குப் பின்னால் மறைந்து கொண்டதை இருவரும் கவனிக்கவில்லை. நாலுபுறமும் விரைவில் இருண்டு கொண்டு வந்தது.

காலையிலிருந்தே வானத்தில் இங்குமங்கும் மேகங்கள்

பாறைக்குவியல்கள்போல் தொங்கிக் கொண்டிருந்தன. இப்போது அவை இன்னும் கீழே இறங்கி வந்துவிட்டன. தூறலும் ஆரம்பித்து விட்டது. அதோடு குளிர்ந்த புல் தரையிலிருந்து பனி வெளிக் கிளம்பிக் கொண்டிருந்தது.

"இன்னிக்கு ரொம்பக் குளிர், இல்லே?" நிசி சொன்னாள்.

"ஆமா" என்றான் ஏதோ நினைவில் ஆழ்ந்திருந்த விஷ்டுபதா.

"மழையும் தொடங்கிடுச்சு"

"ஆமா..."

நிசியின் பேச்சுக்கு இயந்திரம் போல் பதில் சொல்லிக் கொண்டிருந்தாலும் விஷ்டுபதா வேறு ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தான். ரெண்டு ஆமையும் ரெண்டரை வில்வப் பழமும் எடுத்துக் கொண்டுபோய் வீட்டில் யாருக்குக் கொடுப்பான்? அவன் சொன்னான், "இன்னும் ஏதாவது எடுத்துக் கிட்டுப் போகலேன்னா கட்டாது எனக்கு. என் குடும்பத்திலே அஞ்சு பேரு!"

"நெசந்தான்– ஆனா இருட்டிப் போயிக்கிட்டிருக்கு. மழையும் தொடங்கிடுச்சு. இப்போ என்ன கிடைக்கும்?"

அவள் குரலில் அவநம்பிக்கை.

"பார்க்கலாம்..." திடீரென்று விஷ்டுபதாவின் பார்வை தீவிரமாயிற்று. அவன் பரபரப்பாக முன்பக்கம் சுட்டிக்காட்டி, "அதென்ன?" என்று கேட்டான்.

நிசி அந்தப் பக்கம் பார்த்துவிட்டு "பன்னி போலயிருக்கு" என்றாள்.

"ஆமா, ஆமா"

"அது அங்கே என்ன செய்யுது?"

விஷ்டுபதா கூர்ந்து கவனித்தான். மண்ணைத் தோண்டுது.

"பன்னி மண்ணைத் தோண்டினா, மண்ணுக்கடியிலே என்னவோ இருக்குன்னு அர்த்தம். காரணமில்லாமே பன்னி மண்ணைத் தோண்டாது."

"வா, முன்னால போய்ப் பார்ப்போம்..." என்று சொன்னான் விஷ்டுபதா. மின்னல் போல் திடீரென்று ஒரு யோசனை தோன்றிவிட்டது அவனுக்கு. வேறெதுவும் கிடைக்காத போது இந்தப் பன்றியையாவது அடித்துக் கொல்லலாமே! அதன் எடை ஒரு மணுவுக்குக் குறையாது. நிசிக்குப் பாதிப்பங்கு கொடுத்தபின்பு அவனுக்குக் கிடைக்கும் பாதிப்பன்றியை வைத்துக் கொண்டு அவனுடைய குடும்பத்தில் ஐந்துபேரும் நாலைந்து நாட்கள் தாராளமாகச் சாப்பிடலாம், நாலைந்து நாட்கள் பிழைந்திருந்து விட்டால் அதற்கப்புறம் பார்த்துக் கொள்ளலாம்.

அவன் தன் யோசனையை நிசியிடம் சொன்னான். அவள்

பயந்து கொண்டு சொன்னாள், "நல்ல யோசனை தான்.. ஆனா.."

"என்ன?"

"இவ்வளவு பெரிய பன்னியை அடிச்சுக் கொல்ல ஒன்னால முடியாதுப்பா. தவிர அது கோரப் பல்லுள்ள பண்ணியாயிருந்தா நீ தப்ப முடியாது."

"என் கிட்டே கோடாலி இருக்கு, கத்தி இருக்கு..."

"கோடாலியாலே அதைக் காயப்படுத்த முடியாது!"

விஷ்டுபதாவின் உறுதி குறையவில்லை, அவன் சொன்னான், "முடியுமோ, முடியாதோ முயற்சி செஞ்சு பாக்கறேனே! பட்டினி கெடந்து சாகறதைவிடப் பன்னியோடே சண்டைபோட்டு..."

நிசி அவனைத் தடுக்க இடங்கொடுக்காமல் அவன் முன்னேறினான்.

நிசி வேறு என்ன செய்வாள்? அவனைப் பின் தொடர்ந்தாள்.

அவர்கள் அருகே சென்று பார்த்ததில் அது கோரைப் பல்லுள்ள மிருகமல்ல, ஆனால் காட்டுப்பன்றி என்று தெரிந்தது. இதற்குள் அது பெரிய பள்ளம் தோண்டியிருந்தது. அதற்குள் எட்டிப் பார்த்த விஷ்டுபதாவின் கண்கள் பளபளத்தன. பெரிய மரவள்ளிக் கிழங்கு ஒன்று மண்ணுக்கு வெளியே நீட்டிக் கொண்டிருந்தது. அதன் ஒரு பகுதி மண்ணுக்குள் புதைந்திருந்தது.

கிழங்கின் எடை பத்து சேருக்குக் குறையாது. அவனால் பன்றியைக் கொல்ல முடியாவிட்டாலும் கிழங்கு கிடைத்தால் போதும். பன்றியோடு சண்டைபோட வேண்டாம்.

பின்னாலிருந்து எட்டிப் பார்த்த நிசி ஆவலுடன் "அடே, எவ்வளவு பெரிய மரவள்ளிக் கிழங்கு!" என்று சொன்னாள்.

"ஆமா" என்றான் விஷ்டுபதா.

மண்ணைத் தோண்டிக் கொண்டிருந்த பன்றி மனிதக் குரல் கேட்டுத் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தது. அதன் சின்னஞ்சிறு கண்கள் சிவப்பாகக் குழம்பிக் கிடந்தன. அதன் உடலிலும் முகத்திலும் மண்.

விஷ்டுபதா அதை விரட்டுவதற்காகத் தன் வாயால் ஒலி யெழுப்பினான், "உர்ர்ர்.. ஹட் ஹட்..."

பன்றி நகராமல் அவனையே பார்த்துக்கொண்டு நின்றது. அதன் கண்களில் சந்தேகம் வலுத்தது. விஷ்டுபதா மறுபடியும் ஒலியெழுப்பினான். நிசியும் அவனுடன் சேர்ந்து ஒலி யெழுப்பினாள். ஆனால் பன்றி அசையவில்லை.

"சரியான முண்டம்... நகராது போலேயிருக்கு" விஷ்டுபதா சொன்னான்.

"நாம கெளங்கை எடுத்துக்கப் பார்க்கறோம்னு அதுக்குப் புரிஞ்சு போச்சு..."

"இருக்கலாம். ஆனா வெறுமனே சத்தம் போட்டுப் பிரயோசனமில்லே. கட்டாரிக் குத்து வேணுமாம் அதுக்கு..." என்று சொல்லி கொண்டே விஷ்டுபதா தன் கோடரியை எடுத்துப் பன்றியின் தோளைத் தாக்கினான்.

அந்த அடி பன்றியின் தோளில் சரியாகப் படவில்லை. அதன் தோள்பட்டையின் தோல் மட்டும் சிறிது கிழிந்தது. பன்றி பயங்கரமாக அவர்களை உறுத்துப் பார்த்துவிட்டுச் சீறிக்கொண்டு அவர்கள் மேல் பாய்ந்தது.

அது இப்படிப் பாயும் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. அவர்கள் முழுமூச்சோடு ஓடத் தொடங்கினார்கள்.

பன்றி அவர்களை வெகுதூரம் விரட்டிக்கொண்டு போய் விட்டு மறுபடியும் மரவள்ளிக் கிழங்குக்கு அருகில் வந்து நின்றது. விஷ்டுபதாவும் நிசியும் சோர்ந்து விடவில்லை. அவர்கள் மறுபடி அங்கு வந்தார்கள். விஷ்டுபதா மறுபடியும் பன்றியைத் தாக்கினான். இந்தத் தடவை அதன் முதுகுப் பக்கம் நன்றாக வெட்டுப்பட்டு விட்டது. பன்றியின் உடம்பெல்லாம் இரத்தம். அது மறுபடியும் அவர்களை விரட்ட அவர்கள் தலைதெறிக்க ஓடினார்கள்.

பிறகு பன்றி மறுபடி கிழங்குக்குத் திரும்பி வந்தது. விஷ்டுபதா மறுபடி அதைத் தாக்கினான். இவ்வாறு பல முறைகள் நடந்தது.

இதற்குள் இருட்டி விட்டது, செடிகள் மரங்கள் அடர்த்தி யான குப்புப்படலமாகத் தோற்றமளித்தன. சற்று நேரம் முன்பு வரை தூறிக்கொண்டிருந்தது. இப்போது மழை பலத்துவிட்டது. கூடவே வாடைக் காற்றும் பலமாக வீசியது.

நிசி நம்பிக்கையிழந்து விட்டாள். "விட்டுடுய்யா! இது யமன். இதுகிட்டேயிருந்து கெளங்கைப் பறிக்க முடியாது" என்றாள். விஷ்டுபதாவின் பிடிவாதம் வலுத்தது. அவன் சொன்னான். "இதை விடப்போறதில்லே, கெளங்கை எடுக்காம நான் நகரப் போறதில்லே இங்கேயிருந்து. முடிஞ்சாக் கெளங்கையும் எடுத் துக்குவேன், பன்னியையும் கொன்னுடுவேன்... இப்போ எனக்கு ஒரு யோசனை வந்திருக்கு... நாம ரெண்டு பேரும் அதுக்கு முன்னால நிக்க வேண்டாம். நான் முன்னால நின்னுக்கறேன், நீ பின்னால போய் நில்லு. அது என்னைத் தொரத்திக்கிட்டு வரபோது நீ அதைப் பின்னாலேருந்து குத்து, அது ஒன்னைத் தொரத்தினா நான் குத்தறேன்..."

இந்த யோசனைப்படி விஷ்டுபதாவும் நிசியும் பன்றியின் இரு பக்கங்களிலும் நின்று கொண்டார்கள். பன்றி அவர்களுடைய திட்டத்தை ஊகித்துக் கொண்டிருக்கலாம். அதனுடைய கிழங்கைப் பறித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள் இவர்கள்.

விஷ்டுபதா அதைத் தாக்குவதற்கு முன்னாலேயே அது திடீரென்று அவன்மேல் பாய்ந்தது, கண்ணிமைக்கும் நேரத்தில் இது நிகழ்ந்துவிட்டது. விஷ்டுபதாவுக்குத் தன்னைக் காத்துக் கொள்ள நேரம் கிடைக்கவில்லை, காலையிலிருந்து அவனுடைய வயிற்றில் ஒரு பருக்கைகூட விழவில்லை. அவன் உடம்பு ஏற்கெனவே வலுவிழந்திருந்தது, ஒரு மணு எடையுள்ள பன்றி அவன்மேல் பாய்ந்ததும் அவன் நிலை தவறிக் கீழே விழுந்தான். கூடவே தன் தொடையைப் பன்றியின் பல் துளைப்பதை உணர்ந்தான்.

"ஐயோ, கொன்னுட்டுதே, கொன்னுட்டுதே! என்னைக் காப்பாத்து...!" என்று கத்திக்கொண்டே அவன் தன் இடுப்பில் கையை வைத்தான். இடுப்பிலிருந்த கூர்மையான கத்தியை எடுத்து முழு பலத்துடன் பன்றியின் மூக்குக்குப் பக்கத்தில் குத்தினான். குத்திய இடத்திலிருந்து இரத்தம் பீறிட்டு வந்தது.

இதற்குள் நிசி பின்னாலிருந்து அதைக் கோடாரியால் தாக்கத் தொடங்கி விட்டாள். அடிபட்ட பன்றி விஷ்டுபதாவை விட்டுவிட்டுப் பின்பக்கம் திரும்பி நிசியின் மேல் பாய்ந்தது. அவளும் சமாளித்துக்கொள்ள முடியாமல் எகிறி விழுந்தாள், அவளுடைய சேலையும் உடம்பும் பன்றியின் பற்களால் கிழி பட்டன. அப்படியும் அவள் விடாமல் குருட்டுத்தனமாகப் பன்றியைக் கோடரியால் குத்திக் கொண்டேயிருந்தாள்.

விஷ்டுபதாவின் தொடையில் சரியான காயம். அதிலிருந்தது இரத்தம் வழிந்து கொண்டிருந்து. இருந்தாலும் சும்மா இருக்க வில்லை அவன். வெறி பிடித்தவன்போல் ஓடிவந்து பன்றியை மீண்டும் மீண்டும் கோடரியால் தாக்கினான். இப்போது பன்றி நிசியை விட்டுவிட்டு அவன் பக்கம் திரும்பியது. இப்போது நிசி எழுந்து வந்து அதைப் பின்னாலிருந்து குத்தினாள்.

பன்றி ஒரு முறை விஷ்டுபதாவையும் ஒருமுறை நிசியையும் மாறிமாறித் தாக்கியது. குளிர்காலத்து இருட்டு வேளையில் அந்த ஜனநடமாட்டமற்ற இடம் உலகத்தின் தொடக்க காலத்துப் போர்க்களமாக மாறிவிட்டது. அதில் இரண்டு மனிதர்கள் உணவுக்காக ஒரு பயங்கர மிருகத்துடன் கடுமையாகப் போராடி னார்கள்.

வெகுநேரத்துக்குபின் பன்றிக்கு முகத்தில் பலத்த காயம் பட்டது.. அது பயங்கரமாகக் கூச்சலிட்டது. தாங்க முடியாத வலியில் அது சற்றுநேரம் மண்ணில் புரண்டது. பிறகு மேற்குப் பக்கத்துக் காட்டுக்குள் ஓடி மறைந்தது.

பன்றி ஓடி மறைந்ததும் விஷ்டுபதாவும் நிசியும் வெகு நேரம் ஜீவனில்லாமல் தரையில் கிடந்தார்கள். பிறகு மூச்சிறைக்க

எழுந்து கிழங்கின் புதைந்திருந்த பகுதியையும் தோண்டி எடுத்தார்கள்.

கிழங்கு, ஆமை, வில்வப் பழம் இவற்றையெல்லாம் ஓரிடத்தில் குவிந்து வைத்துக் கொண்டு அவர்கள் பங்கு பிரித்துக் கொள்ள முற்பட்டபோது மழை பலமாகப் பிடித்துக் கொண்டது. சண்டை நடந்து கொண்டிருந்த வரையில் அவர்கள் அதைக் கவனிக்கவில்லை. அப்போது பரபரப்பும் மிகப்பழமையான கொடூரமும் தவிர வேறெந்த உணர்வும் அவர்களுடைய மனதில் இடம் பெற்றிருக்கவில்லை. இப்போது விஷ்டுபதா கடுமையாகக் குளிர்வதை உணர்ந்தான். குளிர் உடம்பைத் துளைத்துக் கொண்டுபோய் எலும்பை நடுக்குகிறது. பற்கள் கிடுகிடுக்கின்றன.

"சீ சனியன் பிடிச்ச மழை!" என்றான் விஷ்டுபதா.

நிசி குளிரில் நடுங்கிக்கொண்டே சொன்னாள், "இங்கயே நின்னுக்கிட்டிருந்தா சாக வேண்டியதுதான்... ஏதாவது ஏற்பாடு பண்ணு!"

"எங்கே போகலாம் சொல்லு?"

நிசி சற்று யோசித்துவிட்டுச் சொன்னாள், "மேற்கே ஒரு சுடுகாடு இருக்கில்லே, அங்கே ஒரு சின்ன வீடு இருக்கு. அங்கே போயிடலாம் வா!"

"சரி"

இருவரும் அந்தக் குடிசைக்கு ஓடினார்கள். மயானத்துக்கு வருபவர்களின் உபயோகத்துக்காக எப்போதோ கட்டப்பட்ட குடிசை அது.

தன் உடம்பில் வழிந்து கொண்டிருந்த இரத்தத்தை துடைத்துவிட்டுச் சற்று நேரம் மூச்சிறைக்க உட்கார்ந்திருந்தான் விஷ்டுபதா. பிறகு "ரொம்பப் பசிக்குதேம்மா" என்றான்.

"எனக்குந்தான்."

"சாப்பாட்டுக்கு ஏதாவது ஏற்பாடு பண்ணலாம்!"

நிசி கிழங்கின் ஒரு பகுதியை வெட்டி எடுத்தாள். விஷ்டுபதா ஆமையின் ஓட்டிலிருந்து இறைச்சியைப் பிய்த்து எடுத்தான். சிறிது நேரத்துக்கு முன் யாரோ அங்கே ஒரு சவத்தை எரித்து விட்டுப் போயிருந்தார்கள். அங்கிருந்து நெருப்பு எடுத்து வந்து இருவரும் கிழங்கையும் ஆமை இறைச்சியையும் சுட்டுச் சாப்பிட்டு ஏப்பம் விட்டார்கள்.

"இன்னிக்கு இப்பத்தான் வயித்துக்கு ஏதோ கிடைச்சிருக்கு" விஷ்டுபதா சொன்னான்.

"எனக்குந்தான்.

"சாப்பாடு ஆயிடுச்சு. இப்போ ஒரு பீடி கிடைச்சா...!

"எனக்கு வெத்தலை போட ரொம்பப் பிடிக்கும். இப்போ

வெத்தலை கிடைச்சா...!

மழை இன்னும் வலுத்துவிட்டது. அடிக்கடி வானத்தைக் கிழிக்கிறது மின்னல்.

"இந்த மழை இன்னிக்கு விடாது போலேருக்கு!" நிசி சொன்னாள்.

"அப்படித்தான் தோணுது."

"அப்படீன்னா ராவை இங்கேதான் களிக்கணும்..."

"ஆமா..."

சற்றுநேரத்துக்குப்பின் விஷ்டுபதா சொன்னான், "இன்னும் ஒக்காந்துக்கிட்டு என்ன லாபம்? நான் படுத்துக்கப் போறேன்..."

"நானும் படுக்கறேன்."

இருவரும் இரண்டு பக்கம் திரும்பிப் படுத்துக் கொண்டார்கள். அவர்களுக்கு இடையில் சிறிது இடைவெளி.

வெகுநேரங் கழித்து நிசி திடீரென்று, "இந்தாப்பா" என்றாள்.

"என்ன சொல்றே?" விஷ்டுபதா கேட்டான்.

"என்கிட்டே வா."

"ஏன் ?"

"ரொம்பக் குளிருது... என்னைக் கொஞ்சம் கட்டிக்க..."

அந்த குளிர்காலத்து மழையிரவில் உடம்புச் சூட்டுக்காக நிசியும் விஷ்டுபதாவும் ஒருவரையொருவர் இறுகக் கட்டிக் கொண்டு படுத்திருந்தார்கள்...

மறுநாள் காலையில் ஆமைகளையும் வில்வப் பழங்களையும் சண்டைபோட்டுக் கைப்பற்றிய கிழங்கையும் பங்குபோட்டுக் கொண்டு நிசி வடக்கு நோக்கிப் போனாள், விஷ்டுபதா தெற்குப் பக்கம் நடந்தான்...

(சாரதீய 'அம்ருத', 1970)

# என்னைப் பாருங்கள்

## சீர்ஷேந்து முகோபாத்தியாய்

தயவுசெய்து என்னை ஒரு தடவை பாருங்கள். இதோ இங்கே இருக்கிறேன்! சற்றுமுன்புதான் நான் இடித்துப் புடைத்துக் கொண்டு பஸ்ஸின் படியில் ஏறினேன். தாங்கமுடியாத கூட்டத்தில் இந்தப் பக்மும் அந்தப் பக்கமும் முண்டி எலிபோல் துளை போட்டுக்கொண்டு இவ்வளவு தூரம் உள்ளே நுழைந்து விட்டேன், நான் குட்டை, பஸ்ஸின் கைப்பிடிக் கழிகள் ரொம்ப உயரம், எனக்கு எட்டாது. நான் சீட்டின் பின்புறக் கம்பியைப் பிடித்துக் கொண்டு நிற்பேன். பஸ் அதிர்ந்து குலுங்கும்போது நான் பக்கத்திலிருப்பவர்கள் மேல் சாய்ந்து என்னைச் சமாளித்துக் கொள்வேன். பக்கத்திலிருப்பவர்கள் என்னைக் கோபித்துக் கொள்வதில்லை. என் எடை மிகக்குறைவு. ஆகையால் நான் யார் மேலாவது சாய்ந்தாலும் அவர்களுக்கு நான் சாய்வது தெரியாது.

இப்போது நான் பஸ்ஸின் பின்பக்கத்தின் ஒரு சீட்டின் கம்பியைப் பிடித்துக்கொண்டு நிற்கிறேன். என் இருபுறமும் மலைபோல் பெரிய பெரிய மனிதர்கள். அவர்கள் என்னை மறைத்துக் கொண்டிருக்கிறார்கள். வெளியிலிருந்து என்னைப் பார்க்கவே முடியாது. பார்க்க முடிந்தாலும் யாரும் கவனிக்க மாட்டார்கள். இதுதான் கஷ்டம்- ரொம்பப்பேர் என்னைப் பார்த்தாலும் கவனிப்பதில்லை, என் பக்கத்திலிருப்பவர்கள், எதிரிலிருப்பவர்கள் என்னைப் பார்க்கலாம், ஆனால் அக்கறை யெதுவுமின்றிப் பார்ப்பார்கள். நான் இருப்பதும் இல்லாததும் அவர்களுக்கு ஒன்றுதான். இதற்குக் காரணமென்னவென்றால், என்னைத் தனிப்படுத்திக் காட்டக்கூடிய எந்தவிதச் சிறப்பும் என் தோற்றத்தில் இல்லை.. என் உயரம் ஐந்தடி இரண்டங்குலந்தான். நான் ஒல்லி, ஆனால் கவனத்தை ஈர்க்கும்படி அவ்வளவு ஒல்லி யில்லை. நான் கறுப்பு, ஆனால் என்னை ஒருமுறை பார்த்தவர்கள் மறுபடி திரும்பிப் பார்க்குமளவுக்கு அவ்வளவு கறுப்பில்லை. நாற்பது வயதில் என் தலைமுடி நிறைய உதிர்ந்துவிட்டது.

ஆனால் வழுக்கை விழவில்லை-வழுக்கை விழுந்திருந்தால் அது மற்றவர்களின் பர்வையில் படும். என் முகம் சராசரி-ரொம்ப அழகுமில்லை, ரொம்ப அவலட்சணமுமில்லை, மூக்கு சப்பையுமில்லை, சிறியதுமில்லை. கண்கள் ரொம்பப் பெரிது மில்லை, ரொம்பச் சிறிதுமில்லை. ஆகையால் இந்தக் கூட்டத்தில் யாரும் என்னைப் பார்ப்பார்களா? பார்த்தாலும் கவனிக்க மாட்டார்கள் என்று எனக்குத் தெரியும்.

என் கல்யாணத்துக்குப்பிறகு மனத்தைத தொடக்கூடிய, அதே சமயம் வேடிக்கையான நிகழ்ச்சியொன்று நடந்தது. புது மனைவி என் வீட்டுக்கு வந்து ஓரிரண்டு நாட்களுக்குப் பின் அவளைக் கூட்டிக்கொண்டு வெளியே புறப்பட்டேன். இன்னும் சில நாட்களுக்குப்பின் மாமனார் வீட்டுக்கு இரண்டாம் முறையாகப் போகும் சடங்கு இருந்ததால் சில துணிமணிகள் வாங்க வேண்டியிருந்தது.

நான் வீட்டிலிருந்து கிளம்பியதும் என் மனைவியிடம் "நியூ மார்க்கெட் போவோமா?" என்று கேட்டேன்.

என் பொருளாதார நிலை நியூ மார்க்கெட்டில் பொருள் வாங்க இடம் கொடுக்கவில்லை. நாங்கள் எப்போதும் எங்கள் வீட்டுக்கு அருகிலுள்ள சிறிய துணிக்கடையில்தான் மலிவு விலையில் துணிமணிகள் வாங்குவோம். இருந்தாலும் நான் என் மனைவியை நியூ மார்க்கெட்டுக்குக் கூப்பிட்டதற்கு ஒரு காரணம், என் மனைவி வெளியூர்க்காரி, கல்கத்தாப் பெண்ணல்ல. அவள் நியூ மார்க்கெட் பார்த்ததில்லை. இன்னொரு காரணம், என் மாமனார் எங்களைக் காட்டிலும் சற்று அதிக வசதியுள்ளவர். ஆகையால் நான் நியூ மார்க்கெட்டுக்குக் கூட்டிப்போனால் என் மனைவி சந்தோஷப்படுவாள். துணிமணிகள் நியூ மார்க்கெட்டில் வாங்கப்பட்டவை என்று தெரிந்தால் வேற்றகத்தாரும் சற்று ஆச்சரியப்படுவார்கள்.

ஆனால் நியூ மார்க்கெட்டுப் போகலாம் என்று நான் சொல்லியது பெருந்தவறாகி விட்டது. ஏனென்றால் நான் அங்கு போகாமலிருந்தால் அந்த நிகழ்ச்சி நடந்தேயிருக்காது...

நியூ மார்க்கெட்டுக்குள் நுழைந்ததும் அங்கிருந்த கடைகளின் அலங்கார ஆடம்பரங்களில் மயங்கிவிட்டாள் என் மனைவி. அவள் ஒவ்வொரு கடையின் முன்னாலும் நிற்பாள், அதன் ஷோகேசை ஆர்வத்தோடு பார்ப்பாள், பிறகு மெதுவாக ஒவ்வொரு அடியாக வைத்து நடப்பாள். அவள் என் பக்கம் திரும்பிப் பார்க்கவும் மறந்துபோய் விட்டாள். அவள் என் புது மனைவி. ஆகையால் அவள் என்னைத் திரும்பிப் பார்க்காததில் எனக்கு வருத்தம் ஏற்பட்டது இயற்கைதான். நான் அவளுக்கு ஏதாவது

ஒரு குறிப்பிட்ட பொருளைச் சுட்டிக்காட்டிச் சட்டாம் பிள்ளைத் தனம் செய்து பார்த்தேன். ஆனால் அவள் குறிப்பிட்ட எந்தப் பொருளிலும் அக்கறையில்லாமல் எல்லாவற்றையும் ஒட்டு மொத்தமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். எனக்கு வந்த கோபத்தில் நான் வேண்டுமென்றே என் நடையின் வேகத்தைக் குறைத்துக் கொண்டு பின் தங்கினேன். அப்படியும் அவள் என்னைக் கவனிக்காமல் மேலே போய்க்கொண்டேயிருந்தாள். இதைப்பார்த்து நான் நின்றே விட்டேன். அவள் நடந்து போய்க் கொண்டேயிருந்தாள். அவளுடைய கண்கள் ஆர்வத்துடன் கடைப்பண்டங்கள் மேலே பதிந்திருக்க அவள் நடந்து சென்ற முறை மரியாதை அணிவகுப்பில் சிப்பாய்கள் நடந்து போவார்களே அதை நினைவுறுத்தியது. கடைகளின் பிரகாசமான வெளிச்சத்தில் அவள் கூட்டத்தில் புகுந்து நடந்ததை நான் தொலைவிலிருந்து கவனித்தேன். நானும் அவளுடன் வருகிறேன் என்று நினைத்து அவள் சில சமயம் பேசினாள், ஆனால் நான் பக்கத்திலிருக்கிறேனா என்று கவனிக்கவில்லை. இவ்விதம் கொஞ்ச தூரம் சென்றபிறகு அவள் ஏதோ ஒரு பொருளைப் பார்த்து மிகவும் பரபரப்போடு எனக்கு அதைக் காட்டுவதற்காகத் திரும்பிப் பார்த்தாள். நான் அருகில் இல்லை என்பதை அப்போதுதான் கவனித்து அப்படியே நின்றுவிட்டாள். அவள் பயந்துபோய் நாற்புறமும் என்னைத் தேடத் தொடங்கினாள். இப்போது ஒரு வேடிக்கை செய்யும் ஆசையை என்னால் தவிர்க்க முடியவில்லை. நியூ மார்க்கெட்டில் குறுக்கும் நெடுக்குமாக ஏராளமான குறுகிய சந்துகள், நான் சட்டென்று என் முன்னாலிருந்த சந்தொன்றில் நுழைந்து விட்டேன். இப்போது அந்த வெளியூர்க்காரி என்னைத் தேடிக் கண்டுபிடிக்கட்டும்! என்னைக் கவனிக்காமலிருந்ததன் பலனை அனுபவிக்கட்டும்!

நான் உள்ளூரச் சிரித்துக்கொண்டு சற்று வெளியே எட்டிப் பார்த்தேன். என் மனைவிக்கு அழுகை வந்துவிடும் போலிருக்கிறது. அவள் நாற்புறமும் பார்த்துக்கொண்டு வேகமாகத் திரும்பி வருகிறாள். நான் நின்று கொண்டிருந்த சந்துப்பக்கமும் அவள் வந்தாள். ஆனால் என்னைக் கவனிக்காமல் போய்விட்டாள். இந்த வெளியூர்க்காரப் பெண் ரொம்ப சாகசக்காரி, நான் வேண்டுமென்றே மறைந்து கொண்டிருப்பதால் என்னைப் பார்த்தும் பார்க்காததுபோல் போய்க்கொண்டிருக்கிறாள் என்று நான் முதலில் நினைத்தேன். ஆனால் அவளுடைய பரிதாபமான முகத்தைப் பார்த்தால் என் எண்ணம் தவறென்று தோன்றியது.

நான் கடைசியில் ஒரு கடிகாரக்கடை முன்னால் அவளது வழியை மறித்து நின்று கொண்டு "ஏய்!" என்று கூப்பிட்டேன்.

அவள் மிகவும் திடுக்கிட்டு என்னைப் பார்த்தாள். சற்றுநேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் பிறகு பெரிது பெரிதாக மூச்சு விட்டவாறு, சிரித்துக் கொண்டு, "நீங்களா? எங்கே போயிருந்தீங்க இவ்வளவு நேரம்? நான் எவ்வளவு நேரமா ஒங்களைத் தேடிக் கிட்டிருக்கேன்!" என்று சொன்னாள். அவள் சொல்லியது உண்மை தானென்று எனக்குத் தோன்றியது, நான் இவ்வளவு நேரம் அவளோடு கண்ணாமூச்சி விளையாடினேன், அவள் என்னைப் பார்க்கப் பலமுறை வாய்ப்புக் கொடுத்தும் அவள் என்னைப் பார்க்கவில்லை, அவளுக்கு முன்னால் நான் நிற்கும்போது கூட அவள் என்னைக் கவனிக்கவில்லையென்று வீடு திரும்பும்போது அவளிடம் சொன்னேன். முதலில் அவள் நான் சொன்னதை நம்பவில்லை, ஆனால் நான் வற்புறுத்திச் சொன்னதும் அவள் ஆச்சரியப்பட்டுச் சொன்னாள், "அப்படியா? இனிமே இப்படிச் செய்யாதீங்க... இது ரொம்ப ஆபத்து...!"

"நிறுத்துப்பா, கண்டக்டர்! நான் இங்கே இறங்கணும்... கொஞ்சம் நகருங்க... என் மூக்குக் கண்ணாடி..."

நான் அவசர அவசரமாக இறங்க முற்பட்டேன். என் பேச்சை யாரும் கேட்கவில்லை. நான் இறங்குவதற்கு முன்னா லேயே கண்டக்டர் மணியடித்துவிட்டான். ஒரு பொதுக்கை ஆள் எனக்கு இறங்க வழிவிடாமல் படியில் நின்று கொண் டிருந்தான். புஷ்ஷர்ட் அணிந்த வாலிபன் முழங்கையால் இடித்து என் மூக்குக் கண்ணாடியை வளைத்து விட்டான்.

அதனால்தான் சொல்லுகிறேன்-பஸ் டிராமிலும் சரி, தெருவிலும் சரி, யாரும் என்னைப் பொருட்படுத்துவதில்லை யென்று...

இன்று மிக நல்லநாள். இதமாகக் காற்று வீசுகிறது. வெயில் இருக்கிறது. ஆனால் மழைக்காலமாதலால் அதுவும் கடுமையாக இல்லாமல் சுகமாக இருக்கிறது. இப்போது இந்தத் தெருவில் நடந்துபோக எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது. சற்று தூரம் போனால் ஒரு நாற்சந்தி, அதைத் தாண்டிப் போனால் என் ஆபீஸ். நான் நாற்சந்திக்கு வந்து தெருவைக் கடக்க முற்பட்ட அதே சமயத்தில் போலீஸ்காரர் கையை இறக்கிக் கொண்டு விட்டார். இப்போது நான் ரஸ்தாவைக் கடக்க முடியாதபடி வண்டிகள், எண்ணற்ற வண்டிகள். "ஏனய்யா, போலீஸ்காரரே! நான் ரஸ்தாவைக் கடக்கப் போவது ஒனக்குத் தெரியாதா? இன்னும் கொஞ்ச நேரம் கையைத் தூக்கிக்கிட்டிருந்தா ஒன் கை ஒடைஞ்சு போயிடுமா?" நான் மாடிக்குப் போவதற்காக ஏறி யிருக்கும் லிஃப்டுக்கு நூறு வயது. இதற்கு நாற்புறமும் கம்பிச் சுவர். பார்க்க இரும்புக்கூண்டு போலிருக்கும். ஏறி இறங்கும்போது கொஞ்சம் ஆடும், மெதுவாக ஏறும். நான் கடந்த பதிமூன்று

ஆண்டுகளாக இந்த லிஃப்டில் ஏறி மேலே போகிறேன். லிஃப்ட் ஊழியன் ராம் ஸ்வரூப் போகி, இந்தப் பதிமூன்று வருடங்களாக என்னை வாரத்தில் ஆறு நாட்கள் இந்த லிஃப்டில் ஏற்றிச் செல்கிறான். "ஏம்பா ராம்ஸ்வரூப், நீதான் என்னை ரொம்ப நாளாப் பார்த்துக்கிட்டே வரியே- அதாவது, என் இருபத்தாறு இருபத்தேழு வயசிலேருந்து. அப்போ என் முகத்திலே முதுமையின் சாயல் விழலே. இப்போ சொல்லு, என் பேரென்ன?"

நிசமாகவே அவனைக் கேட்டால் அவன் ஹாஹாவென்று சிரித்துக்கொண்டு பதில் சொல்வான், "அதென்னங்க, ஒங்க பேரு தெரியாதா எனக்கு? நீங்க அரவிந்த பாபு!"

ஆனால் உண்மையில் நான் அரவிந்த பாபு அல்ல. நான் எப்போதுமே-என் சிறு வயது முதலே அரிந்தம் பாசுதான்! நான் ஒரு வங்கியில் வேலை செய்கிறேன். வங்கி அந்தக் கட்டிடத்தின் முதல்மாடியில் இருக்கிறது. முதலில் நான் வெவ்வேறு பிரிவுகளில் வேலை பார்த்தேன். கடந்த பத்தாண்டுகளாகப் பணப்பிரிவில் வேலை. நோட்டுக்களை வேகமாக எண்ணுவேன், கணக்கிலும் புலி. ஆகையால் என்னைப் பணப் பிரிவிலிருந்து வேறு பிரிவு களுக்கு மாற்றுவதில்லை. எப்போதாவது மாற்றினாலும் விரைவில் மறுபடி மறுபடி பணத்துக்குத் திருப்பியனுப்பி விடுவார்கள். பத்தாண்டுகளாக மிகத் திறமையாக வேலை செய்து வருகிறேன் நான். சில சமயம் பட்டுவாடா செய்யும் பொறுப்பு. பெரும்பாலும் பட்டுவாடாப் பொறுப்புதான். காரணம் அதில்தான் ஜாக்கிரதை அதிகம் தேவைப்படும். கம்பிச் சுவர்களாலான ஒரு கூண்டுக்குள் நான் உட்கார்ந்திருப்பேன். எனக்கு முன்னால் பல இழுப்பறைகள். எந்த இழுப்பறையில் எவ்வளவு பணம் நோட்டாக இருக்கிறது, எவ்வளவு சில்லறை இருக்கிறது என்று நான் கண்ணைத் திறக்காமலே சரியாகச் சொல்லிவிடுவேன். நான் டோக்கனை வாங்கிக்கொண்டு இழுப்பறையைத் திறந்து பணத்தை எண்ணி வெளியே எடுத்துக் கொண்டு இழுப்பறையை மூடுவேன். பிறகு மறுபடி பணத்தை எண்ணி வெளியே நிற்பவரிடம் கொடுத்து விட்டு அடுத்த டோக்கனுக்காகக் கையை நீட்டுவேன். பிறகு மறுபடி இழுப்பறையைத் திறந்து, பணத்தை எண்ணி எடுத்துக் கொண்டு, இழுப்பறையை மூடி- இப்படி மீண்டும் மீண்டும் செய்து கொண்டேயிருப்பேன். கௌன்டருக்கு வெளியிலிருந்து என்னைப் பார்ப்பவர்களுக்கு என் வேலை மிகவும் அலுப்பூட்டு வதாகத் தோன்றும். அவர்கள் என்னை வெளியிலிருந்து பார்ப் பார்கள், ஆனால் ஞாபகம் வைத்துக் கொள்வதில்லை..

எங்களுடைய பெரிய, நெடுங்கால வாடிக்கையாளர்களில் ஒருவர் ராம்பாபு. பெரிய தொழிற்சாலையொன்றின் உரிமையாளர்.

வங்கியின் முகவரும் அவருக்கு மிகவும் மரியாதை கொடுப்பார். அவர் ஒரு சந்தேகப் பேர்வழி. பெரும்பாலும் பணம் வாங்கி வர யாரையும் அனுப்பாமல் தானே வருவார், செக்கைக் கொடுத்துப் பணம் வாங்கிப் போவார். நான் எவ்வளவோ தடவைகள் அவருக்குப் பணம் பட்டுவாடா செய்திருக்கிறேன். அவர் புன்சிரிப்புடன் நன்றி சொல்லிவிட்டுப் பணம் வாங்கிப் போயிருக்கிறார்.

ஒரு சமயம் என் பெரிய மைத்துனன் கல்கத்தா வந்து சில நாட்கள் உல்லாசமாகப் பொழுது போக்கினான். அப்போது ஒரு நாள் என்னைப் .பார்க் தெருவிலுள்ள பெரிய ஓட்டல் ஒன்றுக்கு அழைத்துப் போனான். அங்கே ராம்பாபுவைப் பார்த்தேன். ஒரு போத்தல் தெளிவான ஜின்னை வைத்துக் கொண்டு தனியாக உட்கார்ந்திருந்தார். அவருடைய கண்கள் ஏதோ கனவிலாழ்ந் திருந்தன. உண்மையில், நான் என் நிலையை உயர்த்திக்கொள்ள வேண்டும் என்று ஏங்குவதில்லை. அதற்காக ராம்பாபுவைப் பார்க்க வேண்டுமென்று எனக்குத் தோன்றியதேயில்லை. தெரிந்த மனிதராயிற்றே என்றுதான் அவர் முன்னால்போய் நின்றேன். ராம்பாபு புருவத்தை உயர்த்திப் பார்த்துவிட்டு, "ஒங்களை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கே! எங்கே பார்த்திருப்பேன், சொல்லுங்க!"

எனக்கு மிகவும் வெட்கமாயிருந்தது. நிஜமாகவே அவருக்கு என்னைத் தெரியாமலிருந்தால், அல்லது அகம்பாவத்தால் தெரியாதவராகப் பாசாங்கு செய்தால் எனக்கு மிகவும் அவமானமாகிவிடும்.

நான் வேறுவழியில்லாமல் என் வங்கியின் பெயரைச் சொல்லி, "நான் பணப் பட்டுவாடாப் பிரிவிலே..." என்று சொல்லத் தொடங்கியதும் அவருடைய ஜின்னின் தெளிவு அவருடைய முகத்துக்கும் வந்து விட்டது. அவர் புன்சிரிப்போடு சொன்னார், "தெரியுது, தெரியுது...! பாருங்க, அந்தக் கூண்டுக் குள்ளேயே ஒங்களைப் பார்த்துப் பார்த்துப் பழகிபோச்சு, இல்லையா? அதனாலே திடீர்னு ஒங்களை இங்கே.. புரிஞ்சு துங்களா..? விஷயம் என்னன்னா எல்லாம் பார்க்கற கோணத் திலே இருக்கு.. சரியான கோணம் இல்லேன்னா மனுசனை எப்படி அடையாளம் காண முடியும்? கூண்டுக்குள்ளே கௌன்டர் வழியாக ஒங்களைப் பார்க்கறோம். அதே மாதிரி இந்தக் கோட், பேண்ட், இந்த வழுக்கை எல்லாம் சேர்ந்துதான் நான். இதுகளிலேயிருந்து ஒங்களையும் என்னையும் பிரிச்சுட்டா, ஒங்களுக்கும் எனக்கும் உண்மையான அறிமுகமே கிடையாது. பாருங்க. இந்தப் பார்க்கும் கோணத்தைப் பத்தித்தான் இப்போ

நினைச்சுக்கிட்டிருந்தேன். சின்னவயசிலே நாங்க ஒரு ரயில் காலனியிலே இருந்தோம். என்னோட அப்பா ரயில் இலாகாவிலே குமாஸ்தா. கட்டிஹாரிலே எங்க வீட்டுக்குக்கிட்டே இன்னொரு வீட்டிலேருந்து ஒரு பொண்ணு அடிக்கடி வந்து என் அம்மாவோட பேசிக்கிட்டிருப்பா. தாயில்லாப் பொண்ணு. சித்திக்கு அவகிட்டே பிரியமில்லே. அவ எங்க வீட்டுச் சமைய லறைக்கு வந்து அம்மாவோடே பேசிக்கிட்டு ஒக்காந்திருப்பா. கூனிக்குறுகி ஒக்காந்துக்கிட்டு, கிழிஞ்ச ஃபிராக்காலே சிரமப்பட்டு முழங்காலை மறைச்சுக்கிட்டு சப்பாத்தி தட்டிக் கொடுப்பா; அல்லது என் அழு மூஞ்சித் தங்கையை இடுப்பிலே வச்சுக்கிட்டு இங்கேயும் அங்கேயும் நடந்து அவளைத் தூங்கப் பண்ணுவா. அவளை எனக்குக் கலியாணம் பண்ணிக் கொடுக்கப் போறதா அம்மா சொல்லுவா. அதைக்கேட்டு நான் அவளை நல்லாப் பார்ப்பேன்-போதையேறும் எனக்கு. பார்க்கப் பரிதாபமா காஞ்ச முகமா இருப்பா அவ.. ஆனா ரொம்ப அழகு...!"

இதைச் சொல்லிவிட்டு ஒரு பெருமூச்சு விட்டார் ராம்பாபு. நான் பரபரப்போடு அவரைக் கேட்டேன், "அப்புறம் என்ன ஆச்சு? அந்தப் பொண்ணு செத்துப் போயிட்டாளா?"

"இல்லே, இல்லே, சாகலே. நான் பெரியவனான பிறகு அவளைத்தான் கலியாணம் பண்ணிக்கிட்டேன். இப்பவும் இருக்கா. ஒரே பொதுக்கையா ஆயிட்டா. எப்பவும் சிடுசிடுக்கறா. என்னை ஆட்டி வைக்கறா... அவ ஃபிரிட்ஜைத் திறக்கறபோது, நகைகளைத் தேர்ந்தெடுக்கறபோது, வேலைக்காரங்களைத் திட்டறபோது அல்லது காரை எடுக்கச்சொல்லி டிரைவரைக் கூப்பிடறபோது அவளைப் பார்த்தா நம்பவே முடியலே-முந்தி ஒருநாள் ஒடம்பு சரியில்லாமே இருந்த அவளைப் பார்க்க வந்த என் அம்மா கொண்டு வந்து கொடுத்த ரெண்டு ஆரஞ்சுப் பழத்தை வாங்கிக்கிட்டு அழாகாச் சிரிச்ச பொண்ணுதான் இவ... இன்னிக்குப் பாருங்க, அவளோடே சண்டை போட்டுக்கிட்டு வெளியே வந்துட்டேன். எரிச்சலாயிருந்தது எனக்கு. அந்தப் பழைய ஆசையெல்லாம் போயிடுச்சு. இங்கே வந்து தனிமையிலே ஒக்காந்தாப் பழைய நினைவெல்லாம் வருது-அவ வந்து அடுப் படியிலே கிழிஞ்ச ஃபிராக்காலே முழங்காலை மறைசிக்கிட்டு ஒக்காந்திருக்கறது, என் அம்மா அவளைப் பாசத்தோடு பார்க்கறது- உடனே அந்தப் பொண்கிட்டே அன்பு ஊற்றெடுத்தது என்னுள்ளே. இப்போது வீடு திரும்பி அவளைச் சமாதானப் படுத்துவேன். புரிஞ்சுதா...?" ராம் பாபு அந்த வெள்ளை ஜின்னை ஒரு மடக்குக் குடித்துவிட்டுச் சிரித்தார்... "கௌன்டர் மூலமாத்தானே ஒங்களைப் பார்த்தேன். அந்தக் கௌன்டர்

தான் முக்கியம்..."

இருபத்துமூன்று இருபத்துநான்கு வயதுள்ள ஒரு இளைஞன் கௌன்டருக்கு முன்னால் நின்று கொண்டிருக்கிறான். ஏதோ நினைவில் தன் டோக்கனைக் கௌண்டரின் மேல் தட்டிக் கொண்டிருக்கிறான். அவனுக்கு என்னைத் தெரியும். அவனுடைய அப்பா பழைய கார்களை வாங்கி விற்பவர். முன்பு அவர்தான் பணமெடுக்க வருவார். இப்போது இவனை அனுப்புகிறார். நடுநடுவில்நான் சிரித்துக்கொண்டே "அப்பா சௌக்கியமா?" என்று அவனைக் கேட்பேன். அவனும் புன்சிரிப்போடு தலையை யசைத்து "ஆமா" என்பான். ஆனால் என்னைத் திடீரென்று இங்கிருந்து மாற்றிவிட்டு இன்னொரு சராசரித் தோற்றமுள்ள ஆளைக் கௌன்டருக்குப் பின்னால் உட்கார்த்தி வைத்தால் இந்த இளைஞனுக்கு ஒரு வித்தியாசமும் தெரியாது. அப்போதும் அவன் ஏதோ நினைவில் டோக்கனைக் கௌன்டரில் தட்டிக் கொண்டிருப்பான், பணம் எண்ணிக் கொடுப்பவரைப் பார்த்துச் சிரிப்பான். தன் தவறை உணர்ந்து கொள்ளச் சற்றுநேரம் பிடிக்கும் அவனுக்கு. காரணம், அவன் ஒருபோதும் என்னை உண்மையில் பார்க்கவில்லை. ஒரு சமயம் அவன் தன் புதுக் காதலியைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கலாம் அல்லது ஒரு ஸ்கூட்டர் வாங்கத் திட்டம் போட்டுக் கொண்டிருக்கலாம்...

அவன் திரும்பி ரிசப்ஷனிஸ்ட் பெண்ணைப் பார்த்தான், பிறகு கடிகாரத்தைப் பார்த்தான், டோக்கனின் நம்பரைப் பார்த்துக் கொண்டான், என் கைகள் ஒரு கட்டுநோட்டுக்களை எண்ணிக் கொண்டிருப்பதைக் கவனித்தான். பிறகு தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். ஆனால் அவன் என்னைப் பார்க்கயேில்லை என்று எனக்குத் தெரியும். இன்னும் பதினைந்து நிமிடங்களில் மணி இரண்டு அடிக்கும். நான் பணப் பட்டுவாடாவை நிறுத்தி விட்டு டிபன் சாப்பிடக் கீழே போவேன். அவன் என்னைத் தெருவிலோ, நடைபாதைக் கடையில் நான் பிஸ்கெட்டும் டீயும் சாப்பிடும்போதோ பார்த்தால் என்னை அடையாளம் கண்டு கொள்வானா?

"வாழைப்பழம் என்ன விலை? ஜோடி நாப்பது காசா? அடேயப்பா! ஆமா, ஆமா, மர்த்தமான் பழந்தான், மர்த்தமான் பழம் எனக்குத் தெரியாதா? இந்த அழகான மஞ்சள் நிறம், வழவழப்பான தோல், தடிமன் இதெல்லாம் மர்த்தமானுக்கு அடையாளம். இன்னிக்கு நான் வாழைப்பழம் சாப்பிடற நாள் இல்லைதான். நான் ஒருநாள் விட்டு ஒருநாள் தான் வாழைப்பழம் சாப்பிடுவேன். நேத்துத்தான் சாப்பிட்டேன்... சரி, ஒண்ணு கொடு... இல்லே, ஒண்ணுமட்டும்...! இந்தா இருபது காசு..."

வாழைப்பழம் பிரமாதம்! நான் பழத்தைச் சாப்பிட்ட பிறகும் அதன் தோலைச் சற்று நேரம் அதன் ஞாபகார்த்தமாகக் கையில் வைத்துக்கொண்டிருந்தேன். பிறகு பத்துப் பதினைந்து நிமிடங்கள் இங்குமங்கும் உலவினேன். வாழைப்பழத்தோல் இன்னும் என் கையில். எனக்கு நாற்புறமும் ஜனங்கள் அமைதியாக நடமாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய முகங்களில் எவ்விதச் சலனமும் இல்லை, இவர்கள் ஒருபோதும் போரிட்ட தில்லை, நாட்டுக்காக உயிர் விட்டதில்லை, எல்லாரும் சேர்ந்து கடினமான வேலை எதையும் செய்ததுமில்லை. இந்த இனமே கொஞ்சங் கொஞ்சமாக செத்துக்கொண்டு வருகிறது, இது தன் சின்னஞ்சிறு கவலைகளில் மூழ்கியிருக்கிறது. யாருக்கும் மற்றவர்களைப் பற்றி அக்கறையில்லை. இவர்களுக்குக் காலத்தைப் பற்றிய உணர்வு இல்லை. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டு களின் வரலாறு இவர்களுக்குப் புரியாது. இவர்களைப் பொறுத்த வரையில் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்தொன்பது என்பது ஒரு எண்ணிக்கை மட்டுமே. “பாரத நாடு” என்ற வார்த்தை இவர்களுக்கு ஒரு வெறும் சொல்தான்–“டெலிபதி”, “க்ரீக் ரோ” முதலிய சொற்களைப்போல.

தயவு செய்து என்னைப் பாருங்கள்! நான் அரிந்தம் பாசு, அதிகம் உயரமில்லாத, அதிக ஒல்லியாக இல்லாத, அதிகச் சிவப்பில்லாத ஒரு மனிதன். நான் டெலிபதி அல்ல. க்ரீக் ரோ அல்ல, பாரத நாடும் அல்ல. அரிந்தம் பாசு என்பது வேறுவிதமான சொல். இந்த வேற்றுமையை உங்களால் புரிந்துகொள்ள முடியுமா?

அது போகட்டும்... நான் உண்மையில் இருக்கிறேனா இல்லையா என்று எனக்கே சில சமயங்களில் சந்தேகம் வருகிறது. வங்கிக் கௌன்டருக்கு வெளியிலிருந்து கையை நீட்டிப் பணம் வாங்கிக்கொண்டு சிலர் போகிறார்கள். சிலர் புன்சிரிப்புடன் நன்றி சொல்லிவிட்டுப் போகிறார்கள். ஆனால் எனக்குப் பதிலாக வேறு யாராவது அங்கே உட்கார்ந்திருந்தாலும் அவர்கள் முன்போலவே கையை நீட்டிப் பணத்தை வாங்கிக் கொள்வார்கள், அவர்களில் சிலர் நன்றியும் கூறிவிட்டுப் போவார்கள். கௌன்டருக்குப் பின்னால் வேறு ஆள் உட்கார்ந்திருக்கிறான் என்பதைக்கூடக் கவனிக்க மாட்டார்கள்.

அந்த நியூ மார்க்கெட் நிகழ்ச்சியைத்தான் எடுத்துக் கொள்ளுங்களேன்! என் மனைவி என் முன்னால் நின்று கொண்டே, என்னைப் பார்த்துக் கொண்டே, என்னைக் கவனிக் காமல் நான் எங்கே போய்விட்டேன் என்று தேடிக் கொண்டிருக் கிறாள்!

நான் மிகவும் கவனமாக அந்த வாழைப்பழத்தோலை

நடைபாதையின் நடுவில் போட்டேன். கவனிக்காமல் நடந்து செல்லும் மனிதர்களே! உங்களில் யாராவது அதன் மேல் கால் வைத்து வழுக்கி விழுந்தால் அந்த சமயத்தில் திடுக்கிட்டுத் தன் னினைவுக்கு வருவீர்கள். உங்களுக்கு அதிகம் அடிபடாவிட்டால், அல்லது நீங்கள் விழாமல் சமாளித்துக்கொண்டால் உங்களுக்கு ஒரு பெரிய லாபம் ஏற்பட்டிருக்கும். நீங்கள் நாற்புறமும் திரும்பிப் பார்ப்பீர்கள். எந்தத் தெருவில் நடந்து கொண்டிருக்கிறீர்ள் என்பது உங்கள் நினைவுக்கு வரும். பலமாக அடிபட்டிருந்தால் உங்கள் கை, கால், அல்லது மண்டை உடைந்திருக்கும் என்ற உணர்வில் உங்க்ளைச் சுற்றியுள்ள ஆபத்தான சூழ்நிலையைப் புரிந்துகொண்டு எச்சரிக்கையோடிருப்பீர்கள். ஒருவேளை உங்களுக் குள்ளே உறங்கிக் கொண்டிருக்கும் "நீங்கள்" விழித்துக்கொண்டு "உயிரோடிருப்பது எவ்வளவு பெரிய அதிருஷ்டம்" என்பதை உணர்ந்து கொள்வீர்கள், மற்ற சக மனிதர்களைப் பற்றி நினைக்கத் தொடங்குவீர்கள். இன்று 1969 ஆம் ஆண்டின் ஜூலை 16 ஆம் நாள் அதாவது உங்கள் திருமண ஆண்டு விழா நாள் என்ற விஷயம் உங்களுக்கு நினைவு வரும். அல்லது இந்த ஆண்டு உங்களுக்கு நாற்பது வயது நிரம்புகிறது என்பதை ஞாபகப்படுத்திக் கொள்வீர்கள். போரோ புரட்சியோ இல்லாத இந்தப் பாரத நாட்டில் ஒரு சாதாரண நண்பகல் நேரத்தில் நடைபாதையில் வாழைப்பழத்தோலைப் போட்டதன் மூலம் நான் உங்களுக்குப் பெரிய கெடுதல் எதுவும் செய்துவிடவில்லை என்பதை அப்போது நீங்கள் உணர்வீர்கள்.

நீங்கள் சந்திரனைப் பற்றி, அதில் கால் வைக்க முயலும் மூன்று தைரியம் மிக்க மனிதர்களைப்பற்றி, நினைத்துக் கொண் டிருக்கிறீர்களா? வேண்டாம், அவர்களைப்பற்றி நமக்கேன் கவலை? இந்த மாதிரி விஷயங்கள் அனாவசியமாக மனிதர்களைப் பரபரப்புக்குள்ளாக்குகின்றன; பிறகு அவர்கள் களைத்துப் போய் விடுகிறார்கள். அந்த மூன்று வீரர்களிடம் நல்ல இயந்திரங்கள் இருக்கின்றன. அவர்கள் நிச்சயம் சந்திரனுக்குபோய்ச் சேர்ந்து விடுவார்கள். பத்திரமாகத் திரும்பியும் வந்துவிடுவார்கள். நீங்கள் அவர்களுக்காக அனாவசியமாகக் கவலைப்பட வேண்டாம். தெருவைப் பார்த்து நடங்கள். ராஜபவனுக்கு முன்னால் எவ்வளவு பெரிய மைதானம், எவ்வளவு விசாலமான ஆகாயம்! உங்களுக்குப் பக்கத்தில் நடமாடிக் கொண்டிருக்கும் ஜனங்களைப் பார்த்துக் கொள்ளுங்கள். அவர்களை வேறு இடங்களில் பார்த்தால் அடையாளங் கண்டு கொள்ளுங்கள். இந்த இனிய மாலை நேரத்தில் நான் உங்களுக்குப் பக்கத்தில் நடந்துகொண் டிருக்கிறேன். என்னைப் பாருங்கள்-! இப்போதுதான் நான்

ஆபீசிலிருந்து புறப்பட்டேன், விளையாட்டு பார்க்கவேண்டு மென்று. இன்று சற்று முன்னாலேயே புறப்பட்டுவிட்டேன், நீங்களும் அந்தப் பக்கந்தானே...?

அந்த ஆட்டக்காரன் முட்டாள் பாருங்கள்! ஆஃப் சைடிலே நின்று கொண்டு ஒரு நல்ல வாய்ப்பைக் கோட்டை விட்டு விட்டான். விளையாட்டு முடிய இன்னும் பத்து நிமிஷந்தான் இருக்கிறது. ஒரு கோல்கூட விழவில்லை. அந்த ஆள்-ஐயோ, அவனுக்கு யார் சிவப்பு ஜெர்ஸி போட்டுக் கொள்ளக் கொடுத் தார்கள்? அவனை விரட்டுங்கள் வெளியே! இஷ்டத்துக்குத் திட்டுங்கள் அவனை! என் நாக்கில் கெட்ட வார்த்தைகள் வருவ தில்லை. இருந்தாலும் பாருங்கள், கோபத்தில் என் கை கால்கள் நடுங்குகின்றன. இன்று காலைமுதல் சந்திரனையும் அதன் மேல் காலெடுத்து வைக்க முயலும் மூன்று வீரர்களைப் பற்றியும் நினைத்து என் நரம்புகள் தளர்ந்து போயிருக்கின்றன. அத்துடன் இப்போது இந்த மோசமான விளையாட்டுக் குழு! எதிர்க்கட்சி என் அபிமானக் கட்சியைவிட ஒரு பாயிண்ட் கூட ஜெயித்து விட்டது. என்ன கஷ்டம்! விளையாட்டு முடிய எட்டு, ஒன்பது நிமிஷந்தான் இருக்கிறது. "என்ன சொல்றீங்க, அண்ணே? கோல் ஆகுமா? எப்படி ஆகும்? எதிர்க் கட்சிக்காரங்க. அவங்க கோலுக்கு முன்னாலே சுவர் மாதிரி நின்னுக்கிட்டிருக்காங்க. இவங்க விளையாடற அழகைப் பார்த்தா இவங்களுக்குக் கோல் போடற எண்ணம் இருக்கறதாவே தெரியலே..."

அந்த ஆட்டக்காரன் ஆஃப் சைடில் நின்று கொண்டு மிகவும் நல்ல வாய்ப்பைக் கோட்டை விட்டுட்டான். அவன் முன்னால் போய்ச் சொல்லத் தோன்றுகிறது எனக்கு, "ஏய், இந்தோ பாரு! நான் அரிந்தம் பாசு, சின்ன வயசிலேருந்து நான் ஒன் கட்சியை ஆதரிச்சு வந்திருக்கேன். இந்தக் கட்சி ஜெயிக்க நான் சாமிக்கு அர்ச்சனை பண்ணியிருக்கேன், தோத்தாத் தற்கொலை பண்ணிக்கலாமான்னு நினைச்சிருக்கேன். இதெல்லாம் தெரியுமா ஒனக்கு? இந்தக் கூட்டத்திலே நான் ஒரு முக்கியமான ஆள். எவ்வளவு படபடப்போடே கடிகாரத்தைப் பார்த்துக் கிட்டிருக்கேன்...!" ஆனா நான் சிரிக்கிறேனா, அழறேனா, என்ன செய்யறேன்னு யார் கவலைப்படறாங்க...?

ஊஹூம், கோல் விழவில்லை! நடுவர் விசில் ஊதிவிட்டார். ஆட்டம் முடிந்து விட்டது. இப்போது பாருங்கள், நான் எவ்வளவு சோர்ந்துபோய் விட்டேன் என்று. என் தோள்கள் சரிகின்றன. நான் இந்தக் கட்சியை எவ்வளவு நேசிக்கிறேன், பாருங்கள். ஆனால் அதனால் கட்சிக்கு என்ன வந்தது? இந்தக் கட்சி ஜெயித்த போதெல்லாம் நான் எப்படிக் குதித்திருக்கிறேன்,

அறிமுகமில்லாதவர்கள் முதுகில் தட்டியிருக்கிறேன், தோற்றபோது எப்படி அழுதிருக்கிறேன் என்றெல்லாம் இவர்களுக்குத் தெரியாது. எல்லாம் வீண். இதனாலெல்லாம் ஒரு பிரயோசனமுமில்லை. நான் இன்று காலை முதல் சந்திரனையும் அந்த மூன்று வீரர் களையும் பற்றிச் சிந்தித்துச் சிந்தித்து, அந்தக் கவலையில் சோறு கூட இறங்காமல்... இதைப்பற்றியெல்லாம் யாருக்கு அக்கறை?

தயவு செய்து என்னைப் பாருங்கள். எனக்குத்தெரியும், ஏற்கெனவே நீங்கள் பந்தயப் பட்டியலில் உங்கள் அபிமானக் கட்சியின் நிலை குறித்துக் கவலையாயிருக்கிறீர்கள். அதற்கு மேல் சந்திரன், சந்திரப் பயணிகள் மூவரைப்பற்றிய கவலை வேறு. உலகத்தில் எவ்வளவு நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன! மனிதன் இருபத்தொன்பதரை நீளம் தாவுகிறான்; ஒரு ஜனாதிபதி சுட்டுக் கொல்லப்படுகிறார்; உங்கள் அரசியல் கட்சி தேர்தலில் தோற்றுவிடுகிறது; புரட்சி வரத் தாமதமாகிறது. ஆகையால்தான் நான்—வங்கிக் குமாஸ்தா அரிந்தம் பாசு-உங்களுக்கு இவ்வளவு அருகிலிருந்தாலும் உங்களால் என்னைப் பார்க்க முடியவில்லை.

என் நான்கு வயதுப் பிள்ளை ஹாபு மாடி வராந்தாவில் கையைப் பிடித்துக்கொண்டு குனிந்து பார்த்துக் கொண்டிருக் கிறான். யாருக்கும் அடங்கமாட்டான். காலையிலிருந்தே பிடி வாதம் பிடித்துக் கொண்டிருக்கிறான். நான் சீக்கிரம் ஆபீசிலிருந்து வந்து அவனைத் தேர்த் திருவிழாவுக்குக் கூட்டிப் போக வேண்டுமாம். எனக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறான் அவன். கூடைமாதிரி தலைமுடிக்குக் கீழே பளபளக்கின்றன அவனுடைய கண்கள், இவ்வளவு தூரத்திலிருந்தே அவற்றைப் பார்க்க முடிகிறது என்னால்.

நான் மாடிப்படியில் கால் வைத்திருக்கிறேன். அதற்குள் அவன் ஓட்டம ஓட்டமாகக் கீழே ஓடி வருகிறான். அவனுடைய அம்மா மேலேயிருந்து, "ஹாபுபூ...! எங்கே போறே?" என்று கத்துகிறாள். ஹாபு என்மேல் தாவிக் கொண்டு சிரிக்கிறான்; "ஏன் இவ்வளவு லேட்டு? திருவிழா போக வேண்டாமா?" என்று கேட்கிறான்.

ஆமாம், நான் வெளியிலிருந்து திரும்பியதும் என் மக்களுக்கு மத்தியில் சற்று ஆறுதல் பெறுகிறேன். பையனை இடுப்பில் தூக்கி வைத்துக்கொண்டேன். அவனது உடலில் இனிமையான வேர்வை மணம்; குளிர் காலத்து வெயில் போல வெதுவெதுப்பாக, இதமாக இருக்கிறது அவனது ஸ்பரிசம். முகத்தை அவனது உடலில் புதைந்து கொண்டால் கண்ணுக்குத் தெரியாமல் ஸ்நானம் செய்யும் உணர்வு ஏற்படுகிறது எனக்கு.

"போகலாம்ப்பா. எனக்கு ரொம்பப் பசிக்குது. கொஞ்சம்

ரெஸ்ட் எடுத்துக்கிட்டு சாப்பிட்டுக் கிளம்பலாம்" என்று சொன்னேன்.

நான் ஓய்வு எடுத்துக் கொள்ளும்போது ஹாபு என் உடம்போடு ஒட்டிக் கொண்டிருந்தான், "சீக்கிரம், சீக்கிரம்!" அதட்டினாள், "திட்டாதே! சின்னப் பையன் தானே!" என்று நான் அவளைத் தடுத்தேன். அவன் இந்த மாதிரி என்னோடு ஒட்டிக்கொண்டிருப்பது எனக்கு நிஜமாகவே பிடித்திருக்கிறது. ரொம்ப விஷமக்காரப் பையன் அவன். திருவிழாவுக்குப் போனதும் என் கையைவிட்டு ஓடத் தொடங்கிவிட்டான். "ஹாபு, ஓடக் கூடாது! என் கையைப் பிடிச்சுக்கிட்டாத் திருவிழாவை நல்லாப் பார்க்கலாம்" அவன் இங்குமங்கும் பார்த்துவிட்டு உரக்கக் கத்தினான், "அது என்னப்பா? அங்கே என்ன?"

"அது குடை ராட்டினம். அது சர்க்கஸ் கூடாரம்... அது சாவுக்கிணறு..."

ஒரு முழு அப்பளத்தைக் கையிலெடுத்துக்கொண்டு குடை ராட்டினத்தில் ஏறிவிட்டான் ஹாபு. அதோ போகிறான்- வானத்துக்கு அருகில் சிரித்துக்கொண்டு கையை ஆட்டுகிறான்- 'ஸைன்' என்று கீழே இறங்குகிறான், மேலே ஏறுகிறான், என்னைப் பார்த்துச் சிரிக்கிறான். அவனைப் பார்க்க மகிழ்ச்சியாயிருக்கிறது எனக்கு. சாவுக் கிணற்றைச் சுற்றியிருக்கும் மேடையில் நின்று கொண்டு கிணற்றுக்குள் பயங்கர ஓசையுடன் மோட்டார் சைக்கிள் வேகமாக ஏறி இறங்குவதை ஹாபுவுக்குக் காட்டினேன். அவன் என்னை இறுகக் கட்டிக் கொண்டு அந்தக் காட்சியைப் பார்த்தான்.

அதன் பிறகு நாங்கள் அரைமணி நேரம் சர்க்கஸ் பார்த்தோம்- இரண்டு தலை மனிதன், பாடும் பொம்மை, எட்டடி உயரமுள்ள ஆள்... ஹாபு பேச்சில்லாமல் இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய கண்களில் ஆச்சரியம் பளபளத்தது.

வெளியே வந்து அவனைக் கீழே இறக்கிவிட்டேன். அவன் எனக்கருகே நடக்கத் தொடங்கினான். அவன் கையைப் பிடித்திருந்த என் கை வியர்க்கத் தொடங்கியதால் நான் அவன் கையை விட்டுவிட்டேன்.

அவன் என் கையை விட்டுவிட்டு முன்னால் போகிறான்... ஒரு கடையில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் ஊதல்களைக் குனிந்து பார்க்கிறான். பிறகு மேலே போய் இன்னொரு கடையில் முடுக்கி விடப்படும் ஏரோப்பிளேன் பொம்மைகளைப் பார்க்கிறான். பிறகு மெதுவாக முன்னேறுகிறான்; விளையாட்டுத் துப்பாக்கிகள், கலர்ப் பந்துகளைப் பார்த்துக்கொண்டு போகிறான்...

கூட்டத்துக்குள்ளே போகிறான்...

நான் என் அபிமானமான விளையாட்டுக் காட்சியைப் பற்றி நினைக்கிறேன். இன்று அனாவசியமாக ஒரு பாயிண்ட்டை இழந்து விட்டதே கட்சி...! சந்திரனுக்குப் போய்க் கொண்டிருக் கிறார்களே மூன்று மனிதர்கள்... அவர்கள் சந்திரனுக்குப் போய்ச் சேர்ந்து விடுவார்களா...?

ஹாபு எங்கே...? அவனைக் காணோமே! கூட்டத்துக்கு நடுவில் அவனுடைய நீலக் கலர் சட்டையை ஒரு நிமிஷம் முன்னாலே கூடப் பார்த்தேனே! சட்டென்று மறைந்துபோய் விட்டானே!

நான் "பாபூஊஊ!" என்று கத்திக் கொண்டே கூட்டத்துக்குள் ஓடினேன்...

நீங்க யாராவது நீலச்சட்டை போட்ட நாலு வயசுப் பையனைப் பார்த்தீங்களா? அவன் பெயர் ஹாபு. மிகவும் விஷமக்காரப் பையன். பார்க்கலியா...? கூடைமாதிரி தலைமுடி, பளபளக்கும் கண்கள்... இல்லே, பொம்மைக்கடை வாசலில் நின்னுக்கிட்டிருக்கறவன் ஹாபு இல்லே. ஆனால் ஹாபுவும் இவன் மாதிரிதானிருப்பான்... அவனை அடையாளாங் கண்டு பிடிக்கற மாதிரி குறிப்பான அடையாளமெதுவுமில்லே. பார்க்க சாதாரணமாத்தான் இருப்பான்- என் மாதிரி. அவன் வயது நாலு, நீலக்கலர் சட்டை போட்டுக் கிட்டிருப்பான்- அவ்வளவு தான் சொல்ல முடியும்... நீலக்கலர் சட்டை போட்டுக்கிட்டிருக்கற நாலு வயசுப் பையன்கள் நிறையப்பேர் இந்தக் கூட்டத்திலே இருக்காங்க... இந்த ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு நடுவிலே என்னோட ஹாபு யாருன்னு அடையாளங்கண்டு பிடிக்கறது எனக்குக் கஷ்டந்தான்... அதே மாதிரி அவனாலும் இத்தனை பேருக்கு நடுவிலே என்னைக் கண்டுபிடிக்க முடியாது... அவனோட அம்மாவாலேயே ஒருமுறை கண்டுபிடிக்க முடியலே... நீங்க ஹாபுவைக் கண்டு பிடிச்சீங்கன்னா, தயவுபண்ணி அவன்கிட்டே சொல்லுங்க- நான்தான்... நான்தான் அவனோட அப்பான்னு...! என்னை நல்லாப் பார்த்துக்கங்க தயவு செஞ்சு... மறந்து போயிடாதீங்க...!

●

# பின்புலம்

தேபேஷ் ராய்

தாறுமாறாகக் காற்றடித்துக் கொண்டிருந்தது-பங்குனி மாதம் போல் தாறுமாறாகக் காற்றடித்துக் கொண்டிருந்தது- நாள் முழுதும். வகுப்பை முடித்துக் கொண்டு ஆசிரியர்களின் அறைக்குத் திரும்பும்போது பிநய்யின் பார்வை பள்ளிக்கு வடக்குப் புறமிருந்த வீட்டின் மேல் விழுந்தது. ஆசிரியர் அறையிலிருந்து வகுப்புக்குப் போகும்போது யூகலிப்டஸ் மரத்தின் உச்சி அவன் கண்ணில் பட்டிருந்தது. இங்கிருந்து இடுகாடு கண்ணுக்குத் தெரியாது. இடுகாட்டின் தென்கிழக்கு மூலையில்தான் அந்த மரம்.

அந்தக் காற்று உடம்பின் திரவப் பகுதியை அளவுக்கதிமாக உறிஞ்சிவிட்டதால் தோல் காய்ந்துபோய் சொரசொரப்பாக ஆகிவிட்டது. முகத்தைக் கையால் தடவினால் காய்ச்சல் மாதிரி சுடுகிறது. சலவை செய்யப்பட்ட துணிகளை மடிப்புக் கலையாமல் இன்று எடுத்து உடுத்திக்கொண்டு, இன்றே முகத்தை ஷேவ் செய்து கொண்டிருந்தால் இந்தக் கதகதப்பு, வறட்சி இருந் திருக்காது..

பள்ளிக்கு வடக்குப்புறத்து வீட்டுக்கு மேலே வானத்தைத் தவிர வேறெதுவும் என்றுமே இருந்ததில்லை- யூகலிப்டஸ் மரத்தைத்தவிர. வானமும் யூகலிப்டஸ் மரமும் இந்த ஒன்று மில்லாத வெறுமையை இன்னும் அழுத்தமாகக் காட்டின-தாய் அல்லது தந்தையை அண்மையில் இழந்தவன் பின்னால் உணரும் வெறுமைபோல. ஒரு கூத்து நடந்து முடிந்த உடனே ‘ஏதோ ஒன்று சற்று முன் இருந்தது, இப்போது இல்லை’ என்ற உணர்வு ஏற்படுவதுபோல... இந்த வெறுமைக்குத் தன்னை மிகவும் பழக்கப் படுத்திக்கொண்டு விட்டான் விநய். ஆகையால் அகாலத்தில் வீசிய இந்த வசந்த மாருதம் அவனை எவ்வளவு மகிழ்வித்திருக்க வேண்டுமோ அவ்வளவு மகிழ்விக்கவில்லை. மாறாக அவன் எப்போதோ தான் அனுபவித்து இப்போது கழிந்துபோய்விட்ட ஏதோ ஒரு உணர்விலேயே அமிழ்ந்திருந்தான்.

விளையாட்டு மைதானத்தில் அசோக் பள்ளி மாணவர்

களுடன் கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருக்கிறான். அவன் அணிந்திருந்த பேண்டும் விக்கெட்டுக்குப் பின்னால் அவன் தயாராக நின்று கொண்டிருந்த தோரணையுமே பிநய்யின் கவனத்தை ஈர்த்தன.

பிநய் தன் வகுப்பில் கரும்பலகையில் ஒரு மரத்தையும் அதன் கிளையில் பறக்கத் தயாரான நிலையிலுள்ள பறவை யொன்றையும் வரைந்துவிட்டு அறை வாயிலில் தன்மேல் காற்று வீசும்படி நின்றான். இன்று காலையில் அவன் ஷேவ் செய்து கொண்டிருந்தால் அல்லது சலவை மடிப்போடு உடையணிந்து கொண்டிருந்தால் இந்த வசந்த மாருத்தை வரவேற்றிருப்பான். ஆனால் தன்னிடமிருந்த திரவப்பொருள் வற்றிவிட்ட நிலையில் அவனுடைய உலர்ந்த முகத்தில் பட்ட காற்று அவன் கண்களை இடுக்கிக் கொள்ளச் செய்தது. அவன் தன்னை வீணாக்கிக் கொண்டிருப்பதாக உணர்ந்தான்.

வசந்த மாருதம் என்பது தென்றல் காற்று. ஆனால் அவனிருப்பது வடக்கு வங்காளத்தில். தெற்கே வெகுதொலைவில் கடல். அதன் கரையில் கல்கத்தா. இந்தக் காற்று கல்கத்தாவிலிருந்து வருகிறது என்ற நினைவே தான் வீணாகிக் கொண்டிருக்கிறோம் என்ற உணர்வை வலுப்படுதியது. ஆகையால் அவன் அடுத்த வகுப்பில் கரும்பலகையில் வெறும் தட்டையும் அதன்மேல் கோப்பையையும் வரைந்தான்.

பொழுது சாய்ந்தபின் காற்று குறைந்து தேய்பிறையின் தொடக்க காலத்துச் சந்திரனோடு தொங்கியது. குளிர் அதிகரித்தது. தெருவில் தூசி.

செருப்பு அறுந்து போயிருந்தது. தெருவில் நடக்கும்போது இழுத்து இழுத்து நடக்க வேண்டியிருந்தது. அதனாலேற்படும் ஒரு மாதிரியான சத்தம் மக்களின் காலடியோசைக்கு நடுவில் தனியாகக் கேட்கவில்லை. ஆனால் இப்போது முன்னிரவின் ஜனநடமாட்டமற்ற அமைதியில் இந்த அரவம் பிநய்யின் காதில் தெளிவாக விழுந்தது. நள்ளிரவில் தூக்கம் கலைந்தால் கடிகாரத்தின் டிக்டிக் ஒலி இடைவிடாமல், பொருளில்லாமல் கேட்குமே அது போலத்தான் இந்த இழுத்து-இழுத்து நடக்கும் காலடியோசையும். ஒரே மாதிரியான, தடைபடாத, ஆனால் இதமான இந்த ஒலி நிற்கவே நிற்காது, தொடர்ந்து கொண்டே யிருக்கும் என்று பிநய்க்குத் தோன்றியது.

அவன் சட்டென்று நின்றான். காலடியோசையும் ஓய்ந்து விட்டது. அப்படியானால் இது அவனுடைய காலடியோசைதான். அவன் மறுபடி நடக்கத் தொடங்கினான். இழுத்து இழுத்து நடப்பதால் ஏற்படும் ஒலி, பழக்கப்பட்ட, இதமான ஒலி மாறாது, நிற்காது.

இப்பொழுதே செருப்பைப் பழுது பார்த்துவிட வேண்டும். இப்போதே...! அவன் நாற்புறமும் பார்த்தான். ஊஹூம், அதற்கு வழியில்லை... கல்கத்தாவாயிருந்தால் அவனுடைய காலடியோசை மற்ற காலடியோசைகளில் அமுங்கிப் போயிருக்கும். ஆனால் இங்கே வேறு எவருடைய காலடியோசையும் இல்லை.

சாகக்கிடக்கும் நோயாளி ஜன்னி வெறியில் உடம்பைக் குறுக்கிக் கொள்வான், விறைத்துக் கொள்வான். ஏதாவது தேவைப்பட்டால் வாய் பேசமுடியாத நிலையில் கையைக் கண்டபடி ஆட்டுவான், கண்களை அகலமாகத் திறந்து விழிப்பான், அடுத்த நிமிடமே சோர்வில் துவண்டு போய்விடுவான். அதுபோல் செருப்பைப் பழுது பார்த்துவிட வேண்டுமென்று பரபரப்படைந்த பிநய் மறுகணமே துவண்டுபோனான். சாக்... கர் சாக்! சாக்... கர் சாக்! ஒரே மாதிரி ஒலி, ஒரே மாதிரி, இருட்டாயிருக்கட்டும், வெளிச்சமாயிருக்கட்டும், வளர்பிறையானலும் சரி, தேய்பிறை யானாலும் சரி முகச்சவரம் செய்து கொண்டிருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி—ஒரே மாதிரி ஒலி. ஜனநடமாட்ட மிருந்தால்... அதுதான் இல்லையே... ஆகையால் ஒரே மாதிரி ஒலி... ஜட்கா வண்டி போனாலும் சரி, மாட்டு வண்டி போனாலும் சரி, சக்கரங்களின் உராய்வில் சரளைக் கற்கள் அழுதாலும் சரி... கேள்வி கேட்பாரில்லை. யாரும் அடிமையில்லை, யாரும் ஆண்டானில்லை, எல்லாரும் பொதுமக்கள்... சாக்... கர் சாக்...!

ஜன்னி கண்ட நோயாளி கத்துவதன் மூலம் சற்று ஆறுதல் பெற முயல்வது போல் பிநய்யும் சில முரட்டு ஒலிகளையெழுப்பித் தன் சங்கட உணர்விலிருந்து விடுதலை பெற முயன்றான். அப்போது அவனுயை காலடியோசை அவனுக்கு உணர்த்தியது– இந்த ஓசையை நிறுத்தும் உபாயமெதுவும் அவனுக்குத் தெரியாது. இந்த ஊருக்கே தெரியாது; ஆகையால் இந்த 'சாக்... கர் சாக்' தொடரட்டும்!

தன் முழுநாளைய அனுபவத்தை இந்த முன்னிரவு வேளையில், நடந்து செல்லும்போது இந்த மொழியில் வெளிப் படுத்தியதும் பிநய்யின் அடிவயிற்றிலிருந்து தொண்டைவரை சிரிப்பலை ஒன்று வாந்திபோல் திரண்டு வந்தது.

பிநய் நாகரீகமாகச் சிரிப்பதற்குப் பதிலாக ஒரு குடிகாரன் போல் பலமாகச் சிரிக்க முயன்றான். தன் சிரிப்பின் நாற்றத்தை முகர விரும்பியிருக்கலாம் அவன். ஏப்பம்விட அவன் செய்த முதல் முயற்சியை நிறுத்தவில்லை. அவனுடைய குழந்தைப் பருவத்தில் முதல் சோறு உண்ணும் சடங்குக்குப் பிறகு அவனுடைய வயிற்றுக்குள் எவ்வளவு உணவுப் பொருள்கள் போய்ச் சேர்ந்திருகின்றன என்று நினைத்துப் பார்த்தான் அவன்.

எவ்வளவு பொருள்கள் வயிற்றில் குவிந்து, அழுகி... ஒரு போடு போடு வெங்காயம், உருளைக்கிழங்கு, கபாப், ராவிலே விருந்து...

இவ்வாறு நினைத்துவிட்டு அவன் ஓரிரண்டு முறை ஏப்பம் விட முயற்சித்தான். தொண்டைக்குழாயில் சற்று அழுத்தம் கொடுத்துப் பிறகு ஓர் ஏப்பம் விட்டான். அப்போது வாயைத் திறக்க மறந்துவிட்டதால் அந்த ஏப்பத்தின் நாற்றத்தை முகர முடியவில்லை. பிறகு வாயைத் திறந்துகொண்டு இரண்டு முறை முயற்சி செய்தான். "சீ, இதென்ன அசட்டுத்தனம்!" என்று தன்னையே கடிந்துகொண்டு அவன் மேலே நடக்கத் தொடங்கினான். மறுபடியும் அதே ஒலி—சாக்... கர் சாக்! சாக்... கர் சாக்! அதைக் கேட்காததுபோல் அவன் நினைக்கத் தொடங்கினான்—"நான் எங்கே போறதுன்னு தீர்மானம் பண்ணியிருக்கேனா, இல்லையா...? இல்லே, வீட்டைவிட்டுக் கிளம்பறபோது ஒண்ணும் நிச்சயம் பண்ணல. காலையில டீ குடிக்கிற மாதிரி பொழுது சாஞ்சதும் சுதீர் அண்ணாவீட்டுக்குப் போகத்தான் வேணுமா? போய் என்ன செய்யப்போறேன்? நியூஸ் பேப்பரை இன்னொரு தடவை படிப்பேன். வெளியிலே பெஞ்சிமேல படுத்துக்கிடப்பேன்... இல்லாட்டி, அந்தப் பொண்ணு... அவ பேரு என்ன? கோலாபா, டகரா? இல்லே, ஜுயியா? பூனை கீனையா?"

அவனது சிந்தனையின் இழை அறுந்துபோய்விட்டது. ஓரிழை அறுந்ததும் வேறோர் இழை கிடைத்துவிட்டது. சாக்... கர் சாக், சாக்... கர் சாக் ஒலியைச் சற்று மறந்திருந்த அவனை மறுபடியும் ஆக்கிரமித்துக் கொண்டது. சாக்... கர் சாக், சாக்... கர் சாக்...

"இல்லே, இல்லே, சுதீர் அண்ணா வீட்டுக்கப் போகப் போறதில்லை. இதற்குள் அந்த வீடு இருந்த சந்து முனைக்கு வந்துவிட்டான் அவன். அவன் மீண்டுமொரு முறை தனக்கே சொல்லிக்கொண்டான், 'இல்லே, போகப்போறதில்ல!' சந்து முனையில் இடதுபுறம் திரும்பாமல் ஓரிரண்டு காலடிகள் வைத்து விட்டுப் பிறகு அவன் தன்னையே கடிந்துகொண்டான், "இதெல்லாம் என்ன! நல்ல வேளையா சுதீர் அண்ணா வீடு இருக்கு; இல்லாட்டி நாள்பூரா என் வீட்டிலேயே அடைஞ்சு கிடக்கணும்!"

பிநய் இடதுபக்கம் சந்துக்குள் திரும்பினான். சாக்... கர் சாக், சாக்... கர் சாக்... நல்ல அவஸ்தை இது! எல்லாத்தையும் குழப்பி விட்டுடுது இந்தச் சத்தம்! இன்னிக்குப் போய்ப் பாபுயியோட பாட்டு நோட்டிலே படம் வரைஞ்சு தரணும். ஆமா, அந்தப் பொண்ணோட பேரு பாபுயி. சாக்... கர் சாக், சாக்... கர் சாக். ஒரே சத்தம். இருட்டானாலும் சரி, வெளிச்சமானாலும் சரி...

சுதீர் பாபுவின் வீட்டுக்கருகில் வந்ததும் அவனுக்கு முதலில் வருத்தமேற்பட்டது. கல்கத்தாவுக்காக ஏங்கினான் அவன். அம்மா அப்பா தம்பி தங்கைகள் நிறைந்த இந்த ஊர் வீட்டிலிருந்து, நண்பர்கள் நிரம்பிய கல்கத்தா காபி ஹவுசிலிருந்து, பயணிகள் நிரம்பி வழியும் கல்கத்தா டிராமிலிருந்து சுதீர்பாபுவின் வீட்டில் வந்து இறங்கினான். வாசல் கம்பிக் கதவைத் திறப்பதற்காகக் காலடியோசையைச் சற்று நிறுத்திக் கொண்டான். கதவு திறக்கும் போது ஒரு நீண்ட பெருமூச்சு. பிறகு மீண்டும் அதே சாக்.. கர் சாக், சாக்.. கர் சாக்.. அதே ஒலி.

பிநய் ஒரு மாலுமி. அவனுடைய கப்பல் கல்கத்தாத் துறை முகத்தில் நங்கூரமிட்டிருக்கிறது. வங்காளம், அஸ்ஸாம், மத்தியப் பிரதேசம் வரை விரிந்து பரந்துள்ள பின்புலத்தில் முன்னிரவுப் பொழுதைக் கழிக்க வந்திருக்கிறான் அவன்.

அதே, ஒரே மாதிரி ஒலி. அமாவாசையாயிருக்கட்டும், பௌர்ணமியாயிருக்கட்டும், குளிர் இரவானாலும் சரி, கோடை யானாலும் சரி, காட்சி ஒன்றுதான். மாறாதகாட்சி இல்லை, நகரும் காட்சி. காலங்காலமாக இருந்து வரும் வானம், சந்திரன், நட்சத்திரங்கள், மரங்களுடன் இந்தக் காட்சியை அமைப்ப வர்களும் ஜீவனற்றவர்கள். ஆனால் இந்த நிரந்தரத் திரைக்கு முன்னால் அவர்கள் நடிப்பதாகத்தான் ஏற்பாடு. இந்த நடாக நடிகையரோட வாழ்க்கையைக் காப்பியடிப்பதால் கலை பிறக்காது. அவர்கள் மட்டும் கலையைப் படைத்தால் இந்தப் பழைய பின்புலத்தில் எவ்வளவு துன்பியல் இன்பியல் நாடகங்கள் நிகழும்! அதற்குப் பதிலாக இப்போது நிகழ்வது கேலிக்கூத்துதான்.

ஒரே மாதிரி, வெளிச்சமானாலும் சரி இருட்டானாலும் சரி. தேய்பிறையில் நள்ளிரவில் காட்சி சற்று-அந்தி நேரத்தோடு ஒப்பிடுகையில்-மாறுபடும். வளர்பிறைக் காலத்து முன்னிரவும் தேய்பிறைப் பின்னிரவும் வரலாற்று முற்பட்ட காலத்துக்குரியவை. குளிர்காலத்தில் தென்கிழக்கு மூலையில் உள்ள மாமரத்தின் மேல் வெயில் தங்குகிறது, வெயிலைத் தேடிக் கண்டுபிடித்து அங்கு உட்காரலாம். நிலாவைத் தேடி...?

சுதீர் பாபு வீட்டுச் சமையலறை நீளம் குறைவில்லை, ஆனால் அகலம் குறைவு. ரொம்ப அகலக் குறைவுமில்லை. மேலே தகரக்கூரை புதுப்பிக்கப்படவில்லை. சுதீர்பாபு பெரிய பெண்ணின் கலியாணத்தின்போது தரையைச் செப்பனிட் டிருந்தார். அப்போது ஏறக்குறையக் கூரையைத் தொடும்படி கிராதியும் போட்டிருந்தார். மூச்சைத் திணறச் செய்யும்படி வராந்தாவின் ஓர் ஓரத்தில் சுதீர் பாபுவின் அம்மாவுக்காக மடிச் சமையலறை. வீட்டுமனையின் கிழக்குப் பக்கத்தில் மேற்குப்

பார்த்த இரண்டு அறைகள். தெற்குப் பகுதியில் இன்னோர் அறை.

காட்சி ஒன்றுதான், ஒரே காட்சி, வெளிச்சமானாலும் சரி, இருட்டானாலும் சரி... காலைக் காட்சிகள் மாறும். சரத்காலத்துக் காலை நேரத்துக்கு ஓரளவு நிலையான உருவம் உண்டு. மற்றபடி அது மாறும். நடந்து செல்லும் காலை நேரம், ஓடிக்கொண்டிருக்கும் காலைநேரம் மாறிக் கொண்டிருக்கும், எப்போதும் மாறிக் கொண்டேயிருக்கும். நன்பகல் நீரின் ஆழத்தில் அமிழ்ந்த நிலை. மாலை நேரம் இருக்கும்போதே இல்லாமல் போய்விடும்... மலிவான தேங்காயெண்ணெயின் மணம் பொரிக் கிண்ணத்தில். மாலையில் மினுவுக்குத் தலை பின்னிக் கொள்ள வேண்டியிருக்கும். தலை பின்னிக் கொள்ளாமல் வெளியே எப்படிப் போவாள்? அவளுக்குப் பதினைந்து வயது. வெளியே போகாமல் எப்படி யிருக்க முடியும் அவளால்? மினுவின் அண்ணன் நான்-பிநய்-பள்ளியிலிருந்து வந்த பிறகு எனக்குப் பொரியும் வெல்லமும் கொடுக்காமல் எப்படிப் போவாள் அவள்? ஆகையால் எனக்கு அவள் கொடுக்கும் பொரிக் கிண்ணத்தில் அவளது கைத்தேங்கா யெண்ணெயின் வாசம் இருக்கும்.

பாவம், மினுவுக்குத்தான் எவ்வளவு கஷ்டம்...!

முன்னிரவு நேரம். இப்போது நோயாளியின் அறைக்கு வெளியிலுள்ள அமைதி. வெளியுலகில்? துறைமுகத்தின் பின்புலம் எப்போதும் இப்படித்தான் மயானம் போலிருக்குமா? அல்லது இந்த வீடுதான் அப்படியா? என் வீடுதான் அந்த மாதிரியா? அல்லது என் மனந்தான்...? சாக்... கர் சாக், சாக்... கர்சாக்... எல்லாம் நகர்கின்றன. இந்த வீடு... நாமெல்லாரும் இந்த வீடாகிய வண்டியின் பயணிகள். ஸ்டேஷன் எப்போது வரும்?

வடக்குப் புறத்து அறைகளைக் கடந்து உள்ளே நுழைய ஒரு தகரக் கதவு. ஓர் அறையின் மூன்று பக்கங்களிலும் ஜன்னல்கள். மேற்குப் பக்கத்துச் சுவரையொட்டி பாபுயியின் மேஜை. அதன் மேல் சரசுவதி தேவியின் படம், தலைவலி மருந்து டப்பா. பாபுயிக்கு அடிக்கடி தலைவலி வரும். மேஜையின் மேல் விளக்கு. விளக்கின் மேற்புறம் மூடப்பட்டிருக்கிறது. பதினைந்து அல்லது பதினாறு வயதுள்ள பாபுயியின் நாற்புறத்திலிருந்தும் வெளிச்சம் பாய்கிறது. அறையின் மேற்குப் பக்கத்து ஜன்னல் மூடியிருக்கின்றன, கிழக்குப் புறத்து ஜன்னல்கள் திறந்திருக்கின்றன. பாபுயி கிழக்குப் பக்கம் முதுகைத் திருப்பிக் கொண்டு உட்கார்ந் திருக்கிறாள். ஆகையால் அவளுடைய முகத்தைச் சுற்றிக்கொண்டு வெளிச்சம் கிழக்கு ஜன்னல்கள் வழியே வெளியே வருகிறது. பாபுயியின் மேஜை விளக்கின் வெளிச்சம் கிழக்கு ஜன்னல்கள்

வழியே வெளியே வந்து தகரக் கதவின்மேல் மங்கிய ஒளியாகப் பனிபோல் படருகிறது. வெளியில் யாராவது பார்வையாளன் நின்று கொண்டிருந்தால் அவன் விளக்கொளியின் எதிரில் பாபுயியின் முகத்தின் எல்லைக் கோட்டைப் பார்ப்பான் (அது தான் தூய்மை வளையமா? அந்தக் கோடு வட்டமாகத் தெரிகிறது. சில உறுப்புகளை அடையாளங் காட்டும் வளைவுகள் அந்த வட்டத்தில்) அவளது சில முடிகள் தலையோடு படியாமல் அந்த வெளிச்சத்தில் தெரிகின்றன. தான் ஒரு சித்திரமாக இருப்பது பாபுயிக்குத் தெரியாது. தான் ஒரு சித்திரமென்று எந்தச் சித்திரத் துக்கும் தெரியாது. மனிதன் சித்திரமாவான் என்று பார்ப் பவனுக்குத் தெரியும், சித்திரம் மனிதனாகலாம் என்று கவிக்குத் தெரியும். பாபுயி பாடுகிறாள், “நீ வெறும் சித்திரந்தானா?”

தகரக்கதவு வழியே நுழைந்தால், கிணற்றடிக்கும் வடக்குப் புறச் சுவருக்குமிடையில் இருண்ட மூங்கில் வேலியில் ஒரு ஜன்னல், ஜன்னல் கம்பிகளின் நிழல். அறைக்குள்ளே ஜன்னலுக்கு நேரே மேஜை. மேஜைக்கு முன்னால் சந்தன். அவன் தன் விரல் நுனியைப் பல்லில் வைத்துக் கொண்டிருக்கிறான். அவன் மேற்குப் பக்கம் முதுகைத் திருப்பிக்கொண்டு கிழக்குப் புறம் பார்த்தவாறு உட்கார்ந்திருக்கிறான். விளக்கு வெளிச்சம் அவனுடைய முகத்தில் பட்டு ஒரு பாத்திரத்தைப் படைத்திருக்கிறது. ஒளியும் இருட்டும் தற்செயலாகப் படுவதால் ஒரு பாத்திரம் உருவாகுமா? சந்தனுக்கு வலது பக்கத்தில் விளக்கு. அவனுடைய மூக்கு நல்ல எடுப்பாக இருக்கும். ஆகையால் அவனுடைய இடது கண்ணோரத்தில் இருட்டு. அவன் முண்டா பனியன் அணிந்திருக்கிறான்; அகல மான மணிக்கட்டு. விளையாட்டுக்காரர்கள் போல் குட்டையாகக் கத்தரிக்கப்பட்ட தலைமுடி. உறுதியான தாடைகள். ஆனால் கண்களில் மட்டும் ஏன் உறுதியில்லை? சந்தன் ஏன் நகத்தைக் கடிக்கிறான்? முன்புற ஜன்னல் வழியே வெளியேவரும் வெளிச் சத்தில் நகர்ந்து செல்லும் மனிதனின் தலைமட்டும்- உடல் இல்லை. சந்தனுக்குப் பயமா?

அதற்குப்பின் ஒரு சிறிய கொல்லை. அதன் இடது புறத்தில் சமையலறை. வராந்தாவில் மடிச் சமையல் செய்யுமிடத்தில் சிம்னி விளக்கின் பரவலான சுடர் நிழலையும் ஒளியையும் மாற்றி மாற்றி உண்டாக்கிப்பிறகு அதைத் துடைத்து விடுகிறது. வானம் கீழே இறங்கிச் சமையலறைக் கூரைக்குச் சற்றுமேலே வருமானால், வேலியின் இண்டு இடுக்கு வழியே நூலிழைபோல் ஊடுருவிவரும் வெளிச்சத்தால் ஏற்படும் கூரையின் நிழல் அந்த வானத்தில் விழும். வராந்தாவின் ஒரு மூலையில் வறட்டி, கரிக்குவியல், சுள்ளி மூட்டை. கதைகளில் வரும் பயணிகள்

தங்கும் சத்திரத்தில் அவர்களுடைய சாமான்கள் போல் அவை இருட்டில் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன, திடீர் வெளிச்சத்தில் திகைக்கின்றன. மடிச் சமையலங்கணத்தில் தணிந்து எரியும் நெருப்பில் சமையல் செய்து கொண்டிருக்கிறாள் சுதீர் பாபுவின் மனைவி. சிம்னி விளக்கின் பழக்கமான வெளிச்சம் பங்குனிக் காற்றுப் போல் அசையும் போது முப்பது வருடங்களாகக் குடித் தனம் செய்யும் சுதீர் பாபுவின் மனைவி அன்னியமாகத் தோற்ற மளிப்பது ஏன்?

அந்த நேரத்தில் சடப்பொருள்களும் உயிருள்ளவையும் தெளிவாகத் தெரியும். முன்னிரவில் பார்வையிலிருந்து மறைந்துவிடும். முன்னிரவுக் காலம். சிந்தனைக்குரியது இந்த முன்னிரவுக் காலம். நான் சிந்திக்கப் போகிறேன், அண்ணியோடு சில வார்த்தைகள் பேசப் போகிறேன், பிறகு தெற்குப் பக்கத்து வராந்தாவில் படுத்துக் கொண்டு சிந்திப்பேன்-என்ன-என்ன சிந்திக்க நினைத்திருந்தேன், இப்போது என்ன சிந்திக்கிறேன்?

"யாரு?"

அண்ணியின் குரலைக் கேட்டதுமே கண்களை மூடிக் கொண்டு மனக் கண்ணால் அவளைப் பார்க்கலாம். அவள் சிறிய மரப்பலகைமேல் கால்களைத் தூக்கி வைத்துக்கொண்டு, முழங்கால்களின் மேல் கைகளை வைத்திருக்கிறாள். வலது கையில் ஏதாவது கரண்டி இருக்கும். இடது கையில் என்ன? என் காலடிச் சத்தம் கேட்டதுமே அவள் இடுப்புக்கு மேல் உடம்பை உயர்த்திக் கொண்டு கழுத்தையும் நீட்டிப் பார்க்கிறாள்.

"நான்தான் பிநய்" என்று சொல்லிக்கொண்டே சமையலறைப் படிக்கட்டில் காலெடுத்து வைக்கிறான் பிநய்.

"பிநய்யா? வா! வீட்டிலே எல்லாரும் சௌக்கியமா?" பிநய்யின் குரலைக் கேட்டதுமே அண்ணியின் மேலுடம்பு தளர் கிறது. அவள் இடதுகையால் சுள்ளிகளை அடுப்புக்குள் தள்ளு கிறாள். சில பொறிகள் பறக்கின்றன, அவள் கண்களை இடுக்கிக் கொண்டு முகத்தை நகர்த்திக் கொள்கிறாள். தான் கேட்ட கேள்வி முகத்தில் பிரதிபலிக்க அவள் பிநய்யின் பக்கம் திரும்பிப் பார்க்கிறாள். பிநய் எப்போதும் இந்தக் கேள்விக்கு 'உம்' என்று பதில் சொல்லிவிட்டு நிலைப்படியில் உட்காருவான்.

அண்ணி ஏன் தினம் இந்தக் கேள்வி கேட்கிறாள்? பழக்கம் காரணமாகவா? தினமும் ஒரே கேள்விதான். பேலாவுக்கு-அதுதான் அண்ணியின் பெயர்-தான் இப்படி ஒரே மாதிரி பேசுகிறோம் என்ற உணர்வு இல்லை, அவள் இதயபூர்வமாக நெருக்மானவள், ஆனால் அவளுடைய குரலில் தொலைவு தொனிக்கிறது.

"உக்காரு!" என்று அண்ணி சொல்வதற்குள் அவன்

உட்கார்ந்து விட்டான். பிநய் ஒரு சுள்ளியை எடுக்கக் கை நீட்டுகிறான். பிறகு அந்தக் குச்சியால் தரையில் ஏதோ கிறுக்கு கிறான். அண்ணி குச்சியைப் பார்க்கிறாள்,, அவனுடைய கிறுக் கலையும் பார்க்கிறாள். பிநய் குச்சியைத் தூக்கியெறிந்து விடுகிறான்.

"ஸ்கூலுக்குப் போனியா?" அண்ணியின் கேள்வி.

அடுத்தாற்போல் கேள்வி வரும். "இன்னிக்கு சாதத்துக்குத் தொட்டுக்க என்ன?" அந்தக் கேள்வி வருவதற்கு முன் எழுந்துவிட வேண்டும். வேறு யாராவது வந்தால் அண்ணியோடு நெடுநேரம் வம்பு பேசிக் கொண்டிருக்கலாம். ஆனால் அண்ணியிடம் பேச்சு இல்லை. அவள் முப்பது ஆண்டுகளுக்குமுன் பிறந்தகத்திலிருந்து கற்றுக் கொண்டு வந்த வார்த்தைகள் ஐந்தாண்டுகளில் தீர்ந்து போய்விட்டன. இந்த கிராமப்புறம் போன்ற நகரத்தில் வார்த்தை களைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாது. அண்ணியைப் பொறுத்த வரையில் சொற்கள் பிறக்குமிடம் தயாராகவில்லை. அண்ணி ஏனிந்த மாதிரிப் பார்க்கிறாள்? அவளுடைய தோற்றத்தில் ஒரு வகை விடலைத்தனம் இருக்கிறது, அதைப் பார்த்தால் புரிந்து கொள்ள முடியும். அண்ணி தன் குழந்தைகளுக்கு 'பாபுயி, சந்தன், சோனா, ரூபா-' என்றெல்லாம் எப்படிப் பெயர் வைத்தாள்? அந்த நளினம் இப்போது ஏனில்லை, ஏன்? அடுப்பங்கரைச் சூடா? கண்ணில் புகையா?

"சுதீர் வரலியா?" பிநய் எழுந்து நின்றுகொண்டு கேட்டான்.

"இல்லே.. நீ எங்கே கிளம்பிட்டே?" அடுப்பைப் பார்த்துக் கொண்டே அண்ணி கேட்டாள்.

"அந்த ரூமிலே இருக்கேன்.. சுதீர் அண்ணா இன்னும் வரலியா?"

"டியூசனுக்குப் போயிருக்கார்."

என்ன சிந்திக்க நினைத்திருந்தேன்? முன்னிரவு வேளையில் சிந்திக்க வேண்டிய விஷயங்கள்.. ஒன்று— சோனா, ரூபமா, மீரா, இவர்களைப்பற்றி ஒன்றும் தெரியாது. இரண்டு— பாபுயி, மூன்று— நான். நான்கு— அண்ணி. ஐந்து— சுதீர் அண்ணா..

பாபுயி என்ன நினைக்கிறாள்?

சுசித்ரா மித்ராவின் படம் ஒன்று வரைந்து தரச் சொல்லியிருந்தாள் பாபுயி. நான் தரவில்லை, தரப் போவதில்லை, பாபுயி, நீ படிப்பை நிறுத்திவிடு, பாட்டை நிறுத்திவிடு! துணிமணி களைத் தோய்த்து அலசிப் பிழி, சமையலறையைக் கழுவி விடு, உன் கையில் மஞ்சள் மணக்கட்டும், உடம்பில் மஞ்சள் பூசிக் கொண்டு, 'நல்வரவு' என்று எழுதப்பட்டிருக்கும் சிவப்பு நெட்டித் தோரணத்துக்குக் கீழே நடந்துபோய்விடு. இல்லாவிட்டால் நீ சாக வேண்டியதுதான். நீ செத்துப் போ!

பிநய்க்குச் சிரிப்பு வந்தது. உள்ளூர அல்ல, உதட்டில். பாபுயி பாசு சாகத்தான் வந்திருக்கிறாள், அவளை யார் காப்பாற்ற முடியும்? முன்னிரவு நேரத்தில் இந்த மாதிரி அமங்கலமாக நினைக்கக்கூடாது, தெற்குவாசலைத் திறந்தால் சாக வேண்டியதுதான். வெகுநாட்களாகப் படுத்த படுக்கையாயிருக்கும் நோயாளியின் சிரிப்புப்போல் பிநய் தன் சிரிப்பைத் தானே பார்த்துக் கொண்டான். அதனால்தான் அவனுடைய சிந்தனையும் நோயாளியின் சிந்தனையாயிருந்தது...

முன்னிரவு வேளையில் சரசுவதியின் படத்துக்கருகில் தலைவலி மருந்தைப் பார்த்துகொண்டே பாபுயி சுசித்ரா மித்ராவைப் பற்றி நினைக்கிறாளா? நினைக்கிறாள். அது தவிர அவளுடைய வயதுக்கேற்ற மற்ற நினைவுகளும் நினைப்பாள். எல்லா நினைவுகளும் ஒன்று சேர்ந்து அதனால் மனது பெரிதாகி, மனது பெரிதாகி...

பாபுயி சுசித்ரா மித்ராவின் படம் கேட்டிருக்கிறாள். அதை வரைய வேண்டும். அதற்குமுன் அவளை அந்தப் பாட்டைப் பாடச் சொல்லிக் கேட்கவேண்டும் "என்னை இருளில் வைத்திருக்காதே, என்னைப் பார்க்க விடு!"

பாபுயி, உன் 'நீ' எங்கே? எனக்குக் காட்டுவாயா? என்னுடைய 'நான்' வெறும் சூனியம். வாழ்நாள் முழுதும் சூனியத்தைத் தேடல். ஐயோ!

"பிநய், டீ போட்டுத் தரவா?"

"வேணாம்"

பேலா இவ்வளவு நேரம் ஏதாவது சிந்தித்துக் கொண்டிருந்தாளா? இல்லை. பேலா என்பது சிந்தனையல்ல, உடல். அது அறிவு அல்ல, இருப்பு. நானும் அப்படித்தான். ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு தனித்துவம் உண்டு. மனிதன் நகரத்தில் வசிக்கிறான். என்னிடம் இருபத்தாறு ஆண்டுகளின் பாவம் இருக்கிறது. நான் பதினைந்து ஆண்டுகளின் எளிமையை வேண்டினேன்.

பாபுயி, அந்தப் பாட்டைப் பாடு 'நான் என்னைப் பார்க்க விடு!'

இங்கே உடலின் உந்துதல்தான். உள்ளத்தின் உந்துதல் எங்கே? மனம் ஒரு துண்டுப் புல், மிருதுவான, சிறிய புல்-மனமே, நீ எங்கே? மனமே, நீ எங்கே? மனமே நீ என் உடலுக்குள் வா! இறங்கி வா, வா!

உள்ளத்தின் தொடர்பாகப் புயலைப் பற்றி நினைத்ததுமே வானம், கடல், மலை எல்லாம் ஒன்றாகக் கலந்து அவன் மனதில் ஒரு விசித்திரமான சித்திரத்தைத் தோற்றுவித்து விட்டது. இந்தச்

சின்னச் சின்னக் கூச்சல்களைக் கேட்டுக் கொண்டிருப்பதால் சில பெரிய விஷயங்கள் கவனத்துக்கு வருவதில்லை. பெரிய, விசாலமான-அதாவது ஆங்கிலத்தில் "வொய்டு'-காட்டுத்தனமான-அதாவது ஆங்கிலத்தில் 'ஒயில்டு'-விஷயங்கள் (வொய்டு என்ற வார்த்தைக்கு எதுகையாகத்தான் 'ஒயில்டு' என்ற சொல்லும் மனதுக்கு வந்தது என்று தெரிந்தும் பிநய் அந்தச் சொல்லை ஒதுக்கவில்லை) வொய்டுக்குள் ஒயில்டும் இருக்கத்தான் செய்கிறது. இல்லாவிட்டால் சித்திரம் தீட்டும் விருப்பம் எப்படி உண்டாகும்?

இங்கு கண்ணுக்குத் தோன்றும் சித்திரம்— விளக்குக்கு நாற்புறமும் தெளிவற்ற முகங்கள்— குழந்தைகளின் முகங்கள்— அவர்களை அடையாளம் தெரியவில்லை. மனித உடலின் கோட்டுருவம், நிறம், பிரகாசமான வெளிச்சத்தில் நிழல் விழுகிறது. அண்ணியின் இடுப்புக்கு மேல் உடல் ஏதோ காலடியோசை கேட்டுச் சட்டென்று சுறுசுறுப்பாகிறது, கொடி போன்ற கோடு... இரண்டு கால்களுக்கிடையே முகத்தை வைத்துக்கொண்டு படுத் திருந்த நாய் சட்டென்று தலையைத் தூக்குகிறது... அழகான மிருகம்... அதன் கண்களில் மனிதத்தன்மை... அண்ணியின் தோற்றத் திலிருந்த அந்த இளமை எங்கு போய்விட்டது...?

பிநய் கண்களை மூடிக்கொண்டு தேடுகிறான்- செதுக்கப் பட்ட சிலையில் மறைந்திருக்கும் கோடுகளைத் தேடுவதுபோல. அண்ணியின் இளமை எந்தக்கோட்டில் மறைந்திருக்கிறது?

நல்ல அழுத்தமான நிறத்தில் பெரிதாக ஏதாவது, அகலமாக ஏதாவது, பெரிதாக, பெரிதாக... முன்னாலுள்ள எல்லா விஷயங் களின் கோடுகளும் குறுகியவை, நிறங்கள் ஜீவனற்றவை... சுசித்ரா மித்ராவின் சித்திரத்தில் என்ன பார்க்க விரும்புகிறாள் பாபுயி? நான் என்ன பார்க்க விரும்புகிறேன்? பார்க்க விடு! என்னுடைய 'என்னை'ப் பார்க்க விடு...!

ககனேந்திர நாத் தாகூர் தீட்டிய யட்சபுரி-(தெளிவற்ற வெளிச்சம், ஒளியும் நிழலும் முக்கோண வடிவமாக விழுவதால் சில சமயம் ஒரு தங்கத் தூணின் தோற்றம், சில சமயம் மனித உடலின் சாடை... நந்தினியின் விரிந்த சில வில்கள், அரளி மலர்க் கொத்தின் சிவப்பு-மிகவும் சிக்கலானது- வேண்டாம்).

அபநீந்திர நாத் தீட்டிய ஷாஜஹான்-(மிகவும் சோகமானது, பரிதாபமான உருவங்கள் இருக்கின்றனவோ இல்லையோ எனும் படி; குளிர்காலத்தில் கண்ணாடியின் மேல் சூடான மூச்சுக் காற்று பட்டால் ஏற்படும் மங்கல் திரைபோல் அந்த உருவங்களின் வரைகோடுகளும் மறைந்து போய்விடலாம் - மிகவும் நுட்பமான உருவங்கள்-தாங்க முடியாது).

ரவீந்திரரின் நடனச் சித்திரம்-(கால் கைகளின் இயற்கையான

அசைவுகளில் பண்டைய எகிப்தின் இயற்கைத்தன்மை- ஆங்கிலத்தில் 'எலிமென்ட்டாலிட்டி' எலிமென்ட்டாலிட்டிதான் வேண்டும், ஆகா! ஹீப்ரூ மந்திர உச்சரிப்புபோல் 'எ-லி-மெ-ன்-ட்-ட-ல்'- அழுத்தமான கோடுகள், ஆனால் இவ்வளவு சிக்கலான வர்ணங்கள் ஏன்? நடனக்காரியின் முகபாவனை ஏன் சைத்தானுக்கு அஞ்சலி செய்வது போலிருக்கிறது? ஒரு பிணத்தை மாதிரியாகக் கொண்டு தீட்டப்பட்ட சித்திரம் போன்ற மனிதத் தன்மையின்மை ஏன் அவள் முகத்தில்? இந்த அழுத்தமான கோட்டிலும் வர்ணத்திலும் சாவதும் பிறகு ·உயிர்ப்பதும் எங்கே...? பாபுயி, இதனால்தான் எனக்கு உன் பாட்டு பிடித்திருக்கிறது. அழுத்தமான குரல், தீர்க்கமாக, தாராளமாக, சுசித்ராவின் குரல்போல... பாபுயி, நீ சுசித்ரா மித்ராபோல் ஆவாய்! பாபுயி, நீ சுசித்ரா மித்ரா ஆவாயா?)

நந்தலால் போஸ் தீட்டியுள்ள சிவன்-(இல்லை, இல்லை... இல்லை! வீட்டில் அன்னபூரணியை வைத்துக் கொண்டிருப்பவர் அன்னமின்றி அழுவாரா? இது பிசகு, பெரிய பிசகு... வேண்டாம், இது வேண்டாம்!).

ஜாமினிராயின் ஜன்மாஷ்டமி ஓவியம்-(ஆகா, ஆகா! மூன்று முறை வளைந்த உடலுடன் புல்லாங்குழல் கிருஷ்ணன்... மூன்று வளைவுகள் எங்கே? முழங்கால் மட்டுந்தான் சற்று வளைந் திருக்கிறது. உடல் முழுவதின் பாரமும் வெள்ளமாக வந்து அந்த முழங்கால் மேல் இறங்கியிருக்கிறது. சால மரம் போல் நிமிர்ந்த உடல், மீன் போன்ற கண்கள்... ஒவ்வொரு கண்ணும் ஒரு முழு மீனைப்போல... இவ்வளவு தெளிவை, இவ்வளவு எளிமையை, இவ்வளவு வியப்பைத் தாங்கிக் கொள்ளும் திராணி எனக்கில்லை).

ஃபான் காக் தீட்டிய 'ஓர் ஆற்றின் மேல் காக்கைகள்' ஓவியம்-(ஐயோ, என்னைக் காப்பாற்றுங்கள்! என்னால் இந்த வேதனையைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை! கறுப்புக் காகங்கள், வானத்தில் அசைவு, தூக்கிய தலை விலங்கிடப்பட்ட சிறகுகள், புயல், கீழே மகா காவியங்கள் வருணிக்கும் ஆறு... ஐயோ, என்னால் தாங்க முடியவில்லையே! என்னைக் காப்பாற்றுங்கள்! யார் என்னைக் காப்பாற்றப் போகிறார்கள்? கறுப்புக் காகத்தின் சிறகுகளுக்குப் பின்னால் சூரியன் காணாமற் போய்விட்டான். இந்த இருளின் ஈர்ப்பில் கீழே நீர்பெருக்கு கரை புரண்டு ஓடுகிறது. என்னால் கரைகாணா வெள்ளத்தில் மிதக்க முடியாது! என்னைக் கரையில் சேர்த்து விடுங்கள், எனக்குத் தங்க இடம் கொடுங்கள்! பாபுயி, நீ எங்கே...! காகங்கள் இரத்தம் உறிஞ்சுபவையாக ஆகிவிட்டன. இனி இரத்தமில்லை என் நெஞ்சில். அந்தக் கருத்த கும்மிருட்டில் என் கொலைகாரக்

காவிய நதி சிவந்து விட்டது-பாபுயி, நீ எங்கே? மனமே, நீ எங்கே? நான் எலும்புக்கூடாகி விட்டேன்!)

நந்தலால் போஸின் அர்ஜுனன்-ஆகா, படுத்திருக்கும் நிலையில் அர்ஜுனன், மிகவும்அனாயசமாக இழுக்கப்பட்ட கோடுகள், பெரிய முகம், விசாலமான மார்பு, தொடை உருண்டையாக முழங்காலில் வந்து இறங்கியிருக்கிறது. உடல் பாரம் ஒரு முழங்கையின் மேல் விழ, அந்தக் கையின் தசை நார்கள் நிலத்தாமரையின் இதழ்கள்போல், இன்னொரு கை அடைக்கலம்போல, எதிர்ப்பது போல்- உடம்பின் தசை நரம்புகளிலெல்லாம் திகைப்பின் சாயல்-தன் முன்பாதங்களுக்கிடையே முகத்தைப் புதைத்திருக்கும் சிங்கமொன்று ஏதோ சலசலப்பொலி கேட்டுத் திடுக்கிடுவது போல, முதுகு ஓர் அடைக்கலம்போல- அரச மரத்தின் அடிமரம் போல, (எனக்குக் கிடைத்துவிட்டது- இயற்கையுணர்வுகளோடு நளின உணர்வுகளின் கலவை- எனக்குக் கிடைத்துவிட்டது! நான் சித்திரம் வரையப் போகிறேன்-அது கடல்போல் கரடு முரடாயிருக்கும், அசையும் பொருளும் அசையாப் பொருளும் நிறைந்த உலகம்போல் அழகாயிருக்கும், காவியம்போல் மகத்தானதாக இருக்கும். இசைக்கவிதை போல் சோகமாயிருக்கும்-நான் ஓவியம் தீட்டப்போகிறேன்) பாபுயி, நான் அர்ஜுனன்...!

இந்தச் சபதம் செய்ததும் பிநய் கண்களைத் திறந்து பார்த்துவிட்டு மறுபடி மூடிக்கொண்டான். அந்த ஒரு கணத்துக்குள் அவன் பார்வையில் பட்டவை-சமையலறையின் இடுக்குகள் வழியே ஒளித்துளிகள் மின்மினிப்பூச்சிகள் போல் கொல்லையில் பறக்கின்றன; இந்த அறையிலிருந்து வரும் வெளிச்சம் நனைந்த சேலைபோல் நிலைப்படியில் விழுந்து கிடக்கிறது; அந்தப் பக்கத்து இரு அறைகளின் வெளிச்சம் பனிபோல் மங்கலாகத் தெரிகிறது. 'எனக்குக் கிடைத்து விட்டது, நான் ஓவியம் தீட்டப் போகிறேன்'- இந்த மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு அவன் கண்களைத் திறந்துகொண்டான், இந்த மந்திரத்தைச் சொல்லிக் கொண்டே அவன் கண்களை மூடிக்கொண்டான். அப்போது நள்ளிரவின் ஆழத்திலிருந்து இன்னொரு மயானத்தின் அழுகை வெகு தொலைவிலிருந்து கேட்கும் ஓநாயின் ஊளையொலிபோல் ஒலிப்பதை உணர்ந்தான். விளக்கின் தெளிவற்ற வெளிச்சத்தில் உடைந்த கோடுகளாய்த் தெரிகிறது முகம்; விளக்கின் வெளிறிய ஒளியில் அழுத்தமான நிறங்களும் மங்கிக் காண்கின்றன. நனைந்த சேலை போன்ற ஒளி, மின்மினி போன்ற ஒளி, கொடி போன்ற உடலின் கோட்டுருவம், திடீரென்று தோன்றித் திடீரென்று காணாமற்போன இளமை, வேலியின் மேல் சாளரத்தின் நிழல்,

சுவரில் சாளரத்தின் நடுவில் இளமையின் கோபப் பார்வை. முதுகைத் திருப்பிக் கொண்டிருக்கும் இளம்பெண்ணுக்கு முன்னால் தலைவலி மருந்து— இவையெல்லாம் பிநய்யைச் சூழ்ந்து கொள்கின்றன. பிநய் பரிதாபமாகச் சொல்லப் பார்த்தான் "நான், பிரசன்ன நாராயண் பள்ளியின் டிராயிங் மாஸ்டர்-நான் ஓவியம் தீட்ட மாட்டேன், மாட்டேன்!"

"யாரு? பிநய் சித்தப்பாவா?"

"ஆமா"

"பேசாம படுத்துக்கிட்டிருக்கீங்களே?"

"பின்னே என்ன செய்யறது..? படிச்சு முடிச்சுட்டியா?"

"ஹூம், படிக்கப் பிடிக்கலே..."

"என்ன செய்யப் பிடிக்கும்?"

"பாட்டுப் பாட..."

"பாடு"

"ஊஹூம், அம்மா திட்டுவா..."

"திட்டமாட்டா... நான் சொல்றேன்..."

"இன்னிக்கு நரேன் சித்தப்பா வீட்டுக்குப் போயிருந்தேன். அவங்க வீட்டிலே கீழகுடியிருக்கறவங்க என்னைப் பாட்டுப்பாடக் கூட்டிக்கிட்டுப் போனாங்க."

"என்னென்ன பாட்டுப்பாடினே?"

"ரொம்பப் பிடிச்சிருந்தது."

"ஏன்?"

பாபுயி பதில் சொல்லவில்லை.

கொல்லையில், மடிச் சமையல் பகுதியின் வேலியிலிருந்த இடுக்குகள் வழியே வந்த வெளிச்சம் மின்மினிப் பூச்சிகளாகத் தெரிந்தது. அவர்களிருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வதைத் தவிர்ப்பதற்காக அந்த வெளிச்சம் விழுந்த இடத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்தச் சிக்கலான ஒளிச் சித்திரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கையில், இன்று முழுவதும் காற்று பங்குனி மாதக்காற்றுபோல் தாறுமாறாக வீசிக் கொண்டிருந்தது என்பதை பிநய் நினைவு கூர்ந்தான். இதன் விளைவாக இயற்கையிலும் சரி, அவனுடைய உடம்பிலும் சரி ஒரு வெறுமையுணர்வு தோன்றியிருந்தது. வெளிச்சம் விழுந்திருக்கும், இடத்தையே பார்த்துக் கொண்டிருப்பதால் பாபுயி தனக்கு நிச்சயம் ஏற்படவிருந்த வீழ்ச்சியிலிருந்து தப்பியிருக்கலாம். அவள் முகத்தில், கண்களில் சோகத்தின் சாயை-அது தன்னைத் தொலைவில் இழந்துவிட விரும்புகிறது, இருவருக்குமிடையே அந்தக் கொல்லையை மையமாகக்கொண்டு ஒரு மௌனம் நிலவத் தொடங்கியது. எந்த நிமிடமும் ஒலி ஒரு பெருமூச்சுடன்

கருச்சிதைவை விளைவிக்கலாம். அந்தப் பேரழிவைத் தடுப்பதற்காகவே அவர்களிருவரும் தங்கள் முகபாவனையை இயற்கையாக வைத்துக்கொண்டு தாங்கள் எதிலோ கவனமா யிருப்பது போல் காட்டிக் கொண்டார்கள். அப்போது அவர்களிரு வரின் கண் முன்னால் ஏதோ ஒரு வகை ஏக்கம் பல உருவங் களெடுத்துச் சுக்குநூறாக உடைந்தது, பிறகு வேறு உருவங்களாக மாறி, மறுபடி உடைந்து, புதிய புதிய உருவங்கள் சமைக்கத் தொடங்கியது.

ஹீஸ்டீரியா நோய்க்காளான நோயாளி தெளிவும் திண்மை யுமற்ற தோற்றங்களுடன் போராடிக் கொண்டு பருப்பொருள் களைப் பரிதாபமாகப் பார்ப்பது போல் அவர்களிருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். மார்பில் பால் வற்றிவிட்ட தாய் போலச் சிரித்தான் பிநய். தாய்க்குப் பால் வற்றிவிட்டது. ஆனால் குழந்தைகளுக்குப் பால் தேவை. ஒரு பிள்ளை ஆரோக்கியமான. பால் சுரக்கும் தாயைக் கண்டுபிடித்து அவளிடம் போய்விட்டான்.

பிநய் சட்டென்று பாபுயியின் பக்கம் திரும்பிக் கேட்டான். “நரேன் பாபு வீட்டிலே என்ன நடந்ததுன்னு நீ சொல்லலியே!”

பாபுயி இவ்வளவு நேரம் முழங்கால்களுக்கிடையே முகத்தை மறைத்துகொண்டு உட்கார்ந்திருந்தாள். இப்போது அவள் சப்பணங் கட்டிக்கொண்டு உட்கார்ந்தாள். தலையைக் குலுக்கி முடியை ஒரு தடவை சரிசெய்து கொண்டாள். அவள் கதையைக் கேட்பதற்காக பிநய்யும் தன்னைத் தயார் செய்து கொண்டான்... அவன் கண்ணுக்கு பாபுயி ஒரு புறாவைப் போலத் தோன்றினாள்.

பிறகு திடீரென்று ஒரு சோகம் ஒலியாக உருப்பெற்று பாபுயியின் தொண்டையிலிருந்து வெளிப்பட்டது. அவள் மேல் ஸ்தாயியில் பாடத் தொடங்கினாள்-“இரவில் என் மனத்துக்கு, என்ன சொல்லிச் சென்றாய் நீ?”

இந்தச் சில வார்த்தைகளுக்குள் தாளச் சந்தம் குதித்து வந்தது. முதலில் ‘கீ ஜானி’ (எனக்கென்ன தெரியும்?) என்ற சொற்கள் கீழ் ஸ்தாயியில் நிதானமாக ஒலித்தன. பிறகு அதே இரண்டு சொற்கள் மேல் ஸ்தாயியில் இன்னும் இதமாக ஒலித்தன. ஒலிகளின் மோதலில் சோகத்தின் சாயை.

‘ஷே கீ ஜாகரணே’ (ஒவ்வொரு சொல்லுக்கும் பிறகு ஒரு சிறு அலை, மகிழ்ச்சி, தயக்கம், ஐயம், ஆர்வம்). மறுபடியும் கீழ் ஸ்தாயியில் ‘கீ ஜானி’, (மூடிய கண்கள்). இந்தக் கொல்லையில் மாமரமிருப்பதால் நிலவு தரையிறங்கவில்லை; அங்கு வெளிச்சம் மங்கலாக, இருள் போலவே இருக்கிறது.

பாட்டு தொடர்கிறது-‘நானா காஜே நானா மதே ஃபிரி

கரே ஃபிரி பதே' (பல அலுவலாக, 'பல எண்ணங்களுடன் வீட்டில் சுற்றுகிறேன், வீதியில் அலைகிறேன்). இந்த அறையிலிருந்து அந்த அறை, அந்த அறையிலிருந்து இன்னோர் அறை... தெருவில் தனியாக... எப்போதும் இரவும் பகலும் காதில் ஏதோ சொல்லி விட்டுப் போகிறான்... மாலை நேரம் மினுவை அழைக்கிறது. என் பொரிக் கிண்ணத்தில் தேங்காயெண்ணெய் மணம். அம்மாவை இரவில்–அம்மா, உனக்குத் தூக்கம் வருகிறதா?

'ஷே கதா கீ அகோசரே பாஜே க்ஷணே க்ஷணே'(அந்த வார்த்தை எனக்குத் தெரியாமல் எதிரொலிக்கிறது ஒவ்வொரு கணமும்). எனக்குத் தெரியவில்லை, புரியவில்லை. என்கண்ணுக்குத் தெரியும் என் உடலுக்குப் பின் எங்கேயோ, அல்லது இந்த உடலுக்கு வெளியே எங்கோ இதயம் என்ற பொருள் இருக்கிறது. அது எனக்குத் தெரிந்துவிட்டால்! எனக்குத் தெரியவில்லை, புரியவில்லை. ஐயோ, ஐயோ!

'ஷே கதா கீ அகாரணே ப்யத்திச்சே ஹ்ருதய்' (அந்தப் பேச்சு காரணமின்றி என் இதயத்தை வருத்துகிறது). மாதா கோவிலின் பிரார்த்தனைப் பாடல்போல் ஒரே சமயத்தில் நான்கு ஒலிகள், கடைசி ஒலி இழுத்து ஒலிக்கப்படுககிறது. 'ஏ கீ பய்' (இது என்ன பயம்) என்ற சொற்கள் ஒலிகளையெழுப்ப, கூடவே இன்னொரு அலை 'ஏ கீ ஜய்' (இது என்ன வெற்றி...) அலைக்குப் பின் அலை, அலைக்கு மேல் அலை, கரை நிலை குலைகிறது. ஒரு பெரும் பிரார்த்தனை கடலலை போல் எழுந்து மோதி உடைத்துத் தூளாக்கி அழிக்கிறது, அடித்துக்கொண்டு போகிறது, மூழ்கடிக்கிறது. அற்பமான தசையைக் கரைத்து, எலும்பின் ஊனை வெளிப்படுத்தி, இரத்தக் குழாய்களின் இரத்தத்தை வெளியே பெருகச் செய்து, இரத்தச் சிவப்பான பவளத் தீவைச் சமைக்கிறது. ஆகா, படைக்கிறது... இர்த்தச் சிவப்பு... படைப்பு... படைப்பு. உலகம் முழுதும் காற்றின் அட்ட காசம்- படைப்பு. எ-லி-மெ-ன்-ட்-ட-ல், லி-ரி-க-ல்... நான் ஓவியம் தீட்டுவேன், பாட்டுப் பாடுவேன், சமுத்திரம் பார்ப்பேன். ஏ பெண்ணே! கழுத்தை உயர்த்திக் கொண்டு, வறண்ட உதட்டோடு, என்ன ஆர்வத்தில், என்ன வேதனையில் சிலுவையிலறையப்பட்ட கிருஸ்துவின் காலடியில் ஒரு பக்தைபோல் உட்கார்ந்திருக்கிறாய்? ஐயோ, இந்த இருபத்தாறு வயதிலேயே அகாலத்தில் மூப்படைந்த விட்ட நான் முகத்தை முழங்கால்களுக்கிடையே வைத்துக் கொண்டு, அட்லஸ் தேவதைபோல் முதுகை அகலமாக விரித்துக் கொண்டு என்ன சோகத்தில், எந்த வேதனையில் பாட்டுக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்? ஆழ்ந்த இரவில், இந்த நள்ளிரவில் என்ன சொல்லிவிட்டுப் போகிறான் என் மனதில்? பொறுக்க

முடியவில்லை, பொறுக்க முடியவில்லை… அந்த வார்த்தையை அவன் மீண்டும் மீண்டும் காதில் சொல்கிறானா? ‘ஆர் நோய், ஆர் நோய்’ (இனி வேண்டாம், இனி வேண்டாம்)-அமைதியான பார்வை, தியானப் பார்வை, பாதி மூடிய கண்கள்-சிவனின் தவம்போல்-இரண்டு புருவங்களுக்கருகில் இரண்டு நீளமுடிகள்… புல்லாங்குழல் ஒலிப்பது மனத்திலா அல்லது வனத்திலா? புல்லாங் குழலிசைத்து அழைப்பது யார், என்ன சொல்லி அழைக்கிறார், தெரியவில்லை, தெரியவில்லை… ‘ஷே கதா கீ நானா சுரே போலே மோரே சலோ தூரே’ (அந்தச் சொல்லைப் பல சுரங் களில் எனக்குச் சொல்லிவிட்டுப் போகிறாய் தொலைவில்) ஒவ் வொரு நான்கு சொற்களிலும் சிறிய அலை, தியானத்தின், உள்ளத்தின் குரல்… காதுகளை உயரத் தூக்கிக்கொண்டு கஸ்தூரி மான், பிரார்த்தனைகளால் சின்னாபின்னமான கரையின் லயிப்பு… தொலைவுக்கு, தொலைவுக்கு-தொலைவில் ஆறு கடலுடன் சங்கமிக்கும் இடத்துக்கு, தொலைவில் நடுக் கடலுக்கு, தொலைவில் கடல் மண்ணுக்கு, நீலக்கடலின் கொந்தளிக்கும் ஆழத்தில், தொலைவில் கடலின் அடித்தளத்தின் ஆகாயத்தில்! என் நாளங்களிலிருந்து இரத்தத்தை, எலும்பிலிருந்து ஊனை வெளியே எடுத்துக் கொள்… ஒரு பார்வையின் தீவு, பவளத் தீவு, இரத்த நிற உணர்ச்சிப் பெருக்கின் தீவை உண்டாக்கு. சிறு பெண் பாபுயி, நான் என் கைகளைக் குவித்துக்கொண்டு என் பாவங்களனைத்தையும் உன் காலடியில் கொட்டுகிறேன்.

ஆறு மலையிலிருந்து கடலுக்குப் போகிறது. கங்கையும் பிரும்மபுத்ராவும் கொண்டு வந்து சேர்த்துள்ள வண்டல் மண்ணில் ஒரு நாடு, புவியியலில் ஒரு பெயர், உலகத்தில் சில மனிதர்கள்-இயற்கையின் சில அழகுகளை உண்டாக்கு. ஆறு கடலுக்குப் போகிறது— ‘போ தொலைவுக்கு!’ - முகத்துவாரம், கங்கையின் முகத்துவாரம், கல்கத்தா ஒரு துறைமுகம், கல்கத்தா ஒரு பெயர், கடற்கரையில் - அதற்குப் பின்னாலும் பக்கத்திலும் எவ்வளவு பெயர்கள்! கல்கத்தா, அதற்குப்பிறகு கடல். பாகீரதி நதிக்கரையி லுள்ள ஒரு துறைமுகம் கல்கத்தா - அஸ்ஸாம், வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா, உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம் இவை யெல்லாம் கல்கத்தாவின் பின்புலம். அதற்குப்பின் நடுக்கடல்.

இந்த இருட்டில் அவர்களிருவரும் ரவீந்திரரின் ஒரு பாடலின் கையெழுத்துப் பிரதியாக ஆகிவிடுகிறார்கள். அடிக்கப்பட்ட சொற்கள், உடைந்த பாடல் வரிகள், இங்குமங்கும் சிதறிய கையெழுத்துக்கள்… இடைவெளிகளில் நிரம்புகிறது இசை…

(ஏப்ரல், 1960)

# கதாசிரியர் அறிமுகம்

*தாராசங்கர் பந்த்யோபாத்தியாய் (1889 - 1971)*

*சரத்சந்திரருக்குப் பிறகு வங்காளிக் கதையிலக்கியத்தின் தலைவர். சிறுகதை, நாவல், நாடகம், பாடல்கள் எழுதுவதில் தேர்ந்தவர். அவரைப்பற்றி ரவீந்திரரின் கூற்று நினைவு கூரத்தக்கது– "மண்ணையும் மனிதனையும் அறிந்தவர், அவற்றுடன் இணைந்தவர்." இந்த இணைப்பு வெளிப்புறத்தைச் சார்ந்ததல்ல, உள்ளார்ந்ததாகும். சரத் நினைவுப் பரிசு (1947), ரவீந்திரர் நினைவுப் பரிசு(1955), சாகித்திய அகாதமிப் பரிசு (1956), ஞானபீடப் பரிசு(1966) பெற்றவர். கல்கத்தா, வடக்கு வங்காளம், ஜாதவ்பூர், ரவீந்திர பாரதி பல்கலைக் கழகங்களின் கௌரவ டாக்டர் பட்டம் பெற்றவர். மாநிலங்களவையின் நியமன உறுப்பினராகவும் சாகித்திய அகாதமியின் ஃபெலோவாகவும் இருந்திருக்கிறார். இவருடைய கதைகளும் நாவல்களும் பல இந்திய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன, திரைப்படங்களாகவும் ஆக்கப் பட்டுள்ளன. பீர்பூம் மாவட்டத்தில் லாப்பூர் கிராமத்தில் பிறந்து கல்கத்தாவில் மரணமடைந்தார். பீர்பூமின் சிதைந்த ஜமீன்தார் குடும்பம் ஒன்றைச் சார்ந்தவர். தொழில்–எழுத்து. இந்திய அரசின் 'பத்ம பூஷண்' விருது பெற்றவர்.*

*பனஃபூல் (1899 - 1979)*

*உண்மைப் பெயர் பலாயி சாந்த் முகோபாத்தியாய். தொழில்– மருத்துவம். கல்கத்தா மருத்துவக் கல்லூரியில் பயின்று, பிறகு நீண்ட காலம் பாகல்பூரில் மருத்துவப் பணி புரிந்து விட்டுப் பின்னர் கல்கத்தாவில் வசிக்கத் தொடங்கினார். கவிதை, கதை, நாவல், நாடகம், கட்டுரை எழுதுவதில் நிபுணர். உள்ளடக்கத்தின் பிரகாசத்திலும், கட்டமைப்புத் திறனிலும் சிறந்த எண்ணற்ற சிறுகதைகள் எழுதியுள்ளார். கல்கத்தா பல்கலைக்கழகத்தின் சரத் நினைவுப் பரிசு (1952), ஆனந்தா பரிசு (1961), ரவீந்திரர் நினைவுப் பரிசு(1962) பெற்றவர். இவருடைய கதைகள்— நாவல் களின் பாத்திரங்களின் பல்வகைத் தன்மை வாசகரை ஈர்த்து வியப்பிலாழ்த்துகிறது. இவர் 1975 ஆம் ஆண்டில் 'பத்ம பூஷண்' விருது பெற்றார்.*

### அசிந்த்ய குமார்சென் குப்தா (1903 - 1976)

'கல்லோல்' குழுவின் முக்கிய எழுத்தாளர்களில் ஒருவர். கதை. நாவல், கவிதை, நாடகம், வாழ்க்கை வரலாறு, குழந்தை இலக்கியம் படைப்பதில் சிறந்தவர். கூரிய பார்வை, ஆழ்ந்த மனிதாபிமானம், அளவற்ற பரிவு இவை இவருடைய படைப்புகளில் நிறைந்துள்ளன. நீதித்துறையில் பணிபுரிந்து மாவட்ட நீதிபதியாக ஓய்வு பெற்றார். இவரது கூர்மையான ஆய்வுப் பார்வை கிழக்கு வங்காளத்து ஏழை முஸ்லிம் மக்கள், அரசாங்க அதிகாரிகள், தலைநகரத்தின் உயர் மட்டத்து மனிதர்கள் ஆகிய சமூகத்தின் பல்வேறு பிரிவு களையும் ஊடுருவிப் பார்த்து இலக்கியம் படைத்தது. இவரது படைப்புகள் மொழியின் நளினத்தில் சிறந்தவை. இவர் ரவீந்திரர் நினைவுப் பரிசு (1975) பெற்றவர்.

### பிரேமேந்திர மித்ரா (1904 - 1988)

'கல்லோர்' குழு எழுத்தாளர்களில் ஒருவர். கவிதை, கதை, பாடல், கட்டுரை, குழந்தை இலக்கியம், திரைக்கதை, இவற்றைப் படைப்பதில் தேர்ந்தவர். இவர் படைத்த 'கனாதா', 'பராசர் வர்மா' போன்ற பாத்திரங்கள் சிறுவர், வயது முதிர்ந்தவர் இரு பிரிவினரையும் ஒருங்கே கவர்ந்தன. இவருடைய வாழ்க்கையின் ஒரு பகுதி காசியில் கழிந்தது. இவர் பலவகையான பணிகளில் ஈடுபட்டிருந்தார். சிறிது காலம் கல்கத்தா வானொலியின் இலக்கிய ஆலோசகராக இருந்தார். ஆனால் இறுதிவரை இவர் புகல் பெற்றது இலக்கியத்தில்தான். இவரது எழுத்தில மனித வாழ்க்கை யின்பால் பரிவு வெளிப்படுகிறது. வெளிப்புற வாழ்க்கையைவிட அகவயமான தேடலிலேயே இவருக்கு ஆர்வம் அதிகம். மனத்தின் ஆழத்தில் நுழைய விரும்புகிறார் இவர். சரத் நினைவுப் பரிசு (1955), ரவீந்திரர் நினைவுப் பரிசு(1958), சாகித்ய அகாதமிப் பரிசு (1967) பெற்றவர். 'பத்மஸ்ரீ' விருதும் பெற்றார்.

### அன்னதா சங்கர் ராய் (1904)

பிறந்தது ஒரிஸ்ஸாவிலுள்ள டெங்கானலில். 1927ஆம் ஆண்டில் ஐ.சி.எஸ்.ஸில் சேர்ந்து 1951ஆம் ஆண்டில் அதிலிருந்து விலகினார். 1927 முதல் 1929 வரை இங்கிலாந்தில் வசித்தார். 1957-ல் ஜப்பான் பயணம், 1963-ல் மேற்கு ஜெர்மனி, இங்கிலாந்து பயணம். 1962-ல் சாகித்திய அகாதமிப் பரிசு பெற்றார். பயண நூல் 'பத்தேபிரவாஸே' (1931) இவருக்குப் புகழ் சேர்த்தது. இலக்கியத்தின் பலதுறைகளிலும் சிறந்த படைப்பாளி. முக்கிய நாவல்கள் 'சத்ய சத்ய' (1932 - 42) ஆறு பாகங்கள்; 'ரத்னா ஓ ஸ்ரீமதி' (1956 - 73) 3 பாகங்கள். 50 வருடங்களாகச் சிறுவர்களுக்காகக் கதை எழுதி வருகிறார். இவருடைய 'சடா' எனப்படும் எதுகைப் பாடல்கள் புகழ்

பெற்றவை. இவருடைய சிறுகதைத் தொகுப்புகள் இரண்டு 'கல்ப' (1960), 'கதா' (1970). கதையின் உருவத்தின் பல்வேறு சாத்தியக் கூறுகள், உள்ளடக்கம் இரண்டிலும் அக்கறை கொண்டவர். நிகழ்ச்சிகளுக்கே முக்கியத்துவமளித்துக் கதை எழுதுவதில் விருப்ப மில்லை. கதைகளில் அவர் காட்ட விரும்புவது உண்மையின் தேடல். இவருடைய படைப்புகளை இரண்டு கால கட்டங்களாகப் பிரிக்கலாம்.. முதல் கட்டம் 1930 - 1956. இரண்டாவது கட்டம் 1959லிருந்து தொடங்கியது. இந்த இரண்டாவது கட்டத்தின் முதல் கதை 'மீன் பியாசி'. முதல் கட்டத்தில் வெளிப்புற வாழ்க்கையின் உண்மை நிலையை ஆராய்ந்தார், இரண்டாவது கட்டத்தில் உட்புற வாழ்க்கையை ஆராய்கிறார். தொடக்க காலத்தில் ஒரியா, வங்காளி, ஆங்கிலம் இம்மூன்று மொழிகளிலும் எழுதினார். இப்போது ஆங்கிலத்தில் மட்டும் எழுதுகிறார். இவர் பல பரிசுகளும் விருதுகளும் பெற்றவர். சாகித்திய அகாதமியின் ஃபெலோ. வங்காளி அகாதமியின் தலைவர். கல்கத்தாவில் வசித்தபடியே முழு நேர இலக்கியப் பணி செய்பவர்.

### சதிநாத் பாதுரி (1906 - 1965)

பீகாரின் பூர்ணியா மாவட்டத்தைச் சேர்ந்தவர். வெகுகாலம் அரசியலில் ஈடுபட்டிருந்தார். பீகார் காங்கிரஸ் வட்டாரத்தில் அறிமுகமானவர். ஆகஸ்ட் இயக்கத்தில் கலந்துகொண்டு சிறை சென்றார். இந்தச் சிறை வாழ்க்கையை கருவாகக் கொண்டு முதல் நாவல் 'ஜாகரி' (1945) எழுதினார். இந்த நாவல் இவருக்குப் புகழ் கொணர்ந்தது. மேற்கு வங்க அரசின் ரவீந்திரர் நினைவுப் பரிசு தொடங்கப்பட்டபோது முதல் பரிசு இந்த நாவலுக்கே கிடைத்தது (1950). சிறுகதை, நாவல், கட்டுரை எழுதுவதில் தேர்ந்தவர். இவருடைய 'சக்தி பிரமண் காஹினி' ஓர் அசாதாரணப் படைப்பு. உளளத்தின் ஆழத்தில் அனாயாசமாகப் பயணிக்கிறார். மனித உள்ளத்தின் மிகநுண்ணிய பிரச்சினைகளை ஈவிரக்கமின்றி ஆய்வதில் திறன்மிக்க சதிநாத் 'எழுத்தாளர்களின் எழுத்தாளர்'. இவருடைய 'டோடாயி சரித் மானஸ்' (இரண்டு பாகங்கள்) இந்திய நாவல் வரலாற்றில் இணையற்றது. இவர் புகழ் பெற்ற இந்தி எழுத்தாளர் ஃபணீசுவர் நாத் 'ரேணு'வின் இலக்கிய ஆசான்.

### ஆஷா பூர்ணா தேவி (1904)

மனித உள்ளத்தின் இரகசியங்களை வெளிக் கொணர்வதில் அரிய திறனுள்ளவர். மனித வாழ்க்கையிடம் எல்லையற்ற பரிவு கொண்டவர். எளிய, சாதாரண வாழ்க்கையில் திரைமறைவில் உறைந்துள்ள நுண்ணிய விசித்திரங்களை வெளிச்சம் போட்டுக்

காட்டும் அசாதாரணத் திறமை இவருக்கு உண்டு. வங்க சமூகத்தையும் குடும்ப வாழ்க்கையையும் திறம்படச் சித்திரித்துள்ளார். லீலா பரிசு, ரவீந்திரர் நினைவுப் பரிசு(1966), சரத் நினைவுப் பரிசு(1985) பெற்றவர். இவருடைய பல நூல்கள் திரைப்படமாக்கப்பட்டுள்ளன.

*சுபோத் கோஷ் (1910 - 1980)*

அசாதாரணத் திறன் வாய்ந்த எழுத்தாளர். கதை, நாவல், கட்டுரை படைப்பதில் தேர்ந்தவர். பலதுறைகளிலும் ஈடுபாடு கொண்டவர். இவரது வாழ்க்கையின் முதற்பகுதி சோட்டா நாக்பூர்ப் பகுதியில் கழிந்தது. இந்தப் பிரதேசமே இவருடைய பலபடைப்புக்களின் பின்புலமாகும். இதற்குச் சிறந்த உதாரணம் இவருடைய நாவல் 'சதகியா', இவருடைய படைப்புகளில் பல்வகை அனுபவச் செறிவோடு கலைத் தேர்ச்சியும் அறிவுத் தேர்ச்சியும் இணைந்துள்ளன. பிறந்தது ஹஜாரிபாகில். பழங்குடிகளின் வாழ்க்கையிலிருந்து ராணுவ வாழ்க்கை, மானிட இயலிலிருந்து மென்கலைகள்- எல்லாவற்றிலும் அனாயாசமாக உலவுகிறார். மனிதமனதின் புதைமணலின் இரகசியத்தைக் கண்டுபிடிப்பதில் தேர்ந்தவர்.

*ஜோதிரிந்திர நந்தி (1912 - 1982)*

இரண்டாவது உலகப்போருக்குப் பிற்பட்ட நடுத்தர, கீழ் மட்டத்து மக்களின் வாழ்க்கையைச் சித்திரிப்பதில் தேர்ந்தவர். சிந்தனைச் செல்வரான இந்த எழுத்தாளர் உள்ளத்தின் உணர்ச்சிகளை ஆராய்வதில் தனித்தன்மையைக் கையாள்கிறார். இவருடைய மொழி நடையும் தனித்தன்மை வாய்ந்தது. உணர்ச்சிப் போராட்டங்களைச் சித்திரிப்பதில் திறன் வாய்ந்தவர். இவருடைய கதைகள், நாவல்களில் சமகால சமூகத்தின் தவறுகள் மட்டுமின்றி, மனித வாழ்க்கையில் இயற்கையின் அழுத்தமான தாக்கமும் இடம் பெறுகிறது. இந்த விஷயத்திலும் தனித்தன்மை வாய்ந்தவர் இவர்.

*நரேந்திரநாத் மித்ரா (1916 - 1975)*

குறைவாகப் பேசுபவர், இனிமையாகப் பேசுபவர். இவருடைய கதைகள்-நாவல்களும் ஒரு வகையில் உரையாடல்களே. நடுத்தர வாழ்க்கையின் தேர்ந்த ஓவியர். அறியவொண்ணாத மனித மனதின் இரகசியங்களையும் இதயத்தின் உணர்ச்சிகளையும் வெளிப்படுத்துவதில் இவரது கூர்மையான நோக்கு தெரிகிறது. "நம்மிடையே மிகச்சிறந்த சிறுகதைகளை அதிக எண்ணிக்கையில் நரேந்திரநாத் எழுதியிருக்கிறார்" என்று பல எழுத்தாளர்கள் சொல்லுகிறார்கள். கதையைவிட வடிவமைப்பதிலும் பாத்திரப் படைப்பிலும் இவரது அனாயாசத் திறமை கண்கூடு.

கல்கத்தாவின் செய்திப் பத்திரிகையொன்றில் பணியாற்றினார். ஃபரீத்பூரில் பிறந்தவர்.

**நாராயண் கங்கோபாத்தியாய் (1918 - 1970)**

நரேந்திர நாத்தின் சக மாணவர். இருவரும் ஒரே சமயத்தில் இலக்கியப் பணியைத் தொடங்கினர். நாராயண் கங்கோபாத்தியாயின் உண்மைப்பெயர் தாரக்நாத் கங்கோபாத்தியாய், பிறந்தது தினாஜ்பூரில். கல்கத்தா பல்கலைக் கழகத்தில் வங்காளிப் பேராசிரியராகப் பணிபுரிந்தார். சிறுகதை, நாவல், கவிதை, நாடகம், திரைக்கதை, கட்டுரை, சிறுவர் இலக்கியம், பாடல், செய்திப் பத்திரிகைக்கான கட்டுரை ஆகிய பலதுறைப் படைப்பிலும் தேர்ந்தவர். முதல் நாவல் 'உபநிவேஷ்' (1944) மூலம் புகழ் பெற்றார். வெளியுலகம், மனஉலகம் இரண்டுமே இவருடைய படைப்புகளில் இணைந்துள்ளன. இவர் ரொமான்டிக் எழுத்தாளர், கூடவே நடப்பியல் எழுத்தாளருங்கூட. கவிதைத்தன்மையும் வெளிப்பாட்டுச் செறிவும் நிறைந்த மொழியில் இவர் தம் கற்பனையுலகைப் படைக்கிறார். மனிதனோடு இயற்கையும் இவருடைய படைப்புகளில் இடம் பெறுகிறது. ஈவிரக்கமின்றி சமூகத்தைப் பகுத்து ஆராய்வதோடு ரொமான்டிக் மனப்போக்கும் இயற்கையில் காதலும் கொண்டவர்.

**சந்தோஷ் குமார் கோஷ் (1920 - 1985)**

இவர் நரேந்திரநாத் மித்ரா, நாராயண் கங்கோபாத்தியாய் ஆகியோருடன் இலக்கிய உலகில் நுழைந்தார். பிறந்தது ஃபரீத்பூரில். வாலிபத்தின் பின்பகுதி முதல் கல்கத்தாவாசி. எப்போதும் நகர வாழ்க்கையையே சித்திரிக்கிறார். கிராம வாழ்க்கை பற்றி எழுதுவதில்லை. கதை, நாவல், நாடகம், கவிதை, கட்டுரை படைப்பதில் சிறந்தவர். தேர்ந்த மொழிச் சிற்பி. இவருடைய கதையில் வடிவத்துக்கு முக்கிய இடமுண்டு. கதை சொல்லும் முறை முக்கியமென்று கருதுகிறார். கூர்மையான, பண்பட்ட, சற்றுக் கேலி கலந்த மொழியில் இதயத்தின் மிக நுண்ணிய உணர்வு களையும் வெளிப்படுத்தும் அசாதாரணத் திறமை படைத்தவர். இவர் வாழ்க்கையை நேசிப்பவர். இந்த நேசத்தில் ஓரளவு வேதனையும் நம்பிக்கையின்மையும் கலந்துள்ளன. தாம் வாழும் காலம், கையாளும் கலை இவையிரண்டிலும் அக்கறை கொண்டவர். சிறிதுகாலம் டில்லியில் வசித்தார். கல்கத்தாவின் புகழ்பெற்ற பத்திரிகையொன்றில் பணிபுரிந்தார்.

**சமரேஷ் பாசு (1921 - 1988)**

நரேந்திரநாத், நாராயண், சந்தோஷ் குமார் ஆகியோருடன் இணைத்துக் குறிப்பிடத்தக்க பெயர் சமரேஷ் பாசு. இவர்

நகரத்தின் எழுத்தாளர் அல்லர். வங்க மண்ணுடன் நெருங்கிய கலைஞர். வாழ்க்கையில் நம்பிக்கை கொண்டவர். பிறந்தது டாக்காவில். தம் வாழ்க்கையில் பல்வேறு வேலைகள் பார்த்தவர். இறுதியில் இலக்கியத்தையே முழுநேரப் பணியாகக் கொண்டார். மனித வாழ்க்கை பற்றி அறிய இவரது ஆவலும், அவ்வாழ்க்கையிடம் பரிவும் எல்லையற்றவை, இது அவரது படைப்புகளில் தெரிகிறது. மனிதனைப்பற்றி மட்டுமின்றி இயற்கையைப் பற்றியும் எழுதுகிறார். 'கால்கூட்' என்ற பெயரில் பயண அனுபவங்களை அடிப்படையாகக் கொண்ட நாவல்கள் எழுதுகிறார். பாடல் இயற்றுகிறார், தாமும் பாடுவார். இவரிடம் மாணிக் பந்த்யோபாத்தியாய், தாராசங்கர் பந்த்யோபாத்தியாய் ஆகியோரின் தாக்கமுண்டு. எனினும் இவர் தமக்கென ஒரு பாணியை அமைத்துக் கொண்டுள்ளார். இவர்தம் சொந்த அனுபவங்கள் மூலம் வாழ்க்கையை உணர்ந்திருக்கிறார். இந்த அனுபவத்தோடு இணைந்திருக்கிறது அழுத்தமான ஈடுபாடு.

*பிமல் கர் (1921)*
சிந்தனைச் செறிவுள்ள எழுத்தாளர். தமக்குரிய தனிப்பார்வையில் வாழ்க்கையைப் பார்க்கிறார். இளம்வயதில் மருத்துவம் படித்தார். ஆனால் இக்கல்வி முற்றுப் பெறவில்லை. பிற்காலத்தில் கதை, நாவல்களில் மருத்துவரின் பற்றற்ற பார்வையைக் கையாண்டார். வங்காளிக் கதையிலக்கியத்தில் புதிய நடையை அறிமுகப்படுத்தினார். அறிவும் சிந்தனையும் இவருடைய ஆயுதங்கள். உணர்ச்சியை இவர் ஒதுக்கிவிடவில்லை, ஆனால் ஒரு போதும் உணர்ச்சி வசப்படவில்லை. சிறு வயது ஹஜாரி பாகில் கழிந்தது. பிறந்தது கல்கத்தாவுக்கருகில் 24 பர்கானா மாவட்டத்தில். வாழ்க்கைக்கு அடுத்தாற்போலவே சாவையும் பார்த்தவர். இவருடைய படைப்புகளில் வாழ்க்கையுணர்வும் சாவின் உணர்வும் இணைந்து இடம் பெற்றுள்ளன. இவருடைய பலகதைகள் திரைப்படமாக்கப்பட்டுள்ளன.

*ரமாபத சௌதுரி (1922)*
தற்கால வங்காளி இலக்கியத்தின் முக்கிய எழுத்தாளர்களில் ஒருவர். இரண்டாம் உலகப்போர்க் காலத்தில் எழுதத் தொடங்கினார். பிறந்தது கரக்பூரில். சிறிதுகாலம் சோட்டா நாக்பூர்ப் பகுதியில் பணிபுரிந்தார். பல்வேறு பயணங்கள் செய்தபின் இப்போது கல்கத்தாவின் தினசரிப் பத்திரிகை ஒன்றின் ஒரு துறைக்குஆசிரியர். ஒரு சமயம் காட்டைப் பின்புலமாகக் கொண்டு பல சிறு கதைகள் எழுதியுள்ளார். இப்போது நகர வாழ்க்கையே இவரது படைப்புகளில் இடம் பெறுகிறது. இவரது கதைகள் பல திரைப்படமாக்கப்பட்டுள்ளன. இவரது மொழி பண்பட்டது,

நளினம் நிறைந்தது. இவரது கதைகளின் உள்ளடக்கத்தில் பல்வேறு தன்மைகள் உண்டு. எழுதும் முறையிலும் இவர் தனித்தன்மையை வெளிப்படுத்துகிறார். வாழ்க்கையின் பல துறைகளில் ஆழ்ந்தவர். ரவீந்திரர் நினைவுப் பரிசும் (1971) சாகித்திய அகாதமிப் பரிசும் (1988) பெற்றவர்.

### சையது முஸ்தபா சிராஜ் (1930)

நாட்டு விடுதலைக்குப் பிற்காலத்து இளம் எழுத்தாளர்களில் ஒருவர். மூர்ஸிதாபாத் மாவட்டக் கிராமமொன்றில் பிறந்தவர். வாழ்க்கையில் பல்வேறு அனுபவங்கள் பெற்றவர். மூர்ஷிதாபாதில் நாடோடி நாடகக் குழுவில் பாடல்கள் எழுதினார் (1950—58). அதற்குமுன் பத்திரிகைகளில் பணிபுரிந்தார் (1949—50); இப்போது கல்கத்தா தினசரியொன்றில் பணியாற்றுகிறார். தாராசங்கரைப் பின்பற்றி எழுதத் தொடங்கிப் பிறகு தனக்கென ஒரு பாணியை அமைத்துக் கொண்டார். முதல் கதை 'தேஷ்' பத்திரிகையில் வெளிவந்த 'காதலும் திரும்பிவரும் ரயிலும்'. முக்கியமாக எழுத்தின் மூலமே வாழ்க்கை நடத்துகிறார். இவருடைய படைப்புகளில் கிராம மக்களும் நகர மக்களும் இடம் பெறுகின்றனர். சமூகப் பிரச்சினைகளில் தீவிர அக்கறையுள்ளவர். நிறைய எழுதுகிறார்.

### மதி நந்தி (1921)

வடக்குக் கல்கத்தாவில் ஒரு மேற்குடியில் பிறந்தார். தானியங்கிப் பொறியியலில் டிப்ளமோ பெற்றவர். அரசுப் போக்குவரத்துத் துறையில் இரண்டாண்டுப் பயிற்சிக்குப்பின் பி.ஏ. பாஸ் செய்து பத்திரிகைத்துறையில் பணி புரியத் தொடங்கினார். இப்போது கல்கத்தாவின் தினசரியொன்றில் விளையாட்டுப் பகுதியின் ஆசிரியர்.. கிரிக்கெட் பிரியர். கிரிக்கெட் விளையாட்டைக் கருவாகக் கொண்டு மூன்று நூல்கள் எழுதியுள்ளார். 'தேஷ்' பத்திரிகையில் வெளியான 'சாத்' (1956) கதை மூலம் வாசகர் கவனத்தை ஈர்த்தார். அனாவசிய விவரங்களற்ற, நேரடியான முறையில் கதை சொல்கிறார். யதார்த்த மண்ணில் உறுதியாக நின்றுகொண்டு மனிதன்மேல் நம்பிக்கை வைத்திருக்கிறார். நடுத்தர, கீழ் மட்டத்து மக்களின் வாழ்கையைத் திறம்படச் சித்திரிப்பவர்.

### சுநீல் கங்கோபாத்தியாய் (1934)

பிறப்பு ஃபரீத்பூரில். கவி, கதாசிரியர், தேஷ் பத்திரிகையில் வெளியான 'ஏக்டி கவிதா' என்ற கவிதை மூலம் அறிமுகமானார். ஜனங்களால் அதிகம் நேசிக்கப்படுபவர். கவி சுநீலா, கதாசிரியர் சுநீலா என்று சொல்வது கடினம். பலவகைப் பணிகளுக்குப்பின் தற்போது கல்கத்தாப் பத்திரிகையொன்றில் பணி புரிகிறார். 1960ஆம் ஆண்டு அமெரிக்கப் பயணம் செய்தார். நிறைய எழுது

கிறார். சிலகதைகள் திரைப்படமாக்கப்பட்டுள்ளன. பரிச்சயமான நடுத்தர மக்களின் வாழ்க்கையின் பலதிறப்பட்ட உணர்ச்சி களையும் அனுபவங்களையும் திறமையாகவும் மனதைக் கவரும் முறையிலும் சித்திரிக்கிறார். மொழியில் நளினம், சொல்லும் முறையில் அழகு, கதையின் ஈர்ப்புத்திறன்-இவையெல்லாம் இவரை மக்களின் அபிமான எழுத்தாளராகச் செய்துள்ளன.

*பிரபுல்ல ராய் (1934)*

பிறந்தது டாக்காவில், வட்டார வாழ்க்கையைச் சித்தரிக்கும் நாவல் எழுதி இலக்கியப் பணியைத் தொடங்கினார். 'தேஷ்'இல் வெளியான நாவல் 'பூர்வ பார்வத்ய' மூலம் அறிமுகம் பெற்றார். இவரது பெரும் படைப்பான 'கேயா பாத்கிர் நௌகா' (இரண்டு பாகங்கள்) தற்கால வங்காளி வாழ்க்கையின் வரலாறாகும். தற்போது ஒரு கல்கத்தாப் பத்திரிகையின் ஒரு பகுதிக்கு ஆசிரியர். இவரது சில கதைகள் திரைப்படமாகியுள்ளன. மனப்பூர்வமான ஈடுபாட்டோடு கவர்ச்சியான முறையில் கதைகள் எழுதுகிறார். கதையின் அமைப்பு, பாத்திரப் படைப்பு இரண்டிலும் திறமை பெற்றவர்.

*சீர்ஷேந்து முகோபாத்தியாய் (1935)*

கிழக்கு வங்காளத்தில் மைமன்சிங்கில் பிறந்தவர். ஆசிரியராகப் பணிபுரிந்தார். 1959 ஆம் ஆண்டு 'தேஷ்' பத்திரிகையில் 'ஜலதரங்க' என்ற சிறுதை மூலம் புகழ் பெற்றார். இவருடைய கதைகளிலும் நாவல்களிலும் உண்மை வாழ்வுக்கும் ஆழ் மனத்து உணர்ச்சி களுக்குமிடையே இழுபறிப்போராட்டம் முக்கியத்துவம் பெறுகிறது. இவருடைய கதைகளில் நிலையற்ற தன்மை இல்லை, நிலையான நம்பிக்கை இருக்கிறது, இறையுணர்வும் ஆழ் மன உணர்வில் நம்பிக்கையும் உண்டு. சுயசரிதைப் பாணியில் எழுதும் கதைகளில் இவர் உள் மன உலகின் ஆழத்தில் சத்தியத்தைத் தேடுகிறார்.

*தேபேஷ் ராய் (1936)*

வங்காளி மொழியில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். அறுபதுகளில் வங்காளிச் சிறுகதை இயக்கத்தின் தலைமை வகித்த எழுத்தாளர் களில் ஒருவர். கதை சொல்லும் முறையிலும் பயன்படுத்தும் மொழியிலும் மிகவும் அக்கறை காட்டுபவர். இவரது முதல் சிறுகதைத் தொகுப்பு 'தேபேஷ் ராயின் சிறுகதைகள்' 1969ஆம் ஆண்டில் வெளியாயிற்று. 1972ஆம் ஆண்டில் இவரது முதல் நாவல் 'யயாதி' வெளிவந்தது. 'தேஷ்' பத்திரிகையில் வெளியான 'ஹாட்காட்டா' கதைமூலம் வாசகரின் கவனத்தை ஈர்த்தா. நூறுக்கு மேற்பட்ட சிறுகதைகள் எழுதியுள்ளார்.

